# சிறியதே அழகனாது

இ.எஃப்.ஷூமா

ஸர்

உலகின் சிறந்த 100 புத்தங்களில் ஒன்றாக

‘டைம்ஸ்’ பத்திரிகையால்

தேர்ந்தெடுக்கப்பட்டது

## உள்ளே...

# சிறுக கட்டி பெருக வாழ்!




இ.எஃப்.ஷுமாஸர் ஜெர்மனியில் பிறந்து ஆக்ஸ்போர்ட் பல்கலைகழகத்தில் பொருளாதரம் படித்தவர், நியூ யார்க் பல்கலைகழகத்தில் பேராசிரியராக சில ஆண்டு கள் பணியாற்றினார், பின்பு பிரிட்டிஷ் தேசிய நிலக்கரிக் கழகத்தின் பொருளாதார ஆலோசகராகவும், பிரிட்ட னின் மிகப்பெரிய இயற்கை வேளாண்மை அமைப்பான மண் கூட்டமைப்பின் (Soil Association ) தலைவரா கவும், ஸ்காட் பேடர் நிறுவனத்தின் இயக்குனராகவும் பணியாற்றியுள்ளார்.

1955-ம் ஆண்டு பர்மா அரசு பொருளாதார ஆலோ சனை வழங்க இவரை அழைத்தது. அங்கு சென்ற போதுதான் புத்த மதப் பொருளாதாரம் ("Buddhist economics") என்ற புதிய கோட்பாட்டை உருவாக் கினார்சூழலுக்கு ஏற்ற, அந்த பகுதியில் கிடைக்கும்

தொழில்நுட்பங்களை பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.. தனி மனித வளர்ச்சிக்கும் நாட்டின் வளர்ச்சிக்கும் அறத்துடன் கூடிய இந்த பொருளாதாரம் தான் ஏற்றது என வலியுறுத்தி வந்தார். மூன்றாம் உலக நாடுகளுக்கு (வளரும் நாடுகள்) பயணம் செய்த போது, இந்த கோட்பாட்டை ஆழமாக பேசி வந்தார்.

இந்த நாடுகளுக்காக இடைத்தரத் தொழில்நுட்பம் என்ற கொள்கையை உருவாக்கினார். இடைத்தரத் தொழில் நுட்ப வளர்ச்சிக் குழுமம் (Intermediate Technology Development Group Ltd..) என்ற அமைப்பின் நிறுவன தலைவராக இருந்தார்.

வாரணாசியில் காந்தி கல்வி மையம் ஏற்படு செய்திருந்த 'காந்தி நினைவு உரை' (Gandhi Memorial Lecture ) நிகழ்ச்சியில் கலந்து 1973-ம் ஆண்டு இந்தியா வந்திருந்தார்.

அந்த உரையின் போது மகாத்மா காந்தியடிகள் மீதும் அவரது சீடரும் கிராம பொருளாதார மேதையுமான ஜே.சி.குமரப்பாவின் 'நிலையான பொருளாதாரம்' தனக்குள் புதிய சிந்தனையை புகுத்தியுள்ளது என குறிப்பிட்டுள்ளர். மகாத்மா காந்தியடிகளை 'மக்கள் பொருளாதார அறிஞர்' என புகழாரம் சூட்டினார். 'சிறியதே அழகானது' என்ற சொல்லாடல் தமிழ் மண்ணுக்கு புதியது அல்ல.'சிறுக கட்டி பெருக வாழ்' என்பது கிராமத்து மக்களின் தற்சார்பு சிந்தனை.

1973-ம் ஆண்டு 'சிறியதே அழகானது' என்ற இந்த புத்தகத்தை ஷுமாஸர் வெளியிட்ட போது இது கவனம் பெறவில்லை. கனமான கருத்துக்கள் கொண்ட புத்தங்களை போலவே, இதுவும் ஆரம்பத்தில் புறக்கணிக்கப்பட்டது. ஆனால், அடுத்த பத்து ஆண்டுகளில் இப்புத்தகம் மாற்றுப்பொருளாதாரச் சிந்தனையாளர்களுக்கு

புனித நூல் போல உருவானது என்பது வரலாறு. உலகம் முழுக்க லட்ச கணக்கான பிரதிகள் விற்பனையாகி வரு கிறது. இந்த புத்தகம் பொருளாதாரச் சீர்கேட்டின் ஆதா ரக் காரணிகளைக் கண்டறிந்து அதற்கான அறமான மாற்றை நம் கண் முன்வைக்கிறது.

பல ஆண்டுகளாக அணுஆயுதத்தை எரிபொருளாகப் பயன்படுத்தலாமா, கூடாதா என்ற சர்சை மேலோங்கி வரும் இன்றைய சூழலில் நிச்சயம் இந்த புத்தகம் தேவைதான்.

புத்தகத்தின் மையக்கருத்து இதுதான். மனிதன் தன்னை மேம்படுத்திக் கொள்ள நினைத்து எவ்வாறு இயற்கையைச் சீரழிக்கிறான். அவனது பேராசைகள் எத்தகைய பின்விளைவுகளை ஏற்படுத்தியிருக்கிறது, இதிலிருந்து விடுபட காந்தியப் பொருளாதார வழி எவ் வாறு உதவி செய்கிறது, பௌத்த பொருளாதாரச் சிந்த னைகளை ஏன் நாம் கைக்கொள்ளக்கூடாது என்பது தான்.

நவீன காலத்தின் முக்கியமான பிரச்சனை எரிபொ ருள். இதற்காகவே போர்களும் ஆக்ரமிப்புகளும் படு கொலைகளும் நடைபெற்று வருகின்றன, இயற்கையின் மூலதனமான எரிபொருள்கள் பன்னாட்டு கார்ப்ரேட் நிறுவனங்களால் எப்படி சுரண்டி எடுக்கபட்டு மிகப்பெ ரிய மோசடி நடைபெற்று வருகிறது என்பதையெல்லாம் உணர்வுபூர்வமாக அதன் பாதிப்புகளை ஆதாரங்களு டன் அடையாளம் காட்டுகிறார் ஷுமாஸர்.

அறமற்ற நபர்களின் நலனிற்காக எரிபொருட்கள் சுரண்டி எடுக்கபட்டு சந்தைப் பொருளாக பயன்படுத் தபட்டால் சுற்றுசூழல்சீர்கேடு அதிகமாகும். இதனால் அதிகம் பாதிக்கபடப் போவது ஏழை மக்கள்தான்.

எனவே எரிபொருள் விற்பனை சந்தையில் அடிநிலை ஏழைகளே இருவிதத்திலும் பலியாகிறார்கள்.
மாற்று எரிபொருள் பற்றி சிந்திக்கும் வேளையில் இயற்கையை வணிக நிறுவனங்கள் நாசம் செய்வதை ஏன் பொருளாதார நிபுணர்கள் கண்டுகொள்வதேயில்லை என்பதே ஷுமாஸரின் முக்கியக் கேள்வி.
அணுசக்தியைப் பயன்படுத்துவது என்பது மாற்று எரிபொருளுக்கான தீர்வில்லை. அது ஓர் எளிய ஏமாற்று வேலை.இதனால் ஏற்படும் சாதகங்களை விட பாதிப்புகளே அதிகம். படிமஎரிபொருள்களை எப்படிக் கையாளுவது என்று முறையான பங்கீடு மற்றும் சுயவரம்புகள், கட்டுபாடுகள் ஏற்படுத்தபடாதவரை எரிபொருள் சந்தை பன்னாட்டு வணிக கம்பெனிகளின் ஏகபோகச் சொத்தாகவே இருக்கும் .
வழக்கமான நமது பொருளாதாரப் புத்தகங்களைப் போல புள்ளிவிபரங்கள், அதன் அடிப்படையிலான வரைபடங்கள், விளக்கங்களை முன்னிறுத்தாமல், மனிதனை அவன் வாழும் சூழல், மற்றும் அகபுற வளர்ச்சியோடு இணைத்து ஆராய்வதே இந்நூலின் தனித்துவம்
அதிக அளவிலான உற்பத்தி (Mass production) என்பதை விட அதிக மக்களால் உருவாக்கபட்ட உற்பத்தி ( Production from Mass ) என்பது மேலானது என்ற காந்தியக் கோட்பாட்டினை வலியுறுத்தும் ஷுமாஸர் முழுமையாக நாம் இயந்திரங்களை கைவிட வேண்டிய அவசியமில்லை.
மனிதனை மேம்படுத்தும் அளவிற்கு தொழில்நுட்பத்தை கட்டுக்குள் வைத்துக் கொள்ள முயற்சிக்க வேண்டும், அதற்கு இடைத்தரமான தொழில்நுட்பத்தின் தேவை அவசியம், அத்தகைய சூழல் மனிதனை

இயந்திரங்களுக்கு அடிமையாக்கிவிடாது, அதே நேரம் மனிதஉழைப்பை மேம்படுத்தும் விதமாகவும் அமையும். பொருளாதாரம் எப்போதுமே வருங்காலம் என்ற சொல் லைக் காட்டி எளிய மக்களை எப்போதும் பயமு றுத்தி வருகிறது. வருங்காலமோ, நிகழ்காலமோ எது வாகயிருப்பினும் அங்கு வாழும் மனிதனின் அகம் மற் றும் புறச் சூழலே அவனது வாழ்வுமுறையைத் தீர் மானிக்கிறது. நம் காலத்தில் மனிதன் சீரழிந்துபோன அகத்தை கொண்டிருக்கிறான், அவனது சிந்தனையில் தெளிவில்லை, உள்ளத்தில் தூய்மையில்லை, மனதில் நேர்மையும் வாய்மையும் இல்லை, நீதியுணர்வு என்பது வணிகத்தோடு தொடர்பற்றது என்று நம்புகிறான்.அது தான் இன்றையப் பொருளாதார சீர்கேட்டிற்கு முக்கியக் காரணம்.

சமுதாயத்தில் நிலம் எப்படி பயன்படுத்தபடுகிறது என் பதை வைத்தே அதன் எதிர்காலம் அமைகிறது. இன்று நிலம் வணிகக் காரணங்களால் பெரிதும் நாசமடைந்து வருகிறது, மனிதன் தனக்குக் கிடைத்துள்ள தொழில் நுட்பத்தின் வழியே இயற்கையின் எஜமானன் போலத் தன்னை நினைத்துக் கொண்டிருக்கிறான்.

இது தற்காலிகமான ஒன்றே. மனிதன் எந்த அளவு தொழில்நுட்பத்தில் மேம்பட்டாலும் அவன் இயற்கை யின் குழந்தையே. ஒரு போதும் அவனால் இயற்கையின் எஜமானன் ஆக முடியாது. இயற்கைவிதிகளை மீறும் போது அது திருப்பி அடிக்கும். அந்தச் சீர்கேடு மனி தனை நிலைகுலையச் செய்துவிடும்.

இயற்கையைப் புரிந்து கொண்டு ஒன்றிணையாதவரை மனிதநாகரீகம் குறைபாடு கொண்ட ஒன்றே. உணவுக் காக நிலத்தைச் சார்ந்திருப்பது ஒன்று தான் அதை முற்றிலும் கைவிடாமல் இருப்பதற்கான காரணம், ஒரு

வேளை மாற்று உணவுப்பொருள்கள் கிடைக்கும் பட்சத்தில் மனிதனின் பேராசை நிலத்தை முற்றிலும் நாசமடையச் செய்துவிடக்கூடும்.

நிலத்தின் முறையான பயன்பாடு என்பது வெறும் தொழில்நுட்பம் மற்றும் பொருளாதாரத்தை சார்ந்த ஒன்றில்லை, மாறாக அது ஒரு மெய்விளக்க இயலைச் சார்ந்த ஒன்று என்கிறார் ஷுமாஸர்.

பகிர்ந்து தருதல், உடனிருந்து காத்தல், கைமாறு கருதாமல் உழைப்பது என்பது உயர்ந்த மனநிலையின் வெளிப்பாடு, அது விவசாயத்தின் அடிப்படையாக இருந்தது, நிலத்திடமிருந்து விவசாயி பொறுமையையும், விடாமுயற்சியையும், சமாதானத்தையும், மௌனத்தையும், தோல்வியை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தையும் கற்றிருக்கிறான், அதை தான் இன்றைய தொழில்நுட்பம் சிதறடிக்கிறது.

விவசாய நிலம் வணிகநிலமாக மாற்றப்படும் போது அதனோடு இணைந்த இந்த எளிய வாழ்க்கை முறை கைவிடப்பட நேர்கிறது, அது வருத்தப்பட வேண்டிய ஒன்று உத்யோகத்தை போல விவசாயி வாரம் இரண்டு நாள் விடுப்பு எடுத்துக் கொள்ள முடியாது. அது ஐந்து நாள் வேலையில்லை. ஆகவே விவசாயவேலை என்பதும், உத்யோகம் என்பதும் ஒன்றானதில்லை, வாரம் முழுக்க வேலை செய்பவன் குறைவாகச் சம்பாதிப்பதும்; ஐந்து நாள் உத்யோகம் செய்பவன் அதிகம் சம்பாதிப்பதுமான முரணையே ஷுமாஸர் கேள்விகேட்கிறார்.

ஐந்து நாட்கள் மட்டுமே பால் தரும் பசு கண்டுபிடிக்காத வரை மனிதன் தன்னுடைய உழைப்பை உணர்ந்தே தீர வேண்டும் என்பதே அவரது வாதம்.

ஷுமாஸர் கருத்தின்படி தொழில்துறை இல்லாமல் மனிதவாழ்வு தொடரக்கூடியது. அப்படிதான் பல நூற்றாண்

டுகள் மனிதன் வாழ்ந்திருந்தான., ஆனால் விவசாயம் இல்லாமல் போனால் மனித வாழ்வு பூமியில் இருந்து மறைந்து போய்விடும். ஆகவே விவசாயத்தைக் காத்தல் என்பது பூமியின் அடிப்படையான விதி. நிலத்தை நிர்வகிப்பதும் பராமரிப்பதும் மனிதனின் பெரும்பணி. அதை கைவிடும் போது மனிதன் மிகப்பெரிய சூழல் சார்ந்த பிரச்சனையைச் சந்திக்க நேரிடும்.

இயற்கையுடன் இணைந்து மனிதன் வாழ வேண்டும் என்பது விருப்பம் என்பதைத் தாண்டி கட்டாயமான தேவை என்ற நிலை வந்துவிட்டது, அதற்கு விவசாயம் சார்ந்த மாற்று வழிகள் முக்கியமானது. இயற்கையான விவசாய முறைகளே அதற்கான உண்மையான மாற்று வழிகள்,

பொருட்களுக்கு முக்கியத்துவம் தரும் வாழ்க்கை முறையில் இருந்து மாறி தனது சுயதேவைகளை வரையறை செய்து கொள்வதுடன். போதுமானது என்று உணரும் மனதுடன், எளிய, உண்மையான, நீதியுணர்வுடன் உள்ள வாழ்க்கையை மனிதன் மேற்கொள்வதே எதிர்காலத்திற்கான வழி என்கிறார் ஷுமாஸர்.

இன்றைய பன்னாட்டு கார்ப்ரேட் வணிகச்சூழலில் மனிதனின் அகத்தூய்மையைப் பொருளாதார வளர்ச்சியோடு இணைத்துப்பேசும் இப்புத்தகம் நிறைய யோசிக்கவும் நம்மை அறம் கொண்ட மனிதர்களாக மாற்றிக் கொள்ள வழிகாட்டுகிறது. மனிதன் சிறியவன்; ஆகையால், அவனுக்கு சிறியதே அழகானது. (Man is small, and, therefore, small is beautiful) **என்ற எக்காலத்துக்கும் ஏற்ற** சிந்தனையை வழங்கிய இ.எஃப். ஷுமாஸர்

1977-ம் ஆண்டு இயற்கையுடன் கலந்தார். Eco-Bible என்று சுற்றுச்சூழல் ஆர்வலர்கள் இந்த புத்தகத்தை கொண்டாடுகிறார்கள்.
-நம்மாழ்வார்தாசன்

# அறமும் வளர்ச்சியும்

நம் காலத்தில் மாபெரும் தவறுகளில் முக்கியமானது “உற்பத்தி பிரச்சினை” தீர்க்கப்பட்டுவிட்டது என நம்புவதுதான். உற்பத்திக்கு சம்பந்தமேயில்லாதவர்களால் மட்டுமின்றி, நிபுணர்களாலும் உற்பத்தித் துறையில் ஆதிக்கம் செலுத்துபவர்களாலும், அரசாங்கங்களின் பொருளாதார வல்லுநர்களாலும், பொருளாதாரம் பயின்ற, பயிலாதவர்களாலும் இப்படி ஆழமாக நம்பப்படுகிறது.
பல்வேறு இடங்களில் இவர்களிடையே முரண்பாடுகளிருந்தாலும் இந்த நம்பிக்கையில் இவர்கள் எல்லோரும் ஒன்று போலவே உள்ளனர். வளர்ந்த செல்வந்த நாடுகளுக்குள்ள முக்கிய பிரச்சினை"கல்வி பொழுது போக்கிற்காக" என்று இருப்பது; வளரும் ஏழை நாடுகளின்

எதிர் கொள்ளும் பிரச்சினை "தொழில் நுட்பங்களுக்கு மாற வேண்டும்' என சொல்லப்படுகிறது.

உலகின் எல்லா செயல்பாடுகளும் விவகாரங்களும் அறமாக நல்ல முறையில் நடைபெறவேண்டும் என்பது செயல்பாட்டில் இல்லை. இதற்குக் காரணம் மனிதர் களிடையே அறப்பண்புகள் இல்லாமல் போனதுதான். ஆகையால், மனிதர்களிடையே அறப்பண்புகள் மேல் நோக்கி வளர நாம் ஒரு முழுமையான அரசியல மைப்பை நிர்மாணித்தாக வேண்டும். அது ஒவ்வொரு மனிதனது நடத்தைகளை செழுமைப்படுத்துவதாக இருக்க வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டு மானல் இம்மண்ணில் பிறக்கும் போது எல்லோரும் மிகவும் நல்லவராகவேத்தான் இருக்கிறார்கள். இவர் கள் தீயவர்களாகவும் அல்லது சுரண்டி பிழைப்பவர்க ளாகவும் மாறுவதற்கு அவர்கள் வாழும் அமைப்புத்தான் அடைப்படைக் காரணம் அடை காரணம் நம்பப்படுகி றது.

அமைப்பு முறை பல வகைகளில் கேடான நிலையில் உள்ளது; இது கட்டாயம் மாற்றி அமைக்கப்பட வேண் டும் என்பதிலும் எந்த சந்தேகமும் கிடையாது. இத்த கைய கேடான அமைப்புமுறை, எதனால் மாறவில்லை என்பது பல காரணங்களில் முக்கியமானது உற்பத்தி பிரச்சினை தீர்க்கப்பட்டுவிட்டது என்ற தவறு நிறைந்த நம்பிக்கை தான். இந்த தவறு நடப்பு காலத்தில் உள்ள அனைத்து முறைகளும் சரியானவை என்றும் மாற்று அமைப்பின் தேவை அவசியமானதல்ல என்ற நிலைக் கும் கொண்டு செல்கிறது.

ஆழமாக வேரூன்றிய, அப்பட்டமான தவறான இந்த நம் பிக்கையின் தோற்றம் தத்துவார்த்தமாகவும், ஏன் மதரீ தியாகவுமே பின்னிப்பிணைந்துள்ளது. இந்த பிணைப்பு

கடந்த மூன்று அல்லது நான்கு நூற்றாண்டு காலமாக இயற்கையைப் பற்றிய மனிதனின் கண் ணோட்டத்தை மாற்றிக் கொண்டே வந்திருக்கிறது.

'மேற்கத்திய மனிதனின் இயற்கை சார்ந்த கண்ணோட் டம்' என்று கூட இதனை சொல்ல முடியும். ஒட்டு மொத்த உலகமும் மேற்கத்திய மயமாக்கலில் உள்ள போதும் இயற்கை பற்றிய மனிதனின் கண்ணோட்டத்தை அப் படித்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்த நவீன கால மனிதர்கள் தன்னை இயற்கையின் ஒரு பகுதியாக நினைப்பதில்லை. தன்னை இயற்கையிலிருந்து அந்நி யமான ஒரு சக்தி என்றும், தான் அதனை ஆதிக் கம் செலுத்தி வெற்றி கொள்ளவிருப்பதாகவும் கருது கிறார்கள். இயற்கையை மனிதன் வென்றால் அவனே அதில் பலியாவன் என்பதை மறந்துவிட்டு, இயற்கையை எதிர்த்து வெல்லப் போவதைப் பற்றி பேசிக் கொண்டுள் ளான்.

இயற்கையை ஆட்டிப் படைக்க அளவுக்கு அதிகமான சக்திகளை பெற்று விட்டதாக ஒரு மாயத் தோற்றத்தை மனிதன் அண்மை காலமாக உணர்கிறான்.

ஆனால் அந்த அந்த சக்தி முழுமையான வெற்றியை கொடுக்கவில்லை. இந்த உண்மையை பூவுலகில் வாழும் சிலர் மட்டுமே உணரத்தொடங்கியுள்ளார்கள்.

விண்ணையும் மண்ணையும் அலசி ஆராயும் அறிவியல் தொழில்நுட்ப சாதனைகள் காரணமாக அளவில்லாத சக்தியை மனிதன் பெற்றுவிட்டதாக

நம்புகிறான். இதனால் உற்பத்தி பிரச்சினை முடிவுக்கு வந்துவிட்டது என்று கானல் தோற்றம் மனிதன் கண்கள் தெரிகிறது.

வருமானத்துக்கும் மூலதனத்துக்குமான மிக முக்கிய வேறுபாட்டை அறிந்து கொள்வதில் ஏற்பட்ட குளறு

படியான தோல்விதான் 'உற்பத்திப் பிரச்சினை' தீர்ந்து விட்டதான கானல் தோற்றத்தின் அடிநாதம். ஒவ்வொரு பொரு ளாதார நிபுணரும், வர்த்தகர்களும் வருமா னத்திற்கும் மூலதனத்திற்குமிடையிலான வேறுபாட்டை நன்கறிந்து கொண்டு வெகு சாமார்த்தியமாக எல்லா விதமான பொருளாதார விவகாரங்களையும் கையாள் கின்றனர். எதனை முக்கியமாக கவனிக்க வேண்டுமோ அதனைத் தவிர மற்ற விவகாரங்களிலேயே கவனம் முழுவதையும் செலுத்துகின்றனர். மனிதனால் தயாரிக் காத, வெறுமனே கண்டறிந்த, ஆனால் ஈடு செய்ய முடி யாத அரிய மூலதனத்தை அவன் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. அந்த மூலதனம் இல்லாமல் மனித னால் ஒன்றுமே செய்ய இயலாது என்ற உன்னத நிலை யில் உள்ள மூலதனத்தின் மீது அவனது கவனம் குவிய வில்லை.

தன் மூலதனம் நாளுக்கு நாள் நஷ்டமடைந்து குறைந்து கொண்டே வருவதைக் காணும் முதலாளி, தனது நிறு வனத்தின் உற்பத்திப் பிரச்சினை தீர்ந்து விட்டது; நிறுவ னம் நல்ல நிலையில் சென்று கொண்டுள்ளது என நிச்ச யமாகக் நினைக்கமாட்டான்.

இயற்கையின் மாபெரும் நிறுவனமான வான்வெளியில் பயணிக்கும் பூமியின் பொருளாதார நிலை நசிந்து வரு வதை கவனத்தில் கொள்ளாமல் ஒதுக்கித் தள்ளுவது எந்த வகை அறம்?

பூமியின் நசிவை நாம் கணக்கில் கொள்ளாமல், இருப் பதற்கு காரணம் இதுதான். நம்மால் உற்பத்தி செய்யாத இயற்கை வழங்கிய கொடையை மதிப்பில்லாதா பொரு ளாக கருதுவதுதன்.

மாபெரும் மேதை காரல் மார்க்ஸ் அவர்களும் 'வேலை மதிப்புக் கொள்கையை' உருவாக்கும் போது, இந்த

அதிர்ச்சிக்குள்ளாக்கும் தவறான சிக்கலில் சிக்கினார். நாம் இயற்கை வள மூலதனத்தை அறிவியல் தொழில் நுட்பம் மற்றும் பிற துறைகளிலும் பயன்படுத்தியிருக்கி றோம். நலிந்து வரும் இயற்கை வளத்தின் சிறு அள வைத்தான் இப்படி பயன்படுத்தியிருக்கிறோம்.

இவ்வுலகில் உள்ள அனைத்து மூலதனங்களும் இயற்கை அள்ளி வழங்கியவை. இந்த உண்மையை நாம் ஒரு நாளும் அங்கீகாரம் செய்யவில்லை.

இயற்கை வளத்தின் பெரும் பகுதி சுரண்டடப்பட்டு சூரையாடப்பட்டுக் கொண்டுள்ளது. இதை கவனத்தில் கொள்ளாமல், உற்பத்திப் பிரச்சினை

முடிவுக்கு வந்துவிட்டதாக நம்பிக்கை கொள்வது முட் டாள் தனமானது மட்டுமல்ல; தற்கொலை செய்து கொள்வது போன்றது.

'இயற்கை மூலதனத்தை' நாம் கொஞ்சம் கூர்ந்து கவனிப்போம். நமக்கு முதலில் தோன்றுவது தொன் மைப் படிமங்களால் உருவான எரிபொருள்கள். இவை இயற்கை மூலதனம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஆனால் நாம் இவற்றை வருமானம் கொடுக்ககூடிய வைகளாகவே பயன்படுதுகிறோம் என்பதையும் யாரும் மறுக்க முடியாது என்பதை நிச்சயமாக என்னால் உறு தியாக சொல்ல முடியும். அவற்றை நாம் மூலதனமா கக் கருதி கையாண்டால் அவற்றை சேமிப்பது பற்றியோ, பாதுகாப்பது பற்றியோ கவனத்தில் கொண்டிருப்போம்.

அவற்றின் தற்போதைய பயன்படு வேக ஓட்டத்தை எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு குறைக்க அனைத்தையும் செய்திருப்போம்.

ஈடு செய்யவே முடியாத இந்த இயற்கை வளங்களிலி ருந்து கிடைக்கும் செல்வத்தை ஒரு சிறப்பு நிதியாக

பாதுகாத்து வைத்து, வேறு மூலதன உற்பத்தி முறைக ளுக்குப் பயன்படும்படியாக செய்திருக்கலாம்.
நம் வாழ்க்கை முறையை இயற்கை படிம எரிபொருளை சுரண்டி எடுத்து பயன்படுத்தாமல் இருந்திருக்கலாம். இல்லையென்றால், இந்த எரிபொருளின் அளவை எவ் வளவு முடியுமோ, அவ்வளவு மிக, மிக குறைவாக பயன் படுத்திருக்கலாம்.
ஆக, படிம எரிபொருளை வருமானம் என்று எண்ணிக் கொண்டு செலவு செய்யாமல், மூலதனம் என்று செயல் பட்டிருந்தால், நிச்சயம் நல்ல மாற்றம் நிகழ்ந்திருக்கும். இதை மறந்துவிட்டு, எதிர் திசையில் பயணம் செய்கி றோம். சேமிப்பது, பாதுகாப்பது... என்று எந்தா நேர்ம றையானவையும் நாம் செயல்படுத்தவில்லை.
இயற்கை வளங்களின் பயன்பாட்டைக் குறைப்ப தற்கு மாறாக, எந்த அளவு முடியுமோ அந்த அளவுக்கு அதிகரித்துக் கொண்டிருக்கிறோம். கடும் நெருக்கடி யான தீவிர மோதலுக்குள் சிக்கிக் கொள்ளும்படியான வேகத்தில் சென்று கொண்டேயிருக்கிறோம். மாற்று உற்பத்திக்கான மற்றும் மாற்று வாழ்முறைக்கான சாத கமான வழிமுறைகளைக் கண்டறிவதை விட்டு வெகு தூரத்தில் இருக்கிறோம்.
அதே நேரத்தில் பொழுது போக்குவதற்கான பணக்கார நாடுகளின் கல்வித் தேவையைக் குறித்தும், ஏழை நாடு களின் தொழில்நுட்ப மாற்றத்தின் தேவை குறித்தும் அசுர வளர்ச்சியைப் பற்றியும் மிக மகிழ்ச்சியாக எப்போ தும் பேசிக் கொண்டேயிருக்கிறோம்.
இயற்கை மூலதனமான வளங்களை செலவழிப்பது மிக,மிக வேகமாகத் தொடர்கிறது. உலகிலேயே பணக் கார நாடாக கருதப்படும் அமெரிக்காவில் கூட இந்த விஷயம் பற்றி கவலைப்படுவதற்கு நல்லோர் அனேகம்

உள்ளனர். ஏன், வெள்ளை மாளிகையில் கூட 'பசுமை' ஆர்வலர்கள் உண்டு. இந்த கண்ணியமான கனவான்கள் நிலக்கரிப் படிமங்களை எண்ணெயாகவும், எரிவாயுவாகவும் மாற்றும் முயற்சிகளை பெரிதாகத் தேடுவதன் மூலமும் இயற்கைப் பொக்கிஷங்களை சுரண்ட எடுக்க முயற்சி செய்கிறார்கள்.

‘2000-ம் ஆண்டுக்கான உலக எரிபொருள் தேவை' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ள தகவல்களைப் பார்ப்போம். இப்போது நாம் 7,000 மில்லியன் டன் நிலக்கரிப் படிமங்களை உபயோகிக்கிறோம் எனக் கொண்டால் இன்னும் 28 ஆண்டுகளில் நிலக்கரித் தேவை மூன்று மடங்காகி விடுமாம். அதாவது, 20,000 மில்லியன் டன்களாகி விடுமாம்!

அது என்ன 28 ஆண்டுகள் கணக்கு? என்று நினைக்கிறீர்களா. இதனைக் கணக்கிட்டவர்கள் இரண்டாம் உலகப் போர் கால கட்டத்திலிருந்து கணக்கைத் தொடங்கி இருக்கிறார்கள். இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் எரிபொருள் பயன்பாடு மும்மடங்காகி இருக்கிறதுதான். ஆனால் இந்த மும்மடங்கு என்பது 5,000 மில்லியன் டன் நிலக்கரி பயன்பாட்டை சமமாகக் கொண்டது. நாம் இதனை கவனத்தில் கொள்ளாமல் எரிபொருள் தேவையை மூன்று மடங்கு அதிகரிப்பது பற்றி பேசிக் கொண்டிருக்கிறோம்.

நீங்கள் கேட்கக்கூடும் "இது சாத்தியம்தானா?" என்று. "அது செய்யப்பட்டாக வேண்டும், எனவே செய்யப்படும்" என்று பதில் வரும். கண் தெரியாத ஒருவரை நல்ல தொரு மனிதன் வழி நடத்துவது போலாகும் இது என கருதக்கூடும். அப்படி என்றால் ஏன் குறை சொல்ல வேண்டும்? குறைதான். ஏனெனில் கேள்வியே தவறா

னது. மூலதனத்தை விட வருமானம் என்ற ஒன்றையே மனதில் கொண்டு கேள்வி அமைந்துள்ளது.

2000-ம் ஆண்டில் அப்படி என்ன சிறப்பு? இப்போது துள்ளித் திரிந்து விளையாடும் குழந்தைகள் ஓய்வு பெறும் வயதான 2028 -க்கான முக்கியத்துவம் என்ன? அப்போது எரிபொருளின் பயன்பாடு இன்னும் மும்மடங்கு அதிகரிக்கும் என்பதா? நாம் மூலதனத்தை அல்லாது வருமானத்தைக் குறித்தே கவனம் கொள்கிறோம் என்பதை உணரும் போது. இந்த கேள்விகள், பதில்கள் எல்லாம் மடத்தனமானவை என்று எல்லோருக்கும் புரியும்.

இயற்கை படிமங்களால் உருவான எரிபொருள்கள் மனிதன் உற்பத்தி செய்தவை அல்ல. அதை மறு சுழற்சி செய்யவும் முடியாது என்பதை கவனத்தில் கொள்ளும்போது இந்த கேள்விகள், பதில்களின் பக்கம் புரிய வரும். இந்த இயற்கை வள மூலதனங்கள் ஒரு பயன்படுத்தப்பட்டால் அவ்வளவுதான், அவற்றை மீண்டும் பெற முடியாது.

சரி, வருமானம் ஈட்டக்கூடிய மற்ற எரிபொருள்கள் உள்ளனவா? என்று கேட்டகலாம். தற்போதைய நிலவரப்படி அத்தகைய எரிபொருட்களின் பங்கு (கலோரி அடிப்படையில்) வெறும் 4 சதவிகிதம் அளவுக்கு குறைவுதான். 'கார்'காலத்தில் இந்த எரிபொருள்கள், உலகப் பயன்பாட்டின் 70, 80, 90 சதவிகிதத் தேவையை நிறைவு செய்ய வேண்டும்.

சிறிய அளவில் ஏதேனும் செய்ய வேண்டி இருப்பது ஒரு புறம். பெருமளவில் செய்ய வேண்டியது என்பது மறுபுறம். உலகின் எரிபொருள் தேவையை நிறைவு செய்வது என்பதற்காக செய்ய வேண்டியிருப்பது உண்மையிலேயே மிகப் பெரிய வேலை. வருமானம் தரக்கூடிய எரிபொருள்களின் தேவை மிகப் பெரியதாக இருக்கும்

போது, உற்பத்தியின் பிரச்சினை தீர்ந்து விட்டது என்று எப்படி சொல்ல முடியும்?

'படிம எரிபொருள்கள் இயற்கை மூலதனத்தின்' ஒரு பகுதி. இதனை நாம் வருமானம் எனக் கருதி அதன் முக்கியத்துவத்திற்கு எந்த பொருளுமின்றி அவை செலவழிக்கக் கூடியவைதான் எனக்கருதுகிறோம்.

இப்படி நாம் இந்த இயற்கை மூலதனத்தை கவனமின்றி வீணாக அழிப்பதன் மூலம் சமூகத்தையே அச்சத்திற்குள்ளாக்குகிறோம். நம்மை சூழ்ந்துள்ள இந்த இயற்கைவள மூலதனத்தை வீணாக அழிப்பதன் மூலம் நாம் வாழ்க்கையையே அச்சத்திற்குள்ளாக்குகிறோம். இத்தகைய அச்சங்களின் காரணமாக மக்கள் விழிப்புற்று, சுற்றுச்சூழல் மாசடைவது நிறுத்தப் பட வேண்டும் எனக் கோருகின்றனர். இவர்கள் சுற்றுச் சூழல் சீர்கேடு என்பதை சமூக அக்கறையற்ற பேராசை பிடித்த மக்கள் தங்கள் குப்பைகளை அடுத்த வீட்டுப் பகுதியில் போடுவது என்று நினைக்கிறார்கள்.

பொருளாதார வளர்ச்சியை அதிகப்படுத்தி தேவைகளை பூர்த்தி செய்து கொள்வது நல்லதொரு சமூக செயல் என்று அவர்கள் உணர்கிறார்கள். இப்போது முதல் அதிகரித்துச் கொண்டே இருக்கும் உற்பத்தியின் ஒரு பகுதியையாவது உபயோகத்தின் அளவை அதிகரிப்பதைக் காட்டிலும் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்திக் கொள்ள பயன்படுத்த வேண்டும் என்று அவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். இந்த வகை சிந்தனைகள் எல்லாம் நல்லதுதான். ஆனால் இவ்வகைச் சிந்தனைகளின் மூலம் பிரச்சினையின் வெளிப் புற நுனிப்பகுதியை மட்டுமே தொடுகிறார்கள்.

பிரச்சினையின் அதிமுக்கியப் பகுதியை புரிந்து கொள்ள மாசு, சுற்றுச் சூழல், சூழல் சீர்கேடு மற்றும்

இன்ன பிறவும் ஏன் திடீரென்று முக்கியமாகிக் கொண் டிருக்கின்றன என்று யோசிக்க வேண்டும். இவ்வளவுக் கும் நாம் பெரிய பெரிய தொழிற்சாலைகளை நீண்ட காலமாக கட்டமைத்து வருகிறோம். ஆனால் கடந்த பத்து பதினைந்து ஆண்டு களாகத்தான் நமக்கு முன் னர் அறிமுகமேயில்லாத இந்த வார்த்தைகளைப் பயன் படுத்துகிறோம். இது ஏதோ ஒரு வித ஃபேஷனா, அல் லது ஏதேனும் திடீர் மாற்றமா அல்லது குழப்பமா?.

இதற்கான விளக்கத்தைக் கண்டறிவது கடினமானது ஒன்றும் அல்ல. படிம எரிபொருள்களைப் பொறுத்த மட்டில், இயற்கை மூலதனத்தின் பயன்பாட்டில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்தப் பயன்பாடு இரண்டாம் உலகப் போருக்கு முன்புவரை நிதான மான அளவில் இருந்தது. அதன் பின்னர், இந்தப் படிம எரிபொருள்களின் பயன்பாட்டை அபாயகரமான வேகத்திற்குக் கொண்டு சென்றுவிட்டோம். கடந்த கால் நூற்றாண்டு காலமாக நாம் பயன்படுத்தும், பயன்படுத் திக் கொண்டேயிருக்கும் எரிபொருள் அளவின் முன், இரண்டாம் உலகப் போர்க்காலம் வரையிலான எரி பொருள் பயன்பாட்டு அளவு ஒன்றுமே இல்லை என லாம். இரண்டாம் உலகப் போருக்குப் பிந்தைய நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளில் உலகம் முழுவதையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், தொழிற்சாலை உற் பத்தி அதிகமானது. இன்னும் வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால். தொழில்சாலைகள் உற் பத்தி அளவு மிகவும் அதிகரித்துள்ளன என சமீப காலத் தில்தான் உணரத் தொடங்கி இருக்கிறோம்.

ஏதோ காரணங்களாலோ, ஏதேனும் விளைவுக ளாலோ உற்பத்தித் தரத்திலும் சட்டென்று ஒரு முன் னேற்றம் உண்டானது. இயற்கையாகவே இல்லாத

வற்றை உருவாக்குவதை நமது அறிவியலாளர்களும், தொழில்நுட்ப நிபுணர்களும் கற்றுக் கொண்டுவிட்டனர். இவர்களுக்கு எதிராக இயற்கையால் ஒன்றும் செய்ய முடியவில்லை . அறிவிய லாளர்களாலும் தொழில் நுட்ப நிபுணர்களாலும் உண்டாக்கப்பட்டவை எதிர்க் காது இருக்கும் இயற்கையின் மீது பெரும் தாக்கத்தை உண்டாக்கி, அபாயகரமான சுற்றுப்புறச் சீர்கேட்டை உண்டாக்குகின்றன. கடந்த இருபது இருபத்தி ஐந்து ஆண்டுகளாகத்தான் இந்த விஞ்ஞான தொழில் நுட்பக் கண்டுபிடிப்புகள் அதிக அளவில் உற்பத்தி செய்யப்படு கின்றன. இவற்றிற்கு எதிரான எந்த இயற்கைச் செயல் பாடுகளும் இல்லாததால், இவற்றின் உற்பத்தி அதிக ரித்து, இவற்றினால் அபாயகரமான நீண்டகால தொடர் விளைவுகள் அதிக அளவில் உண்டாகின்றன. இன் னும் சில வகை உற்பத்திகளின் அபாயகரமான விளை வுகள் என்னவாக இருக்கும் என்பது சொல்லக்கூட முடி யாதவைகளாக உள்ளன.

வேறு விதமாக சொல்ல வேண்டுமானால் கடந்த 25 ஆண்டுகளாக தொடர்ந்துவரும் மனிதனின் தொழிற் சாலை செயல்பாடுகள் புதியதொரு நிலையையே தோற்றுவித்திருக்கின்றன. இந்தப் புதியதொரு நிலை நாம் தொடர்ந்து செய்துவரும் செயல்பாடுகளின் தோல் வியால் உருவானவை அல்ல. மாறாக அவற்றின் வெற் றிகளால் உருவானவை. ஈடு செய்ய இயலாத இயற்கை மூலதனத்தை நாம் படுவேகமாகப் பயன் படுத்தியதால் உண்டான இந்த திடீர் நிலை நாம் உண்மையை கண்ட றியாததால் தோன்றியதாகும்.

முன்னர் குறிப்பிட்டிருந்த 'வருமான எரிபொருள்' பற்றிய விஷயத்துக்கு மீண்டும் செல்வோம். எதிர்காலத்தில், அதாவது 2000-ம் ஆண்டைத் தொடரும் நூற்றாண்டில்

உலகின் தொழிற்சாலைகள் அனைத நீர்சக்தி அல்லது காற்று, சூரிய சக்தி மூலம் செயல்படும் என் எவரும் சொல்வதில்லை. மாறாக, நாம் அணுசக்தி காலத்துக்குள் செல்வதாக நமக்கு சொல்லப்படுகிறது. இந்த கதை கடந்த இருபதாண்டு காலமாகவே சொல்லப் வருகிற ஒன்றுதான். ஆனால் உலகின் சக்தித் தேவை மிக மிகச் சிறிய அளவே அணு சக்தியிலிருந்து பெறப்டுகிறது. 1970-ம் ஆண்டு வாக்கில் இந்த அணுசக்தி உற்பத்தி பிரிட்டனில். 2.7 சதவிகிதமாகவும், ஐரோப்பாவில் 0.6 சதவீதமாக அமெரிக்காவில் 0.3 சதவீதமாகவும் மட்டுமே இருந்தன.

அணுக்கழிவுகள் இயற்கையின் தாங்கும் திறனுக்கு மிக சிறிதளவே என்று நாம் ஒரு வேளை எண்ணக்கூடும். இதனைப் பற்றி கவலை கொள்ளக்கூடிய சிலர் இருக்கிறார்கள். அமெரிக்காவின் முன்னாள் குடியரசு தலைவர் நிக்ஸனின் அறிவியல் ஆலோசகர் டாக்டா எட்வர்ட் D டேவிட் ஒரு முறை கதிரியக்க கழிவுப் பொருள்களை வைத்திருப்பதைப் பற்றி சொன்னார். "நன்றாக மூடி 25,000 ஆண்டுகள் வரை பாதிப்பு தராத பொருளை பூமிக்கடியில் வைப்பதைப் பற்றி ஒரு சிலர் அருவறுப்புடன் அச்சம் கொள்கின்றனர்" என்று.

அது எப்படி இருந்த போதிலும் எளிதான ஒரு விஷயத்தை எழுப்புகிறேன். அதாவது ஆயிரக்கணக்கான மில்லியன் டன் படிம எரிபொருள்களுக்கு மாற்றாக, ஒவ்வோராண்டும் அணுசக்தியை உற்பத்தி செய்து சுற்றுப்புறச் சூழல், மாசுக்கட்டுப்பாடு ஆகிய பிரச்சினைகளை தீர்ப்பது நிக்ஸனின் அறிவியல் ஆலோசகர் டாக்டர் டேவிட்டுக்கு மட்டுமே அருவருக்கத்தக்க அச்சம் தரும் உணர்வைத் தருவதில்லை. அதாவது, ஒரு பிரச்சினை

யைத் தீர்ப்பது என்பது, அளவே இல்லாத பெரும் பிரச்சினையாக மாற்றுவதுதான் அது.

இதைச் சொல்வதன் மூலம் இன்னொரு பிரச்சினை மீது மோதுகிறேன் என்பது உறுதி. அதாவது, எதிர் காலத்தில் கதிரியக்கப் பொருள்களைப் பயன்படுத்துவது, எடுத்துச் செல்வது, கையாள்வது மற்றும் அவற்றை சேகரித்து வைப்பது போன்றவற்றில் அறிவியலாளர்களும், விஞ்ஞானிகளும் தேவையான பாதுகாப்பு விதிகளையும், முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் உருவாக்கிக் கொள்ள முடியும்.

மேலும், உலகில் போர் அல்லது சமூக வன்முறை பிரச்சினைகளோ ஏற்படாத, உருவாகாத ஒரு சூழலை அரசியல்வாதிகளும், சமூக விஞ்ஞானிகளும் உருவாக்க வேண்டும். இது ஒரு பிரச்சினையைத் தீர்க்க அதனை வேறொரு தளத்துக்கு மாற்றுவதாகும்.

இது நம்மை 'இயற்கை மூலதனத்தின்' மூன்றாவது வகைக்குக் கொண்டு செல்கிறது. இந்த வகை இயற்கை மூலதனத்தையும் நாம் எந்தவித முன்யோசனையும் இன்றி அழித்துக்கொண்டிருக்கிறோம். அதனை வருமானம் என எண்ணி, ஏதோ நாமே அதனை உற்பத்தி செய்தது போலவும் அதனை எளிதில் வேறொன்றின் மூலம் மாற்றிக் கொள்ளலாம் என்பது போல நம் தேவைக்கேற்ப பயன்படுத்தி வருகிறோம்.

தற்போதைய நமது உற்பத்தி முறைகள் ஆலைத் தொழிலாளிகளை அழித்துக் கொண்டிருக்கிறது என்பது தெளிவாகத் தெரியவில்லையா? பலருக்கும் இது புரிவதில்லை. உற்பத்திப் பிரச்சினை தீர்ந்துவிட்டது, இப்போது இருப்பது போல் முன்பு நன்றாக இருந்திருக்கிறோமா? முன்னெப்போதையும் விட நல்ல உணவு, உடை, உறைவிடம், கலவி நமக்குக் கிடைக்கிறதா

இல்லையா? ஆம் தான். பணக்கார நாடுகளிலே கூட அனைவருக்கும் இவை எல்லாம கிடைக்கவில்லை. மனிதனுக்கான பயனை மொத்த உள் நாட்டு உற்பத் தியின் அடிப்படையில் கணக்கிட முடியாது. சில நஷ்ட மடையும் விவகாரங்களைத் தவிர, இதனை கணக்கி டவே முடியாது. இருந்த போதும், குற்றங்கள் போதைப் பொருளுக்கு அடிமையாதல், வன்முறை, மண முறி வுகள், கலகம்... போன்றவற்றை கணக்கில கொள்ள இந்த வகையில் முடியாது. புள்ளிவிபரங்கள் எப்போதும் எதனையும உண்மையாக நிரூபிப்பதில்லை.. நமது சம காலத்தைய நாசகரமான மாபெரும் தவறுகளில் ஒன்று "உற்பத்திப் பிரச்சினை" தீர்க்கப்பட்டுவிட்டது என நம்பு வதுதான் என தொடங்கினேன். அனைத்து நவீன தன் மைகளுடன் கூடிய தொழில்துறை அமைப்பு எதன் அடிப்படையில் அடித்தளத்தில் அது
அமைந்ததோ. அந்த அடித்தளத்தை அழித்துக் கொண் டுள்ளது. இதை நாம் உண்மை என்று உணராமல் இருப் பதற்கு காரணம், உற்பத்தி பிரச்சினை தீர்க்கப்பட்டுவிட் டது என நம்பிக்கொண்டிருப்பதுதான்.
இதை பொருளாதார நிபுணர்களின் வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால் நமது தொழில்துறை அமைப் நம்மால் வருமானம் என்று மகிழ்வாகக் கொள்ளக்கூடிய ஈடுசெய்ய இயலாத மூலதனத்தினை அழித்து வாழ்கி றது. மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டேன். ஒன்று படிம எரிபொருட்கள், இயற்கையின் தாங்கு திறன் மற்றும் மனித சாரம். எனது வாதத்தின் மூன்று கருத்துக்களை யும் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் கூட, நான் சொல்ல வந்த ஏதாவது ஒரு வாதமே போதுமானதாகும்.
சரி, எனது குற்றச்சாட்டு என்ன? இப்போதைய அழி வுச் சூழ்நிலையை விட்டு ஒழிவதே மிக முக்கியமானது.

இதனை யார் செய்வது? நம்மில் ஒவ்வொருவரும் முதிய வரோ, இளையவரோ, ஏழையோ, பணக்காரரோ, செல் வாக்கு படைத்தவரோ, செல்வாக்கு இல்லாதவரோ அனைவரும் இதனைச் செய்ய வேண்டும். இப்போதே நாம் செயல்பட்டால்தான், எதிர் காலத்தைப் பற்றிப் பேசு வது பயனுள்ளதாக இருக்கும்."எப்போதையும் விட இப் போது நாம் நன்றாக இருக்கிறோம்" என்ற, நிலையில் இருந்தால் நம்மால் இப்போது என்ன செய்ய முடியும்?

நாம் பிரச்சினையை நன்றாகப் புரிந்து கொண்டு, புதிய உற்பத்தி முறைகளைக் கண்டறிந்து நமது வாழ்க்கை முறையை உருவாக்கி நுகர்வுப் பயன்பாட்டு முறையை மாற்ற வேண்டும். இந்த வாழ்க்கை

நிரந்தரமான ஒன்றாக இருக்க வேண்டும். இதற்கு முதன்மையான மூன்று உதாரணங்களைக் கொடுக் கலாம். வேளாண்மை மற்றும் தோட்டப் பயிர்களில் இயற்கை வேளாண்மை, மண் வளம் கெடாமல் பாது காத்து வளமான உற்பத்தியை நிரந்தரமாகப் பெருக் கத் தேவையான வழிமுறைகளை உருவாக்குவதில் முழுமையாக நம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண் டும். இதன் பின்னர் உற்பத்தி தன்னை கவனித்துக் கொள்ளும். தொழில் துறைகளைப் பொறுத்தவரையில் சிறு குறு தொழில்களை உருவாக்குவதில் நாம் ஈடுபட வேண்டும். அத்தொழில்களும் அழிவுகளுக்கானவைக ளாக இருக்கக்கூடாது. வெறும் பணத்துக்காக மட்டும் உழைக்கும்படியானதாக அந்த தொழில்கள் இல்லாமல் தொழிலாளர்கள் உற்சாகத்துடன் மகிழ்ச்சியுடன் ஈடு பாட்டுடன் செய்யக் கூடியவைகளாக இருக்க வேண் டும்.

நவீன வாழ்வின் போக்கைத் தீர்மானிக்கும் தொழில் துறை நிர்வாகம் மற்றும் தொழிலாளர்களின் கூட்டுறவு

அமைப்பாக மாற முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். அதில் இரண்டு தரப்பும் பங்குதாரர்களாகும்படி செய்ய வேண்டும்.
"கற்றுக் கொள்ளும் காலத்திற்குள்" நாம் அடியெடுத்து வைப்பதாக அடிக்கடி கேள்விப்படுகிறோம். இதனை சரி என்றே நாம் நம்புவோம். நமது சக மனிதர்களோடு மட்டுமல்லாது, இயற்கையுடனும் அதற்கும் மேலாக இயற்கையையும் நம்மையும் படைத்த மாபெரும் சக்தியுடனும் நாம் அமைதியாக வாழக்கற்றுக் கொள்ள வேண்டும். நிச்சயமாக ஒரு விபத்தின் மூலமோ அல்லது நம்மை நாமே உருவாக்கிக் கொண்டோ நாம் உருவாகவில்லை.
இந்த பிரிவில் நாம் தொட்டிருக்கிற கருத்துக்களைப் பற்றி விரிவாக பின்னர் காண்போம். அரசியலமைப்பை மாற்றுவதாலோ அல்லது சில மாற்றங்களை செய்வதாலோ மனிதனை எதிர்நோக்கும் சவால்களை வெல்ல முடியும் என சிலர் கருதக்கூடும்.
இனி வருகின்ற அத்தியாயங்களில் இந்த அனைத்து விஷயங்களை பற்றியும் அமைதி, நிரந்தர வாழ்வு எனும் பார்வையில் காண்பதற்கான முயற்சியை மேற்கொள்வோம் மனிதனே அழித்துக் கொண்ட அமைதி பற்றிய தேவை இப்போது பெருமளவில் உருவாகி உள்ளது வெளிப்படை யாகத் தெரிகிறது. நம் பொருளாதார வாழ்க்கையின் நிரந்தரத் தன்மைக்கு உத்தரவாதத்தை உருவாக்காமல், அமைதியை எப்படி உருவாக்க முடியும்?

## ஒவ்வொருவரும் பணக்காரர்கள்!

சர்வதேச வளமே அமைதியின் வலுவான அடித்தளம் என மேலாதிக்கம் நிறைந்த நவீன நம்பிக்கையாக உள்ளது. பணக்காரர்கள் எப்போதும் நிறைவாய் அமைதியாக இருக்கிறார்கள் என்று ஒருவர் பேதமையாக நினைக்ககூடும். ஆனால் வறிய நிலையில் உள்ள மக்களின் முன்னால் பணக்காரர்கள் எப்போதுமே பாதுகாப்பாகஉணர்வதில்லை என வாதிடக் கூடும். பணக்காரர்களின் ஆக்கிரமிப்பு குணம், மற்றவர்களை நசுக்கும் தன்மை ஆகியவை பயத்தினாலேயே உண்டாகின்றன என்றும் வாதிடலாம். ஆனால், எல்லோருமே பணக்காரர்களாகிவிட்டால் இந்த நிலை தலைகீழாகும் என்றும் கூட சொல்லக்கூடும்.

ஒரு பணக்காரர் ஏன் போர் செய்ய போகிறார்? அவர் பெற வேண்டியது எதுவுமில்லை. ஆனால் ஏழைகளின் நிலை அப்படி அல்ல. சுரண்டப்பட்டு, நசுக்கி ஒடுக்கப்பட்ட ஏழைகளுக்கு அவர்களைப் பிணைத்திருக்கும் அடிமை சங்கிலிகளைத் தவிர இழப்பதற்கு ஒன்றுமில்லை எனும் போது ஏழைகள், பணக்காரர்கள் போல இருக்க முடியாது. பணக்காரர்களாக மாற வேண்டிய வழிகளைத் தேடுவதே, அமைதிக்கான வழி என்ற வாதம் முன் வைக்கப்படுகிறது.

உங்களின் விருப்பமான ஒன்றை விரைந்து அடையும் போது, அடுத்த ஒன்றுக்கான முயற்சி உண்டாவதை கூறுவதால், அந்த ஆதிக்கம் கொண்ட நவீன நம்பிக்கை கவர்ந்து இழுக்கும் கவர்ச்சியைக் கொண்டுள்ளது.

அறப் பண்புகளை முற்றிலுமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு செயல்படுவதால் இந்த ஆதிக்கம் கொண்ட நம்பிக்கை மேலும் கவர்ச்சியாக உள்ளது. மாறாக
எதனையும் துறந்துவிடவோ அல்லது தியாகம் செய்யவோ வேண்டியதும் கிடையாது.

அமைதிக்கும் வளத்திற்குமான அறிவியலையும் தொழில்நுட்பத்தையும் நாம் பெற்றிருக்கிறோம். நம்மை நாமே அழித்துக் கொள்ளும்படியான
மடத்தனமான மூடத்தனமான பகுத்தறிவற்ற வகையில் செயல்படாதிருப்பதே அதன் தேவை. ஒடுக்கப்பட்ட வறிய மக்களுக்கான செய்தி இதில் என்னவென்றால் அவர்கள் பொறுமையிழக்காமல் எதிர்காலத்தில் பொன் முட்டைகளை அவர்களுக்காவும் கொடுக்க கூடிய வாத்து போன்ற வாய்ப்புகளை அழித்து விடக்கூடாது. பணக்காரர்களுக்கான தேவையான நேரங்களில் ஏழைகளுக்கு உதவும் புத்திசாலித்தனத்துடன் அவர்கள் செயல்பட வேண்டும். இதனால் அவர்கள் மேலும் பணக் காரர்களாகவே ஆவார்கள்.
“எவருமே நல்லவராக இருக்கத் தேவையற்ற முழு அமைப்பைக் கனவு காண்பதை” மகாத்மா காந்தியடிகள் எப்போதும் இழித்துப் பேசுவார். ஆனால் நிதர்சனத்தில் நாம் பயன் படுத்தக் கூடிய அற்புத சக்திகளான அறிவியல் தொழில் நுட்பத்தினாலான அமைப்பு முறையை கனவு காண்பதைப் பற்றியா அவர் கூறினார்? அறிவியலறிவும் தொழில் நுட்ப மேன்மையும் மட்டுமே தேவையான நிலையில், மனிதன் எப்போதுமே அடைந்திட முடியாத நற்பண்புகளைப் பற்றி எதனால்ன சிந்திக்க வேண்டும்?
காந்தி கூறுவதைவிட நமது நூற்றாண்டின் பொருளாதார நிபுணரான கெய்ன்ஸ் கூறுவதின் மீது நாம் கவனம் கொள்ளவில்லையா? 1930-ம் ஆண்டு உலகளாவிய வகையில்; பொருளாதார மந்தநிலை தோன்றிய போது "நமது பேரக் குழந்தைகளின் பொருளாதார சாத்தியங்கள்" பற்றி அவர் ஆராய்ந்தார். "ஒவ்வொருவரும் பணக்

காரர்களாகும் நிலை அண்மையில்தான் உள்ளது" என நம்பினார்.
வழிமுறைகளுக்கு முன் நல்ல மதிப்புகள் நிற்பதில்லை; பயன் கொண்டதே நன்மை தரக்கூடியது என நம்பிக்கை கொள்வோம் என்றும் சொல்லியுள்ளார்.

மேலும்"ஆனால் எச்சரிக்கையாக இருங்கள். ஆனால், விழிப்புணடன் இருங்கள். நான் சொல்லியவற்றுக்கான காலம் இன்னும் கனியவில்லை. ஒவ்வொரும் சரியான தைத் தவறு என்றும் தவறானதை மிகச் சரியானது என் றும் கருத்திக் கொண்டுள்ளோம். இதைக் கடந்து உண் மையின் வெளிச்சம் நம் மீது பாயும்போது, நம் பார்வை யில் தெளிவு பிறக்கும்."

இதை நாற்பது ஆண்டுகளுக்கும் முன்பு அவர் குறிப் பிட்டுள்ளார். இவரின் கருத்து தெளிவானது. அறப்பண் புகளை பெரிதாகக் கொண்டாடுவது பொருத்தமற்றது தான்.

உங்கள் முன் முன்று விஷயங்களை முன் வைக்கிறேன்.
முதலாவது: சர்வதேச வளம் சாத்தியமானதுதான்.
இரண்டாவது: நம்மை வளம் கொண்டவர்களாக மாற் றும் பொருளாதாரம்தான் சர்வதேச வளத்துக்கு அடிப்ப டையாக அமையும்.

மூன்றாவது: இதுவே அமைதிக்கான பாதை.

இந்த ஆய்வை எந்தக் கேள்வியிலிருந்து தொடங்கு வது என்பது வெளிப்படையானது. அது, எல்லாவற்றிற் கும் நிறைவானது உள்ளதா? உடனே நமக்கு பிரச் சினை எழுகிறது. நிறைவானது என்றால் என்ன? எவ

ரால் இதற்கு பதில் கூற முடியும்? எல்லாவற்றையும் விட பொருளாதார வளர்ச்சியே முக்கியமானது என்று சொல்லும் பொருளாதார நிபுணரால் இதற்குப் பதில் சொல்ல முடியாது. எனவே நிறைவானது என்ற கருத்தாக்கமே கொள்கையே இல்லை எனலாம்.

வளமே இல்லாத மிக வறிய நிலையில் உள்ள சமூகங்களும் உள்ளன. ஆனால் பணம் படைத்த சமூகம் கூறுகிறது, எங்களிடம் நிறைய உள்ளது என்று.

இந்த "நிறைவானது" என்பதை விட்டு விடுவோம். ஒவ்வொருவரும் அதிகமாகப் பெற கடினமாக முனையும் உலகத்தின் மூலாதாரங்களின் அதிகரித்து வரும் தேவையை ஆராய்வோம். அனைத்து மூலாதாரங்களைப் பற்றியும் நம்மால் ஆராய முடியாதாகையால் மிக முக்கியமான மூலாதாரங்களில் ஒன்றான "எரிபொருள்" என்பதனை நான் எடுத்துக் கொள்கிறேன். பேரளவு வளம் என்பதற்கு பெருமளவு எரிபொருள் பயன்பாடு என்பதில் எந்த சந்தேகமும் இருக்க முடியாது. தற்போதுள்ள நிலையில் உலகில் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கு மிடையிலான வள வேறுபாடு மிகவும் பெரிது. இது ஒரு சாராரின் எரிபொருள் நுகர்விலேயே தெளிவாகத் தெரிகிறது. 1966-ம் ஆண்டுக் கணக்கின்படி ஒரு நபரின் எரிபொருள் பயன்பாடு என்ற அளவு ஒரு மெட்ரிக்டன் நிலக்கரிக்குச் சமமாக இருப்பவர் களை நாம் பணக்காரர்கள் எனக் கொள்வோம். அதற்குக் கீழ் எரிபொருள் பயன்பாடு உள்ளவர்களை ஏழைகள் என கணக்கில் கொள்வோம்.

ஏழைகளில் ஒரு நபருக்காகும் சராசரி எரிபொருள் பாடு 0.32 டன்கள். அதாவது தோராயமாகச் சொன்னால் பணக்காரர்களின் எரிபொருள் பயன்பாட்டில் பதினான்கில் ஒரு பங்கு மட்டுமே. உலகின் மக்கள் தொகையில்

70 சதவிகதமானோர் ஏழைகள். ஏழைகள் திடீரென்று பணக்காரர்கள் பயன்படுத்தும் அளவு எரி பொருளைப் பயன்படுத்தினால் உலகின் எரிபொருள் பயன்பாடு சட்டென்று மூன்று மடங்காகி விடும்.

இதற்கு காலம் நிறைய ஆகும். உலகில் ஆசை அதிகரிக்கும்போது, போது இது நடக்கும். எனவே நாம் ஒரு கணக்கீட்டைத் தயார் செய்வோம். ஒரு ஆண்டுக்கு பணக்காரர்களின் வளர்ச்சி ஒன்றை சதவிகித மாகவும், ஏழைகளின் வளர்ச்சி இரண்டரை சதவிகித மாகவும் இருக்குமேயானால் உலகின் மக்கள் தொகை 2000மாவது ஆண்டில் 6,900 மில்லியனாகி விடும். இது கிட்டத்தட்ட எல்லா அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்களின் கணக்கிற்கு ஒத்துவரும். ஆனால் அதே நேரத்தில் பணக்காரர்களின் எரி பொருள் பயன்பாடு ஆண்டொன்றிற்கு ஒரு நபருக்கு 23 சதவிகிதம் அதிகரிக்கும் என்று வைத்துக் கொள்வோம்.

1966-ம் ஆண்டு 5.5 ஆயிரம் மில்லியன் டன்களாக இருந்த உலகின் மொத்த எரிபொருள் பயன்பாடு 2000 -ம் ஆண்டு 23.2 ஆயிரம் மில்லியன் டன்களாக மாறும். அதில் பாதி மக்கள் தொகை பெருக்கத்தினாலும் பாதி எரிபொருள் பயன்பாடு அதிகரிப்பின் மூலமும் நிகழ வாய்ப்பு உண்டு.

இந்த சரி பாதி கணக்கில் சுவாரசியம் உள்ளது. இதில் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்குமான இடைவெளி இன்னும் வேடிக்கையானது. உலகின் மொத்த எரிபொருள் உற்பத்தி பயன்பாடு 5.5 ஆயிரம் மில்லியன் டன்களிலிருந்து 23.2 ஆயிரம் டன்கள் என கணக்கிடலாம். இதன்படி 17.7 ஆயிரம் மில்லியன் டன்கள் உயரும்.

இதில் பணக்காரர்கள் மூன்றில் இரண்டு பங்கையும் ஏழைகள் மூன்றில் ஒரு பங்குக்கு குறைவாகவும் பயன் படுத்துவார்கள். 34 ஆண்டு காலத்தில் 425 ஆயிரம் மில்லியன் டன் எரிபொருள்களை (நிலக்கரி) உலகம் பயன்படுத்தும். இந்த அளவில் 321 ஆயிரம் மில்லியன் டன்களை அதாவது 75 சதவிகிதத்தை பணக்காரர்கள் பயன்படுத்தும்போது, ஏழை மக்கள் 104 ஆயிரம் மில்லி யன் டன்களைத்தான் பயன்படுத்துவார்கள்.

இப்போது ஒட்டுமொத்த நிலைமை தெளிவாக புரிந்தி ருக்கும். இந்த கணக்கீடுகள் வெறும் கற்பனைகளல்ல, ஆராய்ச்சிப் பூர்வமானவை, அறிவியலை அடிப்படை யாக கொண்டவை.

பணக்கார மக்கள் தொகைப் பெருக்கத்தை மிதமான தாகவும், ஏழைகளின் மக்கள் தொகைப் பெருக்கத்தை இரண்டு மடங்கு அதிகமாகவும் கொண்டு கணக்கிட் டுள்ளேன். இருந்தும் இயற்கை வள மூலதனத்திற்கு சேதமுண்டாக்குவதில் பணக்காரர்களே ஏழைகளை விட பெரும்பங்கு வகிக் கின்றர். ஏழைகளின் மக் கட் தொகைப் பெருக்கம் பணக்காரர்களின் மக்கள் தொகைப் பெருக்கத்தின் வேகத்திலேயே இருந்தால் ஏழைகளின் எரிபொருள் பயன்பாடு மிகக் குறைந்த அளவே (அதாவது, பத்து சதவிகிதமே) குறையும். ஆனால் பணக்காரர்களின் ஒரு நபர் பயன்பாடு மிகவும் அதிகம். இப்போது அவர்கள் பயன்படுத்தும் அளவுக்கு மேல் பயன்படுத்த அனுமதிக்காவிட்டால் இது நடக் காது. இருந்தபோதும் அப்படி கட்டுப்படுத்தினால் எரி பொருள் பயன்பாட்டினை கனிசமான அளவு குறைக்க முடியும். ஏனெனில் பணக்காரர்கள் ஏழைகளைக் காட் டிலும் பதினான்கு மடங்கு அதிகமாகப் பயன்படுத்து

கின்றனர். அப்படிக் கட்டுப்படுத்தும்போது மூன்றில் ஒரு பங்கு எரிபொருள் பயன்பாட்டைக் குறைக்க முடியும்.

இதில் மிக முக்கியமான கேள்வி ஒன்று உண்டு. உலக எரிபொருள் பயன்பாடு ஆண்டுக்கு ஆண்டு 23,000 மில்லியன் டன்களாக உயரும் என்று தோன்றுவது உண்மையா? அதுவும் 34 ஆண்டுகளில் 4,25,000 மில்லியன் டன்கள் பயன்படுத்தும்போது? உலக எரிபொருள் தேவையின் மூன்றில் ஒரு பங்கையோ அல்லது நான்கில் ஒரு பங்கையோ அணு சக்தி, எரிபொருளாகத் தந்தாலும் கூட உலகின் படிம எரிபொருள் இருப்பின் அளவு இந்த அளவாக இருக்க இயலாது.

ஆய்வுரீதியான கணக்கீடுகள், எவற்றையும் நிரூபிப்பதில்லைதான். எதிர்காலம் பற்றிய முன்கூட்டியே சொல்லப்படும் முடிவுகளை முற்றிலுமாக சார்ந்துவிட முடியாது. ஏனெனில் எதிர்காலம் பற்றிய எத்தகைய நிரூபணங்களும் சாத்தியமற்றதாக இருக்க வாய்ப்புகள் உள்ளது.

என்ன தேவையெனில் தீர்ப்புதான். இந்த தீர்ப்புக்கு தீர்மானத்திற்கு ஆய்வு ரீதியான கணக்கீடுகள் உதவலாம். பிரச்சினையின் அளவை பரிமாணத்தை நமது கணக்கீடுகள் மிக முக்கியமான ஏதோ ஒரு வகையில் சாதாரணமாகச் காட்டக் கூடும். உலகை ஒரே அலகில் அளவீடு மூலம் கணக்கீடு செய்து நடத்துதல் சரியானதல்ல. எரிபொருள் மூலாதாரங்கள் பரவலாக உலகெங்கும் ஒரே மாதிரியான அளவில் இருப்பில் இல்லை. விநியோகத்தில் ஏற்படும் சிறிய அளவு குறைபாடு கூட உலகை இரண்டாக இருப்பவர்கள், இல்லாதவர்கள் என உடனடியாகப் பிரித்துவிடும். எரிபொருளை பெருமளவில் பயன்படுத்தும் மேற்கு ஐரோப்பா, ஜப்பான் போன்ற நாடுகள் இயற்கை எரிபொருள்களை அதிக

அளவில் கொண்ட மத்திய கிழக்கு மற்றும் வட ஆப்ரிக் கப் பகுதிகளின் மீதான போட்டி பொறாமை நிறைந்த, இன்று கற்பனை செய்து பார்க்கவியலாத ஒரு உரிமைப் போட்டியில் ஈடுபடும். எப்போதுமில்லாத ஒரு பெரும் பிரச்சினை இந்த வகையில் தோன்றும். மிகவும் அச்ச மூட்டக்கூடிய பெரும் பிரச்சினை களுக்கு மாற்று ஏற்பா டாக ஏதேனும் ஒன்றை சொல்லிக் கொண்டு எதிர்காலம் பற்றி நிரூபணம் இல்லாத நிலையில் பிரச்சினைகளை ஒதுக்கித்தள்ளிவிடும் வாய்ப்புகள் எப்போதுமே உண்டு. இதுவரை கண்டறியப்படாத பெரிய அளவிலான எண் ணெய், இயற்கை எரிவாயு, நிலக்கரி போன்றவைகளின் இருப்பை அறியும் வாய்ப்புகளும் இருக்கக் கூடும். ஏன் அணுசக்தியின் உற்பத்தி, மொத்த தேவையில் கால் பங் காகவோ, மூன்றில் ஒரு பங்காகவோ இருக்க வேண் டும்? இப்போது பிரச்சினை அடுத்த தளத்திற்குக் செல் கிறது. ஆனாலும் பிரச்சினை தீர்வதாயில்லை. எரிபொ ருள் கிடைப்பதில் எந்தத் தட்டுப்பாடும் இல்லை என்று எண்ணிக் கொண்டு எரிபொருள் பயன்படுத்தப்படும் அளவை கருத்தில் கொண்டால் சுற்றுச் சூழல் சீர்கேடு அபாயம் எதிர்பார்த்ததை விடக் கடுமையாக இருக்கும்.

அணுசக்தியை எடுத்துக் கொள்வோம். பேரளவு அணு சக்தித் திட்டங்களுக்குத் தேவையான அடர் யுரேனி யம் போதுமானதாக இல்லை என சிலர் கூறுகின்றனர். ஏனெனில் எரிபொருள் தேவை ஆயிரக்கணக்கான டன் நிலக்கரிக்குச் சமானமானதாக இருக்கிறது.

இவர்களின் கூற்று தவறு. தேவையான அளவு யுரேனி யம்

கண்டுபிடிக்கப்படும். அவை அனைத்தும் உலகின் பல் வேறு மூலை முடுக்குகளிலிருந்து உலகின் மக்கள் தொகை மிகுந்த இடங்களுக்குக் கொண்டு வரப்பட்டு

அதிக அளவு கதிரியக்கம் உள்ளதாக மாற்றப்படும். சிலர் இதன் சிறு பகுதியை அழிவுக்குப் பயன்படுத்தும் அரசியல் ரீதியான பயத்தைக் காட்டிலும், இந்தக் கதிரியக்கப் பொருள்களால் உண்டாகும் உயிரியல்பூர்வமான அச்சுறுத்தல் கற்பனை செய்துகூட பார்க்க இயலாதது.

இன்னும் அணுசக்தி உற்பத்தியை வேண்டாமென ஒதுக்கித் தள்ளும் வகையில் பேரளவு படிம எரிபொருள்கள் கண்டு பிடிக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டால் வேறொரு ரீதியில் வெப்ப சுற்றுப்புறச் சூழல் சீர்கேடு (வெப்பமய மாதல்) ஏற்படும் பெரும் பிரச்சினை உண்டு.

எரிபொருள் எதுவாக இருந்தாலும் அதன் பயன்பாடு மடங்கு மடங்காக அதிகரித்துக் கொண்டே இருக்கையில் உண்டாகும் சுற்றுப்புறச் சீர்கேட்டுக்கு சாத்தியமான எந்தத் தீர்வும் இல்லை .

ஒரு எளிய கோட்பாட்டை; கொள்கையை விளக்கவே எரிபொருளை உதாரணமாக எடுத்துக்கொண்டேன். பொருளாதாரம், இயற்பியல், வேதியியல் மற்றும் தொழில்நுட்பம் போன்ற துறைகளின் கீழ் பார்க்கப்படும் நன்றாக அறியப்படாத அளவிலான பொருளாதார வளர்ச்சி சுற்றுப்புறவியல் ரீதியாகப் பார்க்கப்படும் போது நிச்சயமாய் சிக்கலுண்டாக்குகின்றது. பொருள் வளத்தில் நிறைவடைவ தொன்றையே குறிக்கோளாகக் கொண்டு ஒரே மனதுடன் செயல்படுவது, இந்த உலகிற்குப் பொருந்தாது. ஏனெனில் அந்த எண்ணத்திற்கு அளவே கிடையாது. ஆனால் சுற்றுப் புறச் சூழல் என்பதோ வரையறைகளுக்கு உட்பட்டது. இபபோதே பல்வேறு வலிகள், அழுத்தங்கள் அதிகமாகி வருவதை சுற்றுச் சூழல் நம்மிடம் சொல்ல முயன்று கொண்டிருக்கிறது. ஒரு பிரச்சினை தீர்க்கப்படுகையில் அதன் விளைவாக, பத்து பிரச்சினைகள் எழுகின்றன. "புதிய பிரச்சினைகள்

நிகழ்வுகளின் தோல்விகளால் வரவில்லை. ஆனால் தொழில் நுட்பங்களின் வெற்றிகளால் அவை உண்டா கின்றன" என்று பேராசிரி பேரி காமனர் கூறுகிறார்

.

இந்த பிரச்சினைகளை பலர் வெறுமனே நேர்மறையா கவும் எதிர்மறையாகவும் விவாதிக்கின்றனர். "அறிவி யல் நிச்சயமாக இதற்குத் தீர்வு கண்டுவிடும்" என்று நேர்மறையாக சிந்திப்பவர்கள், விவாதிப்பவர்கள் பெரு மையுடன் வலியுறுத்துகின்றனர். அறிவியல் செயல்பா டுகளில் தெளிவான உணர்வுடன் கூடிய அடிப்படை மாற்றங்களை செய்தால்தான் அவர்களது கூற்று சரியாக இருக்கக்கூடும் என நான் கூறுவேன். கடந்த நூறாண்டு காலமாக உருவாகியுள்ள அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி, வாய்ப்புகளை உருவாக்கித் தேவைகளை நிறைவு செய்வதை விட, அபாயகரமானவற்றையே மிக வேகமாக வளர்த்துள்ளது. இதனைப் பற்றி நிறைய விப ரங்களைப் பின்பு சிந்திப்போம்.

தானாகவே சமன் செய்து கொள்ளக் கூடிய இயற்கை அமைப்பு குறிப்பிட்ட சில முக்கியமான தளங்களில் தன்னை சரி செய்து கொள்ள இயலாமல் இப்போதே திணறி வருகிறது. இயற்கை சமன்பாடு பாதிக்கப்பட்ட பல்வேறு தளங்களைப் பற்றி ஆழமாக காண வேண்டும் எனில் விரிவாகப் பேச வேண்டி வரும். பல நிபுணர்க ளுடன் சேர்ந்து பேராசிரியர் பேரி காமனர், 'எர்ரி' என்ற ஏரியின் நிலை பற்றி கவனத்திற்குக் கொண்டு வந்ததே போதுமான எச்சரிக்கையாகும்.

இன்னும் பத்து அல்லது இருபது ஆண்டுகளில் அமெ ரிக்காவில் உள்ள உள்நாட்டு நீர் நிலைகள் எல்லாம் எர்ரி ஏரியின் நிலைமைக்கு வந்து விடும். அதாவது சமநிலையற்ற இயற்கை, குறிப்பிட்ட தளங்கள், இடங்

கள் என்றில்லாது எங்கும் வியாபித்து விடும். இதே நிலை தொடர்ந்தால் மீண்டும் பழைய நிலைக்கு வரு வது என்பது இயலாததாகிவிடும். அந்த அபாயகரமான நிலையை அடையாது இருந்தால் மட்டுமே
மீண்டு வருதல் என்பதும் சாத்தியம்.

ஒவ்வொருவரும் பெருவளம் பெறும் வேட்கையிலேயே அளவுக்கு மேல் பொருளாதார வளர்ச்சி என்ற கருத் தின் அடிப்படையிலேயே செயல்படுவதால் மிகவும் முக் கியத்துவம் வாய்ந்த கேள்விகளை முன்வைக்கலாம் எனக் கருதுகிறோம். ஒன்று கூடுதலாகவோ அல்லது மாற்றாகவோ உள்ள அடிப்படை மூலாதாரங்களின் கிட் டக்கூடிய தன்மை. இரண்டாவது, சுற்றுப்புறச் சூழலில் மனிதன் ஏற்படுத்தும் தாக்கத்தை ஏற்றுச் சமன் செய்து கொள்ளக்கூடிய சுற்றுப்புறச் சூழலின் தன்மை. பொருள் களல்லாதவற்றால் ஏற்படக் கூடிய சிலவற்றைக் காண் போம்.

தனிமனிதன் வளம் பெறுவதென்பது மனிதனின் வலு வான இயல்பு என்பதில் எந்த சந்தேகமும் இருக்க முடி யாது. முன்பு பொருளாதார நிபுணர் கெய்ன்ஸின் கட்டு ரையிலிருந்து குறிப்பிட்டபடி "பேராசை , தீய ஒழுக்கம், வட்டி வாங்குவது குற்றம் மற்றும் பொருள் வளத்தின் மீதான விருப்பு வெறுக்கத்தக்கது போன்ற மதம் மற்றும் மரபு சார்ந்த ஒழுக்க நிலைக்கு மீண்டும் வருவதற்கான காலம் இன்னும் கண் முன் தெரியவில்லை".

மதங்களும் மரபுசார் நல்லறிவும் எல்லா வகைகளிலும் எதிர்க்கச் சொல்லும் மனிதனின் வலுமிக்க சுயநலத் தின் காரணமாகவே பொருளாதார வளர்ச்சி என்பதை அடைய முடியும் என அவர் கூறுகிறார்.

நவீன பொருளாதாரம் வெறி பிடித்த பேராசை, பொறாமை போன்றவற்றாலேயே முன் செலுத்தப்படு

கிறது. இவை எதிர்பாராத விதமாகத் தோன்றுபவை அல்ல; இந்த காரணிகள் நீண்டகாலம் வலுவுடன் இருக்குமா அல்லது தாமாகவே அது படியான விதை களைத் தன்னகத்தே கொண்டிருக்குமா என்பதே கேள்வி. "தவறே பயன் மிக்கது மற்றும் சரி என்பது அப் படி அல்ல" என்று கெய்ன்ஸ் கூறுகிறாரென்றால் ஒன்று சரியாகவும் இருக்கலாம் அல்லது தவறாகவும் இருக்க லாம் என்ற உண்மையை விவரித்து நிறுவ முயல்கிறார் அல்லது சில காலம் சரியாகத் தோன்றும் ஒன்று, பின் னர் தவறாகக் கூடும் என்பதுதான் அவர் நிறுவ நினைப் பதாக இருக்கலாம்.

இந்தக் கூற்று தவறென்று நேரடியான செயல் முறை மூலம் விளக்குவதற்கான போதுமான ஆதாரம் என் னிடம் இருப்பதாக நான் நினைக்க வேண்டும். மனித னின் தீய பண்புகளான பேராசை அல்லது பொறாமை முறைப்படி உருவாக்கப்பட்டது என்றால், அறிவின் அழிவு தவிர்க்க முடியாததாகிவிடும். பேராசையாலும் பொறாமையாலும் வழி நடத்தப்படும் ஒரு மனிதன் அனைத்தின் உண்மைத் தன்மையையும் பார்க்கும் சக் தியை இழந்து விடுகிறான். சுய நலத்தின் அடிப்ப டையிலேயே ஒவ்வொன்றையும் பார்க்கிறான். அவனது வெற்றி என்பது தோல்வியாகி விடுகிறது. ஒரு முழு சமூகமே இந்த குணங்களால் வழி நடத்தப்படும்போது அது சில சாதனைகளை அடைந்தாலும் தினசரி வாழ்க் கையின் சின்னஞ்சிறு பிரச்சினைகளைக் கூடத் தீர்க் கும் திறனற்றுப் போய் விடுகிறது. மொத்த உள்நாட்டு உற்பத்தி வேண்டுமானால் அதிகரித்துக் கொண்டே போகலாம், புள்ளியியல் விபரங்களின்படி. ஆனால் அதி கரித்துக் கொண்டே இருக்கும் ஏமாற்றங்கள், ஒதுக்கப் படுதல், அந்நியப்படுத்தப்படல், பாதுகாப்பின்மை மற்றும்

இன்ன பிறவற்றால் பாதிக்கப்படும் சாதாரண மனிதன் தான் வளர்ந்து விட்டதாக நினைப்பதில்லை. சிறிது காலத்திற்குப்பின் மொத்த உள்நாட்டு உற்பத்தி என்ற அளவீடு அதிகரிக்காமல் தேங்கும். இது அறிவியல் தொழில் நுட்ப தோல்விகளால் அல்ல, மாறாக ஓசை யின்றி ஏற்படும் ஒத்துப் போகாத ஒரு நிலையாலே ஏற்ப டும். இது ஒடுக்கப்பட்ட, சுரண்டப்பட்ட மக்களால் மட்டு மல்ல, வசதி படைத்தவர்களாலும் நிகழும்.
எல்லா மட்டங்களில் உள்ள ஆண் பெண் ஆகிய இரு பாலோரையும் அவர்களது உண்மையான விருப்பு எந்த இடத்திலிருக்கிறது என அறிந்து கொள்ளாமலிருக்கும் பகுத்தறிவற்ற மடத்தனமான நிலையை ஒருவர் கண் டிக்கக் கூடும்.
ஆனால் இந்த மக்கள் ஏன் அதை உணரவில்லை ? ஒன்று பேராசையாலும் பொறாமையாலும் அவர்களின் அறிவு
மழுங்கடிக்கப்பட்டிருக்க வேண்டும் அல்லது அவர்களது ஆழ்மனதில் அவர்களது உண்மையான விருப்புகள் வேறெங்கோ இருக்கின்றன என்று புரிந்து கொள்ளப் பட்டிருக்க வேண்டும். ஒரு புரட்சிகரமான சொற்றொடர் உண்டு. அது உணவினால் மட்டுமே மனிதன் வாழ்ந்து விட முடியாது; பெருங்கருணை கொண்ட இயற்கையின் கருணையும் இங்கு அவசியம்.

நல்ல அரசாங்கம் (அமைந்தால்) தனது அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றங்களாலோ அல்லது கடுமை யான சட்ட முறைகளாலோ இன்று பெரும்பாலான பணக்கார சமூகங்களை பீடித்திருக்கும் கொடிய நோய் களை போக்கிட முடியும் என்று இன்னும் கூட நினைப் பது சரியாகுமா? சாத்தியமாகுமா?

ஆகையால்தான் கூறுகிறேன், சர்வதேசம் முழுமையும் நிறைவான பொருள்வளம் பெறுதலின் மூலம் அமைதி என்பதைக் கொண்டுவர முடியாது. இந்தப் பொருள்வ ளம் எனபது நவீன காலத்தில் உச்சரிக்கப்படும் அர்த் தத்தில்

கொள்ள வேண்டும். அடையக் கூடியதாகச் சொல்லப்ப டும் இந்தப் பொருள்வளம் மூடத்தனமான அறிவியலுக் குப்

பொருத்தமில்லாத உண்மையான நிலைக்குப் புறம்பான நம்பிக்கையாகும். பொருளாதாரம், அறிவியல், தொழில் நுட்பம் ஆகியவற்றில் இருந்து விவேகத்தை அப்புறப்ப டுத்தி விடுதல் என்பது சிறிது காலத்துக்கு பின்

தோல்வியில்தான் முடியும். ஆனால் ஆன்மிக அறப் பண்பு சார்ந்த உண்மைகள் பற்றிய பிரச்சினைகளை முக்கியமான மைய நிலைக்குக் கொண்டு வருவதால் வெற்றி நிலையை அடைகிறோம்.

பொருளாதாரக் கண்ணோட்டத்தில் பார்க்கையின் விவேகம் என்ற கருத்தாக்கத்தின் மையம் நிரந்தாம் ஆகும். நிரந்தரமான பொருளாதாரம் பற்றி நாம் ஆய்வு செய்தே தீர வேண்டும். எந்த விதமான மூடத்தனமான விளைவுகளின்றி நீண்டு செயல்படாவிட்டால் பொரு ளாதாரம் என்பதற்கு அர்த்தம் இல்லாமல் போய்விடும். ஒரு குறித்த இலக்கை நோக்கி வளர்ச்சி இருக்கக் கூடும். ஆனால் அந்த வளர்ச்சி அளவிடற்கரிய பொது வான எல்லா நிலைகளிலுமான வளர்ச்சியாய் இருக்க முடியாது.

“ஒவ்வொரு மனிதனின் தேவையைத் தீர்ப்பதற்கு பூமி அனைத்தையும் கொண்டிருக்கிறது, ஆனால் ஒவ் வொரு மனிதனின் பேராசைகளைத் தீர்ப்பதற்கு அல்ல” என்று மகாத்மா காந்தி சொன்னதைப் போல்தான்.

“நமது தந்தையர்க்கு ஆடம்பர சாதனங்களாய் இருந்தவை, நமக்கு அத்தியாவசியத் தேவைகள் என்ற எண்ணத்துடனான செயல்பாடுகள் நிரந்தரம் என்ற ஒன்றுடன் ஒத்துப் போக முடியாது.

புதிதாகத் தேவைகளை உருவாக்கிக் கொள்வதும், தேவைகளை விரிவாக்கிக் கொண்டே போவதும் விவேகமாகாது. இன்னும் இது சுதந்திரம், அமைதி என்பனவற்றுக்கும் எதிரானது. மனித குலத்தில் பேராசை, பொறாமை போன்றவற்றை வளர்த்து, நல்லறிவு, மகிழ்ச்சி, இணக்கம் ஆகியவற்றை அழித்து அதன்மூலம் மனிதனின் ஒட்டு மொத்த அமைதியையுமே அழிப்பதன் மூலம் அது கட்டப்படுகிறது. ஏழைகளை விட பணக்காரர்களே அமைதியை நாட முடியும். அதுவும் அவர்கள் பாது காப்பாக உணரும் பட்சத்தில்தான். இங்கே முரண்பாடு தோன்றுகிறது. பணக்காரர்களின் செல்வவளம் என்பது ஓரளவே உள்ள இயற்கை வளங்களிலிருந்து பேரளவு வளத்தை அவர்கள் சேர்த்துக் கொள்வதிலேயே உள்ளது. இது தவிர்க்கவியலாத ஒரு தீவிர மோதல் போக்கை மற்ற பணக்காரர்களுடன் ஏற்படுத்தி விடும். பலவீனமாகவும், எதிர்க்க சக்தி இன்றியும் இருப்பதால் ஏழைகள் இந்த மோதலில் ஈடுபட முடியாது.

மனிதர்கள் விவேகத்துடன் வாழ்வதற்கான அறிவிலிருந்து வெகு தொலைவில் மனிதன் இப்போது இருக்கிறான் என்று நாம் சொல்ல முடியும்.

தவறானது, பயன்மிக்கது மற்றும் சரி என்பது அப்படி அல்ல... என்ற கூற்று விவேகத்திற்கு எதிரான கருத்தாகும். விவேகத்தை தக்க வைத்துக் கொள்வதற்காக எவர் செயல்படவில்லையோ, அவர் அமைதிக்கான வழியில் உண்மையாக செயல்படவில்லை. சர்வ தேசம் முழுமையையும் வளம் மிக்க நிலையை அடை

யும் வரை நற்பண்புகளையும் நல்லொழுக்கத்தையும் பின்பற்றுவதை தள்ளிப் போடலாம் என்ற நம்பிக்கையும், வளத்தைப் பற்றி மட்டு சிந்தித்து ஆன்மீக, அறம் சார்ந்த எவற்றையும் ஒரு சிறிதும் கவலைப் படாமல் புவியில் நம்மால் அமைதியை நிர்மாணிக்க, நிறுவ முடியும் என்ப தும் தேவைகளின் ஒவ்வொரு அதிகரிப்பும் கட்டுப்பாட் டில் இல்லாத புற சக்திகளை சார்ந்து இருக்க வேண்டிய நிலையை அதிகரிக்கிறது.
இதனால் வாழ்க்கை இருத்தலில் பயம் அதிகரிக்கி றது. போருக்கும், சச்சரவுகளுக்கும் காரணமான பதட் டங்களை தேவைகளைக் குறைப்பதன் மூலம் மட்டுமே நன்றாகக் குறைக்க முடியும். விவேகத்தின் அடிப்ப டையிலான அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தின் மீது சார்ந்திருப் பதன் மூலமே நிரந்தர பொருளாதாரத்தை நிறுவ முடியும்.

சுற்றுச் சூழலை நஞ்சாக மாற்றி சமூக அமைப்பை சிதைக்கும் அறிவியல் தொழில்நுட்ப தீர்வுகள் அவை எந்த அளவு புத்திசாலித்தனமாக உருவாக்கப்பட்டிருந் தாலும் மனிதனுக்கு பயனளிப்பதில்லை. மாபெரும் பொருளாதாரத்தை உற்பத்தி செய்யக் கூடிய மாபெ ரும் இயந்திரங்கள் மாபெரும் சுற்றுச் சூழல் சீர் கேட்டை உண்டாக்கக் கூடியவை. ஆதலால் அவை வளர்ச்சி என்ற ஒன்றினைப் குறிப்பதில்லை. அத்த கைய இயந்திரங்கள் விவேகம் என்ற ஒன்றையே ஒதுக் கித் தள்ளி விடுகின்றன. அழகான, கம்பீரமான, நேர்த் தியான, வன்முறையற்ற இயற்கை சார்ந்த அறிவியல் தொழில்நுட்பத்தையே விவேகம் வேண்டி நிற்கின்றது. அமைதி என்பது பகுக்க முடியாத ஒன்று. அப்படி இருக் கும்போது எச்சரிக்கையற்ற முன்யோசனை இல்லாத அறிவியல் மற்றும் வன்முறையிலான தொழில் நுட்பம்

ஆகியற்வற்றை அடித்தளமாக கொண்டு எப்படி அமைதியை உருவாக்க முடியும். இப்போது நம்மனைவரையும் பயமுறுத்திக் கொண்டிருக்கும் அழிவுக்குக் கொண்டு செல்லும் அறிவியல் நுட்பத் துறையில் ஒரு புரட்சியை நாம் செய்ய வேண்டும். அறிவியலாளர்களிடம் இருந்தும் தொழில்நுட்ப வல்லுநர்களிடமிருந்தும் உண்மையிலேயே நமக்கு தேவைப்படுகிறது? நமக்கு புதிய முறைகளும் இயந்திர உபகரணங்களும் வேண்டும் எனச் சொல்வேன்.

*அனைவருக்கும் எளிதில் கிடைக்க வேண்டும்; மலிவாக இருக்க வேண்டும்.

*சிறு-குறுந்தொழில்களுக்கு ஏற்றவையாக இருக்க வேண்டும்.

*மனிதனின் படைப்பாற்றலை வெளிப்படுத்தும் தேவைகளுக்கு ஏற்றவையாக அவை இருக்க வேண்டும்.

நிரந்தரமான வாழ்வை உறுதியாகத் தரக்கூடிய வன்முறையற்ற இயற்கையுடனான உறவை மனிதனுக்குக் தரக்கூடிய நிலை இந்த மூன்று தன்மைகளிலிருந்து தான் பிறக்கும்.

இயந்திரங்களும் செயல்முறைகளும் ஒவ்வொருவருக்கும் மலிவாகக் கிடைக்க வேண்டும். ஆனால் நமது அறிவியலாளர்களும் தொழில் நுட்ப வல்லுநர்களும் இப்படிப்பட்டவற்றை உருவாக்குவதில்லை என நாம் ஏன் எண்ண வேண்டும்? ' நம் தேசத்தின் கோடிக்கணக்கான பாமர மக்கள் மகிழ்ச்சியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க வேண்டும் என விரும்புகின்றேன். ஆன்மீக ரீதியில் அவர்கள் வளர வேண்டும் எனவும் விரும்புகிறேன்..... கருவிகளின் தேவை நமக்கிருப்பதாக நாம் எண்ணினால் கட்டாயம் நாம் அவற்றைப் பெற வேண்டும்.

ஆனால் சிலரின் கைகளில் சிக்கி மக்களை வேலை அற்றவர்களாக்கி கருவிகளையே சார்ந்திருக்கும்படி யான நிலைக்கு தள்ள இடம் கொடுக்கக்கூடாது..." என் பது காந்தியடிகளின் எண்ணமாக இருந்தது.

"திருப்தியுள்ள மிகவும் நிறைவான வாழ்க்கையை இன் னும் அதிக மக்களுக்குத் தந்து சுய அதிகாரமுள்ள ஜனநாயக முறையை அளித்து விளம்பரங்களின் மூலம் திணிக்கப்படும் நுகர்வுப் பொருட்கள் போன்ற அபாயக ரமான வழிகளிலிருந்து மக்களை விடுவித்தல் போன்ற வையும் கூடுதலாக நடக்கும்" என்பது ஆல்டஸ் ஹக்ஸ் லியின் கருத்து.

சமூகத்தின் வருவாய்க்குக் கட்டுப்படியாகக் கூடிய மலி வான வகையில் எளிதில் மக்களால் பெற்றுக் கொள் ளக் கூடியதாக செயல்முறைகளும் இயந்திரங்களும் இருக்குமேயானால் அதைப் பயன்படுத்தும் சமூகத் திற்கும் வருவாய்க்கும் இடையே வரைமுறையிலான அடக்கமான ஒரு உறவு இருக்கும். ஒரு வேலையி டத்திற்கான மூலதனம், நன்கு உழைக்கக்கூடிய ஒரு தொழிலாளியின் ஆண்டு வருமானத்தைவிட அதிகமா கிவிடக் கூடாது என்று நானே ஒரு முடிவுக்கு வந்துள் ளேன். அதாவது ஒரு தொழிலாளி ஒரு ஆண்டுக்கு 5000 டாலரை சம்பாதிக்கிறான் என்றால்

வேலை இடத்தின் முதலீடு எந்த காரணத்தைக் கொண்டும், எந்த வகையிலும் 5000 டாலரை விட அதி கமாகக் கூடாது. மூலதனம் அதிகமானால் பொருள் வளமும் அதிகாரமும் வெகு சிலர் வசம் செல்லக்கூ டிய கடுமையான அபாயம் நேரிடும். அது மட்டுமல்லாது இத்த கைய அமைப்பில் சேரவியலாதவர்களின் எண் ணிக்கை கூடி அதனால் பிரச்சினைகள் சச்சரவுகள் அதிகமாகும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும்.

நகர்மயமாக பெருகி மக்கள் தொகை அடர்த்தி இடத்துக்கு இடம் மாறு பட்டு ஒரு சமனற்ற தன்மை தோன்றும். மக்கள் தங்களுக்குள் அந்நியப்பட்டு, குற்றங்கள் பெருகும்.

சிறு-குறு தொழில்களுக்குப் பொருந்தும்படியான செயல் முறைகளும் இயந்திரங்களும் இரண்டாவது தேவையாகும். தொழில் அளவு (சிறு-குறு) பற்றி ஏற்றுக் கொள்ளும் படியாக புத்திசாலித்தனமாக பேராசிரியர் லியோ போல்ட் கோர் எழுதியுள்ளார். சிறு தொழில் கூடங்களால் சுற்றுச் சூழலுக்கு ஏற்படும் தீமை பெரும் தொழில் கூடங்களால் உண்டாவதை விட மிகவும் குறைவே, அவை எண்ணிக்கையில் எத்தனை அதிகமாக இருந்தாலும். ஏனெனில் சிறு தொழில் கூடங்களால் ஏற்படும் பாதிப்பு, இயற்கையின் மீளும் தன்மைக்குள்ளேயே அடங்கிவிடும். புரிந்து கொள்வதைக் காட்டிலும் சோதித்துப் பார்ப்பதையே சார்ந்திருக்கும் மனிதனின் சிறிய அறிவைக் கணக்கில் கொண்டாலே சிறிய அளவு என்பது விவேகமுள்ளதெனவாகும். அணு சக்தித் திட்டங்கள், வேளாண்மையில் புதிய வேதிப்பொருள்கள், போக்குவரத்துக்கான தொழில்நுட்ப செயல்பாடுகள் மற்றும் இவை போன்ற எண்ணிலடங்கா செயல்பாடுகளால் பெருமளவில் அபாயங்கள் தோன்று கின்றன.

இத்தகைய பெரும் நாசங்களுக்கு சிறிய கூட்டங்களே சில வேளைகளில் காரணமாக இருந்தபோதும், பேராசை, பொறாமை, அதிகார வெறிபிடித்த பெருங் கூட்டத்தினால் விளையும் பேரழிவுகளோடு ஒப்பிடும் போது சிறு கூட்டத்தினரால் ஏற்படும் நாசம் அற்பமானது தான். ஒட்டு மொத்த பிரபஞ்சத்திற்கும் தாங்களே வாரிசுகள் போலக் காட்டிக் கொள்ளும் அநாமதேய நிறுவனங்கள் அல்லது அதிகார பித்து பிடித்த அரசாங்கங்

கள் அமைப்பினர் தங்கள் பகுதிகளை நில அமைப்பை நன்கு கவனித்துக் கொள்வார்கள்.

செயல்முறைகளும், இயந்திரங்களும், உபகரணங்களும் மனிதனின் படைப்பாற்றலுக்குப் போதுமான இடத்தை வாய்ப்பை அளிக்க வேண்டும் என்பது மிக முக்கியமான மூன்றாவது தேவையாகும். இதனைப் பற்றி கடந்த நூறு ஆண்டுகளில் எவரை விடவும் ரோமின் போப் பதவியிலிருந்தவர்களே அதிகம் பேசியுள்ளனர். செயல்பாடுகளில் மனிதத் தன்மையின் எந்த எச்சமும் இல்லாத, வெறும் இயந்திரத்தனமானதாக உற்பத்தி முறை இருப்பின், மனிதனுடையதாக என்ன இருக்கும்? தொழிலாளியே எந்தப் பிடிப்பு மற்ற, இயந்திரம் போன்ற வக்கிரமானவனாக மாறிவிடுவான்.

"தொழிற்சாலைகளிலிருந்து மேம்படுத்தப்பட்ட தரத்தில் உற்பத்தி வெளித்தள்ளப்படுகிறது. ஆனால் மனிதன் தரம் தாழ்ந்து, தூய்மையற்று கறைபடிந்தவனாகி விடுகிறான். எனவே உடலுழைப்பு பல தருணங்களில் வக்கிரமானதாக மாறிவிடுகிறது", என்று போப் பயஸ் XI கூறுகிறார்.

இந்தத் தலைப்பு மிகப் பெரியது. என்னால் முழுவது மாக சொல்ல இயலாது. எனவே கொஞ்சம் மேலாகத் தொட்டுச் செல்கிறேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக, வேலைபற்றிய தத்துவப் புத்துருவாக்கம் தேவைப்படுகிறது. அது, தன்னையே அழித்துக் கொள்ளும்படியான மனிதத் தன்மையற்றதாக மாறிப் போனதாக இருக்கக் கூடாது. மனிதனின் உடலுக்கும் ஆன்மாவுக்கும் நன்மை பயக்கும்படியானதாக புரிந்துக் கொள்ளப்பட்ட கடவுளின் கட்டளை போன்று ஒன்றாக இருக்க வேண்டும். குடும்ப வாழ்க்கைக்கு அடுத்தபடியாக வேலைத்தளங்களில் உள்ள உறவு முறைகள்

இருக்க வேண்டும். இவையே சமூகத்தின் உண்மை யான அடித்தளங்கள் அடித்தளங்கள் வலுவாக இல்லை என்றால். சமூகம் எப்படி வலுவானதாக இருக்க முடியும்? சமூகம் நோயுற்றதாக இருக்குமேயானால் அமைதிக்கு ஏற்படும் அபாயத்தை அது எப்படி வெல்ல முடியும்?

"பிரபஞ்சத்தை ஆளும் சட்ட திட்டங்களுடன் - நெறி களுடன் வன்மையாக சச்சரவிட்டு மோதும் கொள் கையில் சமூகங்கள் வாழும் போது, போர் நிகழ்கிறது. போர் என்பது கண்மூடித்தனமான அழிவு என்று ஒரு போதும் எண்ணாதீர்கள். அது தவறான எண்ணங்களா லும், வாழ்க்கையாலும் சகிக்க இயலாத சூழல் உண்டா கும் போது நிகழ்கிறது. போர் என்பது தீர்ப்பாகும்" என்கி றார் டொரொதி எல் சேயர்ஸ்.

முறையாக வளர்த்தெடுக்கப்பட்ட பேராசை பொறாமை போன்றவைகளின் மீது கட்டப்பட்ட தவறான வாழ்க் கையின் காரணமாக பொருளாதார ரீதியாக அவசிய மற்ற பல்வேறு தேவைகளை அதிக அளவில் பெருக்கிக் கொள்கிறோம். பேராசை என்னும் பாவம், நம்மை இயந் திரங்களின் அதிகாரத்திற்குள் கொண்டு போய் விட்டு விட்டது.

பொறாமையின் துணை கொண்ட பேராசை என்பது நவீன மனிதனின் முதலாளி அல்ல என்றால், உயர்ந்த வாழ்க்கை நிலையை அடைந்த பிறகும் பொருளாதார வெறி ஏன் தணியவில்லை ? குறிப்பாக, பணக்கார சமூகங்கள் தங்களது பொருளாதார முன்னேற்றங்களை இரக்கமற்ற முறையில் ஏன் தொடர்ந்து கொண்டி ருக்க வேண்டும்? வேலையை மனிதத்தன்மையுள்ள தாக்கும் வகையில் பணக்கார சமூகங்களின் ஆட்சியா ளர்கள் செயல்படுவதை கிட்டதட்ட மொத்த பிரபஞ்ச மும் மறுக்கிறதென்பதை நாம் எப்படி விளக்க முடியும்?

"வாழ்க்கைத் தரம் என்பதை ஏதாவது ஒன்று குறைக்க வேண்டும் என்று வலியுறுத்தப்படவேண்டியது தேவை யாகிறது. இது சார்ந்த எல்லா விவாதங்களும் உடன் நிறுத்தப்படவேண்டும். தப்பித்தலையும் ஒடுக்குமுறை யையும் தரக்கூடிய ஆன்மாவை அழிக்கும், அர்த்தமற்ற, இயந்திரத்தனமான, ஒருமுகத்தன்மையுடைய, மனவ ளர்ச்சி குன்றியது போன்ற வேலை மனித இயல்பை புண்படுத்துவதாகும். எதனைச் செய்தும் இக்தகைய வேலைகளால் உண்டான சிதைவை சரிக்கட்ட முடி யாது. இவை மறுக்க இயலாத ஒப்புக் கொள்ளவும்படாத உண்மைகள். ஆனால் இந்த குற்றச்சாட்டுகள் அமை தியான உடைக்கவியலாத சதியின் மூலம் எதிர் கொள் ளப்படுகின்றன. ஏனெனில் இவற்றை மறுப்ப தென்பது வெளிப்படையான மடத்தனம். ஏற்றுக் கொண்டாலோ நவீன சமூகத்திற்கு எதிரான குற்றம் இழைத்ததாகக் கூறி கண்டிக்க வேண்டி வரும்.

விவேகத்தை அலட்சியப்படுத்துவது, ஏன் இன்னும் மறுப்பது என்று கூடச் சொல்லலாம். அது எந்த அள விற்கு உள்ளது எனில், நமது அறிவு ஜீவிகளில் பெரும் பாலானோருக்கு அந்த பதத்தை வார்த்தையைப் பற்றிய லேசான சிறிய கருத்து கூட இல்லை. இதன் விளைவாக அதனை குணப்படுத்த முயல்கிறார்கள். விவேகமாகச் செயல்படுவதை விடுத்து அறிவுப்பூர்வமாக செயல்பட்ட தனால்தான் இந்த வியாதி உண்டானது. அறிவுப்பூர்வ மான எந்த அளவு செயல்பாடும் வியாதியைத் தீர்க்கும் மருந்தைக் கண்டறிவதாக இல்லை. விவேகம் என் றால் என்ன? அதனை எங்கு கண்டு பிடிக்கலாம்? இந்த நிலையில் நாம் பிரச்சினையின் முக்கிய பகுதிக்கு வந்து விட்டோம். இதனைக் குறித்து ஏராளமான நூல்களில் படிக்கலாம். ஆனால் கண்டறிவது என்பது தனக்குள்

மட்டுமே முடியும். இதனைக் கண்டு பிடிக்க வேண்டுமானால், முதலில் பொறாமை, பேராசை போன்ற எஜமானர்களிடமிருந்து ஒருவன் விடுதலை பெற வேண்டும். இந்த விடுதலைக்குப் பின்னர் கிட்டும் நிலையில் வேறு எவ்வழியிலும் பெற இயலாத விவேக தரிசனம் கண் முன் கிட்டும்.

இந்த விவேக தரிசனம் பெரும் வெற்றிடத்தையும், பொருள் சார்ந்த தேடல்கள் கொண்டு, ஆன்மிக வாழ்க்கையை அலட்சியம் செய்ததால் வந்த திருப்தி யற்ற வாழ்க்கையையும் காணச் செய்யும். இத்தகைய வாழ்க்கை

ஒவ்வொரு மனிதனையும் மற்ற மனிதனுக்கு எதிராகவும் ஒவ்வொரு நாட்டையும் இன்னொரு நாட்டுக்கு எதிராக கட்டாயமாக செயல்படவைக்கும். ஏனெனில் மனிதனின் தேவைகள் அளவற்றவை. இந்த அளவற்ற தன்மை என்பதை ஆன்மிக ரீதியில் பெற இயலுமேயல் லாது பொருள் சார்ந்து பெறவே முடியாது. களைப்பான உலகலிருந்து மனிதன் கட்டாயமாக மேலே வந்தாக வேண்டியதிருக்கிறது. அதற்கான வழியை விவேகம் காண்பிக்கிறது. விவேகமின்மையால் உலகை அழிக் கும். அழகிய நிலவில் மனிதன் வாழ்வது போன்ற பெரும் திருப்திகளைத் தேடும் பெரிய பொருளாதாரத் தைக் கட்டமைக்க ஓடும்படியாக மனிதன் ஆகிறான். துறவு மனப்பான்மையைக் கொண்டு தனது களைப் பான உலகை வெற்றி கொள்வதை விடுத்து தன்னிக ரில்லா பொருளாதார அறிவியல், அதிகாரம் போன்ற வற்றால் வெற்றி கொள்ள நினைக்கிறான்.

இவையே போருக்கான காரணங்கள். இவற்றை ஒழிக் காமல் அமைதிக்கான அடித்தளமிடுதல் என்பது வீண் கற்பனையே. மனிதர்களை சச்சரவுகளில் ஆழ்த்திவி

டும் பேராசையையும், பொறாமையையும் வளர்த்தெடுக்கும் பொருளாதார அமைப்பை மாற்றாமல் அமைதிக்கு அடித்தளம் இடுவதென்பது அதனை விட பெரும் வீண் கற்பனை.

பேராசையையும் பொறாமையையும் ஒழிப்பதற்கு எங்கிருந்து நாம் துவங்கலாம்? நம்மிடமிருந்தே துவங்க வேண்டும். எந்த அளவுக்கு அந்த குணங்கள் இல்லாமல் இருக்க முடியுமோ, அந்த அளவுக்கு இருக்க வேண்டும். நமது ஆடம்பரங்களை அத்தியாம் என கருதுவதை தடுக்க வேண்டும். இன்னும் நமது தேவைகளை எவ்வளவு சுருக்க இயலுமோ அந்த அளவிற்கு சுருக்க வேண்டும். இவற்றில் எதனையும் செய்யும் வலு நம்மிடம் இல்லை என்றால், நிரந்தரத் தன்மையின் அடிப்படையைத் தகர்க்கும் பொருளாதார வளர்ச்சியை பாராட்டுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். எந்த வித அச்சமுமின்றி வன்முறைக்கு எதிராக செயல்படுபவர்களான இயற்கை வளங்களைப் சுற்றுப்புறச் சூழலியலாளர்கள், வனப்பாதுகாப்புக்காக உழைப்பவர்கள், இயற்கை வேளாண்மை செய்பவர்கள்... போன்றவர்களுக்கு ஆதரவு தர வேண்டும். ஆயிரக்கணக்கான கருத்துரைகளை விடவும் ஒரு துளி செயல்பாடு மேலானது.

பொருளாதார அடிப்படையிலான அமைதியை நிறுவுவதற்கு அறம் கொண்ட செயல்பாடுகள் தேவைப்படும். பயங்கரமானதொரு கூட்டத்தை எதிர்த்து வேலை செய்யும் வலிமையை ஒருவர் எங்கு பெறக்கூடும்? தன்னிடம் உள்ள பேராசை, பொறாமை, வெறுப்பு, தீய இச்சை போன்ற வன்முறைகளை வெல்லும் சக்தியை வலிமையை ஒருவர் எங்கு பெறக்கூடும்?

இதற்கு காந்தியடிகள் சொன்ன பதில் சரியாக இருக்கும். "உடலை விட்டு ஆன்மா இருக்கிறது என்பது அங்கீக ரிக்கப்பட வேண்டும். அதன் நிரந்தரத் தன்மை அங்கீ கரிக்கப்பட வேண்டும். இதன் விளைவாக நம்பிக்கை உருவாகும். அன்பு மயமான கடவுள் மீது நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அஹிமசை கிட்டாது."

.......

## அரசியல் துறையை

## வெறுத்த பல்கலைக்கழகம்!

பொருளாதார எதிர்காலம் பொருளாதார நிபுணர்களால் நிர்ணயிக்கப்படுகிறது என்று சொல்லப்படுவது மிகை யான ஒன்றாகும். ஆனால் பொருளாதாரத்தில் எந்த வகையிலாவது அவர்களுக்கு செல்வாக்கு உள்ளது என்பது சந்தேகத்திற்கிடமில்லாதது. எது பொருளாதா ரம், பொருளா தாரமற்றது எது என்ற காரணிகளைக் கொண்டு செயல்படும் தனி நபர்கள், குழுக்கள். அர சாங்கங்களின் செயல்பாடுகளில் அதிக அளவில் இந்த காரணிகளைவிட வேறு எதுவும் செல்வாக்கு செலுத் துவதில்லை. பொருளாதாரம், நவீன உலகின் செயல் பாடுகளை உருவாக்குவதில் மிக முக்கியமான மையப் பங்கை வகிக்கிறது. எனவே நவீன உலகம் எதிர்கொள் வதாகக் கருதும் அபாயங்கள் மற்றும் கடினமான சிக்கல் களை எப்படி வெல்வது என்றும், பாதுகாப்பான அமைதி மற்றும் நிரந்தரம் ஆகியவற்றை எப்படி அடையலாம் என்பது பற்றிய அறிவுரைகளை பொருளாதார நிபுணர்க ளிடம் எதிர் நோக்கலாம் என்று நினைக்கலாம்.

இதற்கு முந்தைய அத்தியாயங்களில் பேசப்பட்ட பிரச் சினைகள் பொருளாதாரத்துடன் எப்படி தொடர்பு கொண்டுள்ளன? எந்த செயல் பொருளாதார ரீதியில் சரியானது என்றும் தவறானது என்றும் பொருளாதார நிபுணர்கள் ஒரு முடிவைத் தெரிவிக்கும்போது, அதனு டன் நெருங்கிய தொடர்புடைய இரண்டு கேள்விகள் எழுகின்றன. நடைமுறைச் செயல்பாடுகள் அந்த முடி வின் அடிப்படையில் செயல்படும்படி அந்த முடிவு தீர் மான மானதுதானா?

150 ஆண்டுகளுக்கு முன்பு ஆக்ஸ்ஃ போர்ட் பல்க லைக் கழகத்தில் அரசியல் பொருளாதாரம் என்ற பிரி வில் பேராசிரியர் படிப்பைக் கொண்டு வரலாம் என்ற சிந்தனை எழுதபோது அனேகருக்கு அது ஏற்புடைய தாயில்லை. ஆக்கிரமித்துக் கொள்ளக்கூடிய தன்மை யுள்ள அந்தத் துறையை பல்கலைக்கழக பாடத்திட் டத்தில் அனுமதிக்க ஓரியல் கல்லூரியின் தலைவரான எட்வர்ட் கோப்ஸ்டன் விரும்பவில்லை . 1825-ம் ஆண்டு பேராசிரியரான ஆல்பரி பார்க்கின் ஹென்றி டிரம்மன்ட் கூட புதிய அரசியல் பொருளாதாரத் துறையை பல்க லைக் கழகத்தில் எந்த நிலையில் வைக்கலாம் என்பது பற்றி தெளிவுபடுத்தப்பட வேண்டும் என்று எதிர்பார்த் தார். அரசியல் பொருளாதாரத் துறையின் முதல் பேராசி ரியரான நஸாப் சீனியரைக் குறைத்து மதிப்பிட முடியாது. அவர் தனது தொடக்க உரையில் "நீதிநெறி சார்ந்த பயன்பாடு மற்றும் அக்கறைகளில் இந்தத் துறை முதன் மையான இடத்தில் இருக்க வேண்டும்" என்று கூறினார். "வளத்தை நோக்கி மனித குலம் பயணித்தல் என் பது அறம்சார் பண்புகளின் வளர்ச்சியே" என்றார். இந்த அளவிற்கு எல்லா பொருளாதார நிபுணர்களும் கூறி இருக்க முடியாது என்பது உறுதி. ஜான் ஸ்டூவர்ட் மில்

(1806-1873) என்னும் பொருளாதார அறிஞர் அரசியல் பொருளாதாரம் பற்றி பின்வருமாறு கூறினார். "அது தனி யான ஒரு துறை மட்டுமல்ல, முழுமையானதன் ஒரு பகு தியாகும். எல்லா பிரிவுகளுடன் உள்ளார்ந்த தொடர்பு டையதான முடிவுகளைக் கொண்ட சமூக தத்துவவிய லின் ஒரு பிரிவாகும். அது தனது துறை சார்ந்த அனைத் திலும் செல்வாக்கு செலுத்தவும் எதிர்வினையாற்றவும் கூடியது".

நூலின் முற்பகுதியில் மேற்கோள் காட்டப்பட்ட கருத் துக்கு முரண்பட்ட கருத்தை கெய்ன்ஸ் கூட சொல்லி இருக்கிறார். அவர் "பேராசை, வட்டி மற்றும் முன்னெச்ச ரிக்கை ஆகியவை நாம் நீண்டு நிலைத்திருப்பதற்கான கடவுள்களாக இருக்க வேண்டும்" என கூறுகிறார்.

பொருளாதாரப் பிரச்சினையின் முக்கியத்துவத்தை அதிகமாக மதிப்பிடவேண்டாம் அல்லது நீண்ட கால தரத்தை வேண்டி தியாகமும் செய்ய வேண்டாம்" என அவர் எச்சரிக்கிறார்.

இப்படிப்பட்ட கருத்துக்கள் இந்தக் காலத்தில் அபூர் வமாகவே ஒலிக்கின்றன. செல்வவளம் அதிகரித்து பொதுமக்களின் முக்கியமான ஒன்றாக பொருளாதாரம் மாறிவிட்டது என்பதும், எல்லா நவீன சமூகங்களிட மும் கொள்கைப் பிடிவாதம் இல்லை என்றால், பொரு ளாதாரச் செயல்பாடு, பொருளாதார வளர்ச்சி, பொரு ளாதார விரிவாக்கம் இன்னும் பொருளாதாரம் சார்ந்த இன்ன பிறவும் மக்களிடம் முக்கியத்தவம் பெற்றுள் ளன என்று கூறுவது மிகைப் படுத்தப்பட்ட ஒன்றல்ல. பொருளாதாரமற்றவை என்று கண்டிக்க தற்காலத்தில் மிகச் சில வார்த்தைகளே எஞ்சியுள்ளன. ஒரு செயல் பாடு பொருளாதாரமற்றது என்று முத்திரையிடப்பட்டால் அது இருக்க வேண்டுமா என்று கேள்வி எழுப்பப்படுவது

மட்டுமல்லாமல் அது வலுவாக புறந்தள்ளவும்படுகிறது. பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக உள்ள எதுவும் வெட்கக் கேடானது என்றும் அதனைப் பிடித்து நிற்கும் மக்கள் முட்டாள்கள் அல்லது நாசகாரர்கள் எனவும் எண்ணப்படுகிறார்கள். ஒரு விஷயம் அசிங்கமானதோ, அறநெறிகளுக்கு மாற்றானதோ, ஆன்மாவை அழிக்கக் கூடியதோ, மனிதனை தரம் தாழ்த்துவதோ, உலகின் அமைதிக்கு பங்கம் விளைவிப்பதோ அல்லது எதிர்கால சந்ததியினரின் நலன்களுக்கு எதிரானதோ, இப்படி எதுவாக இருந்தாலும், அது பொருளாதார ரீதியில் பயனற்றது என சொல்லப்படாதவரை, அதன் வளர்ச்சி பற்றி எந்த கேள்வியையும் எழுப்பவில்லை என்றே அதற்குப் பொருள்.

ஆனால் ஒன்றை நாம் பொருளாதார ரீதியில் பயனற்றது என்று குறிப்பிடும்போது, என்ன அர்த்தத்தில் கூறுகிறோம்?

பெரும்பாலான மக்கள் என்ன அர்த்தத்தில் அப்படி சொல்லுகிறார்கள் என கேட்கவில்லை. ஏனெனில் அது நன்றாகத் தெரிந்த ஒன்றுதான். அவர்கள் பொருளாதார ரீதியாக பயனற்றது என்று கூறும் ஒன்றை ஒரு நோயைப் போன்றே பொருள் கொள்கிறார்கள். அது இல்லை எனில் நீங்கள் நன்றாக இருப்பீர்கள் என்றும் நினைக்கிறார்கள். பொருளாதார நிபுணர்கள் அந்த நோயைக் கண்டறிந்து, அதிர்ஷ்டம் மற்றும் திறமையைக் கொண்டு அதனை நீக்க வேண்டும். பொருளாதார நிபுணர்கள் நோயைக் கண்டறிவதிலே ஒத்துப்போவதில்லை, மட்டுமல்லாது அதனை நீக்குவதிலும் முரண்படுகிறார்கள். இந்த விஷயம் அசாதாரணமான கடினத் தன்மை கொண்டது என்பதையும் மற்ற மனிதர்களைப்

போலவே, பொருளாதார நிபுணர்களும் தவறிழைக்கக் கூடியவர்கள் என்பதையுமே நிரூபிக்கின்றது.

பொருளாதார அமைப்பு என்ன அர்த்தத்தை தருகிறது என்று நான் கேட்கிறேன். ஒன்று போதுமான லாபத்தை தரத்தவறும்போது அது பொருளாதார ரீதியாக பலன் தரக் கூடியதல்ல என்பதே இந்தக் கேள்வியின் பதிலாக இருக்க முடியும். வேற எந்த அர்த்தத்தையும் பொருளா தார அமைப்பு தரமுடியாது, தருவதில்லை. இந்த உண் மையை மறைக்க ஏராளமான முயற்சிகள் மேற்கொள் ளப்படுகின்றன. ஆனால் அவையும் பல்வேறு வகை யான குழப்ப நிலைகளுக்கு செல்கின்றன. ஆனாலும் உண் மையை மறைக்க முடியவில்லை. பொருளாதார நோக்கங்க ளேதுமில்லாத சமூக, அறப் பண்புகளுக் கான செயல்கள் பொருளாதார ரீதியில் பயனற் றவை என்ற தன்மையை இழப்பதில்லை. அதுபோலவே அர சியல் ரீதியிலும் சமூகத்தினாலோ, ஒரு குழுவினாலோ அல்லது சமூகத்தின் தனிநபர் ஒருவராலோ செய்யப்ப டும் செயலும் பொருளாதார ரீதியில் பயனற்றது என்ற தன்மையை இழப்பதில்லை. மற்றெல்லா விஷயங்களி லும் முடிவு எடுக்கப்படுவதற்கு பல்வேறு கூறுகளை நோக்க வேண்டி இருக்கின்றது. ஆனால் பொருளாதா ரம் சம்பந்தப்பட்ட முடிவுகள் 'லாபம்' என்ற ஒன்றின் அடிப்படையில் மட்டுமே எடுக்கப்படுகிறது. நிறுவனமோ அமைப்போ அதனை எடுத்து நடத்துபவர்களுக்கு கிடைக்கும் பலன் என்ற ஒன்றின் அடிப்படையிலேயே முடிவெடுக்கப்படுகிறது.

"அதனை எடுத்து நடத்துபவர் என்பதைக் கவனிக்க வும். ஒரு குழுவினரால் மேற்கொள்ளப்படும் பொருளா தார செயல்பாடுகள் ஒட்டுமொத்த சமூகத்திற்கும் பலன ளிக்கிறதா என்ற வகையில் பொருளாதார அமைப்பை

கற்பனை செய்வது பெருந்தவறு. இது போல பலவும் உள்ளன. தேசிய மயமாக்கப்பட்ட தொழிற்சாலைகளைக் கூட இப்படிப் பார்க்கக் கூடாது. ஒவ்வொரு அமைப்பிற்கும் ஒவ்வொரு நிதிக் குறிக்கோள்கள் உள்ளன. அவற்றை அடைய அந்த நிறுவனங்கள் எப்படி வேண்டுமானாலும் செயல்படும். பொருளாதாரத்தின் எப்பகுதி பாதிக்கப் படினும் சரியே. ஒவ்வொருவரும், ஒவ்வொரு தொழிற்சாலையும், வணிகமும் அது தனிப்பட்ட ஒருவருடையதானாலும் சரி அல்லது தேசிய மயமாக்கப்பட்ட தாயினும் சரி. அவை அவற்றின் மீது முதலீடு செய்யப்பட்டுள்ள கணக்கில் இருந்து லாபத்தை கட்டாயமாகக் கொடுக்க வேண்டும் என்பது எல்லாவித அரசியல் கட்சிகளின் கொள்கையாக உள்ளது என்பது உண்மை. அமெரிக்காவின் ஜெனரல் மோட்டார்ஸ் நிறுவனத்திற்கு எது நல்லதோ, அது அமெரிக்காவுக்கும் நல்லது என்ற தவிர்க்கவியலா உள் நோக்கத்தை ஆடம் ஸ்மித் கூட கொண்டிருக்கவில்லை.

எது எப்படி இருந்தபோதிலும், பொருளாதாரத்தின் தீர்மானம் என்பது முழுமையானதல்ல என்பதில் சந்தேகமில்லை. பொருளாதாரத்தின் குறுகிய நுட்பமான கணக்கின்படி, இத்தகைய தீர்மானங்கள் நிச்சயமாகவும், அமைப்பு ரீதியாகவும் குறுகியவையே. இந்தப் பொருளாதாந்த தீர்மானங்களை குறைந்த கால அளவிற்கான வகையிலேயே அதிகமாகச் செய்கின்றனர். ஏனெனில் கெய்ன்ஸ் போல நீண்டகால அடிப்படையில் பொருளாதார தீர்மானங்கள் செய்யப்படுமேயானால், நாம் அனைவரும் அழிந்து விடு வோம். இரண்டாவதாக, இறைவனால் நமக்குக் கிடைக்க பெற்றுள்ள இயற்கை வளங்களைத் தவிர்த்தே அடக்க விலை என்பது வரையறுக்கப் படுகிறது. இதன் உள்ளார்ந்த பொருள் என்னவெனில்

சுற்றுச் சூழலை நாசமாக்கினாலும் கூட எந்தச் செயலும் பொருளாதார ரீதியில் பலனளிக்கக் கூடியது என்பதும், ஓரளவு செலவு செய்து சுற்றுச் சூழலை யும் இயற்கை யையும் பாதுகாத்து இயற்கை வளங்களை சேமிக்கும் செயல்கள் பொருளாதார ரீதியில் பலனற்றவை என்ப தும்தான்.

இன்னும் சொல்லப்போனால், பொருளாதாரம் என்பது ஒன்றின் உண்மை நிலையைக் கணக்கில் கொள்ளா மல் அதன் "சந்தை மதிப்பு" என்பதன் அடிப்படையி லேயே தீர்மானிக்கப்படுகிறது.

இந்த வகையான நெறிமுறைகளே மனிதன் வென்றெ டுக்க வேண்டியதான இயற்கை வளங்களுக்கும், முதன் மைப் பொருள்கள் உண்டாவதற்கான சார்நிலைப் பொருள்களுக்கும் மேற்கொள்ளப்படுகின்றது. தனி யார் லாபக் கணக்கு என்ற ஒன்றையே நோக்கமாகக் கொண்டுள்ளதால் எல்லாப் பொருட்களுமே ஒரே மாதி ரியாகக் கையாளப்படுகின்றன. பொருளாதார அமைப்பு முறையில் இயற்கைவளம் சார்ந்து மனிதன் இருக்க வேண்டியதை ஒதுக்க முடியாது என்பதுதான் இதன் பொருள்.

வேறொரு வகையில் இதனைச் சொல்ல வேண்டு மெனில் பொருளாதாரம் என்பது பொருள்கள் மற் றும் சேவைகளின் சந்தை மதிப்பைப் பொறுத்தே உள் ளது. அது பொருளை வாங்குபவருக்கும் விற்பவருக்கும் இடையி லானது. பொருளை வாங்குபவர் பேரம் பேசி அதன் விலையை குறைக்க முயல்வார். அந்தப் பொருள் எங்கிருந்து வந்தது. அதன் மூலம் என்ன, முக்கியத்துவம் என்ன என்பது பற்றியெல்லாம் அவர் சிந்திக்க மாட்டார். தனது பணத்திற்கு ஆகச் சிறந்த மதிப்பு கிடைப்பதற்கே அவர் முயலுவார்.

எனவே சந்தை என்பது சமூகத்தின் மேல் மட்டத்தை மட்டுமே காட்டுகிறது. அதன் முக்கியத்துவம் அந் தந்த கால நேரங்களின்படி அமைகிறது. எந்த ஒன் றும், அதன் பின்னால் உள்ள இயற்கையான சமூக அடிப்படையிலான உண்மைத் தன்மையினடிப்படை யில் ஆராயப்படுவதில்லை. அதன் பொருள் என்னவெ னில், சந்தை என்பது பொறுப்பற்ற தன்மையுடனான தனியார்மயம் என்ற அமைப்பு என்பதுதான். எல்லா வற்றிற்கும் பொறுப்பு வாங்குபவரும் விற்பவரும்தான். ஏழைகளுக்கு மிகவும் அத்தியாவசியமாக ஒரு பொருள் உள்ளதென்று வளம்மிக்க விற்பனையாளர் பொருளின் விலையைக் குறைப்பாரேயானால் அது பொருளாதார ரீதியில் பயனற்றது. அல்லது வளம் பொருந்திய பொருள் வாங்குபவர், பொருளை விற்பனை செய்பவர் வெறு மனே ஏழை என்பதால் மட்டும் அதிக விலை கொடுத்து பொருளை வாங்குவதும் பொருளாதார ரீதியில் பயனற் றதாகும். அதைப் போன்றே அயல் நாட்டிலிருந்து தரு விக்கப்படும் பொருள் விலைமலிவானதாக இருக்கும் பட்சத்தில் விலை அதிகமான உள்ளூர் தயாரிப்புகளை வாங்குவதும் பொருளாதார ரீதியில் பயனற்றதுதான். நாட்டு பொருளாதாரம் குறித்து வாங்கு பவருக்கு எந்த விதமான பொறுப்பும் இருக்காது. அதனை எதிர்பார்க்க வும் முடியாது.

பொருள்களை வாங்குபவர்களுக்கு கட்டுப்பாடுகள் ஏதும் தேவையில்லை என்ற நிலையில் முக்கியமாக ஒன்றை மட்டும் சொல்ல வேண்டும். அதாவது அவர் களவாடப் பட்ட பொருளை வாங்கக் கூடாது என்பது தான் அது. கவனக் குறைவினாலோ அப்பாவித்தனத் தினாலோ களவாடப்பட்ட பொருளை வாங்குவது அசா தாரணமான முடிவுகளைத் தரும். அது நீதியற்ற செயலு

மாகும். இந்த நெறி தனியார் சொத்துக்களைப் பொறுத் தமட்டில் செயல்படுகிறது.

ஒரு வியாபாரத்தை தனக்கு சாதகமாக வசதியாக மாற் றிக் கொள்வதென்பதை வியப்புடன் நோக்க வேண்டிய தில்லை, அது எல்லாவித பொறுப்புகளின்றி செய்யப் பட்டாலும் கூட. எது ஆச்சர்யப்படுத்துகிறது என வியா பாரத்தை சாதகமாக வசதியாக மாற்ற நம் அளவுக்கு செயல்பட முடியுமோ அந்த அதிகபட்ச சரியானது. நெறி யானது என்று கருதுவதுதான். ஒரு பொருளின் விலை மலிவு என்பது எந்த வகையிலான சுரண்டலினாலோ அல்லது நெறிமுறை மீறிய செயல்களினாலோ இருக்க லாம் எனச் சந்தேகித்து அந்தப் பொருளை வாங்க ஒரு வர் மறுப்பது பொருளாதார ரீதியாக பயனற்றது என்று விமர்சிக்கப்படும். அது முட்டாள் தனமானது என பொருளாதார நிபுணர்களாலும், மற்றவராலும் பரிகசிக் கப்படும் "பொருளாதார மதம் என்பது தனக்கேயான நெறிமுறைகளைக் கொண்டது. இதன் முதல் கட்டளை பொருளை உற்பத்தி செய்தாலும், விற்றாலும், வாங் கினாலும் பொருளாதார ரீதியில் பயன்தரக் கூடியதாக இருக்க வேண்டும் என்பது. பொருளாதார மதத்தை கணக்கில் கொண்டோமானால் நுகர்வோர் எனப்படு வர் பூமியிலிருந்து அந்நியமான வேற்றுக் கிரகவாசி போன்றவர். இத்தகைய முக்கியத்துவம் மிக்க விநோ தமான நவீன உலகின் நிலை இப்போதுள்ளதைவிட இன்னும் ஆராயப்பட வேண்டியதாகும்.

மனிதனுக்கும் சமூகத்திற்கும் தேவையான எண்ணற்ற தரம் சார்ந்த நல்மதிப்பு விஷயங்கள் சந்தையில் ஒடுக் கப் பட்டு மறைக்கப்படுகின்றன. அத்தகைய விஷயங் களை வெளிவரவே அனுமதிப்பதில்லை. இப்படியாக அளவு, நிறை, பரிமாணம் ஆகியவற்றின் ஆட்சி சந்தை

களில் வெற்றிக் களி கொண்டாடுகிறது. அனைத்தும் எல்லாவற்றுடனும் சமானப்படுத்தப் படுகிறது. சமானப் படுத்துவதென்பது எல்லாவற்றிற்கும் ஒரு விலையை நிர்ணயித்து ஒவ்வொன்றையும் மாற்றிக் கொள்ளலாம் என்பதுதான். பொருளாதார சிந்தனை என்பது சந் தையின் மதிப்பு நிலவர அடிப்படையிலேதான் என்பது வாழ்க்கையின் புனிதத் தன்மையை நீக்கி விடுகிறது. ஏனெனில் எல்லாவற்றுக்கும் ஒரு விலை உண்டு எனும் போது, புனிதமென்று ஏதும் இருக்க இயலாத நிலை ஏற்படுகிறது. எனவே பொருளாதார ரீதியில் அனைத் தையும் நோக்குவதனால், பொருளாதாரம் சம்பந்தமற்ற மதிப்பீடுகளான அழகு, ஆரோக்கியம், சுத்தம், சுகாதா ரம் போன்றவைகள் கூட பொருளாதார ரீதியில் பயனுள் ளவை என்றால் மட்டுமே நீடித்திருக்க முடியும் என்ற நிலை நேர்வதில் ஆச்சர்யப்பட ஏதுமில்லை.

பொருளாதாரப் பலன்களற்ற மதிப்பீடுகளை பொருளா தார நுண் கணிதத்திற்குள் குறிப்பிடுவதற்கு பொருளா தார

அடிப்படை நிபுணர்கள் அடக்கவிலை, லாபம் என்ற ஆய்வை அடிபடையாகக் கொள்கின்றனர். இதனால் இந்த முறையே நல்ல முறை என்று பொதுவாக எண் ணப்படுகிறது. இருந்த போதிலும் உண்மையில் இந்த முறையில் உயர்வானவைகளை கீழான நிலையிலுள் ளவற்றிற்குச் சமமாகவும், விலையற்ற ஒன்றிற்கு ஒரு விலையை அளித்தும் மதிப்பீடு கள் மேற்கொள்ளப்ப டுகின்றன. இதனால் உண்மையான நிலையை அறிய முடியாமல் போகிறது. அது மிகைப்படுத்தப்பட்ட முடிவு களுக்கே இட்டுச் செல்கிறது. இவற்றாலெல்லாம் தன் னைத் தானே ஏமாற்றிக் கொள்வதாகவோ அல்லது மற் றவர்களை ஏமாற்றுவதாகவோ ஆன முடிவு களுக்கு

இட்டுச் செல்கிறது. அளவிட முடியாதது என்பதை அளவிட முயல்வது மடத்தனமானது; அது முன்னரே தீர்மானிக்கப்பட்ட முடிவுகளுக்கு இட்டுச் செல்லக்கூடிய நுட்பமான பெரிய முறைகளைக் கொண்டுள்ளது.

ஒருவனுக்கு விருப்பமான முடிவுகள் கிட்ட வேண்டுமெனில் அவன் செய்ய வேண்டியது அளவிடற்கரிய மதிப்பிட முடியாதவற்றிற்கான அடக்கவிலை மற்றும் பயன் பற்றி தனக்குத் தேவையான மதிப்புகளை இட்டு கணக்கிட்டுக் கொள்வதுதான். இப்படியான எல்லாவற்றையும் கணக்கிடுவது மடத்தனம்தான். ஆனால் மிக மோசமானதும், மனித குலத்திற்கே ஆபத்தானதும் எது என்றால், ஒவ்வொன்றுக்கும் ஒரு விலை உள்ளது என்று எண்ணிச் செயல்படுவதுதான். இன்னும் வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால் எல்லாவித மதிப்பீடுகளையும் விட பணமே உயர்ந்தது என்று கருதுவது தான்.

முன்னரே வடிவமைக்கப்பட்ட பொருளாதார நுண் கணிதத்திற்கு வெளியே இருக்கும் ஒரு அமைப்புளேயே பொருளாதாரம் முறையாகவும் வெற்றிகரமாக செயல்படுகிறது. பொருளாதாரம் தனது சொந்தக் கால்களிலேயே நிற்கவில்லை என்று நம்மால் சொல்ல முடியும் அல்லது அது சிந்தனைகளின் உருவாக்கம் என்றோ அல்லது பொருளாதார தத்துவத்திலிருந்து உருவானது என்றோ இருக்கலாம். அதாவது மெட்டா எகானமிக்ஸ் எனப்படும் பொருளாதாரத் தத்துவத்திலிருந்து அது பெறப்பட்டிருக்கலாம். பொருளாதார நுண் கணிதத்தின் எல்லைகளையும், அது செயல்படும் விதங்களையும் அறியாமல், பொருளாதாரத்தை நன்கு ஆராயாமல் ஒரு பொருளாதார நிபுணர் இருப்பாரேயானால் மத்திய கால தத்துவவியலாளர்கள் பைபி

ளின் மூலம் இயற்பியல் தத்துவக் கேள்விகளை தீர்க்க முயன்ற தவறுகளைச் செய்தவர் போலாகி விடுவார்கள். அறிவியல் அனைத்தும் அவற்றின் வரம்புக்குள் மிகப் பயனளிக்கக் கூடியவையே. ஆனால் அறிவியலை அத்துமீறி அதன் பயன்தரும் வரம்பையும் மீறினால் அது அபாயகரமானதாக மாறி விடுகிறது.

அறிவியல் பொருளாதாரம் மற்றெல்லாவற்றையும் ஆக்கிரமித்துக் கொள்ளக் கூடிய தன்மை உடையது. இது 150 ஆண்டுகளுக்கு முன்னரே பொருளாதார நிபுணர் எட்வர்ட் கோப்ஸ்டனால் கூறப்பட்ட அபாயமாகும். ஏனெனில் பொருளாதாரம் என்பது, பேராசை, பொறாமை போன்ற மனித இயல்புகளை வலுவாக உருவாக்கக் கூடிய ஒன்றாக இருக்கிறது.

"மெட்டா எக்கனாமிக்ஸ்" என்றால் என்ன? மனிதனின் சூழலியலுடன் கூடிய பொருளாதாரமே மெட்டா எக்கனாமிக்ஸ் எனப்படுவது. அது இரண்டு பிரிவுகளைக் கொண்டது. ஒரு பிரிவு மனிதனைப்பற்றியது. மற்றதோ, சுற்றுப்புறச் சூழல் பற்றியது. வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், பொருளாதாரம் மனிதனை ஆராய்ந்து அதன் குறிக்கோள்களையும் நோக்கங்களையும் கொள்ள வேண்டும். அதே நேரத்தில் அதற்கான முறைமையின் பெரும்பகுதியை இயற்கையைப் பற்றிய ஆழ்ந்த ஆய்வு களின் மூலமே கொள்ள வேண்டும்.

அடுத்த அத்தியாயத்தில் புவிமாற்றத்தில் மனிதனின் பங்கு, அவன் எடுத்த முடிவுகளாலும், முன்மொழிதல்களாலும் எப்படி ஏற்பட்டது என்பதனை சொல்லகிறேன். மெட்டா எகனாமிக்ஸின் இரண்டாவது பகுதியைச் சொல்லி இந்த அத்தியாயத்தை முடிக்கிறேன். முன்னரே அழுத்தமாகக் குறிப்பிட்டபடி அனைத்துப்

பொருட்களும் சந்தையில் ஒன்றாகவே ஒரே மாதிரியாகவே கையாளப்படுகின்றன. ஏனெனில் சந்தை என்பது எந்த வரம்புமற்ற, பேரம் பேசுவதற்கான ஒரு அமைப்பாக உள்ளது. சந்தையை பெருமளவில் சார்ந்துள்ள நவீன பொருளாதார அமைப்பிலிருந்தே இது அமைகிறது. அது மனிதன் இயற்கையை சார்ந்துள்ளதை ஒதுக்கித் தள்ளி விடுகிறது. பேராசிரியர்ஃபெல்பஸ் பிரவுன் "சரியான முன்னேற்றத்தைப் பெறாத பொருளாதாரம்" என்ற தலைப்பில் ராயல் எகனாமிக்ஸ் சொஸைட்டி அமைப்பில் பேசுகையில், "கடந்த கால் நூற்றாண்டு காலத்தில் பொருளாதாரத்தில் வலிமையான வளர்ச்சி எனப்படுவது, மிகக் குறைவான பங்களிப்பையே தந்திருக்கிறது என்பது தீர்வு காணப்படவேண்டிய தற்காலத்தைய மிகப் பிரதான மான ஒரு பிரச்சினை" என்றார். இந்தப் பிரச்சினைகளில், "பொருளாதார முன்னேற்றம் சுற்றுப் புறச் சூழலில் ஏற்படுத்தியுள்ள எதிர்மறை விளைவுகள், எந்திரமயமானதால் மனித வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள தர மாற்றங்கள் மற்றும் நகர்மயமாதலினால் உண்டான மக்கள் தொகைப் பெருக்கம் ஆகியவைகளையும் அவர் குறிப்பிட்டார்.

உண்மையில் சொல்லப் போனால், "மிகக் குறைவான பங்களிப்பு" என்பதை பங்களிப்பே இல்லை என்றே கொள்ள வேண்டும். தற்போதைய பொருளாதாரமும் அதன் நடைமுறைச் செயல்பாடுகளும் மேற்சொன்ன பிரச்சினைகளைப் புரிந்து கொள்வதில் பெருந்தடையாய் விளங்குகிறது என்று சொல்வது தவறாகாது. தற்காலத்தை பொருளாதார நடைமுறையானது அளவு எண்ணிக்கை மட்டுமே சார்ந்து இயங்கி, உண்மையான நிலைமையை அறிந்து கொள்வதை கடுமையான கோழைத்தனத்துடன் மறுதலிக்கிறது.

பொருளாதாரம் அளவிடற்கரிய பொருள்களையும் சேவைகளையும் கொண்டு அளவிடற்கரிய நுகர்வோரைக் கொண்டும் செயல்படுகிறது. பெரும் அளவிலான உயர் தரம் சம்பந்தமான பல நன்மதிப்புகளைக் கணக்கில் கொள்ளாமல், ஒரு பொருளாதாரக் கொள்கையை உருவாக்குவதென்பது இயலாதென்பது தெளிவான ஒன்று. ஆனால் உயர்தரம் சம்பந்தமான எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாக ஒடுக்குதல் இது என்பதும் தெளிவானதாகும். இப்படிச் செய்வதன் மூலம் கருத்துருவை - கொள்கையை உருவாக்குதல் எளிதானது. ஆனால் அது பலவீனமான, ஒன்றுமே இல்லாததாக இருக்கும். பேராசிரியர் ஃபெல்ப்ஸ் பிரவுன் குறிப்பிட்ட "கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள அதிரடியான பொருளாதார வளர்ச்சி" என்பது வெறும் அளவுகள் என்ற வகையிலேயே அமைந்து, தரம் என்ற ஒன்றை தர வேறுபாடுகள் என்ற ஒன்றை கணக்கி லேயே கொள்ளாமல் ஏற்பட்டதாகும். தரம் என்ற வகையில் பார்க்கையில் பொருளாதார வளர்ச்சி என்று சொல்லப்படுவது சகித்துக் கொள்ளக் கூடியதாக இல்லை என்று ஒருவர் கூறக்கூடும். நடப்பு பொருளாதார வளர்ச்சி என்பது, பொருளாதாரம் சார்ந்த ஆழமான கண்ணோட்டத்துடன் கூடிய நடைமுறை விஷயங்களை ஒன்று ஏற்றுக் கொள்ள மறுக்கிறது அல்லது ஏற்றுக் கொள்ள இயலாமல் இருக்கிறது.

உதாரணமாக ஒரு பொருளாதார நிபுணர் ஒரு நாட்டின் மொத்த உற்பத்தி உயர்ந்துள்ளது என்று கூறுகிறார் என்றால் அந்த நிபுணர் அந்த உள்நாட்டு தேசிய உற்பத்தி 'GNP' உயர்வு நல்லதா கெட்டதா என்பதைச் சொல்வதற்கு விரும்பாமலோ அல்லது இயலாமலோ இருக்கிறார்.

அந்த உள்நாட்டு மொத்த உற்பத்தி வளர்ச்சி நல்லதா கெட்டதா என்று அந்த பொருளாதார நிபுணரிடம் கேட் கப்படுமேயானால் தான் அறுதியிட்டுக் கூறிவந்த கருத் துக்களிலிருந்து பின் வாங்குவார். என்ன உற்பத்தி செய்யப்பட்டது. யார் உற்பத்தி செய்தது. யார் பலன் அடைந்தது என்ற எல்லாவற்றையும் விட்டு விட்டு GNP எனப்படும் மொத்த தேசிய உற்பத்தி வளர்ச்சி நல்லது தான் என நிச்சயமாக திட்டவட்டமாகக் கூறுவார்.

அந்த வளர்ச்சி பெருமளவு நோய்களைக் கொண்டு வருவதாகவோ, பெரும் நாசம் விளைவிப்பதாக இருப் பது தவறான வழியை கடைப்பிடித்ததால் வந்த விளை வாகும். அத்தகைய வளர்ச்சி ஏற்பட அனுமதிக்கக் கூடாது. சிறுபான்மையினரான பொருளாதார நிபுணர் கள் இப்போது இன்னும் எந்த அளவு வளர்ச்சியை அதிகரிக்க முடியும் என்று கேட்கத் தொடங்கியுள்ளனர். ஏனெனில் ஒரு அளவுக்குள் உள்ள இயற்கை வளங் களிலிருந்து. அளவே இல்லாத வளர்ச்சியைப் பெறுவ தென்பது இயலாத ஒன்றாகும். ஆனாலும் இந்த நிபுணர் களாலேயே உற்பத்தி வளர்ச்சி என்ற கருத்தாக்கத்தை அளவு என்ற ஒன்றிலிருந்து தரம் என்ற ஒன்றிற்கு எடுத்துச் செல்ல முடியவில்லை. உற்பத்தி என்பது தரத் தின் அடிப்படையில் என்பதை விடுத்து வளர்ச்சி என்ற ஒன்றிற்கு மாற்றாக வளர்ச்சியற்ற நிலை என்பதை பிர தியிடுகின்றனர். இது எப்படி இருக்கிறதென்றால் வெற் றிடத்தை நிரப்ப இன்னொரு வெற்றிடத்தைக் காண்பிப் பது போலத்தான்.

தரம் என்ற ஒன்றை கையாள்வது என்பது அளவு என்ற ஒன்றை கையாள்வதைவிட கடினமானது என்பது உண்மை தான். அளவு சம்பந்தமானவற்றை தரம் சம்பந் தப்பட்டவைகளைவிட எளிதாக வரையறுக்க முடியும்.

அளவு சம்பந்தமான அறிவியல்பூர்வமான எளிய வழிகள் தாம் என்ற ஒன்றை ஒதுக்கிவிட்டு அளவு என்ற ஒன்றையே வரையறுக்க உதவுகின்றன. பெரும்பாலான பொருளாதா நிபுணர்கள் தங்கள் கொள்கைகளையே அறிவியற்பூரவ மானதெனவும், இயற்பியல் போன்று மிகத்துல்லியமான தெனவும் மடத்தனமான கருத்தைக் கொண்டிருக்கின்றனர்.

பொருளாதாரத்தின் பிரதானமான கூறு 'பொருட்கள்' ஆகும். பொருளை வாங்குபவரின் கண்ணோட்டத்திலிருந்து சில அடிப்படைத் தத்துவங்களை பொருளாதார நிபுணர்கள் கொண்டிருக்கிறார்கள். அது "நுகர்வோரின் பொருள்கள் என்றும் உற்பத்தியாளர்களின் பொருட்கள்" என்றும் வேறுபடுத்தி கூறுவதாகும். இது அந்தப் பொருட்களின் உண்மைத் தன்மையை புறந்தள்ளிவிட்டு உருவாக்கிக் கொண்ட கருத்தாகும். உதாரணமாக, அவை மனிதனால் உற்பத்தி செய்யப்பட்டவையா அல்லது இறைவனால் படைக்கப்பட்டதா, அவற்றை மீண்டும் உற்பத்தி செய்ய முடியுமா, முடியாதா என்பது பற்றியெல்லாம் ஆராயாமல் மேற்கொள்ளப்பட்ட முடிவுகள். ஒரு பொருள் என்னதான் நுண் பொருளாதாரக் கூறுகளுடையதாக இருப்பினும் அது சந்தைக்குக் கொண்டு வரப்பட்டபின் எல்லாப் பொருட்களையும் போலவேதான் கையாளப்படுகின்றது.

உண்மையில், பொருட்களின் உண்மைத் தன்மையின் அடிப்படையில், பொருட்களுக்கிடையில் பலவிதமான வேறுபாடுகள் உள்ளன. பொருட்களை இப்படி வகைப் படுத்தலாம்.

பொருள்: முதன்மையானது, இரண்டாம் நிலையானது. 1. புதுப்பிக்க இயலாதது 2. புதுப்பிக்கக்கூடியது 3. உற்பத்தியாளர்கள் 4. சேவையாளர்கள்

முதன்மைப் பொருட்களுக்கும், இரண்டாம் நிலை பொருட்களுக்குமிடையிலேயான வேறுபாட்டை காண் பதென்பது சிறிது கடினமே. ஏனெனில் இரண்டாம் பட்ச பொருட்கள் முதன்மைப் பொருட்களையே சார்ந்திருக் கின்றன. முதன்மைப் பொருட்களை பூமியிலிருந்து பெற மனிதன் சக்தி பெற்றிருக்க வேண்டும் என்றால் மட்டுமே இரண்டாம் பட்ச பொருட்களை மனிதன் உற்பத்தி செய் வது பயனளிக்கும். இதில் கவனிக்க வேண்டியது என்ன வெனில் மனிதன் உற்பத்தியாளன் அல்ல. பொருளை ஒன்றிலிருந்து இன்னொன்றாக மாற்றுபவன் என்பது தான். புதுப்பிக்கக கூடிய அல்லது புதுப்பிக்க இயலாத என்ற இரண்டு கூறு அவன் வேறுபாட்டைக் கொண்ட முதன்மைப் பொருள் தளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டிய தேவை மனிதனுக்கு உண்டு.

இதனடிப்படையிலேயே முதன்மை சக்தியின் ஆற்றலை ஒன்றிலிருந்து இன்னொன்றாக மாற்றும்
மனித சக்தி அமைந்துள்ளது. இரண்டாம்பட்சமான பொருட்களை கவனத்தில் கொள்ளுவோமேயானால், உபத்தியாளர்களுக்கும், சேவையாளர் களுக்குமிடை யில் நல்லதொரு வேறுபாடு உள்ளது. இப்படி ஒவ் வொன்றிலிருந்தும் வேறுபட்ட நான்கு பிரிவுகளை நாம் எட்டியுள்ளோம்.
இந்த வேறுபாடுகள் சந்தைகளுக்கு தெரிவதேயில்லை. சந்தை எல்லாப் பொருட்களுக்கும் விலை அட்டையை தொங்கவிட்டு எல்லாம் ஒன்றுதான் என்ற தோற்றத்தை நமக்குத் தரச் செய்கின்றன.
ஐந்து ரூபாய் மதிப்புள்ள எண்ணெய் (பிரிவு 1) ஐந்து ரூபாய் மதிப்புள்ள செருப்புகளுக்கு சமமாகவும் அல்லது ஐந்து ரூபாய் வாடகைக்குத் தங்கக்கூடிய விடுதியின் வாடகைக்கு (பிரிவு 4) சமமாகவும் வைத்துப் பார்க்கப்

படுகிறது. பல்வேறு விதமான பொருட்களின் முக்கியத் துவம் அவை தரும் லாபத்தைக் கொண்டே நிர்ணயிக் கப் படுகிறது. பிரிவு 3 மற்றும் 4 ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் லாபம் பிரிவு 1 மற்றும் 2 ஆகியவற்றை விட அதிகமாக இருக்குமேயானால் அதனைக் கருத் தில் கொண்டு, 3 மற்றும் நான்காம் பிரிவுகளின் மூலாதா ரங்களை இன்னும் அதிக அளவில் பயன்படுத்தி பிரிவு 1 மற்றும் 2 ஆகியவற்றின் உற்பத்தியைக் குறைப்பது சரி யான புத்திசாலித்தனம் எனக் கொள்ளப்படுகிறது.

"மறைமுகக் காரணி' என்று பொருளாதார நிபுணர்க ளால் சொல்லப்படக்கூடிய சந்தையின் உள் விஷயங் களை ஆராய்வதல்ல என் நோக்கம். மேலே குறிப்பிட்ட நான்கு பிரிவுகளின் போதாமை குறித்த கவனமின்றி பல்வேறு முடிவற்ற விவாதங்கள் நடந்து கொண்டேயி ருக்கின்றன. இந்த விஷயம் கவனிக்கப்படாமலே உள் ளது. அல்லது கவனித்தாலும் பொருளாதாரக் கொள் கையை வகுப்பதில் இவை கணக்கில் எடுத்துக் கொள் ளப்படுவதேயில்லை.அடக்க விலை என்பது புதுப் பிக்கக்கூடிய பொருட்கள்லிருந்து புதுப்பிக்க இயலாத பொருட்களை விட நிச்சயமாக வேறுபட்டது. அதே போன்று உற்பத்தியாளர்கள் மற்றும் சேவைகள் அளிப் போர் ஆகியோருக்கும் இடையில் நிச்சயமான வேறு பாடு உள்ளது என்பதை பொருளாதார கொள்கை கள் வகுக்கும் போது கணக்கில் கொள்வதேயில்லை. மொத்தத்தில் பொருளாதாரம் என்பது மூன்றாவது பிரிவான உற்பத்தியாளர்களை மட்டுமே கணக்கில் கொண்டு உள்ளது. ஆனால் இது எல்லாப் பொருட்க ளுக்கும் சேவைகளுக்கும் எந்த வித்தியாசமும் இன்றி உற்பத்தியாளர்களுக்கான மதிப்பீடுகளின் அடிப்படை யிலேயே கைக்கொள்ளப்படுகிறது. இந்த நான்கு பிரி

வுகளின் தரவித்தியாசம் என்பது கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.

இந்த பிரிவுகளின் வேறுபாடுகள்தான் நுண் பொருளி யல் எனப்படுகிறது. பொருளாதாரம் குறித்த விரிவான ஆய்வை மேற்கொள்ளும் முன்னர், இதனை ஏற்றுக் (அங்கீகரிக்க) கொள்ள வேண்டும். அதனை ஏற்றுக் கொள்வதற்கு முன்னர் காற்று, நீர், மண் ஆகிய வாழ்க் கையின் மிக முக்கியமானவற்றின் முக்கியத்துவத்தை நாம் ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். இவை இது வரை சந்தைப் படுத்தப்படாதவை, சந்தைப்படுத்த முடி யாதவை, எந்த தனி மனிதருக்கும் சொந்தமானவை அல்ல.

மிக சமீபகாலமாகவே பொருளாதார நிபுணர்கள் இயற்கை வளங்களின் நீடித்த தன்மைக்கும் அவை அழிந்து போகாதிருக்கும்படி செயல்படுதல் குறித்தும் உணரத் தொடங்கியுள்ளனர்.

வாழ்க்கையின் முக்கியத் தேவையான இந்த அடிப் படை வளங்களின் பொருளாதார செயல்பாடுகள் எப் படி இருக்க வேண்டும் என்பது அவர்களது பணி யின் பகுதி அல்ல. சுற்றுப்புறச் சூழலில் இப்போது ஏற்பட்டுள்ள பெரும் மாற்றங்கள் மற்றும் தாக்கங்கள், குறிப்பாக வாழும் சூழலில் ஏற்பட்டுள்ள பிரச்சினைகள் பொருளாதார அமைப்பு மற்றும் செயல்பாடுகள் பற் றிய கேள்விகளை எழுப்பியுள்ளன. நுண் பொருளியல் சார்ந்து சிந்திக்கவில்லையெனில், பொருளாதாரம் பற் றிய ஆய்வு என்பது மிகக் குறுகியதாகவும் இருக்கும். அதனைக் கொண்டு மிகச் மானங்களை, முடிவுகளை மேற்கொள்ள

காகவும் முழுமையற்றதாகவுமே இருக்கும். அதனைக் கொண்டு மிகச் சரியான நல்ல தீர்மானகளை முடிவு களை மேற்கொள்ள இயலாது.

கெய்ன்ஸ் சொன்னதைப் போல நவீன பொருளாதரத் தின் எண்ணங்களின் காரணமாக, மனிதனுக்கு ஆதர வான நனமை பயக்கக்கூடிய வகையில் ஆராய்ச்சியை மதிப்பிடுவதில் சிரமங்கள் உள்ளன. இது சம்பந்தமான முடிவுகளை எடுப்பதில் நவீன பொருளாதாரத்தின் அணுகுமுறை மனிதனின் சுதந்திரத்தையும், ஆற்றலை யும் அழிக்கிறது. சூப்பர் சானிக் வேகமுள்ள போக்குவ ரத்து மற்றும் மனிதன் நிலவுக்கு சென்றது ஆகியவறறை உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்கள். இவை மனித னின் தேவைகளுக்காகவோ அவசியங்களுக்காகவோ செய்யப்பட்டவை அல்ல. ஆனால் இந்த தொழில்நுட் பங்கள் மனித குலத்திற்கு கிடைக்கப் பெற்றதாலேயே இவை நிகழ்த்தப்பட்டன.

நாம் இதுவரை கண்டது போல பொருளாதாரம் என்பது உருவாக்கப்பட்ட ஒரு அறிவியல்தான். நான் நுண்பொ ருளியல் என்று கூறியதிலிருந்து அறிவுறுத்தல்களை பரிந்துரைகளை அது ஏற்றுக் கொள்கிறது. அறிவு றுத்தல்கள் மாறும் போது, பொருளாதாரம் என்பதின் உள்ளடக்கமும் மாறுகிறது. பொருளாதார சட்டங்கள் பற்றியும், 'பொருளாதாரம்' 'பொருளாதாரமற்றது' என்ப னவற்றை எவை வரையறுக்கின்றன என்பது பற்றியும், அவற்றின் விளைவுகள் பற்றியும், மேற்கத்திய பொருள் வாதத்தின் அடிப்படையை விட்டு விட்டு புத்தரின் போத னைகள் சார்ந்து நுண் பொருளியலைக் கையாண்டால் என்னவாகும் என்பதை வருகின்ற அத்தியாயத்தில் காண்போம். புத்தமதம் என்பதைத் தேர்ந்தெடுத்தது எதேச்சையாக நிகழ்ந்த ஒன்று. மற்றெல்லா கீழ்த்திசைக்

கோட்பாடுகளைப் போலவே கிறிஸ்துவ போதனைகள், இஸ்லாமிய போதனைகள் அல்லது யூத மதம் சார்ந்தும் செய்திருக்கலாம்தான். ஆனால், ஏன் புத்த மதம் சார்ந்த பொருளாதாரத்தை கையில் எடுத்துள்ளேன் என்பது அடுத்த அத்தியாத்தைப் படிக்கும்போது, நிச்சயம் புரியும்.

## நன்மை தரும் புத்தமத பொருளாதாரம்!

கௌதம புத்தரின் 8 புனிதக் கட்டளைகளில் 'சரியான வாழ்க்கை முறை' என்பதும் ஒன்று. இதன் மூலம் புத்த மதம் சார்ந்த பொருளாதாரம் என்ற ஒன்று இருக்க வேண்டும் என்பது தெளிவாகத் தெரிகிறது.

புத்த மதத்தைப் பின்பற்றும் நாடுகள் அவற்றின் பாரம்ப ரியத்துக்கு உண்மையாக இருக்க விழைவதாக சொல் லிக் கொண்டே இருக்கின்றன. "புதிய (நவீன மியான் மார்) பர்மாவில் மதம் சார்ந்த மதிப்பீடுகள் மற்றும் பொருளாதார வளர்ச்சி ஆகிய இரண்டிற்கும் இடையில் எந்த முரண்பாடுகளுமில்லை; ஆன்மிக வளமும் பொரு ளாதார வளமும் எதிரிகளல்ல; அவை ஒன்றையொன்று இயைந்து செல்லக் கூடியவை என்று பர்மா நம்பிக்கை கொண்டுள்ளது. அல்லது "நவீன தொழில் நுட்பத்தின் பலன்களுடன் மதம் சார்ந்த ஆன்மிகம் சார்ந்த மதிப் பீடுகளுடன் வெற்றிகரமாக இணைக்க எங்களால் முடி யும், அல்லது நமது மத நம்பிக்கையின் கனவுகளையும், பொடுகளையும் ஒத்து அனுசரிக்க வேண்டிய புனிதக் கடமைகள் பர்மியர்களான நமக்கு உள்ளது" என்றும் பர்மா பிரகடன் செய்துள்ளது.

அனைத்து நாடுகளும் எந்த மாறுபாடுமின்றி ஒரே வித மான கொள்கைகளைக் கொண்டிருக்கின்றன. அவை நவீன பொருளாதாரம் சார்ந்ததாக, வளர்ந்துவிட்டதா

கச் சொல்லும் நாடுகளை அப்படியே பின்பற்றி தத்த மது நாடுகளில் பெரும் திட்டங்களை வளர்ச்சிக்கென்று செயல் படுத்துகின்றன.

நவீன கால பொருள்மயம் சார்ந்த நவீன பொருளாதா ரத்தைப் போல, புத்தமதம் சார்ந்த புத்தமதப் பொரு ளாதாரக் கொள்கைகளை பின்பற்றலாம் என்று எந்த நாடும் எண்ணுவதாகத் தெரியவில்லை .

அனைத்துத் துறையிலும் உள்ள நிபுணர்களைப் போலவே பொருளாதார நிபுணர்களும் நுட்பமான கண் தெரியாத நுண் இயற்பியல் கோளாறுகளால் அவதிப்ப டுகின்றனர். அந்த கோளாறுகளால் எல்லா நிபுணர்க ளையும் போன்றே பொருளாதார நிபுணர்களும் முழு மையான வேறுபாடுகளற்ற உண்மைகளைக் கொண் டது தங்களாக அறிவியல் துறை என எண்ணுகின்ற னர். இன்னும் சிலர் புவியீர்ப்பு சம்பந்தமான உண்மை களைப் போலவே பொருளாதார உண்மைகளும் நுண் இயற்பியலிலிருந்து வேறுபட்டு தனித்தது எனக்கூறுகின் றனர். இருந்தபோதும் பொருளாதார அமைப்பு பற்றி நாம் விவாதிக்கத் தேவையில்லை. மாறாக, சில அடிப்ப டையான விஷயங்களில் நவீன பொருளாதாரமும், புத்த மதம் சார்ந்த பொருளாதாரமும் எப்படி என்ன விதமாக இருக்கின்றன எனக் காண்போம்.

வளங்களின் அடிப்படை மூலாதாரம் மனித ஆற்றல் என்பது சர்வதேச அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. இப்போது நவீன பொருளாதார நிபுணர்கள் "வேலை அல்லது "மனித வேலை" என்பதை ஒரு கெட்ட சுமை யாகப் பார்க்கின்றனர். முதலாளியின் கண் ணோட்டத்தில் வேலைக்கு ஆட்கள் என்பது செலவு வகையைச் சார்ந்தது எனவும், அதனை முற்றிலுமாக ஒழிக்க முடியவில்லை எனில் தானியங்கி அமைப்பு

முறையைக் கொண்டு பணியாளர்களின் எண்ணிக்கை யைக் குறைப்பதே நல்லது எனவும் எண்ணுகின்றனர். பணியாளரின் கண்ணோட்டத்தில் இது பயன்பாடற்ற ஒன்று; வேலை என்பது ஒருவன் நேரத்தையும், வசதி யையும் தியாகம் செய்து செய்யப்படுவது கூலி என்பது ஒருவர் செய்த தியாகத்திற்கான ஈடாக கொடுக்கப் படுவது. எனவே முதலாளியின் கண் ணோட்டத்தில் அவரது குறிக்கோள், பணியாட்கள் அற்ற உற்பத்தி என்பதுதான். பணியாளரின் கண்ணோட் பணியாளரது குறிக்கோள், வேலை ஏதும் செய்யாமல் வருமானம் பெற வேண்டும் என்பதுதான். கொள்கையிலும் நடைமுறை யிலும் இந்த இரு வகை எண்ணங்களின் விளைவு ஒன் றுக்கொன்று வெகு தொலைவிலமைந்தவையாக உள் ளது. வேலைகளிலிருந்து (பணிகளிலிருந்து) விடுபடு வது என்ற குறிக்கோளுடன் நோக்குகையில் 'பணிச் சுமைகளைக் குறைப்பது நல்லதுதான்.

"ஆடம் ஸ்மித்தின் தேசங்களின் வளம்" என்ற நூலில் பெரியதாகப் புகழப்படும் ஊசி தயாரிக்கும் தொழிற் சாலை என்ற உதாரணம் சிறந்த உதாரணங்கள் தான். இங்கே கூறப்படுவது சாதாரண விஷயமல்ல, காலம் காலமாக செய்யப்பட்டு வருவதாகும். அதாவது மொத்த உற்பத்தித் திட்டத்தை சிறிது சிறிதாகப் பிரிப்பது, எனவே உற்பத்தியின் இறுதி நிலை மிகுந்த வேகத்தில் எவருக் கும் பெரிய அளவில் பங்களிப்புச் செய்யத் தேவையற்ற தாக அமைவதாகும். இது பெரும்பாலும் ஒருவரின் திற னற்ற இயக்கமாகவே உள்ளது.

புத்தமதம் சார்ந்த வேலைமுறை மூன்று கட்டங்க ளாக உள்ளது. ஒரு மனிதனின் துறையைப் பயன்ப டுத்தி வளர அவனுக்கு வாய்ப்பளிப்பது; அவனுடைய தன்வயம் சார்ந்த நிலையிலிருந்து அவன் வெளிவர

பொதுவான முயற்சியில் மற்றவர்களுடன் அவனையும் சேர்த்து ஈடுபடவைப்பதும் வாழ்க்கைக்குத் தேவை யான பொருட்களையும் சேவை களையும் கொண்டு வரச் செய்வது ஆகியவை. இந்த வகையிலும் உருவா கும் விளைவுகள் முடிவற்றவை. அர்த்த மற்றதாக, சோர் வளிக்கக் கூடியதாக, முட்டாள்தனமாக அமையப்பெற்ற அல்லது பணியாளரை கடுமையாக கஷடப்படுத்துகிற வேலை அமைப்பு, ஒருவிதத்தில் குற்ற கரமானதாகும். அப்படிப்பட்ட வேலை அமைப்பில் உற்பத்திப் பொருட் களே மனிதனைவிட முக்கியத்துவம் பெறுகின்றன. அதனைப் போன்றே வேலை செய்வதற்கு மாற்றாக, பொழுதுபோக்கு கேளிக்கைகளை நாடி செயல் படுவ தும் மனித வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளுக்கு நெறிகளுக்கு மாறுபாடானதாகப் புரிந்து கொள்ளப்ப டும். வேலை செய்வதில் உள்ள களிப்பு. பொழுதுபோக் கில் உள்ள ஆனந்தம் இவற்றை அழிக்காமல் வாழ்வி யலின் ஒன்றை ஒன்று சார்ந்தவையாக உள்ள வேலை யையும், பொழுது போக்கையும் பிரிக்க முடியாது என்ற வகையில் புரிந்து கொள்ளப்படும்.

எனவே புத்தமதம் சார்ந்த கண்ணோட்டத்தில் முற் றிலும் வேறுபட்ட இரண்டு செயல்பாட்டு முறைகள் உள்ளன. ஒன்று மனிதனின் திறமையை ஊக்குவித்து வளர்ந்து, அவன் ஆற்றலை மேம்படுத்துவது. மற் றொன்று. மனிதனின் வேலைத்திறனை இயந்திரமய மாக்கி அவனை ஒரு அடிமை போன்றே ஆக்கிவிடு வது. இதனை விளக்குவதற்கு 'கைவினைஞர் என்ற ஒன்றை எடுத்துக் கொள்ளலாம் என்று மேற்கத்திய நவீன மாற்றங்களையும் (வளர்ச்சியையும்), கீழ்த்திசை நாடுகளின் பழம்பெரும் தொன்மையையும் நன்கறிந்த, விளக்கக்கூடிய ஆனந்த குமாரஸ்வாமி "கைத்தறியில்

ஒருவன் வேலை செய்யும் போது அவனது விரல்களும் கருவியாகிப் பணி புரிகின்றன. ஆனால் விசைத்தறி ஒரு இயந்திரம். அது மனிதன் தனது நுட்பமான திறனைப் பயன்படுத்தி விடாமல் அழித்து அவன் கலாச்சாரத்திற்கும் அழிவைத் தருகிறது "என்று சொல்கிறார். எனவே புத்தமதம் சார்ந்த பொருளியல் என்பது நவீன பொருளியலிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக உள்ளது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஏனெனில் பண்பாட்டின் சாரம் என்பது தேவைகளைப் பெருக்கிக் கொள்வதல்ல என்றும், மனித குணம்களைத் தூய்மைப்படுத்துவதென்றும் அது கூறுகிறது.. குணம் என்பது மனிதன் செய்யும் வேலையைக் கொண்டே பெரும்பாலும் அமைகிறது. மனித சுதந்திரத்து கௌரவத்துடனும் செய்யப்படும் மனித வேலை செய்தவனையும், அவனது உற்பத்தியையும் ஆசிர்வதித்துப் பாராட்டுகிறது. இந்தியத் தத்துவஞானியும் கிராமிய பொருளாதார நிபுணருமான ஜே.சி. குமரப்பா

" வேலை என்பது அதன் இயல்பின்படி முறையாக அங்கீகரித்து செய்யப்படுமேயானால், உடலுக்கு உணவு எவ்வளவு முக்கியமானதோ அதனைப் போன்று அந்த வேலை ஆகிவிடுகிறது. அது வேலை செய்யும் மனிதனை ஊக்குவித்து அவனது சிறப்பான வெளிப்பாட்டை வேலையில் கொண்டு வருகிறது. அத்தகைய வேலை அவனை நல்வழியில் கொண்டு சென்று அவனுள் உள்ள விலங்கை ஒழுக்கமான வளர்ச்சிப் பாதைகளில் ஆக்குகிறது. அது ஒரு மனிதனின் மதிப்பீடுகளை வெளிக்கொணர்ந்து அவனது ஆளுமையை வளர்க்கிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒரு மனிதன் வேலை வாய்ப்பைப் பெறாது கடினமான சூழ்நிலையில் இருக்கிறான் என்றால் வருமானமில்லா

மல் இருக்கிறான் என்பதல்ல. தன்னை ஒரு வேலை செய்யும் அளவுக்கு ஊக்குவித்து வளர்த்துக் கொள்வதில்லை என்பதே அதன் பொருள். இந்த ஒழுக்கத்தை எதனாலும் ஈடு செய்ய இயலாது. நவீன பொருளாதார நிபுணர்தான் வேலை வாங்கியது தகுந்த பலனளித்ததா, பொருளாதார ரீதியில் வெற்றிகரமானதா என்றெல்லாம் கணக்குகள் போடக்கூடும். அவரது வெற்றி என்பது குறித்த நேரத்தில் ஈட்டப்பட்ட மொத்த உற்பத்தி என்பதே ஆகும்.

"உடனடித் தேவைக்கேற்ற பொருள் உற்பத்து மிகவும் குறைவு எனில், கடைசிப் பணியாளர் வரை வேலை வாங்க வேண்டிய உடனடி அவசியம் நேர்கிறது. சமூக நலனுக்காக சில வேலை வாய்ப்பற்ற நிலையை நாம் உருவாக்க முடியும். அவர்களின் வாழ்விற்கு நாம் பொருட்களை வழங்க முடியும்" என பேராசியர் கால்பிரெய்த் தனது "செழிப்பான சமூகம்" (The Affluent Society) என்ற நூலில் பதிவு செய்துள்ளார்.

புத்தமதக் கண்ணோட்டத்தில், மனிதர்களை விட பொருட்களே அதிக கவனம் பெறுகின்றன; உற்பத்தியை விட நுகர்தலே முக்கியத்துவம் பெறுகிறது. அதாவது, தொழிலாளி என்பதிலிருந்து தொழில் உற்பத்தி என்பது முக்கியத்துவம் பெறுகிறது. புத்தமதம் சார்ந்த பொருளாதாரம் முழு வேலைவாய்ப்பு என்பதாக உள்ளது. அதாவது வேலை தேடும் அனைவருக்கும் வேலை என்பதாக உள்ளது. அது வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதாகவோ, உற்பத்தியைப் பெருக்குவதாகவோ இல்லை. பெண்களுக்கு "வெளி வேலைகள் தேவை இல்லை. பெண்கள் வெளியில் அலுவலகங்களிலோ, தொழில்சாலைகளிலோ பணிபுரிவது பொருளாதாரத் தோல்வி என்று கொள்ளப்படும்.

குழந்தைகளைக் கவனிக்காக பெண்கள் பணிகளில் ஈடுபடுவது பொருளாதார ரீதியில் வெற்றிகரமானதல்ல என்பது புத்த மதம் சார்ந்த பொருளாதார நிபுணரின் கண்ணோட்டமாக உள்ளது. இது வேலைக் திறனுடைய ஒரு தொழிலாளியை போர் வீரனாகப் பார்க்கும் நவீன பொருளாதார நிபுணரின் கண்ணோட்டத்தைப் போன் றது.

பொருளியல்வாதிகள் உற்பத்திப் பொருள்களுக்கு முக் கியத்துவம் தரும் போது, புத்த மதம் சார்ந்தவர்கள் விடு தலைக்கு முக்கியத்துவம் தருகின்றனர். பொருள்வளம் விடுதலைக்கு தடையல்ல. ஆனால் பொருள் மீதான பற்று விடுதலைக்கு தடையாகும், இன்பங்களைத் துய்ப் பதல்ல, மாறாக அவைகளை ஆவலுடன் வேண்டி நிற் பது, விடுதலைக்குத் தடையாகும். புத்தமதம் சார்ந்த பொருளாதாரத்தின் அடிநாதம் எளிமையும், அஹிம்சை யுமாகும். புத்த மதம் சார்ந்த பொருளாதாரத்தின் மிக அற்புதமான விஷயம் என்னவெனில் புத்த மத வாழ்க் கையின் பூரணமான பகுத்தறியும் தன்மையே ஆகும். அந்த தன்மை சிறியவை வியத்தகு பலன்களை அளிக் கின்ற என்பதாகும்.

நவீன பொருளாதார நிபுணர்களுக்கு இதனைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கும். நவீன பொருளாதார நிபுணர் 'வாழ்க்கைத் தரம்' என்பதை ஒருவர் எவ்வளவு பொருள் நுகர்ச்சி செய்கிறார் என்பதைக் கொண்டே கணக்கிடுவார். ஆனால், புத்த மதம் சார்ந்த பொருளா தார நிபுணர் இதை அறிவுக்கு ஏற்றதாக கருதமாட்டார். காரணம், பொருள் நுகர்ச்சி என்பது மனிதன் நன்றாக வாழ்ந்தான்; எந்த அளவுக்குக் குறைவான பொருள் நுகர்ச்சியுடன் எவ்வளவு நன்றாக இருக்க முடியும் என் பதையே புத்தமதம் சார்ந்த பொருளாதார நிபுணர் கருத்

தில் கொள்வார். எனவே நம் சுற்றுப்புற சூழ்நிலைக்கு தக்கபடி வசதியுடன் அழகுடன் உடை அணிய, எவ்வ ளவு குறைவாக துணியை பயன்படுத்த முடியுமோ, அந்த அளவுக்கு பயன்படுத்த வேண்டும். தேவையில்லாத வடிவம்மை குறைக்க வேண்டும். மேற்கித்திய முறையில் மிகுந்த வேலைப்பாடுகளுடன் உடை அணிவது ஆடம் பரமானது.

உடை விஷயத்தில் குறிப்பிட்டுள்ளது எல்லாவற்றுக்கும் பொருந்தும். பொர்ருட்களை உடமைப்படுத்திக் கொள் வதும், அதிகமான நுகர்வும் ஒரு முடிவுக்கு நம்மை கொண்டு சென்றுவிடும். புத்த மதம் சார்ந்த பொரு ளாதாரம், தேவைகளை சுருக்கிக் கொள்வதன் மூலம் அனைத்தும் கிடைக்கும் நிலையைத் தரும்.நல்வழியை கண் முன் நிறுத்தும்.

நவீன பொருளாதாரம் எல்லா வகையிலும் நுகர்வு கலாச்சாரத்தையே முன்நிறுத்துக்கிறது. இதன் பொரு ளாதாரச் செயல்பாடுகளின் பலன்க்ள் உற்பத்தியே சார்ந்துள்ளன. மொத்தத்தில் நவீன பொருளாதாரம் உற்பத்தியைக் கொண்டு அதிக நுகர்வை நோக்கி நகர்த்துகிறது.சுருக்கமாக சொல்வது என்றால், எனவே வாழ்க்கைகான கடின முயற்சி அமெரிக்காவை விட பர் மாவில் குறைவு. வாழ்க்கை தேவைக்கான இயந்திர பயன்பாடு அமெரிக்காவிட பர்மாவில் மிகவும் குறைவு. நிச்சயம் இது நிதர்சன உண்மை.

எளிமையும் அஹிம்சையும் ஒன்றுக்கொன்ற தொடர் புடையவை என்பது கண்கூடு. குறைந்த அளவைக் கொண்டு அதிக அழுத்தமும், கஷ்டமம் இன்றி பெறப் படும் நுகர்வு "தீமைகளைத் தவிர்ப்போம்; நன்மை யாக இருப்போம்" என்னும் புத்தமதக் கோட்பாட்டின்படி அமைந்துள்ளது. இயற்கை வளங்கள் குறைந்த அளவே

உள்ள நிலையில் மிதமான நுகர்வு மிகவும் நன்மையானது. இதனைப் போன்றே, சுயதிருப்தியுள்ள சிறு சமூகங்கள், உலகளவில் வியாபாரம் புரிந்து போட்டியிட்டு வாழ்பவர்களை விட வன்முறையில் ஈடுபடாதிருக்கும் வாய்ப்புகள் அதிகம்.

புத்தமதம் சார்ந்த பொருளாதாரக் கண்ணோட்டத்தில் உள்ளூர் உற்பத்தியைக் கொண்டு உள்ளூர்த் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுதலே பகுத்தறிவுள்ள பொருளாதார வழியாகும். இது இறக்குமதியை சார்ந்து வாழ்வதைவிடவும், தொலைதூரப் பகுதிகளுக்கு ஏற்றுமதி செய்யும் பொருளாதார ரீதியில் பயனற்ற செயல்பாடுகளை விடவும் சிறந்தது. ஆனால் தவிர்க்கவே இயலாத வேளைகளில் சிறிய அளவுகளில் இவற்றை செய்து கொள்ளலாம். ஒரு மனிதனை அவன் வீட்டிலிருந்து அவன் பணி புரியும் இடத்திற்கு மிகுந்த பொருட்செலவில் கொண்டு செல்வது நல்ல வாழ்க்கை நிலை அல்ல என்று நவீன பொருளாதாரம் சொல்வதைப்போல மனிதனின் தேவைகளை மிக அருகாமையில் இருந்து பெற்றுக் கொள்வதை விடுத்து, மிக நீண்ட தூரத்திலிருந்து பெற்றுக் கொள்வது என்பது தோல்வியே என்று புத்தமதம் சார்ந்த பொருளாதாரம் கூறுகிறது.

நவீன பொருளாதாரத்திற்கும் புத்த மதம் சார்ந்த பொருளாதாரத்திற்கும் உள்ள அதிமுக்கியமான மற்றொரு வேறுபாடு இயற்கை வளங்களைப் பயன்படுத்துவதில் உள்ளது. பிரெஞ்ச் அரசியலறிஞரான பெர்ட்ரன்ட் டி ஜூவனல்"மனிதன் உழைப்பை தவிர வேறு எதையும் செலவினமாக கணக்கில் கொள்வதில்லை. எவ்வளவு கனிம வளங்களை வீண் விரயம் செய்கிறான். எத்தனை உயிரினங்களை அழிக்கிறான். நகரங்களில் வாழ்வதன் மூலம் சுற்றுச்சூழலை சுரண்டி எடுக்கிறான். தண்ணீர்,

மரங்கள் தங்களுக்கு மட்டுமே சொந்தம் என கருதிக் கொள்கிறான்" என சொல்கிறார்.

புத்தரின் போதனைகளோ பிற உயிர்களைப் போற்றுவதையும், புலனறிவுள்ள அனைத்தின் மீதும் வன்முறையற்றிருப்பதையும் போதிப்பதோடல்லாமல், மரங்களையும் காக்கச் சொல்கிறது. புத்த மதத்தைப் பின்பற்றும் ஒவ்வொருவரும் சில ஆண்டுகளாவது மரங்களை நட்டு அவை நன்கு வளரும் வரை பராமரிக்க வேண்டியது கட்டாயம் ஆகும். எந்தவித அயல்நாட்டு உதவியும் இன்றி பொருளாதார வளத்தை மரங்களை நடுவதன் மூலம் மேம்படுத்த முடியுமென புத்த மதம் சார்ந்த பொருளாதார நிபுணர்கள் எளிதாக செய்து காட்டலாம். உலகின் மற்ற பகுதிகளைப் போலவே தென்கிழக்காசிய நாடுகளும் மரங்களை அழிப்பதன் மூலம் பெரும் பொருளாதார நசிவை சந்திக்கின்றன என்பதில் சந்தேகமில்லை .

நவீன பொருளாதாரம் உற்பத்தி அளவையும், பண மதிப்பையும் மட்டுமே கவனத்தில் கொள்வதால் புதுப்பிக்கவல்ல புதுப்பிக்க இயலாத வளங்களை வேறுபடுத்திப் பார்ப்பதில்லை . நிலக்கரி, எண்ணெய், மரம் அல்லது நீர் என எதனை எடுத்துக் கொண்டாலும் அவற்றின் ஒவ்வொரு அலகின் (யூனிட்) விலை அடிப்படையில் மட்டுமே அவற்றை பிரித்துப் பார்க்கின்றது. எல்லாவற்றிலும் விலை மலிவானதே பொருளாதார ரீதியில் பயன்மிக் தேர்ந்தெடுக்கப்படுகிறது. ஆனால் புத்த மதம் பொருளாதாரம் இப்படியானதல்ல. புதுப்பிக்க இயலாத நிலக்கரி, எண்ணெய் போன்றவையும், புதுப்பிக்கவல்ல மரம், நீர் சக்தி போன்றவற்றையும் ஒரு போலப் பார்ப்பதில்லை. புதுப்பிக்க இயலாத வளங்களை மிக அத்தியா வசியப் தேவைகளுக்கு மட்டுமே பயன்படுத்து

வது. மிகுந்த அக்கறையுடன் சேமித்தல், பாதுகாத்தல்... போன்றவற்றை கவனத்தில் கொண்டு செயல்படுவது. அவற்றை குருட்டுத்தனமாகப் பயன்படுத்தி வீண்விரயம் செய்வது வன்முறையாகும். வன்முறையின்றி முழுமை யான அஹிம்ஸையை அடைதல் இயலாமலாகும். எனி னும் எல்லா வழிகளிலும், எல்லா மட்டங்களிலும் வன் முறையற்று வாழ்வதே நோக்கமாகும் என்கிறது புத்த போதனை.

ஐரோப்பாவின் அனைத்து கலைப் பொக்கிஷங்களை யும் அதிக விலைக்கு அமெரிக்காவுக்கு விற்பதை ஒரு பெரும் பொருளாதாரச் சாதனை என எந்த நவீன ஐரோப்பிய பொருளாதார நிபுணரும் கருதமாட்டார். எந்த ஒரு சமூகமும் புதுப்பிக்கவியலாத வளங்களைச் சார்ந்து வாழ்வதை ஒட்டுண்ணி வாழ்க்கை என்றும், வருமானத்தில் வாழ்வதைவிடுத்து முதலீட்டின் மீதே வாழ்கிறது என்றும் புத்தமதம் சார்ந்த பொருளாதார நிபு ணர் கூறுவார். அந்த மாதிரியான வாழ்க்கை தற்காலிக மானதுதானேயொழிய நிரந்தரமானதல்ல. உலகெங்கும் விரவிப் பரந்து கிடக்கும் புதுப்பிக்க இயலாத நிலக்கரி, எண்ணெய், இயற்கை எரிவாயு போன்ற ஒரு குறிப்பிட்ட அளவேயுள்ள வள களை மிகக் கடுமையான முறையில் வேகத்தில் சுரண்டி அழிப்பது இயற்கைக்கு எதிரான வன்முறையாகும். அது நாளடைவில் மனிதர்களுக்கி டையேயான வன்முறையாக மாறுவது தவிர்க்க இயலா ததாகிவிடும்.

இந்த உண்மையை நவீன பொருளாதாரத்தைப் பின பற்றக் கூடிய புத்தமத நாடுகள் உள்பட அனைவரும் யோசித்துப் பார்க்க வேண்டும். புத்த மதம் சார்ந்த பொருளாதாரத்தை வீண் கனவு என்று எண்ணிப் புறந் தள்ளூ தாங்கள் பின்பற்ற விரும்பும் நவீன பொருளாதா

ரக் கொள்கை எங்கு கொண்டு போய் தங்களை விடும் என கண்ணிப் பார்க்க வேண்டும். கலிபோர்னியா பேராசிரியர் ஹாரிஸன் பிரவுனின் மனித எதிர் காலத்தின் மீதான சவால் (The challenge of Human Future) புத்தகத்தில்

“இயந்திரமயமான தொழிற்சாலைகள் நிலையற்றவை, மீண்டும் அவை விவசாயத் தொழில்துறைக்கே திரும்ப வேண்டியுள்ளது. எனவே இயந்திரமயமான தொழிற்சாலைகளின் பலன்களாகக் கிட்டும் சுதந்திரம் என்பதும் நிலையற்றது. அந்த சுதந்திரத்தால் பெரு நிறுவனங்கள் மற்றும் ஒட்டுமொத்த அதிகாரங்களைக் கொண்ட சக்திகளின் முன்னால் தாக்குப் பிடிக்க இயலாது. இயந்திரத் தொழில் சமூகத்திற்கு உண்டாகும் நெருக்கடிகளை நாம் முன்னுணர்ந்து ஆராய்ந்தால், அதனை நிலை நிறுத்துவதும் தனி மனித சுதந்திரத்தை தக்கவைத்துக் கொள்வதும் மிகக் கடினம்" என குறிப்பிட்டுள்ளார்.

இவையெல்லாம் உடனடியாக சம்பவிக்காது என்று இவற்றைப் புறந்தள்ளினாலும், ஆன்மிகம், மதம் சாராது கடைப் பிடிக்கப்படும் "நவீன மயம்" சரியாக ஏற்றுக் கொள்ளக்கூடிய விளைவுகளை தருமா என்பது கேள்விக் குறியே. வெகு ஜன மக்களை கவனத்தில் கொள்ளும்போது இது மிகுந்த அழிவைத் தரக்கூடியதாக உள்ளது. உள்ளூர் பொருளாதாரம் நசிந்து, நகர்ப்புறங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்து நாட்டிலும் வேலை இல்லாத் திண்டாட்டம் அதிகரித்து உடல் ரீதியாகவும், ஆன்ம ரீதியாகவும் நலிவும் நசிவும் ஏற்படும்.

தற்போதைய அனுபவங்கள் மற்றும் நீண்ட கால விளைவுகளின் அடிப்படையில் நோக்கும்போது "நவீன வளர்ச்சிக்கும்" “மரபுசார் தேக்கநிலைக்கும்" இடையிலான பொருளாதார வளர்ச்சி குறித்து கேள்வி கேட்

பவர்கட்குக் கூட பரிந்துரைக்கக் கூடியதே புத்த மதம் சார்ந்த பொருளாதாரம். வளர்ச்சிக்கான சரியான பாதையைத் தேர்ந்தெடுப்பது கேள்விக்குரிய விஷயமாகும். பொருள்வயம் சார்ந்த அஜாக்கிரதையான வழிச் மரபுசார்ந்த தேக்க நிலைக்கும் இடையிலான நடுநிலை வழியாகும். சுருங்கக் கூறினால், சரியான வாழ்க்கைமுறையை வாழ்வதாகும்.

…………...

## சிந்திக்க தூண்டும் அளவு

குடும்பம் சமூகத்தின் தொடக்கமாக இருந்த வரலாற்றை முன்பே கூறியுள்ளேன். குடும்பங்கள் இணைந்து இனக்குழுக்கள், பின்னர் பல்வேறு இனக் குழுக்கள் இணைந்து நாடு. பின்னர் நாடுகள் பல இணைந்து "யூனியன்" அல்லது யுனைடெட் ஸ்டேட். இப்படிப் பல்வேறு நிலைகளை அடைந்தன. இறுதியாக ஓர் உலக அரசை நாம் எதிர் நோக்கலாம். இது சம்பந்தமானவற்றை நான் விருப்பூன்றி கவனித்தபோது புதிய நாடுகள் சட்டென உருவாவதை என்னால் காண முடிந்தது. ஐக்கிய நாடுகள் சபை வெறும் 25 நாடுகளை உறுப்பு நாடுகளாகக் கொண்டு தொடங்கப்பட்டது. இப்போது அது சில மடங்குகள் கூடுதலாகி, இன்னும் வளர்ந்து கொண்டே இருக்கிறது. எனது இளமைக்காலத்தில்

புதிய நாடுகள் உருவாவது "பால்கனைசேஷன்" என்று அறியப்பட்டது. இது மிக கெடுதலானதென்றும் கூறப் பட்டது. எல்லோராலும் கெட்டது என கூறப்பட்டாலும், உலகம் முழுவதும் இந்நிலை தொடர்ந்து கொண்டே இருக்கிறது. பெரியவை எல்லாம் சிறிய சிறிய பாகங்க ளாக பகுதிகளாக உடைய தலைப்பட்டன. இந்த நிலை, நான் கற்றதற்கு மாறானதாக இருந்தது. இதனை நாம் ஏற்றுக் கொண்டாலும் இல்லை என்றாலும் கவனிக்கா மல் இருக்க முடியாது.

இரண்டாவதாக, ஒரு நாடு வளம்மிக்கதாக இருக்க வேண்டுமெனில் எவ்வளவு பெரிதாக இருக்க முடி யுமோ அப்படி இருக்க வேண்டும் என என்னைப் போன் றவர்களுக்கு கற்பிக்கப்பட்டிருந்தது.

ஜெர்மனியின் வளர்ச்சி சாத்தியமானது அதன் ஒன்றி ணைப்பினால்தான் என்பது உண்மை அல்ல. உலகின் வளமான நாடுகளின் பட்டியல் ஒன்றை தயாரித்தால், அவற்றில் பெரும்பாலான நாடுகள் சிறியவை என்பதை அறியலாம். ஆனால் பெரிய நாடுகள் பலவும் ஏழ்மை யாக இருப்பதைக் காண முடியும். இங்கேயும் நாம் சிந் திக்க வேண்டியது நிறைய இருக்கிறது.

மூன்றாவதாக, 'பொருளாதார அளவுகோல்' என்பது பற்றி கற்பிக்கப்பட்டேன். அதாவது எல்லா நாடுகளிலும் தொழிற்சாலைகளும் நிறுவனங்களும், நவீன தொழில் நுட்பத்தால் பெரிதாகிக் கொண்டே வருகின்றன. வர லாற்றில் நாம் முன்னெப்போதும் கண்டிராத அளவுக்கு இப்பொழுது பெரிய பெரிய தொழில் நிறுவனங்கள் உள்ளன. ஆனால் பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளில் சிறு சிறு தொழில் நிறுவனங்களும் பெரு கிக் கொண்டுதான் இருக்கின்றன. இவற்றுள் பெரும்பா லான நிறுவனங்கள் வெற்றிகரமாக லாபத்துடன் இயங்கி

வளர்ச்சிக்குத் தேவையான பங்களிப்பைச் செய்கின் றன. கொள்கைக் கோட்பாட்டையும், உண்மையான செயல்பாட்டையும் ஒன்றாக்குவது அத்தனை எளிதான ஒன்றல்ல. அளவு பற்றி முன்னர் கூறியுள்ள இம்மூன்று விஷயங்களும் புதிராகவே ஒருவருக்குத் தோன்றும்.

இன்றும் கூட மாபெரும் நிறுவனங்கள் என்பவை தவிர்க்க முடியாத தப்பிக்கவியலாத தேவைகளாகிவிட் டன என்று பொதுவாகச் சொல்லப்படுகின்றது. ஆனால் நாம் அதனை உற்று நோக்கினால் பெரியவற்றினுள் சிறி யனவற்றை அடைவதற்கான விடா முயற்சி தொடர்ந்து கொண்டே இருப்பதைக் காணமுடியும். ஜெனரல் மோட்டார் கம்பெனியின் ஸ்லோன் அந்தப் பெரிய நிறு வனத்தை சிறு நிறுவனங்களின் தொகுப்பாகத்தான் உருவாக்கினார். பிரிட்டிஷ் நேஷனல் நிலக்கரி கார்ப்ப ரேஷன் எனப்படும் மேற்கு ஐரோப்பாவின் மாபெரும் நிறுவனத்தை ரோபன்ஸ் பிரபு தன் காலத்தில் அப்ப டித் தான் உருவாக்கினார். ஒன்றாகத் தோன்றக் கூடிய பெரிய நிறுவனங்கள் தனித்தனியாக வேலைகளைச் செய்து முடிக்கக்கூடிய தன்மையுடனான சிறு அலகுக ளைக் கொண்டவையாகவே உள்ளன. நடைமுறையை நன்கு உற்று நோக்கி அறிந்து கொள்ளாத பல நிபுணர் களும் பெரும் நிறுவனங்களைப் பற்றியே பேசி வருகின் றனர். அவை லாபமீட்ட தூண்டுகின்றன. ஆனால் மனி தனின் வசதிக் கேற்ப கையாளுவதற்கு எளிதானவை சிறியவைகளே. இதனை எவரும் எளிதில் உணர்ந்து கொள்ள முடியும்.

நாம் எடுத்துக் கொண்டுள்ள இந்த விஷயம் குறித்து இன்னொரு கோணத்தில் அணுகி செய்யப்படவேண் டியது என்னவென்று யோசிப்போம். மனிதர்களைப் பொறுத்த மட்டில் ஒரே நேரத்தில் இரண்டு விஷயங்கள்

தேவைப் படுகின்றன. அவை ஒன்றை ஒன்று இணங்கிப் போகாதவை, வேறுபட்டவை. நமக்கு எப்போதும் சுதந்திரமும் ஒழுங்கமைப்பும் தேவையாய் இருக்கிறது. நமக்கு சுதந்திரமான சுயமான எண்ணற்ற சிறிய திட்டங்கள் (அலகுகள்) தேவைப்படும் அதே சமயத்தில் பெரு நிறுவனங்கள் உலகளாவிய பெரு நிறுவனங்களிடையே ஒழுங்கமைப்பு, ஒத்திசைவு, ஒற்றுமை ஆகியவையும் தேவைப்படுகின்றன. நடைமுறையில் பார்க்கும் போது, செயல்பாடு என்பது மகவும் தனி நபர் சம்பந்தப்பட்ட விஷயம். ஒரு மனிதன் ஒரே நேரத்தில் குறிப்பிட்ட அளவு மனிதர்களுடனே தொடர்பில் இருக்க முடியும். நமக்கு சிறிய திட்டங்களிலான தொழில்கள் - நிறுவனங்கள் அதிகம் தேவைப்படுவது கண்கூடு. ஆனால் கருத்துக்கள், கொள்கைகள் அல்லது சமாதானம் மற்றும் சுற்றுச்சூழல் ஆகியவற்றலான அடிப்படை நெறிமுறைகள் என்று வரும்போது, மனிதகுல ஒற்றுமையை நாம் அங்கீகரிக்க வேண்டிய தேவை உள்ளது. இந்த அங்கீகாரத்தின் அடிப்படையிலேயே நமது செயல் பாடுகள் இருக்க வேண்டி உள்ளது அல்லது இதனை வேறு வதமாகப் பார்த்தோமானால், அனைத்து மனிதர்களும் சகோதரர்களாவார்கள். ஆனால் நம்மால்

நம்மால் சிலரிடம் மட்டுமே சகோதர உறவுடன் இருக்க முடியும் என்பதும், உலகிலுள்ள அனைவரிடமும் நாம் சகோதர பாவத்துடன் பழக வேண்டும் என வந்தால், நமக்கு நெருக்கமானவர் களுடன் இன்னும் சகோதர உறவுடன் பழக வேண்டிவரும். எல்லோருடனும் சகோதர உறவு கொள்ள வேண்டும் என்று கூறுபவர்கள் அவர்களின் அண்டை அயலாரை எதிரிகளாகப் பார்ப்பதை நம்மால் காண முடியும். அண்டை அயலாருடன் நன்முறையில் பழகுபவர்கள், தங்களது வட்

டத்திற்கு வெளியில் உள்ள மற்ற மனித சமூகங்களிடம் தீங்கிழைக் கும் வகையில் செயல் படுவதையும் பார்க்க முடியும்.
மனிதனுக்கு சிறியதும் பெரியதுமான இரண்டுமே தேவையானதாக இருக்கிறது. தனிப்பட்ட சில தேவை கள் மற்றும் பொதுவான சில தேவைகள் என அவை உள்ளன. நேர் எதிரான இரண்டு தேவைகளை ஒரே நேரத்தில் வைத்துக் கொண்டிருப்பதை மனிதர்கள் கடினமாக உணருகிறார்கள். உண்மையான வாழ்வில் இறப்பைத் தவிர வேறு இறுதி முடிவு இல்லை என்ற ரீதியில் தீர்வுகளைத் தேடுகிறார்கள். ஆக்கப்பூர்வமான எந்த ஒரு செயலுக்கும் முதன்மையானது சமநிலை ஒன்றை தக்கவைப்பதுதான். இன்று நாம் உலகம் முழு மையும் வியாபித்துள்ள மாபெரும் ராட்சத நிலையை கொண்டாடும் துன்பத்தில் இருக்கிறோம். எனவே, எங் கெல்லாம் சாத்தியமாகிறதோ அங்கெல்லாம் சிறியவற் றைக் கொண்டு வருவதின் நன்மை களை நாம் சொல்ல வேண்டி இருக்கிறது. (சிறியவைகளையே கொண்டா டும் போக்கு பெருமளவில் இருக்குமேயானால் ஒருவர் அதற்கு எதிராக செயல்பட வேண்டி இருக்கும்.)
அளவுபற்றி வேறொரு வகையிலும் சிந்திக்கலாம். அனைத்து விஷயங்களையும் வேறுபடுத்திப் பகுத்து அறிய என்ன செய்ய வேண்டும்? அதிக வேலை, வேலைகள் தெரிவித்தல், குறைந்த எண்ணிக்கையில் மனிதர்களை வேலைகளில் ஈடுபடுத்துதல், இவற்றிற்கு இடையிலான
அதிகமான தொடர்புகளை உருவாக்குதல் என்று ஒவ் வொரு செயல்பாட்டுக்கும் வரையறை உண்டு. கற்பித் தலை எடுத்துக் கொள்வோம். கற்பிக்கும் இயந்திரத் தின் மேன்மை பற்றிய எல்லாவித விவாதங்களையும்

ஒருவர் கேட்கிறார். என்ன நாம் கற்றுக் கொடுக்க முயல் லறோம் என்று கேள்வி தோன்றிய உடனே எல்லோருக் கும் வானொலி, தொலைக்காட்சி, கற்பிக்கும் இயந்தி ரம் போன்றவைகள் மூலமாக சிலவற்றை கற்பிக்க முடி யும் என்று தோன்றும். ஆனால் சிலவற்றை நெருங்கிய தொரு வட்டத்திற்குள் மட்டுமே கற்பிக்க முடியும்.

எந்த அளவு சரியானதென்பது, நாம் என்ன செய்ய முயல் இறோமோ, அதனைப் பொறுத்தது. சமூக, அரசி யல் மற்றும் பொருளாதார விஷயங்களிலே அளவு என்ற ஒன்றை உருவாக்குவது சிக்கலான பணியாக உள் ளது. உதாரணத்திற்கு, ஒரு நகரம் என்பதன் அளவு என்ன? அதனைப் போல் ஒரு நாடு என்பதற்கும் அள வுகோல் என்ன? இவை கடினமான கேள்விகளே. ஒரு கணினி மூலம் கூட இந்தக் கேள்விகளுக்கு பதிலளிக்க முடியாது. வாழ்க்கையின் தீவிரமான விஷயங்களைக் கணிக்க முடியாது. எது சரியானது என்று நம்மால் நேரடி யாகக் கணிக்க முடியாது. ஆனால் எது சரியல்ல என்று நமக்கு சாதாரணமாகவே தெரியும். சரியானதும் தவறா னதும் எதுவென்று அறுதியிட்டுக் கூறமுடியாது. ஆனால் நாம் இப்படிச் சொல்லிக் கொள்ளலாம் "இது ஐந்து சத வீதம் அதிகமாக இருக்க வேண்டும், அல்லது அது ஐந்து சதவீதம் குறைவாக இருக்க வேண்டும்" என்று.

நகரத்தின் அளவு என்ன என்ற கேள்வியை எடுத் துக் கொள்வோம். இந்தக் கேள்விக்கு மிகச் சரி யாக பதிலளிக்க இயலாது. எனினும் அரைமில்லியன் (ஐந்து லட்சம் )மக்கள் தொகையைக் கொண்டதாக அது இருக்க வேண்டும் என்று சொல்வது ஓரளவு பர வாயில்லை என நான் நினைக்கிறேன் அதற்கு மேல் அளவு என்பது அதிகமானால் அது நல்ல தன்மை அல்ல. மாநகரங்களான லண்டன், டோக்கியோ நியூ

யார்க் போன்றவைகளின் அதிக மக்கள் தொகை நக ரங்களுக்கு நன்மை பயக்கவில்லை . மாறாக அதிக மான பிரச்சினைகளையே தோற்றுவித்து மனிதனைத் தரம் தாழ்த்துகின்றன. எனவே ஒரு நகரத்திற்கு லட் சம் மக்கள் தொகை என்பது அதிகபட்சமான ஒரு அளவாக கருதப்பட வேண்டும். ஒரு நகரத்தின் குறைந் தபட்ச மக்கள் தொகை என்னவாக இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிப்பது மிகவும் கடினம். இருபதாம் நூற்றாண்டுகளின் தர நிலையின்படி வரலாற்றில் அரு மையான நகரங்கள் என்பது மிகவும் குறைவே. பொருள் வளத்தைப் பொறுத்தே நகர வாழ்க்கையின் வசதிகள் அமைகின்றன. ஆனால் என்ன மாதிரியான கலாச்சார வாழ்க்கை என்பதைப் பொறுத்து பொருள்வளத்தின் தேவை இருக்கிறது. தத்துவம் சார்ந்த, கலை சார்ந்த மற்றும் மதம் சார்ந்த வாழ்விற்கு பணத் தேவை குறை வாகவே இருக்கிறது. வானியல் ஆய்வு மற்றும் அதிந வீன இயற்பியல் சார்ந்த, உயர் கலாச்சார வாழ்க்கைக் குப் பணம் அதிகம் தேவைப்படுகிறது.

நகரங்களின் சரியான அளவைப் பற்றிக் கேள்வி கேட் கும் அதே வேளையில் நாம் தேசங்களின் அளவு பற் றியும் சிந்திக்க வேண்டி வருகிறது. ராட்சதத் தன்மை யைக் கொண்டாடுவது என்பது, நவீன தொழில் நுட் பத்தின் காரணத்தால்தான். அதுவும் குறிப்பாக, போக் குவரத்து மற்றும் தொலைக்தொடர்புத் துறைகளில். அதிவேக வளர்ச்சி அடைந்துள்ள போக்குவரத்து மற் றும் தொலைத் தொடர்புத் துறை, மனிதர்களை கட்டு தளையற்றவர்களாக்கி உள்ளது.

லட்சக்கணக்கான மக்கள் ஊர்ப்புறங்களில் இருந்தும் சிறு நகரங்களிலிருந்தும் பெரு நகரங்களை நோக்கி இடம் பெயர்ந்து நோய்களைப் பெருக்குகின்றனர்.

அமெரிக்க வையே இதற்கு உதாரணமாகக் கொள்ள லாம். அமெரிக்காவின் பாஸ்டன் நகரிலிருந்து வாஷிங் டன் வரை மில்லியன் மக்கள் தொகையைக் கொண் டும், சிகாகோ நகரைச் சுற்றி 60 மில்லியன் மக்களும், மேற்குக் கரையோ ரமான சான் பிரான்சிஸ்கோவிலி ருந்து சான்டீ கோ வரை 60 மில்லியன் மக்கள் தொகை யைக் கொண்டும், தேசத்தின் பிற பகுதிகள் கிட்டத் தட்ட ஆட்களே இல்லாமலும், ஆட்களற்ற மாகாண சிறு நகரங்களைக் கொண்டும், பெரும் டிராக்டர் போன்ற இயந்திரங்களையும், பெருமளவிலான வேதிப்பொருட் களைக் கொண்டு வேளாண்மை செய்யப் படும் நிலங்க ளைக் கொண்டும் அமைந்துள்ளன.

இதுதான் அமெரிக்காவின் எதிர்காலம் என எவரும் கருதுவாரேயானால், அது எந்த நன்மதிப்புமற்ற எதிர்கா லமாகும். ஆனால் நாம் விரும்பினாலும் விரும்பா விட் டாலும் கட்டு தளைகளற்ற மக்கள் வாழ்வின் விளைவு இதுவேயாகும். பொருளாதார நிபுணர்கள் பெரும் புதை யலாகக் கருதும் மனிதர்களின் பெருமளவிலான இடம் பெயர்தலின் விளைவாகும் இது.

உலகின் ஒவ்வொன்றும் அதற்கான ஒரு அமைப்பில் இருக்க வேண்டும். இல்லை என்றால், நாசம்தான். பெரு மளவிலான போக்குவரத்தும், தொழில் நுட்பமும் வரு வதற்கு முன்னால் ஆரம்ப அமைப்பு என்பது அப்படியே இருந்தது. ஏனெனில் மக்கள் அதிகம் இடம் பெயர வில்லை . இடம் பெயர எண்ணிய குறைந்த அளவு மக்கள் இடம் பெயர்ந்தார்கள். ஏராளமான துறவிகள் அயர்லாந்திலிருந்து ஐரோப்பா முழுவதும் விரவிப் பரந் தார்கள். அப்போதும் இடம் பெயர்தலும், தொலைத் தொடர்புகளுமிருந்தன. ஆனால் கட்டுதளைகளை பந் தங்களை விடவில்லை. ஆனால் இப்போது அனைத்

தும் சிதைந்து நாடு ஒரு சரக்குக் கப்பல் போலாகிவிட்டது. இதிலுள்ள பொருட்களுக்கு எந்தப் பாதுகாப்பும் இல்லை .
மனித குலத்திற்கான அமைப்பின் முக்கியமானவற்றில் ஒன்று நாடு. அமைப்பிற்கான காரணிகளில் முக்கிய மான வற்றில் ஒன்று எல்லை. தொழில்நுட்ப வளர்ச்சி இல்லாத போது, அரசியல் மற்றும் மன்னர்கள் சார்ந்த ஒன்றாகவே எல்லை என்பது இருந்தது. போருக்கான மக்களைத் திரட்ட முடியும் என்பதால் எல்லைகளுக்கு வரையறை இல்லா

திருந்தது. இந்த எல்லைகள் வர்த்தகம் செய்ய பொருளதாரத் தடைகளாக இருந்தமையால் இதனைப் பொருளதார நிபுணர்கள் எதிர்த்தனர். ஆனால் அப்போது பொருட்களும் கட்டுதளைகளற்றிருக்கவில்லை. வரத்துச் செலவினங்கள் மிகவும் அதிகமாக இருந்தமையால், மக்களும், பொருட்களும் இடம் பெயர்தல் மிக குறைவாகவே இருந்தது. அது அளவு கடந்து போய் விடவில்லை. இயந்திர யுகத்திற்கு முந்தைய வர்த்தகம் என்பது அத்தியாவசியப் பொருட்களின் வர்த்தகமாக இல்லை அப்போதைய வர்த்தகம் அரிய கற்கள், அரிய உலோகம் , ஆடம்பரப்பொருட்கள், வாசனைத் திரவியங்கள் மற்றும் துன்பங்கள் நிறைந்த அடிமைகள் வியாபாரமாகவே இருந்தது. வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகள் உள்ளூர் உற்பத்திப் பொருட்களைக் கொண்டே நிறைவேறின. பேரழிவுக் காலங்களைத் தவிர மற்ற நேரங்களில் மக்கள் இடம் பெயர்தல் என்பது குறிப்பிட்ட விசேஷ காரணங்களுக்காக, அதாவது அயர்லாந்தின் துறவிகளும், பாரிஸ் நகரின் அறிஞர்களும் இடம் பெயர்ந்ததைப் போலவே இருந்தன.

ஆனால் இப்போது ஒவ்வொருவரும், ஒவ்வொன்றும் இடம் பெயர்கின்றனவாக இருக்கின்றன. அனைத்து அமைப்புகளும் அச்சுறுத்தலுக்குள்ளாகி விட்டன. அனைத்து அமைப்புகளும் அவை இருந்ததற்கான அடை யாளம் தெரியாத அழியும் நிலைக்குப் போகும்படி இருக்கின்றன .

பொருளாதார நிபுணரான கெய்ன்ஸ் பல் மருத்துவம் போன்று மிதமான ஒரு துறையாக இருக்கும் என்று நம்பி இருந்த பொருளாதாரத்துறை அனைத்துத் துறைக ளையும் விட முக்கியமானதாக சட்டென்று மாறிவிட்டது. அரசாங்கத்தின் முழு கவனத்தையும் கிட்டத்தட்ட ஈர்த்து விட்ட பொருளாதாரக் கொள்கைகள் செயலற்றவையா கவும் ஆகிவிட்டன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் எளிதாக ஒருவரால் செய்யப்பட்ட ஒரு செயல், இப்போது அப்படி செய்ய முடியாததாகிவிட்டது. வளம் பொருந்திய ஒரு சமூகத்தில் உடனடிப் பணப் பட்டுவாடா இல்லாமல் எந்த பயம் செய்ய இயலாது. கிட்டத்தட்ட எல்லாவித அந்நியக் கொள்கைகளையும் எடுத்துக் கொள்ளக்கூ டிய அடிமைத்தனம் மிகுந்ததாக பொருளாதாரம் மாறி விட்டது. சிலர் "நாங்கள் அவர்களுடன் இணைந்து போக விரும்பவில்லை. ஆனால் அவர்களைப் பொரு ளாதார ரீதியில் சார்ந்திருக்கிறோம்' என்று சொல்வார் கள். இந்த நிலை அனைத்து நெறிமுறைகளையும் அழித்துவிட்டு மற்றெல்லா மனிதத்துவங்களையும் மீறச் செய்கின்றது. இது ஒரு நோய் போன்று பெருகி வளர்ந் துவிட்டது. இதற்கு பல வேர்களுண்டு. அவற்றுள் நன் றாகத் தெரிந்த ஒன்று போக்குவரத்து மற்றும் தகவல் தொடர்புத் துறைகளின் நவீன தொழில்நுட்ப வளர்ச்சி.

அதிவேகப் போக்குவரத்தும், உடனடித் தகவல் தொழில்நுட்பமும் சுதந்திரத்தின் புதிய பரிமாணத்தை

திறந்து விட்டிருப்பதாக சிலர் எண்ணுகின்றனர். இந்
தத் தொழில்நுட்ப வளர்ச்சி சுதந்திரத்தை அழிக்கும்படி
யாக இருப்பதை கவனிப்பதில்லை. இந்த தொழில்நுட்ப
வளர்ச்சிகளில் நாசகரமான பாதுகாப்பற்ற தன்மைக
ளுக்கு மாற்றாக மிக கவனமான நல்ல கொள்கைகள்
உருவாக்கப்படவில்லை என்றால் இவை அழிவைத்
தரும் என்பதை கவனிப்பதில்லை .

இப்போது இந்த நாசகரமான வளர்ச்சி பெரிய நாடு
களில் கடுமையான விளைவுகளை கண்கூடாக ஏற்ப
டுத்தியுள்ளன. ஏனெனில், எல்லைகள் அமைப்புகளாக
உள்ளன. ஒருவன் தன் பகுதியில் இருந்து எல்லை
தாண்டி அடுத்த பகுதிக்கு செல்ல எண்ணுவது பெரிய
முடிவாகும். கட்டு தளைகளற்ற ஒரு நிலை என்பது,
தீவிரமானதொரு நிலையாகும். இவற்றின் கடுமையான
விளைவுகளை பணக்கார நாடுகளிலும், ஏழை நாடுக
ளிலும் காண முடியும். அமெரிக்கா போன்ற செல்வந்த
நாடுகள் "மெகாபோலிஸ்" என்ற பெரு நகரங்களை
உருவாக்குகின்றன. கட்டு தளையற்ற, எங்கும் காலூன்
றவியலாத மக்களையும் பெருமளவில் உருவாக்குகின்
றன. இவர்களால் ஒரு இடத்தைக் காண முடியாத நிலை
தங்களுக்கென்று ஒரு இடத்தைக் காண பெருகிவருகி
றது. இது நிறைய குற்றச் செயல்கள்

நியமாதலையும், மன அழுத்தங்களையும், சமூக பிரச்சி
னைகளையும் நேரடியாக ஏற்படுத்துகிறது. ஏழ்மையான
நாடுகளில், இன்னும் குறிப்பாகச் சொல்ல வேண்டும்
என்றால் பெரிய ஏழை நாடுகளில் பெருமளவில் மக்
களை நகரங்களை நோக்கி இடம் பெயரச் செய்து,
வேலையில்லா திண்டாத்தை உருவாக்கி, ஊர்ப்புறங்க
ளில் செயல்தன்மையற்ற நிலை உருவாகி, பஞ்சம் ஏற்ப
டும் நிலையை உருவாக்குகிறது. இவற்றின் விளைவாக

இரட்டை சமூக நிலை உருவாகி அரசியலில் நிலையற்ற தன்மை ஏற்படும் சூழல் உருவாகிறது.

எடுத்துக்காட்டாக பெரு நாட்டைப் பற்றிப் பார்ப்போம். பெருவின் தலைநகரான லிமா 1920களில் 1,75,000 மக்கள் தொகையுடன் பசிபிக் கடற்கரையில் இருந்தது. இதன் மக்கள் தொகை 1970களில் மூன்று மில்லிய னாகிவிட்டது. அழகிய நகரான லிமா, இப்போது சேரி கள் நிறைந்து, ஏழ்மை தாண்டவமாடும் சமூகத்தைக் கொண்டு ஆன்டீஸ் மலைப் பகுதிவரை நீண்டுவிட்டது. இது மட்டுமல்ல, ஊர்ப்புறங்களிலிருந்து தினமும் ஆயி ரம் பேர் இந்நகரை நோக்கி வருகின்றனர். இந்த பிரச் சினையை என்ன செய்வது என்று எவருக்கும் தெரிய வில்லை.

சமூக வாழ்வு இங்கு சிதைந்து போய்விட்டது. ஊர்ப்புறங் களிலிருந்து வரும் மக்கள் கிடைக்கும் இடத்தில் மண் ணாலான குடிசைகளை அமைத்துக் கொண்டு, போலீ சாரின் அடிகளை வாங்கிக் கொண்டு வாழ்கிறார்கள். இந்த குழப்பமான சிக்கலான பிரச்சினையை எப்படித் தீர்ப்பதென்று எவருக்கும் தெரியவில்லை .

1864ல் பிஸ்மார்க் டென்மார்க்கின் சிறு பகுதியை இணைப்பதற்குப் பதிலாக, முழு டென்மார்க்கையும் இணைத்ததாக எண்ணிப் பாருங்கள். டேனிஷ் மக் கள் ஜெர்மனியின் சிறுபான்மை பழங்குடியினராகி, தங் கள் மொழியை காத்துக் கொள்ள போராடினர். ஜெர் மன் மொழி ஆட்சி மொழியாக இருந்ததால் இரண்டு மொழிகளையும் பேசினார்கள். தங்களை முழு ஜெர்மா னியர்களாக மாற்றிக் கொண்டால் மட்டுமே இரண்டாம் தரக்குடிமகன்களாக மாறுவதைத் தடுக்க முடியுமென்ற நிலைக்கு ஆளாயினர். ஜெர்மனிமயமான டானிஷ் மக் களால் தவிர்க்க முடியாத வளம் பொருந்தியவர்களாகி

விட்டால், கோபன்கேஹனின் நிலை எப்படி? அல்லது பெல்ஜியத்தை பிரான்ஸின் ஒரு பகுதியாக எண்ணிப் பாருங்கள். பிரஸ்ஸல்ஸின் நிலை ? எந்த முக்கியத்து வமும் இல்லாத ஒரு நகராக அது மாறிவிடும். ஜெர்ம னியின் ஒரு பகுதியாக டென்மார்க்கையும், பிரான்ஸின் ஒரு பகுதியாக பெல்ஜியத்தையும் கற்பனை செய்து பாருங்கள். ஒரு சுதந்திரப் போராட்டம் உடனடியாக வெடிக்கும். இந்த நாடென்று அழைக்கப்படாத நாடுகள் பொருளாதார ரீதியாக எழுச்சி பெற முடியாது என்பது பற்றி கடும் விவாதங்கள் நடைபெறும்.

சுதந்திரமான சிறிய நாடுகளின் பொருளாதாரம் பற்றி எப்படி ஒருவர் பேசக் கூடும்? ஒரு பிரச்சினையை பிரச்சி னையற்றது என்று எப்படி ஒருவர் வாதிடக் கூடும்? ஒரு நாடோ, பகுதியோ மீண்டும் வளர்ச்சி பெறும் என்பது பிரச்சனை இல்லை; மாறாக அந்த மக்கள் வளர்ச்சி பெறுவது என்பதே பிரச்சினை. மக்கள், உங்களை யும் என்னையும் போன்றவர்களே. தங்கள் சொந்தக் கால்களால் நின்று சம்பாதனை செய்ய முடியும் என் பதே பொருளாதார எழுச்சியாக இருக்கும். எழுச்சியோ வளர்ச்சியோ அற்ற மக்களை ஒரு பெரும் சமூகமாக் குவதன் மூலம் அவர்களை வளர்ச்சி பெறுபவர்களாக மாற்ற முடியாது. அதே போன்று வளர்ச்சியுடன் உள்ள பெரிய சமூகத்தினை சிறிது சிறிதாக உடைப்பதன் மூலம் அவர்களை வளர்ச்சியற்றவர்களாகச் செய்ய முடியாது. இவை தெளிவாகத் தெரிந்தவைகளே. சிலர் கேட்கி றார்கள், "செல்வ வளம் நிரம்பிய ஒரு மாகாணத்தையும், ஏழ்மையான பல மாகாணங்களையும்

கொண்டுள்ள ஒரு நாட்டிலிருந்து செல்வவளம் உள்ள. மாகாணம் பிரிந்து போனால் என்னவாகும்? பெரிதாக ஒன்றும் நடந்து விடாது என்பதே பதிலாக இருக்கும்.

செல்வ வளம் பொருந்திய மாகாணம் செல்வ வளத்து டனும், வறிய மாகாணம் வறியதாக இருக்கும். ஆனால், பிரிந்து போவதற்கு முன்னால் வரை செல்வம் பொருந் திய மாகாணம் வறிய மாகாணங்களுக்கு பொருளாதார ரீதியில் உதவிக் கொண்டிருந்திருந்தால் என்னவாகும் . ஆம், இந்த நிலையில் பொருளாதார உதவிகள் நின்று போகும். ஆனால் செல்வ வளம் பொருந்தியவை வறிய நாடுகளுக்கு உதவுதல் என்பது அபூர்வம். அவை வறிய நாடுகளை சுரண்டவே செய்யும். இந்த சுரண்டலை அவை நேரடியாக செய்யாது. சிறிய அளவில் ஏதே னும் உதவிவிட்டு மறைமுகமாக பல்வேறு வகைகளில் சுரண்டும்.

ஆனால் உண்மை நிலை வேறானது. வறிய மாகாணங் கள் செல்வ வளம் மிகுந்த மாகாணங்களிடம் இருந்து பிரிந்து போகவே விரும்பும். பணக்கார மாகாணங்கள் ஏழை மாகாணங்களை தங்களுடன் வைத்துக் கொள் ளவே விரும்பும். ஏனெனில் ஏழைகளை தங்களது எல் லைக் குள்ளேயே சுரண்டுவதென்பது, தங்களது எல் லைகளுக்கு வெளியே உள்ள ஏழைகளைச் சுரண்டு வதைவிட எளிது என்பது அவைகளுக்குத் தெரியும். ஒரு ஏழை மாகாணம் தனக்கு அளிக்கப்படும் பொருளா தார உதவிகளை இழக்கத் துணிந்து, தனியாகப் போக வேண்டும் என்று கோரினால், என்ன மனநிலை ஒருவ ருக்கு உருவாகும்?.

இதனை நாம் தீர்மானிக்க வேண்டியதில்லை. ஆனால் இதனைப்பற்றி நாம் என்ன நினைக்க வேண்டும். அது பாராட்டப் படவேண்டிய ஒரு கோரிக்கை இல்லையா முழு சுதந்திரமான, தங்களது சொந்தக்காலில் நிற்க கூடி யவர்களான மக்களை நாம் விரும்பவில்லையா மீண்

டும் இது பிரச்சினையற்ற ஒன்றாகி விடுகிறது. ஆகை யால் வளர்ச்சியுறுவது என்பதில் எந்தப் பிரச்சினையும் இல்லை. ஒரு நாடு உலகம் முழுமைக்கும் ஏற்றுமதி செய்யவும், உலகம் முழுவதுமிருந்து இறக்குமதி செய்ய வும் விரும்புமேயானல் அதற்காக முழு உலகையும் தன் னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது கிடை யாது.

பெரிய அளவிலான உட்புறமயமான சந்தைக்கு என்ன அவசியம்? இங்கும் இந்த பெரிய அளவு என்பது அரசியல் எல்லைகள் என்பதிலிருந்தே பெறப்பட்டது. வளமான சந்தை வறிய சந்தையை விட சிறந்தது என் பதை சொல்லத் தேவையில்லை, சந்தை அரசியல் எல் லைகளுக்குள் இருந்தாலும், வெளியே இருந்தாலும். ஜெர்மனியின் வோல்க்ஸ்வாகன் வண்டிகளை வளம் மிகுந்த அமெரிக்க சந்தைக்கு, ஏற்றுமதி செய்ய அமெ ரிக்காவுடன் இணைந்த பிறகே ஜெர்மனியால் செய்ய முடிந்ததென்று சொல்லப்படுகிறது. ஆனால் பணக்கார மாகாணங்களுடன் இணைந்த ஒரு ஏழை மாகாணத்தி னால் செய்ய முடியுமா என்பது கேள்விக்குரியதுதான். ஏன்? ஏனெனில், ஸ்திரமற்ற கட்டுதளைகளற்ற ஒரு சமூகத்தில் சமான மின்மை என்பது மிகவும் அதிகம். வெற்றியைப் போன்று எதுவும் வெற்றி பெறுவதில்லை. தேங்கி நிற்பதைப் போன்று எதுவும் தேங்கி நிற்பதில்லை. வெற்றிகரமான ஒரு மாகாணம் வெற்றிகளற்ற, பாதுகாப் பற்ற ஏழை மாகாணங்களை உறிஞ்சுகின்றது. ஏழை மாகாணங்கள் ஒன்று ஏழைகளாகவே இருக்க வேண் டும் அல்லது பணக்கார மாகாணங்களுடன் சேர்ந்து கொள்ள வேண்டும். இதனை விட்டால் ஏழை மாகா ணங்களுக்கு வேறு வழியில்லை; கெதியில்லை.

20-ம் நூற்றாண்டின் இறுதிப் பாதியில் பூகோள ரீதியாக பரவிக்கிடந்த மக்கள் தொகை சம்பந்தமான பிராந் தியத்தன்மை பெரும் பிரச்சினைகளில் ஒன்று. பிராந் தியத்தன்மை பிராந்தியங்களை வளர்த்து ஒரே நாட் டிற்குள் வைப்பதேயல்லாமல், நிறையப் பகுதிகளைச் சேர்த்துத் தடையில்லா வர்த்தகத்தை உண்டாக்குவ தல்ல. சிறிய நாடுகளின் சுதந்திர வேட்கை சுயாட்சி என்பது பிராந்திய வளர்ச்சிக்கான பகுத்தறிவோடு கூடிய அணுகு முறைதான். ஏழை நாடுகளின் தலைநகரங் களைத் தாண்டி அந்த பிராந்தியம் முழுவதும், மக் கள் உள்ள அனைத்து இடங்களிலும் வெற்றிகரமான வளர்ச்சி இல்லை எனில் ஏழைகளுக்கு எந்த நம்பிக் கையுமில்லை.
இதற்கான முயற்சிகள் செய்யப்படவில்லை என்றால், அந்த ஏழைமக்கள் ஏழ்மையிலே இருக்க வேண்டியது தான் அல்லது இன்னும் துன்பங்களைத் தரக்கூடிய நக ரங்களை நோக்கி அவர்கள் இடம் பெயர வேண்டியது தான். தற்காலத்தைய பொருளாதாரம் இந்த ஏழை மக் களை முன்னேற்றுவதற்கு ஒன்றுமே செய்யவில்லை.
இந்தப் பொருளாதாரக் கொள்கைகள் செல்வவள மும், வலிமையும் பெற்றவர்களை மேலும் செல்வவள மும் வலிமையும் மிக்கவர்களாக்குகிறது என்பது சந்தே கத்திற்கிடமின்றி நிரூபணமாகிறது. தலைநகரங்களுக்கு அருகிலேயோ அல்லது பெரு நகரங்களுக்கு அருகி லேயோ இருந்தால் மட்டுமே மக்களுக்கு பலனளிக் கிறது என்பதையும், ஊர்ப்புறங்களில் இருந்தால் பல னளிப்பதில்லை என்பதையும் இந்தக் கொள்கைகள் நிரூபிக்கின்றன. இந்தப் பொருளாதாரக் கொள்கை கள் மிகப் பெரிய திட்டங்களே சிறிய திட்டங்களை விட பொருளாதார ரீதியில் பலனளிப் பவை என்று

நிரூபிக்கின்றன. இந்தப் பொருளாதாரக் கொள்கைகள் அதிக அளவில் தொழிலாளர்களைப் பணியில் ஈடுபடுத்துவதைவிட அதிக முதலீடுகள் செய்வதையே தேர்ந்தெடுக்கின்றன. இன்றைய பொருளாதார சூழலில் பயன்படுத்தப்படும் பொருளாதார நுண்கணிதம், மனிதர்களை தொழிற்சாலைகளில் பணியிலமர்த்துவதை விடவும் இயந்திரங்களையே பயன்படுத்தும்படி தொழிலதிபர்களை நிர்பந்தம் செய்கின்றது. ஏனெனில் இயந்திரங்கள் தவறு செய்வதில்லை என்ற கோட்பாட்டின்படி அப்படி

நிர்பந்திக்கின்றது. எனவேதான் தானியங்கித் தொழில் நுட்பத்திற்கும், பெரிய திட்டங்களுக்கும் பெரிய அளவில் முயற்சிகள் நடைபெறுகின்றன. இதன் பொருள், தன்னிடம் தொழில் திறமையைத் தவிர வேறெதனையும் விற்க இயலாத நிலையிலுள்ளவர்கள் பலமற்ற நிலையில் பேரம் பேசக் கூடிய நிலையில் இருத்தி வைக்கப்படுகிறார்கள். பொருளாதாரத்துறையில் அறிவார்ந்த விஷயமாக போதிக்கப்படுவது, உண்மையிலேயே வளர்ச்சி தேவைப்படும் ஏழை மக்களை நசுக்கி சீரழிக்கும்படியானதாக இருக்கிறது. ராட்சதத் தன்மை மற்றும் தானியங்கி இயந்திரப் பயன்பாடு ஆகியவை 19-ஆம் நூற்றாண்டுச் சூழலின் எச்சங்களாகும். 19-ஆம் நூற்றாண்டின் சிந்தனைகள் இன்றைய பிரச்சினைகள் எதனையும் தீர்க்கும் சக்தியற்றவையாக உள்ளன. முற்றும் முழுவதுமான ஒரு அமைப்பு முறை தேவைப்படுகிறது. அது மக்களை கவனத்தில் கொண்டதாக இருக்க வேண்டுமேயன்றி பொருள்களை அல்ல. பொருள்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் இதனை இப்படியான வாக்கியமாகச் சொல்லலாம்.

'பெரிய அளவு உற்பத்தி என்பதைவிட, பெரிய அளவு மக்களால் உற்பத்தி" என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்.

19-ஆம் நூற்றாண்டில் சாத்தியமில்லாதது இப்போது சாத்தியம். 19-ஆம் நூற்றாண்டின் புறந்தள்ளப்பட்டது, உண்மையில் நம்பமுடியாத அளவிற்குத் தற்போது அவசியமாக உள்ளது. அதாவது, வறுமைக்கும், மனிதர்களைத் தரம் தாழ்த்துவதற்கும் எதிரான போரில் நமது வலிமை வாய்ந்த தொழில்நுட்ப அறிவியல் அறிவை மக்களுடன், தனி நபர்களுடன், குடும்பங்களுடன், சிறு குழுக்களுடன் நெருங்கி மிகக் கவனமாகப் பயன்படுத்த வேண்டும். இந்த செயல்பாடு நாடுகளுடனோ, அநாமதேய குழுமங்களுடனோ இருக்கக்கூடாது. மக்களுடனான இந்த நெருக்கத்தை ஏற்படுத்த அரசியல் ரீதியாகவும், அமைப்பு ரீதியாகவும் ஒரு நல்ல முறை தேவைப்படுகிறது.

மக்கள் ஆட்சி, சுதந்திரம், மனித மாண்பு, வாழ்க்கைத் தரம், தன்னை உணர்தல், நிறைவு ஆகியவற்றின் பொருள்

என்ன? இவை பொருள் சம்பந்தப்பட்டதா அல்லது மனிதர்கள் சம்பந்தப்பட்டதா? நிச்சயமாக மனிதர்களுடன் சம்பந்தமுடையதுதான். ஆனால் மக்கள் குழுக்களாகவே புரிந்துணர்வுடன் இருக்க முடியும். ஆகவே பல்வகை சிறுதொழில் பகுதிகளை திறம்பட நடத்தக் கூடிய முறையான சரியான ஒரு அமைப்பை சிந்திக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். பொருளாதார சிந்தனை அதனைப் பயனற்றது என்று சொல்லிவிட முடியாததாக தேசிய வருவாய், வளர்ச்சி வேகம், மூலதன-லாப விகிதம், முதலீடு- உற்பத்தி ஆய்வு, தொழிலாளர்கள் இடம்பெயர்வு, மூலதனக் குவிப்பு ஆகியவற்றைத்

தாண்டி செயல்படக் கூடியதாக, மனிதர்களின் வறுமை, விரக்தி, அந்நியமாதல், அச்சம், உடைந்து போதல், குற்றம், தப்பித்தல், அழுத்தம், அசுத்தம், நெருக்கடி மற்றும் ஆன்ம அழிவு ஆகியவற்றுடன் நெருக்கமான தாக இருக்க வேண்டும். இப்போதைய பொருளாதா ரக் கொள்கையை ஒழித்து, புதியதாக தொடங்குவோம். தொடங்குவதற்கு 'நல்ல நேரம்' வந்து விட்டது என்பதற் குப் போதுமான அறிகுறி இன்னும் தோன்றவில்லையா?

:::::

## கல்விதான் மாபெரும் செல்வம்!

பூமியில் ஒவ்வொரு பகுதியிலும் வாழ்ந்து பல்கிப்பெ ருகிய மனிதன், கலாச்சாரங்களை உருவாக்கினான். எல்லா இடங்களிலும் எல்லா காலங்களிலும் தனது வாழ்க்கையின் அத்தியாவசியத்தேவைகளைக் கண்ட றிந்தான். அவற்றில் கொஞ்சம் மீதம் வைத்திருக்க வும் செய்தான். கலாச்சாரங்கள் உருவாக்கப்பட்டன. செழித்து வளர்ந்தன. பெரும்பாலானவை அழிந்து போயின. அங்கெல்லாம் ஏதேனும் மூலாதாரங்கள் இல் லாது போயிருக்கும் என்று நம்மால் சொல்ல முடியும். பல கட்டங்களில் புதிய பண்பாடுகள் அதே இடங்களில் வளர்ந்தன. அங்கு முன்பிருந்த நாகரிகங்கள் வெறும் மூலாதாரப் பொருட்களின் இல்லாமையால் அழிந்து போயின என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அப்படி என்றால் அந்த மூலாதாரப் பொருட்கள் எப்படி மீண்டும் உண்டாகி இருக்கக் கூடும்?

வரலாறு முழுக்க, ஏன் தற்காலத்திலும் கூட, முதன் மையான மூலாதாரம் இயற்கை அல்ல, மனிதன் தான். மனிதனின் சிந்தனையிலிருந்தே எல்லாவித பொருளா தார முன்னேற்றங்களும் தோன்றின. ஒரு துறையில் மட்டுமல்லாது எல்லா துறைகளிலும் துணிச்சலான, புதிய கண்டு பிடித்தல்களுடன் கூடிய ஆக்கப்பூர்வமான செயல்பாடுகள் உடனடியாக வெடித்துக் கிளம்பின.

எங்கிருந்து முதலில் இது தோன்றியதென்று எவராலும் சொல்ல முடியாமலிருக்கலாம். ஆனால் அது தன்னை பல்வேறுவகைக் கற்றலின் மூலம் வளர்த்து வலிமைப் படுத்திக் கொண்டது. கல்வியின் மூலம் வலிமைப் படுத் திக்கொண்டது என்று வேறு விதமாகச் சொல்லலாம். ஆகையால் சரியாகச் சொல்லப் போனால், கல்விதான் எல்லா மூலாதாரங்களிலும் முதன்மையானது.

மேற்கத்தியப் பண்பாடு நிரந்தரமான நெருக்கடியில் இருக்கிறதென்றால், அதன் கல்வியமைப்பில் தவறுகள் இருக்கலாம். இப்படிச் சொல்லுதல் அவற்றிற்கிடையே தொடர்புகள் இருப்பதால்தான். எந்தப் பண்பாடும் அதிக ஆற்றலையும், மூலாதாரங்களையும் முறையான கல்விக்கு அர்ப்பணிக்கவில்லை என்று என்னால் நிச் சயமாகச் சொல்ல முடியும். எதனை நாம் நம்பாவிட்டா லும், அனைத்திற்குமான திறவுகோல் கல்வி என்று நம்ப முடியும்; நம்ப வேண்டும். உண்மையில் நமது அனைத்து பிரச்சினைகளின் பூர்வீக உரிமையாளர் என்று நாம் நடத்தும் அளவிற்கு கல்வியின் மீதான நம்பிக்கை மிக வலிமையானது. அணு சக்திப் பயன்பாடு அதிக அபா யங்களைக் கொண்டு வந்தபோதும், மரபுப் பொறியியல் தவறாகப் பயன்படுத்தப்பட்டாலும், வர்த்தகமயமாக்கல் புதிய நெருக்கடிகளைத் தோற்றுவித்தாலும் இவற்றிற் கெல்லாம் இன்னும், இன்னும் சிந்திக்க தூண்டும் சிறந்த

அதிக கல்வியே தீர்வாகும். நவீன வாழ்க்கைமுறை சிக்கலாகிக் கொண்டே இருக்கிறது. இதற்குப் பொருள் என்னவெனில், ஒவ்வொருவரும் நன்கு கல்வி கற்க வேண்டும் என்பதே எதிர்பார்க்கப்பட்டது. அரசியல்வாதிகளையும், நிர்வாகிகளையும் அறிவியல் அறிஞர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ளும்படி பயிற்சி கொடுக்கும்போது, இரு துருவங்களாக உள்ள இரண்டு குழுக்களுக்கும் இடையே இணக்கமான நிலை உருவாகும்.

தற்காலத்தைய கல்விக் கருத்துகள் பொதுமக்களால், அரசியல்வாதிகளால், நிர்வாகிகளால் பயன்படுத்தப்படுவதில்லை என்பது கசப்பான உண்மை . எனவே அறிவியல் அறிஞர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைப் புரிந்து

கொள்ளும் அளவுக்கேனும் அவர்களுக்குக் கல்வி கற்பிக் கப்பட வேண்டும். தங்களது அனைத்து உழைப்பும் நடு நிலைமையானது என்று அறிவியலறிஞர்கள் சளைக்காது கூறி வருகிறார்கள். அவர்களது கண்டுபிடிப்புகள் மானுடத்திற்கு வலிமை சேர்த்தாலும் அல்லது அதனை அழித்தாலும், அது அந்தக் கண்டுபிடிப்புகளை எப்படிப் பயன் படுத்தினோம் என்பதைப் பொறுத்தது என்றும் அறிவியலறிஞர்கள் கூறுகிறார்கள். அவை எப்படிப் பயன்படுத்தப்படவேண்டும் என்று யார் முடிவு செய்வது?

அறிவியல் தொழில் நுட்பங்களின் வளர்ச்சியால் உண்டாகும் பிரச்சினைகளை எதிர்கொள்ளும்படி கல்வியின் சக்தி மீது அதிக அளவில் சார்ந்திருந்தால் சார்லஸ் பிரபு சொன்னதை விட சற்று அதிகமாகவே கல்வியைப் பற்றி சொல்லலாம். அறிவியலும் பொறியியலும் "தெரிந்து கொள்ளுதல்- புரிந்து கொள்ளுதல்" என்பதை உரு

வாக்குகின்றன. இது ஒரு முற்றுப் பெறாத வாக்கியம். நிக ழக்கூடியது என உள்ள ஒன்றை நிகழும் உண்மை என்ற ஒன்றாக்கி மனிதனுக்கு பலனளிக்கும்படி கல்வி உத வுமா?

வாழ்க்கையுடன் செயல்பட வேண்டிய கருத்துக்களின் மதிப்புகளை பரப்ப வேண்டியதே கல்வி செய்ய வேண் டிய முதலும் முக்கியமுமான செயலாகும். தெரிதலும், புரிதலும் பரப்பவேண்டும். ஆனால் அது இரண்டாவ தாகச் செய்யப்பட வேண்டியதாகும். தெரிதலும் புரிதலு மான அறிவு என்ன செய்ய வேண்டும் என்று அறியா தவர்களிடத்தில் செல்லக்கூடாது. நமக்கு போதிய அறி வியல் தொழில்நுட்ப அறிவு இல்லாமையால், தற்போது சிறிய சந்தேகம் இருக்கலாம். எல்லா அறிவும் எல் லோருடைய கைகளுக்கும் போகும் போது நாசகரமான விளைவுகள் ஏற்படக்கூடும். அதிக புத்தியை உருவாக் கும் அதிகக் கல்வி இந்த கேட்டிலிருந்து நம்மைத் தடுக் கக்கூடும்.

அறிவியலின் சாரம் என்பது, மதிப்புகளை பரவச் செய் வதுதான். ஆனால் அந்த மதிப்புகள் நமது சொந்தமா னதாக, மனதிற்குள் ஊறியதாக இல்லை எனில்,வாழ்க் கைப் பாதையை தேர்ந்தெடுக்க அந்த உதவாது. இதற் குப் பொருள் என்னவெனில் வெறும் சூத்திரங்களோ அல்லது பிடிவாதம் கொண்ட வாக்கியங்களோ அல்ல. அதற்கும் மேலானவை மதிப்புகளுடனே நாம் சிந்திக்க, உணர வேண்டு. ஒரு விஷயத்தை நாம் பார்ப்பது, வெளிப்படுத்துவது ; உலகை அனுபவிப்பது ஆகிய வற்றிற்கு அந்த மதிப்பீடு களே கருவியாக இருக்க வேண்டும். நாம் சிந்திக்கும் போது, வெறுமனே சிந்திப் பதில்லை. கருத்துக்களை சிந்திக்கிறோம். நமது மனம் வெறுமையான ஒன்றல்ல, மாறாக பெரும் தகவல்க

ளைக் கொண்ட களஞ்சியம். நம் மனதில் நிறையத் தகவல்கள் இருப்பதனால்தான் நாம் ஒன்றைப் பற்றிய தகவல்களைக் கொண்டு சிந்திக்க முடிகிறது. சிறு மற்றும் விடலைப் பருவங்களில் நாம் நமது முன்னோர்களின் வாரிசுகள் போலவே சிந்திக்கும் இருண்ட காலம். அதன் பின்னர் நாம் நமது பழையனவற்றை படிப்படியாக சிந்தித்து சரிப்படுத்தக் கற்கிறோம்.

முதலாவதாக, மொழி. ஒவ்வொரு சொல்லும் ஒரு கருத்து. நமது இளமைக் காலங்களில் ஆங்கிலம் நமது மொழியானால், சீன, ரஷ்ய, ஜெர்மானிய மொழிகளில் உள்ளனவற்றைவிட முற்றிலும் வேறான கருத்துக்களைக் கொண்டிருப்போம். வார்த்தைகளுக்கு அடுத்தபடியாக இலக்கணம்.

எல்லா தத்துவவியலாளர்களும், ஏனையவர்களும் சிந்தனை மற்றும் கவனித்தலின் விளைவான கருத்துக்கள் மீது மிகுந்த கவனம் செலுத்தினர். ஆனால் நவீன காலங்களில் கருத்துக்கள் பற்றிய ஆய்வுக்கு மிகச் சிறிய அளவு கவனமே செலுத்தப்படுகிறது. அனுபவங்கள் மற்றும் தெளிவான சிந்தனைகளின் அடிப்படையில் சிறிய எளிய கருத்துக்களை விட்டுவிடலாம். ஆனால், பெரிய, வலுவான, உலகம் முழுவதற்குமான அல்லது நுட்பமான கருத்துக்களை எளிதாக மாற்றிக் கொள்ள முடியாமல் போகலாம். கண்களால் ஒன்றைப் பார்ப்பதன் மூலம் ஒன்றின் உள்ளமைப்பை எப்படிப் புரிந்து கொள்ள முடியாதோ அப்படியே நுண்ணிய கருத்துக்களைப் புரிந்து கொள்வதும் இயலாத ஒன்று. அக்கருத்துக்கள் கருவிகளாகவே உள்ளதால் அவற்றை அறிந்து கொள்ளுதல் பெரும்பாலும் கடினமே. அவற்றை ஒருவர் அறிந்து கொண்டாலும் கூட, சாதாரண அனுபவ அறிவுகளின்

அடிப்படையில் அவற்றைக் குறித்து ஒரு முடிவுக்கு வருதல் இயலாது.

தாங்கள் என்ன செய்கிறோம் என அரியாமல் நிலையான கருத்துக்களை தங்களின் மனங்களில் சிலர் கொண்டிருப்பதை நாம் பார்த்திருக்கிறோம். அவை சரியான முடிவுகளின்படி அவர்களிடம் உருவாகியிருக்கவில்லை என்பதால் அவற்றை நாம் தவறான எண்ணம் என்று கூறுகிறோம். தவறான மனிதர்கள் கொண்டிருக்கும் தவறான கருத்துக்களையே அப்படி நாம் அழைக்கிறோம். அவர்களில் சிலர் வார்த்தைகள் அல்லது இலக்கணங்களில் பிழை கொண்டிருப்போரைப் போன்றிருப்பதால் அவர்களது கருத்துக்களை கணக்கில் எடுத்துக் கொள்ள முடியாது. சிலர் நிச்சயமாக தவறான எண்ணங்களைக் கொண்டிருப்பதில்லை; மாறாக படிப்படியான சிந்தித்து முடிவெடுத்தலின் மூலமே அவர்கள் அந்த எண்ணங்களைக் கொண்டிருக்கிறார்கள். மேலும் சிலர் புரிந்து கொள்ளக் கடினமான உணர்ந்து கொண்ட யூகங்கள் அல்லது முன்னரே அனுமானித்துக் கொண்ட கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்கள்.

எனவேதான் முன்னர் இருந்த கருத்துக்களின்படியே தற்போதைய சூழ்நிலைகளுக்கு நாம் சிந்திக்கிறோம் என்று நான் கூறுகிறேன். ஒரு அரசியல் சூழ்நிலை நிலவுகிறது என்றால், முன்னர் நம்மிடமிருந்த கருத்துக்களின் அடிப்படையிலேயே அதனைக் குறித்து சிந்திக்கிறோம். எல்லாவற்றிலும் அப்படியே. சில கருத்துக்கள் மதிப்பின் அடிப்படையிலானவை. அவற்றை நாம் நமது நெறிமுறைகளின் மதிப்புகளின் அடிப்படையிலேயே அதன் ஒளியில்தான் சிந்திக்கின்றோம்.

நமது மனங்களில் முன்பே நிறைந்திருக்கும் கருத்துக்களின்படியே நாம் சிந்திக்கின்றோம். இதை வெளிப்ப

டுத்துகிறோம், உலகை உணர்கின்றோம். பலவீனமான, சிறிய, அற்ப அறிவுடனான, முரண்பாடுகளுடன் இருந் தால், வாழ்க்கை சுவராஸ்யமின்றி, கேவலமான, குழப் பம் நிறைந்ததும் இருக்கும். இந்த வெறுமையை சகிப் பது கடினம விடும். மனங்களின் வெற்றிடங்களை சில பெரிய. அற்புதமான கருத்துக்களுடன், அனைத்தை யும் ஒளியூட்டக்கூடியதாகத் தோன்றும், வாழ்க்கைக்குப் பொருளும் பயனும் தரக்கூடிய சில பெரிய, அற்புதமான கருத்துக்களைக் கொண்டு நிரப்பலாம். முரண்படுவ தற்கு எந்தப் பெரிய ஊக்கமும் தேவையில்லை என்பதே சமகாலத்தைய அபாயங்களில் ஒன்று.

கல்வி என்பது பயிற்சியை விட சற்று அதிகமானது என்றும், உண்மைகளை அறிந்து கொள்வதைவிட சற்று கூடுதலானது என்றும், விலகிச் செல்வதைவிட சற்று அதிகமானது என்றும் சிலர் சிந்திக்கின்றனர். அவர்க ளுக்கு என்ன தேவை என்பதை நெறிப்படுத்திக் கொள் ளத் தெரியாதவர்களாக அவர்களிருக்கலாம். அவர்க ளால் புரிந்து கொள்ளக் கூடிய, வாழ்க்கைக்கான கல் வியாக அதனை அவர்கள் எண்ணக்கூடும் என்று நான் நினைக்கிறேன். ஒரு விஷயம் புரிகிறது எனில் அதில் நீங்கள் பங்கு வகிக்கிறீர்கள், ஒரு விஷயம் புரியவில்லை எனில் அதிலிருந்து நீங்கள் பிரிந்திருக்கறீர்கள் என்ற பொருள். 'எனக்குத் தெரியாது' என்று தாங்கள் சந்திக் கும் உலகைப் புரிந்து கொள்ளாதவர்கள் சொல்லும் வார்த்தையை நீங்கள் கேட்டிருக்கலாம். வலிமையான கருத்துக்களுடன் கூடிய ஒன்றை மனதில் கொள்ளா தவர்களுக்கு அது குழப்பம் நிறைந்த ஒன்றாகவும், ஒன்றுக்கொன்று முரணான தத்துவ மூட்டைகளைக் கொண்டதாகவும், பொருளற்ற நிகழ்வு களுடனானதா கத் தோன்றும். அப்படிப்பட்ட மனிதன் வரைபடங்கள்,

குறியீடுகள், பண்பாடுகள் அற்ற ஒரு விந்தையான பகுதியில் நிற்பவனைப் போல இருப்பான்.

அவனுக்கு எந்த ஒன்றும் பொருளுள்ளதல்ல, எந்த ஒன்றும் அவனை சுவாரஸ்யப்படுத்திவிடாது. எதனையும் தனக்காகப் புரிந்து கொள்ளும்படி அவன் ஆக்கிக் கொள்வதில்லை .

அனைத்துவிதமான மரபு சார்ந்த தத்துவங்களும் வாழ்வதற்கு முறையான கருத்துக்களை உருவாக்கிடவும், வெளிப்படுத்திடுவதற்குமான முயற்சியே ஆகும். பேராசிரியர் குன், "கிரேக்கவியலில் தத்துவம் என்பது, மனிதன் தான் வாழ தரப்பட்டுள்ள இடத்திலிருந்து மனித மன வெளிப்பாடுகளை உலகுடன் புரிந்து கொள்ளும்படி தொடர்புபடுத்த முனைந்த ஒரு முயற்சி" என்கிறார். மத்திய கால கிறிஸ்தவம், முழுமையான முரண்களற்ற அதிசயக்கக் கூடிய கருத்துக்களைத் தந்தது. அதாவது, மனிதன் பற்றிய, பிரபஞ்சம் பற்றிய, பிரபஞ்சத்தில் மனிதனின் நிலை குறித்த தகவல்களைத் தந்தது. இருந்தபோதும், அந்த முறை உடைந்து, சிதறியது. அதன் விளைவாக பிரிவும் குழப்ப மும் நிலவியது.

கீர்கார்ட் இப்படிப்பதிவு செய்கிறார்:"நிலத்தில் தனது விரலைப் பதித்து அது என்ன வகை நிலம் என கூறுவதற்கு முயல்கிறான் ஒருவன்; நான் வாழ்க்கைக்குள் இருத்தலுக்குள் என் விரலைப் பதிக்கிறேன். ஒரு மணமுமில்லை. நான் எங்கே இருக்கிறேன்? நான் யார்? நான் எப்படி இங்கே வந்தேன்? உலகம் என்றழைக்கப்படும் இது என்ன? உலகம் என்பதன் பொருள் என்ன? யார் என்னை கவர்ந்திழுத்து இங்கே விட்டது? எப்படி நான் இந்த உலகிற்கு வந்தேன்? ஏன் என்னிடம் ஆலோசிக்கவில்லை ?... நான் ஒரு கடத்தல்காரனால், ஆன்மாக்களின் வியாபாரியால் வாங்கப்பட்டவன் போன்றவனா?

உண்மை என்று அவர்களால் அழைக்கப்படும் இந்நிறு வனத்தை எப்படி நான் விரும்புவேன்? இதில் எனக்கு ஏன் விருப்பம் இருக்க வேண்டும்? இது தன்னார்வ அமைப்பா? இதில் நான் பங்கெடுத்தே தீர வேண் டும் என நிர்பந்திக்கப்பட்டால், எங்கே இதன் இயக்குநர் எனது கோரிக்கைகள் நிறைவேறாது போகுமா?"

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் "இந்த முழு உலகமும் அணுக் களின் எதிர்பார் மோதலினால் உருவானது. "விவாதத் திற்கு அப்ப பட்டதாக இருந்தாலும், சரியானதென்ப தற்கு மிக அருகில் இல்லாவிட்டாலும் இதனை எதிர்க் கும் எந்தத் தத்துவம் நிலைத்து நிற்க முடியாது. அடிப் படையாக அச்சத்தின் மீதே ஆன்மாக்களின் இருத்தல் கட்டப் பட்டுள்ளது" என ரஸ்ஸல் கூறினார். "உண்மை யில் பயங்கரமான நிலையில்தான் நாம் இருக்கிறோம். இந்த அருமையான பிரபஞ்சத்தில் நாம் இருப்பதன் அடையாளம் மிக அரிதாகவே உள்ளது. நமது இருத்த லின் எந்த ஒரு முக்கியத்துவமும் உள்ள அடையாளமே இல்லாது இந்த அருமையான உலகில் நாம் இருக்கின் றோம்" என வானியல் நிபுணர் சர் ஃபிரெட் ஹோய்ல் கூறியுள்ளார்.

தனிமை, நம்பிக்கையின்மை, வெறுமையுடன் போராட் டம், எல்லோரும் சுயநலமிகள் என உணர்தல், மறு தலிப்பு ஆகியவை தற்காலத்தைய இருத்தலியல் தத் துவத்திலும், பல நூல்களிலும் காணக் கிடைப்பவை களை பிரிந்து போதல் தருகிறது. அல்லது மூடத்தன மான கற்பித்தலை கண் மூடித்தனமாகப் பின்பற்றுவதாக உடனடியாக மாறிவிடுகிறது. அந்த மூடத்தனமான கற் பித்தல் உண்மையை மிக மலிவாக எளிமையாக்கி எல் லாக் கேள்விகளுக்கும் பதிலிறுப்பது போலத் தோன்றும். இந்த பிரிந்து சிதைந்து போதலின் காரணம் என்ன?

அறிவியல் எப்போதும் வெற்றிகரமான ஒன்றாய் இருப் பது இல்லை . சுற்றுப்புறத்தின் மீது மனிதனின் ஆற் றல் முழுமையானதாய் இருந்ததில்லை. அதே போல அவனது வளர்ச்சியும் அதிவேகமாய் இருந்ததில்லை. கீர்க்கார்ட் போன்ற மத சிந்தனையாளர்களாலோ அல் லது
ரஸ்ஸல், ஹோய்ல் போல அறிவியல் கணித அறிஞர் களாலோ மட்டுமோ அல்லது 'தெரிதல் புரிதல்' என்ற நிலை பின்தங்கிப் போனதாலோ மட்டுமாக இது இருக்க முடியாது. பலவற்றை எப்படிச் செய்ய வேண்டும் என்று நமக்குத் தெரியும். ஆனால் என்ன செய்ய வேண்டு மென்று தெரியுமா? ஓர்டேகா ஒய் கேஸட் ,
"கருத்துக்கள் இன்றி மனிதனாக நம்மால் வாழ முடி யாது. நாம் என்ன செய்கிறோம் என்பது அவற்றின் அடிப் படையிலேயே உள்ளது. வாழ்க்கை என்பது கிட்டத் தட்ட ஒன்றைச் செய்வதற்குப் பதிலாக வேறொன்றைச் செய்வது அல்ல" என்கிறார்.
எனில் கல்வி என்பது என்ன? கருத்துக்களைப் பரப்பி இரண்டில் ஒன்றை மனிதன் தேர்ந்தெடுக்கும்படி செய் வதா? அல்லது ஓர்டேகா சொன்னதைப் போல், "அர்த் தமற்ற சோகத்திற்கு மேலான வாழ்க்கையை வாழ்வதா அல்லது சுய அவமானத்துடன் வாழ்வதா?"
உதாரணமாக, வெப்ப இயக்கவியலின் இரண்டாம் விதி இந்த விஷயத்தில் எப்படி நமக்கு உதவ முடியும்? சார் லஸ் பிரபு "அறிவியலறிஞர்களின் இலக்கியப் படிப் புக் குறையைக் கூறி இலக்கியவாதிகள் வருத்தப்ப டும்போது அந்த இலக்கியவாதிகளுக்குள் எத்தனை பேருக்கு வெப்ப இயக்கவியலின் இரண்டாம் விதியை தெரியும்? என்று கேட்கிறார். இந்த கேள்விக்கு எந்த பதிலும் இல்லை எனவும் அவர் கூறுகிறார். அதனைப்

போன்றே இன்னொரு கேள்வியைக் கேட்கிறேன். ஷேக்ஸ்பியரின் நூல்களில் எதையாவதை படித்திருக் கிறீர்களா?" என்றும் அறிவியலறிஞர்களைக் கேட்கிறார். இந்த விஷயம் நமது முழுமையான பண்பாட்டையுமே கேள்விக்குள்ளாக்குகிறது. நம்மிடம் இருக்கும் கருத் துக் கருவிப் பெட்டி மூலமாக அதைப் பயன்படுத்தி, அத னுடன் நாம் உலகை உணர்ந்து வெளிப்படுத்துகிறோம் என்பதே விஷயம். வெப்ப இயக்க வியலின் இரண்டாம் விதி பல்வேறு வகையான அறிவியல் ஆராய்ச்சிகளுக் குப் பயன்படும் ஒரு கொள்கையே தவிர வேறல்ல. ஆனால் ஷேக்ஸ்பியரின் ஒரு நூல் உள்ளார்ந்த வளர்ச்சி பற்றி, மிகவும் வலுவான கருத்துக்களை, மனித வாழ் வின் பெருநிலைய அவலநிலையையும் விளக்கிக் கூறு கிறது.

இந்த இரண்டும் எப்படி சமமானவையாக இருக்க முடி யும்? நான் மனிதனாக இருந்து, வெப்பவியலின் இரண் டாம் விதியைக் கேட்டிருக்கவில்லை. எனவே, எதனை இழந்திருக்கிறேன்? இந்தக் கேள்வி பதில், "ஒன்றுமில் லை " என்பது. மேலும் வேக் பியரைப் பற்றி அறிந் திருக்கவில்லை எனில் எதனை நான் இழக்கிறேன்? எனக்கான புரிதலை பிறிதோர் இடத்திலிருந்து நான் பெறவில்லை எனில், எனது வாழ்க்கையை நான் இழக் கிறேன். இயற்பியலின் சிறிதளவு அறிவும், இலக்கியத் தின் சிறிதளவு அறிவும் ஒன்றைப் போன்று மற்றதும் நல்லது என நம் குழந்தைகளிடம் கூறலாமா? அப்படிச் செய்தோமெனில் தந்தைகளின் பாவம் மூன்று நான்கு தலைமுறைகள் வரை தொடரும். ஏனெனில் ஒரு கருத்து முதிர்ச்சி அடைந்து அதனைப் பற்றி சிந்திக்க அவ்வளவு காலம் தேவைப்படலாம். வாழ்வதற்கான கருத்துக்களை அறிவியலால் உருவாக்க முடியாது. அறி

வியலின் மாபெரும் கருத்துக்கள் கூட சிறப்பு ஆராய்ச்சி களுக்குப் பயன்படும் கோட்பாடுகளே. நமது வாழ்க்கை நடத்தைகளுக்கும், உலகைப் புரிந்து தெளிவதற்கும் முழுமையாக பொருத்தமற்றவை. பேதப்பட்டு, தனித்து, குழம்பித் தவிக்கும் ஒரு மனிதன், தனது வாழ்வை பொருளற்றதாகவும், வெறுமையாகவும் உணர்ந்து கல் வியைத் தேடுவானேயானால், அறிவியலைப் பயின்று (அதாவது, தெரிதல் - புரிதலை படித்து) அவன் தேடு வதைப் பெறமாட்டான். அறிவியல் கல்வியைக் குறைத் துக் கூறுவது என் நோக்கமல்ல. அறிவியல் கல்வி மனித னுக்கு இயற்கைச் செயல்பாடுகளையும், பொறியியலை யும் பயிற்றுவிக்கிறது. ஆனால் அது அவனுக்கு வாழ்க் கையின் பொருள் குறித்தோ அல்லது அவனது பேதம் நிறைந்து பிரிந்துபோன நிலை மற்றும் ரகசிய குழப்பத் தையோ தீர்ப்பதாக இல்லை.

சரி, அவன் எங்கே செல்வான்? அவன் அதுவரை அறிந்த அறிவியல் புரட்சி, அறிவியல் யுகம் இவற்றிலி ருந்து மனிதம் நோக்கித் திரும்புவான். அவன் அதிர்ஷ் டசாலியாக இருப்பானேயானால் அவன் மனதை நிரப் பும் மாபெரும் நல்ல கருத்துக்களை, தனது வாழ்க்கை யைப் புரிந்து, சமூகத்தையும் உலகையும் புரிந்து கொள் ளும் கருத்துக்களைப் பெறுவான். இன்றைய காலகட் டத்தில் அவனால் எப்படிப்பட்ட கருத்துக்களைப் பெற முடியும் என பார்ப்போம். எல்லாவற்றையும் தொகுக்க நான் முயலவில்லை. எனவே 19-ஆம் நூற்றாண்டில் தொடங்கி இன்றுவரை கற்றவர்களின் மனதில் ஆதிக் கம் செலுத்தும் ஆறு கருத்தியல்களைக் குறிப்பிடுகி றேன்.

1. பரிணாமக் கொள்கை - சிறியவைகளிலிருந்து இயற்கை

யாகவும் தன்னிச்சையாகவும் உருவான பெரியவைகள். கடந்த நூற்றாண்டுகளுக்கும் மேலாக இந்தக் கொள் கையே எல்லாவற்றிலும் பயன்படுத்தப்பட்டு வருவதைக் பார்க்கலாம்.

2. போட்டி - தகுதியானதே நிலைத்திருத்தல். பரி ணாம வளர்ச்சியை இயல்பானதாகவும் தன்னிச்சையா கவும் கூறும் தகுதியானதே நிலைத்திருக்கும் என்ற கொள்கை.

3. கார்ல் மார்க்ஸால் 'மனித மூளையின் மாயத் தோற்றம்' என்றழைக்கப்பட்ட மனித வாழ்க்கையின் உயர் கருத் துக்களான மதம், தத்துவம், கலை போன்றவை மனித வாழ்க்கைக்குத் தேவையானவை என்றும், ஒரு பெரும் சக்தி பொருளாதார வாழ்வை மறைக்கவும், வளர்க்க வும் செய்யும்படி உருவாக்கப்பட்டது எனவும், மனித வர லாறு என்பது வர்க்கப் போராட்ட வரலாறு
எனவும் கூறப்படும் ஒரு கருத்து.

4. நான்காவதாக, குழந்தைப் பருவத்திலோ, விடலைப் பருவத்திலோ உண்டான நிறைவேறாத தகாப்புணர்ச்சி ஆசைகளின் ஆழ்மன இருள் குழப்பங்கள் என்று ஃபி ராய்டின் கருத்து.

5.பெர்ட்ரன்ட் ரஸ்ஸலால் "எதனைப் பற்றிப் பேசுகிறோம் என்று எப்போதுமே அறியப்படாத ஒரு துறை அல்லது நாம் சொன்னது உண்மைதானா என்று கூறப்பட் கணி தவியலையே பாதிக்கக்கூடிய சார்புத் தத்துவம். இது முழுமை என்பதை புறந்தள்ளி, அது சார்ந்த அனைத்து நெறிகளையும் மறுத்து காலாவதியாக்கும் கருத்து.

6.இறுதியாக, நேர்மறைக் கொள்கை. இயற்கை அறி வியல் முறையிலேயே சரியான அறிவைப் பெறமுடியும். நன்கு ஆழ்ந்து கவனித்த உண்மைகளின் அடிப்படை யில் அல்லாத எந்த அறிவும் பூரணமான சுத்தமான

ஒன்றல்ல என்றும் இது கூறுகிறது. இந்த நேர்மறைக் கொள்கை 'தெரிதல் - புரிதல்' என்பதின் மீதே உள்ளது. எதனைப் பற்றிய ஸ்தூலமான அறிவையும் பயனையும் இக்கருத்து புறந்தள்ளுகிறது.

இந்த ஆறு பெரிய கருத்துகளின் சக்தியையும் பிரபலத்தையும் இல்லை என எவராலும் புறந்தள்ள முடியாது என நான் நினைக்கிறேன். இந்தக் கொள்கைகள் குறுகிய அனுபவ அறிவின் விளைவுகளல்ல. இந்தக் கொள்கைகள் எண்ணற்ற வகைகளில் ஆராயப்பட்டவை. தெரியாததும் தெரிய முடியாததும் குறித்து பன்மடங்கு கற்பனைகளைக் கொண்டவை இவை. இவற்றின் முதல்படி உண்மையாகத் தெரிந்த ஒரு சிறு நிலையிலிருந்து தொடங்கியது என்பது உண்மைதான். இவைகளில் ஒரு சிறிதும் உண்மையில்லை எனில் மனித மனங்களில் இவை நிலைத்த இடத்தைப் பெற்றிருக்க முடியாது. சர்வதேசமயம் வாய்ந்ததே இவற்றின் முக்கிய குணாம்சம், பரிணாமக் கொள்கை நெபுலாவிலிருந்து மனித இனம் வரை மட்டு மல்லாது, மனோரீதியான தத்துவங்களான மதம், மொழி போன்றவற்றையும் விளக்குகிறது. போட்டி, இயற்கைத் தேர்வு, தகுதியானவை நிலைத்திருத்தல் போன்றவை ஒரு ஆய்வு முடிவுகள் என்றல்லாது சர்வதேச விதிகளாகவே உள்ளன. வரலாற்றின் சில பகுதிகளே வர்க்கப் போராட்டத்தினாலானவை என்று மார்க்ஸ் சொல்லவில்லை. இதுவரையிலிருந்த அனைத்து சமூகங்களைக் குறித்தும் அவர் ஆய்ந்திருக்கிறார். ஃபிராய்ட் மருத்துவ அறிக்கைகளினடிப்படையில் தனது கொள்கையை தெரிவிக்கவில்லை. ஆனால் மனித மனத் தூண்டுதல் குறித்து சர்வதேச விதியை தெரிவித்தார். உதாரணமாக அனைத்து மதங்களும் 'பிடிவாத நரம்பு நோய்' எனக் கூறினார். சார்புத்

தத்துவமும், நேர்மறைக் கொள்கையும் நுண் இயற்பியல் கோட்பாடுகளே. அவை நுண் இயற்பியலின் மதிப்பு வாய்ந்த நெறிகளைக் கூட மறுதலிக்கின்றன.

அனுபவம்சார் அறிவற்ற, நுண் இயற்பியல் பண்புகளல்லாது மற்ற எவற்றில் இந்த ஆறு பெரும் கொள்கைகளும் பொதுவான கருத்துக்களைக் கொண்டிருக்கின்றன? இதற்கு முன்னால் உயர்நிலைக் கொள்கையாக சொல்லப்பட்டவை அனைத்தும் மெல்லிய தாழ்நிலைக் கருத்துக்களே என்பதில் இவை பொதுவாக உள்ளன.

ஆக, மனிதன் பிரபஞ்சத்தின் மற்றெல்லாப் பொருட்களையும் போலவே, அணுக்களின் எதிர்பாராத மோதலின் விளைவுதான். மனிதனுக்கும் ஒரு கல்லுக்கும் இடையிலான வேறுபாடு ஒரு மாயத் தோற்றமே. மனிதனின் உயர்வான கலாச்சார சாதனைகளெல்லாம் பொருளாதாரப் பேராசையினாலோ அல்லது மேலதிக பாலுறவு ஏமாற்றங்களினாலோ நிகழ்ந்தவை. கீழான நோக்கங்களைக் கொள்வதை விடவும் உயர்வான நோக்கங்களைக் கொள்ள வேண்டும் என்பது எல்லா வகையிலும் பொருளற்றது. ஏனெனில் உயர்வு, தாழ்வு என்பனவற்றுக்கு புரிந்து கொள்ளக்கூடிய பொருள் இல்லை.

19-ஆம் நூற்றாண்டின் சிருஷ்டிகளின் கருத்துக்கள் இருபதாம் நூற்றாண்டின் பின் பாதியின் மூன்றாம் நான்காம் தலைமுறைகளிடம் வந்து கொண்டிருக்கின்றன. இந்தக் கருத்துக்களின் ஆரம்ப சொந்தக்காரர்களுக்கு இவை வெறும் அறிவுப்பூர்வமான செயல்பாடுகளே. மூன்றாம் நான்காம் தலைமுறைக்கு அந்தக் கருத்துக்கள் உலகை உணர்ந்து பார்க்கும், வெளிப்படுத்தும் கருவிகளாயின. புதிய கருத்துக்களைக் கொண்டுவந்தவர்கள் அபூர்வமாகவே அதனால் ஆதிக்கம் செலுத்

தப்பெற்றார்கள் மூன்றாம் நான்காம் தலைமுறையினர் இளம் பிராயம் மற்றும் விடலைப் பருவமான 'இருண்ட காலத்தில்' இருந்தபோது சிருஷ்டி கர்த்தாக்களின் கருத்துக்கள் மனித வாழ்வில் ஆற்றல் பெற்றன.

இந்த 19-ஆம் நூற்றாண்டுச் சிந்தனைகள், மேற்குலகில் ( படித்தவர்கள், படிக்காதவராக இருந்தாலும்) ஒவ்வொருவர் மனதிலும் நிரந்தர இடம் பிடித்திருந்தன. படிக்காதவர்களிடம் அவை குழம்பிய நிலையில் திட்டமின்றி உலகைப் புரிந்து கொள்ள பலமற்று இருந்தன. எனவே தான் இந்த இருண்ட குழம்பிய நிலையிலிருந்து வெளிச்சமான புரிந்து கொண்ட நிலைக்கு வர, கல்வியின் மீது பெரும் ஆர்வம் வேண்டியுள்ளது.

முன்பே சொல்லியிருக்கின்றேன், வெறும் அறிவியல் கல்வி இதனை நமக்குச் செய்ய இயலாது. ஏனெனில் அறிவியல் கல்வி வெறும் "தெரிதல் - புரிதலை" மட்டுமே போதிக்கிறது. ஆனால் பொருள்கள் ஏன் அப்படி இருக்கின்றன, நம் வாழ்க்கையுடன் அவற்றை என்ன செய்ய வேண்டும் என்பனவற்றை நாம் புரிந்து கொள்ள வேண்டிய தேவை இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட அறிவியலைப் பயிலும் போது, நமது குறிப்பிட்ட தேவைக்கு அதிகமான பயன்பாடுகளுக்குப் பயில்கிறோம். எனவே இதனை மானுடவியலுக்கு மாற்றி பெரிய அளவிலான அதிக முக்கியத்துவம் நிறைந்த தெளிவான கண்ணோட்டத்தைப் பெற முடியும். மானுடவியலில் கூட இயற்கை அறிவியலிலிருந்து பெற்ற பொருத்தமற்ற கருத்துக்களால் செயல்பட இயலாத நிலை நேரிடும். ஆனால் நம் மனதில் முன்னமே இருக்கும் பெரிய உலக ளாவிய கொள்கைகளின் மூலமாக நமது மனதில் தோன்றும் சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ளலாம். அதன் மூலம் உலகைப் புரிந்து கொண்டதாக நாம் செய்து கொள்ளலாம்.

அப்படிப்பட்ட ஒன்றையே நாம் "கல்வி" என்று அழைக்க பொருத்தமுள்ளதாக இருக்கும். இன்றிலிருந்து அதனிடம் எதனைப் பெறலாம்? உலகம் என்பது அர்த்தமும் பயனுமற்ற கழிவு நிலம், அதில் பெரும் மனவேதனையும் குழப்பமுமே கொண்ட மனிதனது பிரக்ஞை துரதிர்ஷ்டவசமான காஸ்மிக் விபத்து. ஓர்டேகா கூறினா "நமது சமகால கருத்துக்களின் உயரத்தில் மெய்யான கல்வியைக் கொண்டே ஏற முடியும்". அவர் தன்னையே ஒன்றுமற்ற ஆழமான பள்ளமாகக் கண்டார். கவிஞர் பைரனை உணர்ந்ததாக அவர் எண்ணியிருக்கலாம்.
மனத்துன்பமே அறிவு: அதிகம் அறிந்தவர்கள் மரணத்தின் உண்மை மீது ஆழமாக துக்கிக்க வேண்டும். அறிவின் மரம் வாழ்க்கையல்ல.
வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால், நம் காலத்தின் கருத்துக்களின் உயர்வுக்குக் கொண்டு செல்லும் மானுடவியல் கல்வி கூட நல்லனவற்றைத் தர இயலாது. ஏனெனில் மனிதன் வாழ்க்கையில் ஏராளமாய் எதிர்பார்க்கிறான். ஆனால் துக்கங்களை மன வேதனைகளை அல்ல.
என்னவாயிற்று? அப்படிப்பட்டது எப்படி சாத்தியம்?
19ஆம் நூற்றாண்டின் கொள்கைகள் வாழ்க்கையை அழிக்கும் கேடான, குரூரமான மெய் விளக்க இயல் ஆகும். உயிர்க்கொல்லி நோய் போன்ற இவற்றால் நாம் துன்பப்படுகிறோம். மனவேதனையே அறிவு என்பது உண்மையல்ல. ஆனால், மூன்றாம் நான்காம் தலைமுறைகளில் கட்டுக்கடங்காத துக்கத்தை விஷம் தோய்ந்த தவறுகள் கொண்டு வந்துவிட்டன. அந்தத் தவறுகள் அறிவியலில் இல்லை . ஆனால் அறிவியல் என்ற பெயரால் கொண்டு வரப்பட்ட தத்துவங்களில்தான் இருக்

கின்றன. பல ஆண்டுகளுக்கு முன்பே எட்டினி இப்படி கூறுயிருக்கிறார்.

"அந்த மாதிரியான வளர்ச்சி தவிர்க்க முடியாது அல்ல. ஆனால் இயற்கை அறிவியலின் முன்னோக்கிய வளர்ச்சி அதனை சாத்தியப்படுத்திவிட்டது. அறிவியல் விளைவுகளில் மனிதனுக்கிருந்த நாட்டம், இயல்பானது: முறையானது. ஆனால் இந்த விளைவுகள் அறிவியல் என் அறிவு என்ற உண்மையை மறக்கடித்துவிட்டன. பொருள் சார்ந்த உலகைப் பற்றிய எதிர்பாராத உண்மைகளை சொல்வதில் வெற்றி பெறும் முன்பே அனைத்து ஒழுக்கங்களையும் மனிதன் நிந்திக்கத் தொடங்கிவிட்டான். அல்லது ஒழுங்குகளை மீண்டும் கட்டமைக்க மறுத்து விட்டான். விளைவாக, நன்நெறிகளும், மெய் விளக்க இயலும் புறந்தள்ளப்பட்டுவிட்டன, அல்லது வேறொன்றால் நிரப்பப்பட்டு விட்டன. இது மேற்கத்திய கலாச் சாரத்தை மிகவும் அபாயகரமான நிலைக்குக் கொண்டு விட்டது".

நன்நெறிகளும், மெய் விளக்க இயலும் எடுத்தெறியப் படும் என்பது கூட உண்மையல்ல. மாறாக நமக்குக் கிடைத்திருப்பது கேடான மெய் விளக்க இயலும் பயங் கர மான நெறிகளுமே.மெய் விளக்க இயல் தவறுகள் மரணத்தில் கொண்டு விடும் என்பது வரலாற்றாசிரியர்களுக்குத் தெரியும்.

ஆர்.ஜி. கோலிங்வுட் இப்படி எழுதுகிறார். "கிரேக்க ரோம நாகரிகத்தின் சிதைவு பற்றிய ஆய்வு, நுண் இயற்பியலுக் கேற்பட்ட நோயினைக் காட்டுகிறது. பார்பாரியர்களின் தாக்குதலினால் இந்த நாகரிகம் சிதைவடையவில்லை. மெய் விளக்க இயல் நோயே இதற்குக் காரணம். எந்த வழியிலுமில்லாத உலகம், தனது சொந்த நம்பிக் கைகளை தக்க வைத்துக் கொள்ளத் தவறிவிட்டது.

தவறான மெய் விளக்க இயல் ஆய்வுகளினால் இந்த நம் பிக்கைகள் என்ன விதமானவை என்பதில் குழப்பமுற் றது என்று எழுதுகிறார்கள். அறிவுலகின் ஆடம்பரமாக நுண் இயற்பியல் இருந்திருக்குமேயானால், இது ஒரு விஷயமல்ல".

இந்த பத்தியை எந்த மாற்றமுமின்றி இப்போதைய பண் பாட்டிற்குப் பொருத்திப்பார்க்கலாம். உண்மையில் நமது நம்பிக்கைகள் என்ன என்பதில் நான் குழம்பியிருக்க லாம். 19-ஆம் நூற்றாண்டின் மாபெரும் கருத்துக்கள் நம் அறிவை ஏதாவது ஒரு வழியில் நிரப்பியிருக்க லாம். ஆனால் நமது இதயங்கள் அவற்றையெல்லாம் ஒரே மாதிரி நம்பியிருக்காது. பொதுவாக சொல்லப்ப டுவதைப் போல நமது அறிவும் இதயமும் காரணம் மற்றும் நம்பிக்கைகளில் சண்டையிட்டிருக்காது. நமது காரணங்கள் 19ஆம் நூற்றாண்டிலிருந்து பெறப்பட்ட வாழ்வை அழிக்கும் அசாதாரணமான நம்பிக்கைக ளால் மூடப்பட்டுவிட்டன. நமது காரண அறிவு இதிலி ருந்து விடுபட்டு அதனை விட உண்மையான ஒரு நம் பிக்கையை அடைய வேண்டியது மிக முக்கிய காரியமா கும்.

மெய் விளக்க இயலுக்கு ஒரு இடம் தராதவரை கல்வி நமக்கு உதவ முடியாது. கற்றுக் கொடுக்கப்படும் பாடங் கள் அறிவியலாக இருந்தாலும், மானுடவியலாக இருந் தாலும், அதில் மெய் விளக்க இயல் இல்லை எனில், அதாவது அடிப்படை நம்பிக்கைகள் பற்றி இல்லை எனில் அதனால் ஒரு மனிதனைப் பயிற்றுவிக்க இய லாது; சமூகத்திற்குத் தேவையான உண்மையான நெறி சார்ந்ததாக அது இருக்காது.

அதிவிசேஷ கவனத்தினால் கல்வியானது தடங்களுக் குள்ளாகிறது என்று சொல்லப்படுவதுண்டு. இது ஒரு

பகுதியை மட்டும் ஆய்வு செய்த, தவறாக இட்டுச் செல்லக் கூடிய கண்டறிவு. கல்வியில் விசேஷ கவனம் என்பது தவறான கொள்கையல்ல. இதற்கு மாற்று என்னவாக இருக்க முடியும்? லேசான கல்வியுடன் அனைத்து துறைப் படிப்புகளையும் பற்றிய கல்வி முறையா? அல்லது பெரிய கல்வியறையில் தாம் விரும்பாத துறைகளை அனைவரை யும் கட்டாயப்படுத்தி படிக்க வைப்பதா? இது சரியானதாகாது. அது கார்டினல் நியூமேன் கூறிய "தத்துவத்துறைகளின் அனைத்துத் துறைகளை பார்வை கொண்ட, ஒரு அறிவு ஜீவி."

இந்தப் பார்வை என்பது அறிவாகாது. "அறிவன் பொருளை போதிக்கவா? என கன்பூசியஸ் கேட்டார். மேலும் "ஒன்றை உனக்குத் தெரியும் என்பதைத் தெரிந்து கொள்வதும்; தெரியாத ஒன்றை உனக்குத் தெரியாது என்பதை தெரிந்து கொள்வதே - அறிவு" என்றார்.

விசேஷ கவனம் என்பது தவறல்ல. ஆனால் துறைச் சார்ந்த படிப்பின் ஆழம் தெரியாது இருப்பதும், மெய் விளக்க இயலின் இல்லாமையுமே தவறாகும். அறிவியலின் முன்னர் இருந்த நிலை குறித்த அறிதலின்றி, அறிவியல் விதிகளின் பொருளும், முக்கியத்துவமும் அறியாமலும், மனித சிந்தனைகளின் இருப்பிடமான முழு காஸ்மாஸில் இயற்கை அறிவியலின் இருப்பை அறியாமலும் அறிவியல் கற்பிக்கப்படுகிறது. இவற்றின் விளைவாக அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு அறிவியலின் முன்னிருந்த அனுமானம் தவறாக எடுத்தாளப்படுகிறது. இன்றைய பொருளாதாரக் கொள்கையில் மனிதனின் இயல்பான பார்வை பற்றிய அறிவே இல்லாமல் பொருளாதாரம் கற்பிக்கப்படுகிறது. இந்தப் பார்வை தவறானது என பெரும்பாலான பொருளாதார நிபுணர்களுக்

குத் தெரியவருமேயானால், உண்மையில் அவர்களது அனைத்துப் பொருளாதாரக் கொள்கைகளும் மாறும். எல்லா வகைக் கேள்விகளும் மெய் விளக்க இயலின் அடிப்படையில் இல்லை எனில் அரசியல் பற்றிய கல்வி எப்படி சரியான பகுத்தறிவுடன் கூடிய ஒன்றாக இருக்க முடியும்? மெய் விளக்க இயலையும் அறநெறி சார்ந் தவற்றையும் அரசியலரங்கில் தொடர்ந்து அனுமதிக்க மறுப்பது, குழப்பத்திலும் 'இரட்டைப் பேச்சு' என்ற முடி விலும் கொண்டு விடும். மானுடவியல் சார்ந்த கல்விக ளில் என்று சொல்லப்படுகிறவைகளினால் உண்டாகும் கல்வி நெறி சந்தேகத்திற்குரியதாகவே உள்ளது. ஏன் சொல்லப்படுகிற

என்று குறிப்பிட்டேன் எனில் அந்த துறைகள் மனித இயல்பை தெளிவாக சரியாக கணக்கில் கொண்டிருக் கவில்லை.

அனைத்துக் கல்வியும், எப்படி விசேஷிக்கப்பட்டிருந்தா லும், ஒரு மையப் புள்ளியுடன் இணைக்கப்பட்டிருக் கின்றன. அவை சூரியனிலிருந்து வெளிவரும் கதிர்க ளைப் போன்றிருக்கின்றன. நம்மை உண்மையிலேயே இயக்கும் சக்தி வாய்ந்த கொள்கையிலான நம்பிக்கை களைக் கொண்டே அந்த மையப்புள்ளி அமைந்திருக் கிறது. வேறு விதமாகச் சொல்ல வேண்டுமெனில் உலக உண்மைகளை மீறும் நுண் இயற்பியலையும் அறநெ றிகளையும் (நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்) அந்த மையம் கொண்டிருக்கிறது. ஏனெனில் உண்மை களின் உலகத்தை அவை தாண்டிச் சென்று, சாதாரண அறிவியல் முறைகளினால் நிரூபிக்கப்படவோ நிரூபிக் கப்படாமலிருக்கும் படியோ உள்ளன. ஆனால் அவை சார்புடையதானது என்றோ, தானாக உருவானவை

என்றோ, தொடக்க நிலை நம்பிக்கை என்றோ பொருளல்ல.

அவை அப்படி இல்லை எனில் அழிவு நிலைக்குக் கொண்டு செல்வது தவிர்க்க இயலாததாகிவிடும்.முழுமனிதர்களை உருவாக்கினால்தான் கல்வி நமக்கு உதவ முடியும். ஒவ்வொன்றையும் பற்றி ஓரளவு தெரிந்தவன், எல்லாவற்றையும் பற்றி முழுதாக அறிந்தவன் உண்மையிலேயே கற்ற மனிதனாக மாட்டான். முழுமையான மனிதன் பேருண்மைகளையும், கொள்கைகளையும் ஓரளவே அறிந்தவனாக இருக்கலாம். அவன் மையத்துடன் எப்போதும் உண்மையான தொடர்பிலேயே இருப்பான். அவன் தனது வாழ்வின் பயனையும், அபாயத்தையும் குறித்து தனது கண்ணோட்டத்தால் தனது அடிப்படை நம்பிக்கைகளில் சந்தேகத்துடன் இருக்க மாட்டான். அவனால் இந்த விஷயங்களை சொற்களில் கூற முடியாமலிருக்கலாம். ஆனால் அவனது வாழ்வின் நடத்தை அவனது உள்ளொளி, உள்தெளிவின் வெளிப் பாடாக நிச்சயம் வெளிப்படும்.'மையம்' என நான் சொன்னதைக் குறித்து சற்றே விளக்குகிறேன். மனிதனின் எல்லா செயல்களும் நல்லதை நினைத்த, நோக்கிய கஷ்டங்ககளே. சொன்னதையே மீண்டும் சொல்வதல்ல. மாறாக நம் சரியான கேள்வி எழுப்பவைக்கக் கூடியது. 'யாருக்கு நல்லது?' கஷ்டப்படும் மனிதனுக்கு நல்லது. தனது தேவையை, துடிப்பை, ஆசையை முறைப்படுத்திக் கொள்ளவில்லை எனில் ஒரு மனிதனின் கஷ்டங்கள் குழப்பம் நிறைந்ததாகவும், முரண்பட்டதாகவும், தன்னைச் தானே தோற்கடிக்கக் கூடியதாகவும், மிகவும் நாசகரமான தாகவும் இருக்கும்.

தனது கஷ்டப்பாடுகளுக்கு தன்னைப் பற்றியும் உலகைப் பற்றியுமான சரியான நெறிப்படுத்திக் காட்டக் கூடிய கொள்கைகளை முறையான அமைப்பாக உருவாக்கிடும் இடமே 'மையம்' எனப்படும். இதற்கான சிந்தனையை அவன் ஒருபோதும் தரவில்லை எனில், மையம் காலியாக இருக்காது. அவனது மையம் முழுவதும் அவனது இருண்ட காலத்தைய (இளம் வயது) கொள்கைகளால் ஏதேனும் ஒரு வகையில் நிறைந்துவிடும். இந்த கொள்கைகள் வாழ்வின் பயனையும், அர்த்தத்தையும் இல்லாதொழித்து நம்பிக்கையின்மையை உண்டாக்கிவிடும். நான் முன்பே சொன்னது போல், அறிவைவிட மனது இந்த கொள்கைகளை அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை. எனவே மனிதன் நம்பிக்கையற்ற நிலையிலிருந்து காப்பாற்றப்படுகிறான். ஆனால் குழப்ப நிலைக்கு ஆளாகிறான். அவனது அடிப்படை நம்பிக்கைகள் குழம்பியதால், அவனது செயல்களும் கூட குழப்பமானதாகவும், நிச்சயமற்றதாகவும் இருக்கிறது. அவன் தனது 'மையத்தின்' மீது சரியா தவறா என்ற கேள்வியுடன் மனசாட்சியின் ஒளியைப் படர அனுமதித்தால், அவன் ஒரு ஒழுங்கு நிலையை ஏற்படுத்திக் கொள்ள இயலும்.

அது அவனை மெய் விளக்க இயலின் குழப்பத்தின் இருளில் இருந்து வெளிவரும்படி பயிற்றுவித்துவிடும். அவன் மனதில் உள்ள பழைய காலங்களின் தவறான பார்வையால் உருவான கொள்கைகளென்று தன் மனதில் உள்ளவற்றை ஒப்புக் கொண்டால் மட்டுமே வெற்றிகரமாக அவன் அந்த இருளைவிட்டு வெளிவர இயலும். 19-ஆம் நூற்றாண்டின் கொள்கைகள் பிரபஞ்சத்தின் படி நிலைகள் என்பதைப் புறந்தள்ளுகையில், இந்த படி நிலைகள் அனைத்துப் புரிதல்களுக்கும் மிக

வும் முக்கிய மானவையாக இருக்கின்றன. படிநிலை களைப் புரிந்து கொள்ளவில்லை எனில் நமக்கான உலகை நமக்குள் புரிந்து கொள்ள இயலாது. பிரபஞ் சத்தில் மனிதனின் இடத்தை புரிந்து கொள்ளுதலுக் கான வாய்ப்பும் மிகக் குறைவே. உலகை ஒரு ஏணி யாகக் கருதினால் மனிதன் ஏணியின் எந்தப் படியில் இருக்கிறான் என்பதை உணர்ந்து, பூமியில் மனிதன் அர்த்தப்பூர்வமாக செயல்படமுடியும். தனது இருத்தலின் மிகச் சரியான நிலையைப் புரிந்து கொள்ள, அந்தப் படி நிலைகளைப் புரிந்து கொள்ள வேண்டும். 19-ஆம் நூற் றாண்டின் கொள்கைகள் இந்த வேறுபட்ட படிநிலைக ளைப் புரிந்து கொள்ள இயலாதபடி நம்மைக் குருடாக்கி இருக்கின்றன.

இந்தப் படிநிலைகளைப் புரிந்து கொண்டவுடன், இயல் அறிவியல் முறைகள், அரசியலையோ, பொருளாதாரத் தையோ ஆய்வு செய்ய ஏன் பயன்படாது என்பதைப் புரிந்து கொள்ளவியலும்.

மெய் விளக்க இயலை அரிஸ்டாட்டில், மூலம், இயற்கை, அறிவின் வரையறை என்றும், இருத்தலியல் என்றும் இரண்டாகப் பிரித்ததை ஒப்புக்கொண்டோமானால், அவரது கூற்றுப்படி இருத்தல் நிலைகளை எடுத்துக் கொள்ள வேண்டும். நான் இன்னொன்றையும் சேர்த் துக் கொள்கிறேன். அது நமது சிந்தனை வயம் நேர் எதிராக செயல்படுவதை நம்மால் தடுக்க இயலாது. நம் வாழ்க்கை முழுவதும் எதிர்கொண்ட நமக்கு எதிரா னவைகளை முறையான சிந்தனைகள் மூலம் ஏற்றுக் கொள்ள இயலாமல் உள்ளது. கல்வியில் தேவைப்படும் சுதந்திரத்தையும் ஒழுக்கத்தையும் எப்படி சரி ஒத்துப் போக வைக்க முடியும்? இதனை நிறைய தாய்மார்களும், ஆசிரியர்களும் கூறுகின்றனர். ஆனால் எவ தீர்வைக்

கூற முடியவில்லை . இதனை அன்பின் கொண்டே அவர்கள் சாதிக்கிறார்கள்.

படிப்படியான காரணங்களைக் கொண்டு தீர்க்க முடியாத பிரச்சினைகளை 'பிரிந்தவை' (விரிந்த) என்றும், 'குவிந் தவை என்றும் இரண்டாகப் பிரித்துக்காட்டுகிறார் ஜி. என்.எம். டைரல். பிரிந்த பல்வேறு பிரச்சினைகளூ வாழ்க்கை சென்று கொண்டு இருக்கிறது. அவை மர ணக்க லேயே தீர்க்கப்படும். குவிந்த பிரச்சினைகள் மனிதனின் பயன்மிகு கண்டுபிடிப்புகள். அவை உண் மையில் இருப்பதில்லை. ஆனால், சேர்த்துக் கொண்ட செயல்களினால் உருவானவை. அவை தீர்க்கப்படும் போது, அந்த தீர்வை எழுதி, மற்றவர்களுக்கும் தெரியப் படுத்த முடியும். அதனை மற்றவர்கள் கஷ்டமின்றி, பயன் படுத்திக் கொள்ள முடியும். இதுவே மனித உறவுகளில் என்றால், அதாவது குடும்ப வாழ்க்கை , பொருளாதாரம், அரசியல், கல்வி இன்னும் பலவாறானவைகளில் என் றால், மனித உறவுகள் இருக்கும். ஆனால் இயந்திரத் தன்மையுடன்தான் இருக்கும்.

வாழ்க்கை உயிரற்றதாக இருக்கும். பிரிந்த பல்வேறு பிரச்சினைகள் மனிதனின் சக்தியை விட அதிகமாக முயற்சி செய்ய வைக்கும். அன்பு, அழகு, நன்மை, உண்மை ஆகிய உயர்வான சக்திகளை அளிப்பதால் மிகுந்த முயற்சிகளை இது வேண்டி நிற்கும். இந்த உயர் வான சக்திகளின் உதவியைக் கொண்டே எதிர்மறை விஷயங்களை சரிக்கட்டி ஏற்றுக் கொள்ள இயலும்.

அறிவியலும் கணிதமும் குவிந்த பிரச்சினைகளிலேயே கவனம் செலுத்தும். எனவே அவைகளால் ஒன்று சேர்ந்து திரளாக வளர முடியும். ஒவ்வொரு புதிய தலை முறையும் அவர்களது மூதாதையர்கள் விட்ட இடத்தி லிருந்து தொடங்க முடியும். இருந்தபோதும் இதற்கான

விலை மிக அதிகம். குவிந்த குறுகிய பிரச்சினைகளை மட்டும் கவனத்தில் கொண்டு செயல்படுவது வாழ்க் கையை விட்டு விலக்கிச் செல்லும்.

சார்லஸ் டார்வின் தனது சுய சரிதையில் இப்படி எழுது கிறார். "எனக்கு 30 வயது வரையும் அதற்குப் பின்னரும் பல்வேறு கவிதைகள் எனக்கு ஆனந்தத்தைத் தந்தன. பள்ளிச் சிறுவனாய் இருக்கும் போதே ஷேக்ஸ்பியரின் நூல்களை, குறிப்பாக அவருடைய வரலாற்று நாடகங் கள் எனக்கு ஆமமான மகிழ்வைத் தந்தன. இசையும் படங்களும் முன்னர் எனக்கு மகிழ்வையூட்டிக் கொண் டிருந்தன என்பதை சொல்லி இருக்கிறேன். ஆனால் இப்போது பல ஆண்டுகளாக என்னால் கவிதையின் ஒரு வரியைக் கூடப் படிக்க இயலவில்லை. ஷேக்ஸ்பி யர் நூல்களைப் படிக்க முயற்சி செய்தேன். அந்த முயற்சி தாங்க முடியாத அயர்வைத் தந்தது. படங்கள் மீதும் இசையின் மீதும் எனக்கு விருப்பம் இல்லாமல் போய் விட்டது. பெருமளவிலான உண்மைகளினால் உரு வான பொது விதிகளை அசைபோட்டு அறைக்கும் ஒரு இயந்திரமாக மனது ஆகிவிட்டது போலத் தோன்றியது. ஆனால் உயர் நுகர்ச்சியைச் சார்ந்திருக்கும் மூளைக்கு மட்டும் இது எப்படி நேர்ந்தது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை . இத்தகைய உயர் நுகர்ச்சிக ளின் இழப்பு, மகிழ்ச்சியின் இழப்பு. அது நுண்ணறிவைக் கூட காயப்படுத்தும் சாத்தியம் உள்ளதாக இருக்கலாம். நமது இயல்புகளின் உணர்ச்சியூட்டக் கூடிய இடங்க ளைத் தாக்கி அறநெறி சார் குணங்களைக் கூட பாதிக்க லாம்."

இப்படி டார்வினால் மனதைத் தொடும் அளவிற்குச் சொல்லப் பட்ட இந்த பலம் குன்றச் செய்யும் பலவீ னம், நமது ஒட்டு மொத்தப் பண்பாட்டையே அடக்கி

நசுக்கிவிடும். 'குறைப்பு' என்ற செயல்பாட்டின் மூலம் அனைத்து வேறு பட்ட பிரிந்து செல்லும் பிரச்சினைகளையும் ஒன்று சேர்த்து குவியும் குறுகிய பிரச்சினைகளாக மாற்ற இயலும். இதன் விளைவாக, மனித வாழ்வை மேன்மைப்படுத்தும் அத்தனையையும், இழக்க நேரிடும். இதற்கான அறிகுறிகள் இன்றைக்குக் காணப்படுகின்றன.

அரசியல், பொருளாதாரம், கல்வி, திருமணம். அனைத்து வகை வாழ்க்கைப் பிரச்சினைகளும் சம வேண்டியவைகளாகவும் அல்லது எதிரான வகையில் சரிக் கட்ட வேண்டியவைகளாகவும் உள்ளன. இவை வேறுபட்ட பிரச்சினைகள். சாதாரணமாக இவைகளுக்கு தீர்வுகள் இல்லை . காரணகாரிய அறிவு மட்டும்மல்லாது, மனிதனின் முழு ஆளுமையுமே இந்த பிரச்சினைகள் தேவைப்படுகின்றன. புத்திசாலித்தனமான சூத்திரத்தின் மூலமான போலியான தீர்வுகளே பொதுவாக முன்வைக்கப்படுகின்றன. பிரச்சினையின் ஒரு முனையை இது புறந்தள்ளிவிடுவதால் இந்தத் தீர்வுகள் நீண்டு நிலைத்து நிற்பதில்லை. எனவே மனித வாழ்வின் தரம் இழக்கப்படுகின்றது. பொருளாதாரத்தில் தீர்வுகள் சுதந்திரத்தை அளிக்கலாம். ஆனால் திட்டமிடுதலை அளிப்பதில்லை. அல்லது திட்டமிடுதலை அளிக்கலாம், சுதந்திரத்தை அளிப்பதில்லை. தொழிற்சாலை அமைப்புகளில் ஒழுங்கைத் தரலாம், ஆனால் நிர்வாகத்தில் தொழிலாளர்களுக்கான பங்களிப்பைத் தருவதில்லை. அல்லது நிர்வாகத்தில் தொழிலாளிகளின் பங்களிப்பைத் தந்துவிட்டு ஒழுங்கைத் தராமல் போகலாம். அரசியலில் ஜனநாயகமற்ற தலைமையைத் தரலாம் அல்லது தலைமையற்ற ஜனநாயகத்தைத் தரலாம்.

பல்வேறுபட்ட பரந்த பிரச்சினைகளைக் கையாள்வது மிகுந்த கவலையையும், சலிப்பையும், களைப்பையும் தரக் கூடியது. எனவே மக்கள் இதனைத் தவிர்த்து விட்டு, ஓடி விட முயற்சிக்கிறார்கள். இதனைப் போன்ற பிரச்சினைகளைக் கையாளும் அலுவலர், தனது வீட்டிற்குச் செல்லும் போது ஒரு மர்ம நாவலைப் படிக்கலாம் அல்லது ஏதேனும் புதிர் அவிழ்க்கும் விளையாட்டுகளில் ஈடுபடலாம். நாள் முழுக்க அவர் தன் மூளையைப் பயன்படுத்திக் கொண்டே இருந்தார். ஏன் அப்படியே அவர் தொடரக்கூடாது? மர்ம நாவலும், புதிர் அவிழ்க்கும் விளையாட்டுகளும் குறுகிய விந்த பிரச்சினைகளே. எனவே அது ஓய்வான பொழுது போக்கை அளிக்கிறது. இதற்கு மூளை வேலை தேவைதான். ஆனால் விரிந்த பெரிய பிரச்சினைக்குப் பயன்படுத்துவதைப் போல அல்ல. வாழ்க்கையின் உண்மையான விஷயமே விரிந்த பெரிய பிரச்சினைகளைத் தீர்ப்பதில்தான் அடங்கியிருக்கின்றது.

இறுதியாக மெய் விளக்க இயலைச் சார்ந்த ஒன்றை எடுத்துக் கொள்கிறேன். அதுதான் அறநெறிகள். இவை தனியாகக் கூறப்பட்டாலும் மெய் விளக்க இயலைச் சார்ந்தவையே.

19-ஆம் நூற்றாண்டின் மிகப்பெரிய கருத்துக்களில் ஒன்று, வாழ்வியல் படிநிலைகளை புறந்தள்ளுவது அல்லது மறைப்பது. அது விஷயங்களை நல்லது கெட்டது என்று பிரித்து, கெட்டதை விட நல்லது உயர்ந்தது என்பதை அழிப்பதாகும். தங்களது மூதாதையர்களிடமிருந்து வரித்துக் கொண்டவைகளால் மூன்றாம் நான்காம் தலைமுறையினர் எந்தவித அறநெறி போதனைகளுமின்றி வளர்கிறார்கள். மூன்றாம் நான்காம் தலைமுறையினரிடம் உயர்வாகத் தோன்றும் அத்தனையும் மலி

வானதும் இழிவானது மல்லாமல் வேறொன்றுமில்லை என்ற கருத்தே நிலவுகிறது.

இவற்றால் உண்டாகும் குழப்பம் விளக்க இயலா தது. ஜெர்மானியர்கள் தங்களை வழி நடத்த 'லெய்ட் பில்ட்' என்ற பிம்பத்தைச் சொல்வதைப் போல இளைய தலைமுறையினர் எதனைத் தங்களது வழிகாட்டியாகக் கொண்டு கற்க முடியும்? எல்லாம் கலந்த தெளிவற்ற விஷயமே உள்ளது. அல்லது இல்லை என்று கூடச் சொல்லலாம். இந்தப் பிரச்சினையை தீர்க்கும் வழி களை அறிவு ஜீவிகள் உருவாக்க வேண்டும். அவர்கள் ஒவ்வொன்றும் ஒன்றை ஒன்று சார்ந்தவை என்ற கருத் தையோ அல்லது அதனைப் போன்றே பலனைத் தரக் கூடிய ஒன்றைப் பற்றியோ வலியுறுத்த வேண்டும்.

மற்றெல்லாத் துறைகளிலும் போலவே அறநெறிகளி லும் நமது பண்டைய பாரம்பரியத்தை விட்டு விட்டு. சத் தியம், அன்பு, நேர்மை போன்றவற்றை புறந்தள்ளி விட் டோம். ஒன்றுமற்றவை என்ற ஒதுக்கப்பட்டுவிட்டவை களுக்கு மாற்றாக என்ன புதிய கருத்துக்கள் தற்போது உள்ளன?

வாழ்வையும், ஆன்மாவையும் நாசமாக்கும் 19-ஆம் நூற் றாண்டின் மெய் விளக்க இயலுக்கு மாற்றாக எது வரப் போகிறது? மெய் விளக்க இயலை மறுகட்டமைப்பு செய் வதே நமது தலைமுறையின் பெரும் பணி என்பதில் எனக்குச் சந்தேகமில்லை . இது புதியதொன்றும் அல்ல. அதே நேரத்தில் பழமையை, பழையனவறறை வெறு மனே பின்பற்றுவதும் அல்ல. எல்லாவித கல்வியிலும் உள்ள பெரும்பணி, நாம் வாழும் உலகின் தற்போதைய நடப்பு நிலையை சரியாகப் புரிந்துகொள்வதுதான்.

நமது சமகாலத்தைய ஆழமான பிரச்சினைகளின் பிர திபலிப்பே கல்வியில் உள்ள பிரச்சினைகளாகும். நிறு

வனங்கள், நிர்வாகம் அல்லது பெரும் பொருட் செலவு ஆகியவற்றின் முக்கியத்துவம் புறந்தள்ளப்படவில்லை என்றாலும் இவற்றால் இந்த பிரச்சினைகளைத் தீர்க்க முடியாது. நாம் மெய் விளக்க இயல் சார்ந்த நோயால் வேதனையடைகிறோம். எனவே இந்த நோய்க்கான மருந்து - தீர்வு, மெய் விளக்க இயலிலிருந்தே வர வேண் டும் நமது முக்கிய நம்பிக்கைகளைத் தெளிவுபடுத்தவி யலாத கல்வி வெறும் பயிற்சி அல்லது நுகர்தலே.

நமது மையமான முக்கிய நம்பிக்கைகள் முறை யாக இல்லாததுதான். மெய் விளக்க இயலுக்கு எதிரான நிலை இருக்கும்வரை இந்த மைய நம்பிக்கைகளின் ஒழுங்கின்மை இன்னும் மோசமாகிக் கொண்டேபோ கும். மனிதனின் மிக முக்கியமான மூலாதாரம் என கல்வி மதிப்பி டாதவரை, அது 'அழிவின் முகவர்' போன்றே இரு

இருக்கும் என்பதே உண்மை.

…………..

## விலை மதிப்பற்ற செல்வம் இது!

மூலாதாரப் பொருட்களில் மிக முக்கியமான மிகப் பெரிய மூலாதாரம் நிலம் ஆகும். ஒரு சமுதா யம் நிலத்தை எப்படிப் பயன்படுத்துகிறது என்பதைப் பொறுத்தே அதன் எதிர்காலம் அமையும். நிலத்தின் மேற்பரப்பில் மனிதன் உட்பட எண்ணிறந்த உயிர்கள் வாழ்கின்றன. 1955-ஆம் ஆண்டில், நீண்ட அனுபவம் வாய்ந்த சுற்றுப்புற சூழலியல் அறிஞர்களான டாம் டேல் என்பவரும் வெர்ணன் ஜில் கார்டர் என்பவரும் “மேற் பரப்பும் பண்பாடும்” (Top soil and Civilisation) என்ற நூலை வெளியிட்டனர். அதில்

"நாகரிகமடைந்த மனிதன் தனது சுற்றுச் சூழலின் தற் காலிக எஜமானனாவதற்கு எப்போதும் முடியும். தனது தற்காலிக எஜமானத்தனத்தை நிரந்தரமானதாக அவன் எண்ணிக் கொள்வதிலிருந்துதான் அவனது பெரும்பா லான பெரிய துன்பங்கள் தோன்றுகின்றன. இயற்கை யின் விதிகளை முழுமையாகப் புரிந்து கொள்ளாமல் தன்னை அவன் உலகின் எஜமானனாக' நினைத்துக் கொள்கிறான்'.

"மனிதன் நாகரிகமடைந்திருந்தாலும் அல்லது நாகரி கமடையாத நிலையில் இருந்தாலும் அவன் இயற்கை யின் குழந்தையே. மாறாக அவன் இயற்கையின் எஜமா னன் அல்ல. சுற்றுப்புற சூழல் மீது அவன் தொடர்ந்து ஆதிக்கம் செலுத்த வேண்டுமெனில், அவன் குறிப்பிட்ட இயற்கை

விதிகளை அனுசரித்து தனது செயல்களை செய் தாக வேண்டும். இயற்கை விதிகளை அவன் வெல்ல முயற்சி செய்யும் போது இயற்கை சூழ்நிலையை அழிக் கவே செய்கிறான். சுற்றுச் சூழல் சீர்கேடடையும் போது. அவனது நாகரிகம் வீழ்ச்சி அடைகிறது".

வரலாற்றைக் குறித்து ஒருவர் இப்படிச் சொல்லியுள்ளார் "நாகரிகமடைந்த மனிதன் புவியின் முகத்தில் அணி, அணியாய் செல்கிறான், தனது காலடிச் சுவடுகளில் பாலை வனத்தை உருவாக்கிக் கொண்டு" இந்தக் கூற்று சற்றே மிகைப்படுத்தப்பட்டது போல இருந்தாலும் அப்ப டிச் சொன்னதற்கு ஆதாரமில்லாமல் இல்லை . நாகரிக மனிதன் தான் நீண்ட காலமாக வாழ்ந்த பெரும்பாலான நிலங்களை கொள்ளையடித்துள்ளான். இதன் காரண மாகவே நாகரிகத்தில் வளர்ந்துவரும் அவனது சமூகம் இடம் விட்டு இடம் பெயர்ந்து கொண்டே இருந்தது. அவன் முன்பு இருந்த பண்டைய நாகரிகம் இதன் கார

ணமாகவே வீழ்ச்சியடைந்து கொண்டிருந்தது. வரலாற்றின் எல்லா நிலைகளையும் நிர்ணயிக்கும் மிக முக்கிய காரணியாக இதுவே இருந்து வருகிறது.

நிலங்களின் பயன்பாடுகளின் முக்கியத்துவம் குறித்து வரலாற்றாசிரியர்கள் மிக அபூர்வமாகவே எழுதியுள்ளனர். மனிதனின் சாம்ராஜ்யங்கள் மற்றும் நாகரிகங்களின் முடிவுகள் மனிதர்கள் நிலங்களை எப்படிக் கையாண்டார் கள் என்பதைப் பொறுத்தே நிர்ணயிக்கப்பட்டது என்பதை அவர்கள் புரிந்து கொண்டதாகத் தோன்றவில்லை. வரலாற்றின் மீது சுற்றுச் சூழலின் ஆதிக்கத்தை அவர்கள் கருத்தில் கொண்டபோது, மனிதன் சுற்றுச்சூழலை மாற்றியோ அல்லது நாசமாக்கியோ வந்திருக்கிறான் என்பதைக் குறிக்கவில்லை.

அருமையான சுற்றுச்சூழலை நாகரிக மனிதன் எப்படி நாசமாக்கினான்? அவன் இயற்கை வளங்களை அழித்தே வந்திருக்கிறான். மலைப் பகுதிகளிலும் சமவெளிகளிலும் இருந்த மரங்களை வெட்டியும், எரித்தும் இருக்கிறான்.கால்நடைகளுக்காக பெரும் புல்வெளிகளை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்தி அழித்திருக்கிறான். ஏராளமான வன விலங்குகளையும், நீர் வாழ் உயிரினங்களையும் அழித்துள்ளான். மண் அரிப்பைத் தடுக்காமல் விளை நிலங்கள் மற்றும் புவியின் மேற்பரப்பை கொள்ளையிட மண் அரிமானத்தை அனுமதித்திருக்கிறான். தனது நீர் நிலைகளையும், பாசன வாய்க்கால்களையும், நீறூற்றுகளையும் மண் அரிமானத்தினால் அடித்துக் கொண்டு வரப்பட்ட மண்ணைக் கொண்டு சீரழிய அனுமதித்துவிட்டான். எளிதில் கிட்டக்கூடிய உலோகங்களையும், கனிமங்களையும் பெரும்பாலும் வீணடித்துவிட்டான். அவனாலேயே அவனது நாகரிகம் அழிந்தது அல்லது வேறு இடத்திற்

குப் புலம் பெயர்ந்தது. இப்படியான நாசகரமான வழி களை பத்திலிருந்து முப்பது வகையான நாகரிகங்கள் பின்பற்றி இருக்கின்றன

இந்த 'சுற்றுச்சூழல் பிரச்சினை' எப்போதும் சொல்லப் படுவதைப் போல் புதிதானதல்ல. இருந்தாலும் இன் னும் இரண்டு வேறுபாடுகளுண்டு. முன்பிருந்ததை விட தற்போது உலகம் எங்கும் மக்கள் தொகை அடர்ந்து காணப்படுகிறது. இடம் பெயர்ந்து செல்ல புதிய இடங் களில்லை. மாற்றத்தின் வேகம் மிகவும் அதிகமாகியுள் ளது.

முன்னர் இருந்த நாகரிகங்களுக்கு என்ன நேர்ந்தி ருந்தாலும் நவீன மேற்கத்திய நாகரிகம் இயற்கையை சார்ந்திருக்கும் நிலையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண் டுள்ளது என்றொரு நம்பிக்கை இன்றிருக்கி றது. 'அணு விஞ்ஞானிகளின் செய்தி மடல் ' (Bulletin of Atomic Scientists) என்ற இதழின் பொறுப்பாசிரியர் யூஜின் ராபி னோவிச் இப்படிக் கூறுகிறார்:

"நமது உடலில் வாழ்ந்து வரும் பாக்டீரியாக்களின் மறைவு புவியில் மனிதன் தொடர்ந்து வாழக்கூடிய உயி ரியல் தன்மையை அச்சுறுத்தியுள்ளது. பூமியின் எஞ்சி யுள்ள உயிரினமாகக் கூட மனித இனம் வாழ முடியாது என்பதற்கான திருப்தியளிக்கக்கூடிய எந்த நிரூபணமும் இல்லை. கனிமச் சேர்மங்கள்(inorganic ) பொருட்களி லிருந்து உணவுப் பொருள்களை தயாரித்துக் கொள்ள முடியும் என்ற நிலை வரும்போது அவன் தற்போது தனது உணவுக்காக சார்ந்திருக்கும் தாவரங்களை விட்டு விடுதலையாக முடியலாம்.

நான் எனது சொந்தக் கருத்தாகக் கூறுகிறேன், தாவரங் களையும் மற்ற விலங்கினங்களையும் சாராத வாழ்க்கை என்ற ஒன்றை நினைக்கும்போது பெரும்பான்மை சமூ

கத்திற்கும் உதறல் எடுக்கும். ஆனால் நியூயார்க் சிகாகோ, டோக்கியோ, லண்டன் போன்ற நகரங்களில் மனிதர்கள் எலி, சுண்டெலி, கரப்பான் பூச்சி போன் றவைகளை உண்ணுவதை விட்டு விட்டு வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.

யூஜின் ராபினோவிச், சமீப காலத்தில் இயற்கை சுற் றுப் புறவியலின் புனிதத்தையும், அதன் நிலைத்தன்மை யைக் குறித்தும், மனிதனால் சுற்றுச் சூழலுக்கு ஏற்படும் அபாயம் குறித்தும் பல்வேறு புகழ்பெற்ற அறிவியலறிஞர் களின் பகுத்தறிந்த கருத்துக்களை ஆராய்கிறார்.

"பகுத்தறிவு", "புனிதம்", என்றால் என்ன? மனிதன் இயற் கையின் எஜமானனா அல்லது அதன் குழந்தையா? தாவரங்களையும் விலங்குகளையும் தவிர்த்துவிட்டு, உணவுப் பொருளை அனங்ககப் பொருட்களிலிருந்து தயாரித்துக் கொள்ள பொருளாதார ரீதியில் முடியுமே யானால், மனித நாகரிகம் மற்றும் அதன் புவிப்பரப்பு டன் தொடர்பு இல்லாமல் போய்விடும், அல்லது அந்த தொடர்பு இருக்குமா? இந்தக் கேள்விகள் ஒன்றைக் கூறுகின்றன, "நிலத்தின் முறையான பயன்பாடு என்பது தொழில்நுட்பம் அல்லது பொருளாதாரத்தை சார்ந்த தல்ல; மாறாக அது மெய் விளக்க இயலைச் சார்ந்தது.

எப்போதும் சிலவற்றை நாம் அவற்றுக்காகச் செய்ய வேண்டி இருக்கிறது. மற்றும் சிலவற்றை வேறு பயன்பா டுகளுக்காக நாம் செய்யும்படி இருக்கிறது. தீர்வு என் பதற்கும் தீர்வுக்கான கருவி அல்லது வழி என்பதற்கு மான வேறுபாடு ஒரு சமூகம் அறிந்து கொள்ள வேண் டிய மிக முக்கியமானதொன்றாகும். இதனைக் குறித்து சரியானதொரு பார்வையையும் மனிதன் கொண்டிருக்க வேண்டும். நிலம் என்பது வெறுமனே ஒரு உற்பத்திக் கருவியா அல்லது அதற்கு மேலான ஒன்றா? தனக்

குள்ளே ஒரு முடிவைக் கொண்ட ஒன்றா? நான் இங்கே "நிலம்" என்று குறிப்பிட்டது, அதில் உள்ள உயிரினங் களையும் சேர்த்துதான். எதையும் வெறுமனே செய்வ தென்பது பயனளிக்கும் ஒன்றாகக் கணக்கிடப்படாது. உதாரணமாக நாம் அனைவரும் நம்மை சுத்தமாக வைத்துக் கொள்ள முயல்கிறோம். ஏன்? வெறும் சுகா தாரத்தைக் கணக்கில் கொண்டு மட்டுமா? இல்லை இங்கே சுகாதாரம் என்பது இரண்டாம்பட்சம்தான். தூய்மை என்பதை மதிப்புமிக்க ஒரு குணாம்சமாக, நெறியாக நினைக்கிறோம். அதன் மதிப்பீடுகளை நாம் கணக்கிட வேண்டாம்; இதில் பொருளாதார நுண்க ணக்கியல் வருவதில்லை. தூய்மைப் படுத்திக் கொள் வது என்பது பொருளாதார ரீதியில் பயனற்றது என வாதிடக்கூடும். தூய்மைப் படுத்திக் கொள்வதென்பது சுத்தம் என்பதைத் தவிர ஒன்றையும் உற்பத்தி செய்யா மல் நேரத்தையும், பணத்தையும் செலவிடுவதாகும். பல செயல்கள் பொருளாதார ரீதியில் பயனற்றவை. ஆனால் அவை செய்யப்படுகின்றன. இதனைக் கையாள பொரு ளாதார நிபுணர்கள் எளிய வழிகளைக் கொண்டுள்ள னர். அவர்கள் மனிதனின் அனைத்துச் செயல்பாடு களையும் “உற்பத்தி" மற்றும் "நுகர்வு என்பனவற்றுள் பகுத்து வைத்துள்ளனர். “உற்பத்தி” என்ற தலைப்பின் கீழ் உள்ள அனைத்தும் பொருளாதார நுண் கணக்கிய லுக்குள் வருவது, "நுகர்வு" என்ற தலைப்பின் கீழ் வரும் எதுவும் நுண்கணக்கியலுக்குள் வராதது. மனிதனே உற்பத்தியாளனாகவும், நுகர்வோராகவும் இருப்பதால், உண்மையான வாழ்க்கையில் இந்த வகை பிரித்தல் சரி யான தோற்றத்தில் இருக்காது. ஒரு தொழிற் சாலை யில் பணிபுரியும் தொழிலாளி சில வசதிகளை நுகர்கி றான். இந்த வசதிகள் குறைகிறபோது, பணியை தொடர

முடியாமலாகிறான் அல்லது மறுக்கிறான் தண்ணீரையும் சோப்பையும் பயன்படுத்தும் ஒரு மனிதன் மையை உரு வாக்குகிறான் என்று சொல்லப்படலாம்.
சில வசதிகளையும் சௌகர்யங்களையும் பெ கொள் ளக்கூடிய நுகர்வோரை நாம் உருவாக்குகிறோம். இருந்த போதும் "உற்பத்தியில் ஈடுபட்டுள்ள ஒருவர் இதே வசதியைக் கோரும்போது, அதனைப் பொருளா தார ரீதிய பயனற்றது என்றும், அந்த போதாமையை சமூகத்தால் ஏற்றுக்கொள்ள இயலாது என் அவரி டம் சொல்லப்படுகிறது. வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமெனில் மனிதன் உற்பத்தியாளனாக இருக்கி றானா அல்லது நுகர்வோனாக இருக்கிறானா என்ப தைப் பொறுத்தே ஒவ்வொன்றும் அமைகிறது. உற்பத்தி செய்யும் மனிதன் முதல் வகுப்பில் பயணம் செய்தாலோ அல்லது சொகுசுக்காரைப் பயன்படுத்தினாலோ அது பணத்தை வீணடிக்கும் செயல் என்று சொல்லப்படுகி றது. ஆனால் அதே மனிதன் இன்னொரு வகையில் நுகர்வோனாக இவற்றைச் செய்யும்போது அது உயர்நி லையிலான வாழ்க்கையின் அடையாளம் என்றழைக் கப்படுகிறது. இந்த இரு கூராக்கும் இரட்டை நிலையை வேறெங்கும் இருப்பதைவிட நிலம் சம்பந்தப்பட்டவைக ளில் நிறைய காண முடியும். தனது செலவினங்களைக் குறைத்துக் கொண்டு சாத்தியமான அனைத்து வழிக ளிலும் தனது திறனை அதிகரித்துக் கொள்ள வேண் டிய நிலை யிலுள்ள விவசாயி உற்பத்தியாளனாகவே கருதப்படுகிறான். மனிதனை நுகர்பவனாகக் கொண்டு, விவசாயி மண் வளத்தை அழித்து நில அழகைக் கெடுத்து, மக்கள் தொகையை நகரத்தை நோக்கி விரட்டி நகர்ப்புறங்களில் கூட்டம் அதிகமாகச் செய்தா லும் அவன் உற்பத்தியாளனாகவே கருதப்படுகிறான்.

தங்களது சொந்த உற்பத்தியை நுகர்வதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாத நிலையில் இன்று ஏராளமான விவசாயிகள், உணவு உற்பத்தியாளர்கள், தோட்டப்பயிர் உற்பதியாளர்கள் உள்ளனர். உற்பத்தியாளரான மனி தனால் வாங்கக் கூடிய பெற்றுக்கொள்ளக் கூடியவை ஒன்றாகவும், நுகர்வோரான மனிதனால் வாங்கக் கூடிய பெற்றுக் கொள்ளக் கூடியவை வேறொன்றாகவும் இருக் கிறது.

ஆனால், இரண்டுமே மனிதர்களாக இருப்பதால் எந்த மனிதன் அல்லது சமூகம் பெற்றுக் கொள்ள முடியும் என்ற கேள்வி தீர்வற்ற குழப்பத்தில் விட்டுவிடும்.

நிலத்தையும் நிலத்தின் மீது வாழும் உயிரினங்களையும் உற்பத்திக் காரணிகள் என்பதாகக் கருதப்படாதவரை இந்தக் குழப்பத்திலிருந்து விடுதலையே இல்லை. இந்த உற்பத்திக் காரணிகளுள் இயற்கை என்பது இரண் டாம் பட்சம்தான். இயற்கை தனக்குள்ளே முழுமையா னது. அது நுண் பொருளியலால் ஆனது. எனவே அது ஒருவிதத்தில் புனிதமானதுதான். மனிதன் அதனை படைக்கவில்லை. தன்னால் உருவாக்க இயலாத, தன் னால் படைக்க இயலாத, தன்னால் மீண்டும் உரு வாக்க இயலாத இயற்கையை, தானே உருவாக்கிய வைகளைப்போல கையாள்வது பகுத்தறிவுடன் கூடிய செயல் அல்ல. தன்னால் மீளுருவாக்கம் செய்யவியலாத ஒன்றை அழிப்பதும் பகுத்தறிவுடன் கூடிய செயல் அல்ல. உயர்வகை விலங்கினங்களின் பயன்பாட்டின் காரண மாக, அவற்றிற்கு பொருளாதாரம் சார்ந்த மதிப்பு உண்டு. மனிதனால் தயாரிக்கப்பட்ட கார் என்னிடம் உண்டு என்றால், அதனைப் பராமரிக்காமல் கேடாகிப் போகும் படி பயன்படுத்தலாம் என்ற வாதம் சரி. நான் அப்படிப் பயன்படுத்துவது பொருளாதார ரீதியில் பயனளிக்கக்

கூடியதாகவும் இருக்கலாம். அப்படியானால் என்னை எவரும் இது குறித்து விமர்சிக்க முடியாது.
எனவே கார் போன்ற மனிதத் தயாரிப்புகளுக்குப் புனிதம் ஏதுமில்லை. ஆனால் நான் ஒரு கன்றுக்குட்டி அல்லது கோழி போன்ற உணர்ச்சியுள்ள உயிருள்ள ஒன்றை காரைப் பயன்படுத்துவதைப் போன்று பயன்படுத்த அனுமதிக்கப்பட்டுள்ளேனா? அவைகளை கெட்டழிந்து கெட்டழிந்து போகும்படி செய்ய அனுமதிக்கப் பட்டுள்ளேனா?
இந்த கேள்விகளுக்கு அறிவியல்பூர்வமாக பதிலளிக்க முனைவது பயனற்றது. அவை அறிவியல் கேள்விகள் அல்ல. மாறாக மெய் விளக்க இயகேள்விகள். பயன்பாட்டின் அடிப்படையில் "காரையும்", "விலங்கையும்" சமமாகக் கருதுவது, மெய் விளக்க இயலின்படி மிகத் தவறாகும். அவற் றின் இருத்தலியலின் தரவரிசைப்படி அது மிக தவறாகும். மெய் விளக்க இயலை ஏற்றுக் கொள்ள உதவம் மதரீதியான விஷயங்களை தற்போதைய மதநிந்தனைச் காலம் பொருட்படுத்துவதில்லை, மதிப்பதில்லை. விலங்கு களுடன் குறிப்பாக வீட்டு வளர்ப்புக் கால்நடைகளுடன் மனிதனுக்குள்ள உறவு மிகவும் கொடுமையானதாக எக்காலத்திலும் இருந்திருக்கிறது. புனிதமானவர்கள் மகான்கள் எவரும் எக்காலத்திலும் மனிதனைவிட கீழ் உயிர்களிடத்து கொடூரமாக நடந்ததேயில்லை . மாறாக அவர்கள் விலங்குகளிடம் மிகுந்த அன்புடனேயே இருந்திருக்கிறார்கள். ஏராளமான கதைகள் தன்னைவிட கீழ் உயிர்களின் மீது அன்பு காட்டி அவற்றைக் காத்து மகிழ்ச்சியாக வைத்திருப்பது குறித்து உள்ளன.
அறிவியலின் பெயரால் மனிதனை குரங்கிலிருந்து பிறந்தவன் எனவும், அணுக்களின் எதிர்பாராத சம்பவத்தால்

உருவானவன் என்றும் சொல்லி வைக்கப்பட்டுள்ளான் என்பது சுவாரஸ்யமானது. கார்பன், ஹைட்ரஜன், ஆக்ஸிஜன், நைட்ரஜன் மற்றும் பாஸ்பரஸ் ஆகியவற்றின் மூலக்கூறுகளால் ஆன, ஆறடி உயரமுள்ளவன் என்று மனிதனைப் பற்றி பேராசிரியர் ஜோஷ்வா லெடர்பெர்க் கூறுகிறார். நவீன மனிதன் தன்னை அடக்கமானவன் என நினைக்கிறான். தனக்கு உதவியாக வாழும் விலங்குகளை இன்னும் அடக்கமாக தனக்கு சேவை புரிய வேண்டும் என்று நினைக்கிறான். அவற்றை இயந்திரங்களைப் போன்றே கையாள்கிறான். கெடுதல் குறைவாக உள்ளவர்கள் அல்லது குறைவான நவீனத் தன்மை வாய்ந்தவர்கள் வேறு விதமான எண்ணங்களைக் கொண்டிருக்கிறார்கள்.

மியான்மார் (பர்மா) நாட்டிலிருந்து ஹெச்.ஃபீல்டிங்கால் இப்படி சொல்கிறார்...

"பர்மியர்களுக்கு மனிதர்கள் மனிதர்களே; விலங்குகள் விலங்குகளே; மனிதர்களே உயர்வானவர்கள். ஆனால் மனிதர்களின் இந்த உயர்வான நிலை விலங்குகளைக் கொல்லவோ அல்லது கொடுமையாக நடத்துவதற்கோ அவனுக்கு அனுமதி தருகிறது என்று அவன் கொள்வதில்லை. மாறாக மனிதன் மற்ற உயிர்களைவிட உயர்வானவனாக இருப்பதால், அவற்றின் மீது அன்பு பாராட்டி, மிகுந்த அக்கறைகாட்டி ஆதரவாய் அவற்றுடன் எப்படி முடியுமோ அப்படி நன்றாக நடந்து கொள்ள வேண்டு மென்று நினைக்கிறான். பர்மியர்களின் இந்தத் தன்மை பின்பற்ற வேண்டிய உயர்தன்மை வெறும் வார்த்தைகளல்ல, அவனுக்குப் பொருள் தெரியும்"

புனித தாமஸ் அக்கினாஸ் எழுதுகிறார், "விலங்குகள் மீது மனிதன் அன்பு பாராட்டினால், தனது சக மனிதர்களுடன் அன்பு பாராட்டும்படி செய்பவன் ஆகி

றான்". இந்த நம்பிக்கைகளின் எல்லாவற்றையும் பெற்றுக் கொள்ள முடியுமாவென்று எவரும் கேள்வி எழுப்பியதில்லை. உயர் மதிப்பீடுகளின்படி, முழுமையான நிலையில், பெற்றுக் கொள்வது என்ற கேள்விக்கே இடமில்லை.

விலங்குகளுக்கு பூமி எப்படியோ, சந்தேகமில்லாமல் பூமிக்கு விலங்குகளும் அப்படியே. கவனமின்மையும், பேராசையும் நாகரிகங்கள் அழிந்து போகும் அளவிற்கு பூமியை நாசமாக்கியுள்ள போதும், பூமியின் கருணையும், நுண் பொருளாதார மதிப்பையும் குறித்து எந்த வித மரபு சார்ந்த போதனைகளுமில்லை. இந்த போதனைகள் எங்கெல்லாம் கவனம் பெற்றனவோ, அங்கெல்லாம் நாகரிகங்கள் ஆரோக்கியமான நிலையையும், முழுமையையும் அடைந்தன. மாறாக, எங்கெல்லாம் பூமி குறித்த கவனம்

இல்லையோ, அங்கு நோயுற்ற மண், நாகரிகத்தின் அனைத்து காரணிகளையும் நோயுற வைத்தது.

நம் காலத்தில், வேளாண்மைக்கு தொழிற்சாலைக் கொள்கைகளைப் பயன்படுத்த நகர்வாழ்மக்கள் முயற்சி செய்வதில் இருந்து மண்ணிற்கு மட்டுமல்லாமல், நாகரிக முழுமைக்குமான அபாயம் விளைகிறது. இதனை ஐரோப்பிய பொருளாதார அமைப்பின் துணைத்தலைவர், டாக்டர் சீக்கோ எல் மான்ஷால்ட் இப்படிக் கூறுகிறார்: "சமூகத்தில் வேகமான மாற்றங்களை எடுத்துக்கொள்ளாத ஒரு குழுவாக விவசாயிகள் இருக்கிறார்கள் விவசாயிகளில் பெரும்பான்மையானவர்கள் விவசாயத்திலிருந்து நகரங்களின் தொழிற்சாலை தொழிலாளர்களாக மாறவேண்டும். ஏனெனில் தொழிற்சாலையில் பணியாற்றுபவர்கள், கட்டிடம் கட்டுபவர்கள் மற்றும் நிர்வாகப் பணியில் ஈடுபடுபவர்

கள் வாரத்தில் ஐந்து நாட்களே வேலை செய்கின் றனர், ஆண்டு விடுமுறையாக இரண்டு வாரங்களை அனுபவிக்கின்றனர். விரைவில் இது இரண்டு மடங் காகக் கூடும். ஆனால் விவசாயியோ வாரத்தின் ஏழு நாட்களும் பணியாற்ற வேண்டியதிருக்கிறது. ஏனெ னில் 'ஐந்து நாட்கள் பசு' இன்னும் கண்டுபிடிக்கப்ப டவில்லை. விவசாயிக்கு விடுறையே இல்லை". மான் ஷால்டின் திட்டப்படி அனைத்து குடும்ப விவசாயத்தை யும் ஒன்றிணைத்து பெரும் விவசாயப் பண்ணையாக ஒரு தொழிற்சாலை போன்று மாற்றி சமூகத்தின் விவசா யிகள் எண்ணிக்கையைக் குறைக்கலாம். முதிய விவ சாயிகளுக்கு உதவிகள் செய்து இளைஞர்கள் விவசா யத்தை விட்டு விலக வைக்கலாம்.

இவரின் திட்டத்தில், விவசாயம் ஐரோப்பாவின் 'தொழிற்சாலை' என்றே பொதுவாகக் குறிப்பிடப்படுகி றது. விவசாயம் என்பது உண்மையில் ஒரு தொழிற் சாலை போன்றதா அல்லது மிக முக்கியமான வேறு எது வுமா என்ற கேள்வி எழுகிறது. இந்தக் கேள்வி நுண் இயற்பியல் சார்ந்ததா அல்லது நுண் பொருளியல் சார்ந் ததா என்ற கேள்வி பொருளாதார நிபுணர்களால் எழுப் பப்படவேயில்லை .

விவசாயத்தின் அடிப்படைக் கொள்கை வாழ்க்கை. உயிரினங்களுடன் சம்பந்தப்பட்டு செயல்படக்கூடியது. வாழ்க்கைச் செயல்பாடுகளின் விளைவுகளே அதன் உற்பத்தி. அந்த உற்பத்தியின் மூலம் உயிர்ப்புள்ள மண் ணின் ஒரு கன சென்டிமீட்டர் விளைநிலத்தில் மில் லியன் கணக்கான உயிரிகள் உள்ளன. இதனை முழு மையாகக் கணக்கிடுவதென்பது மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்டதாகும். ஆனால் நவீன தொழில்களின் கொள்கையோ, மனிதனால் உருவாக்கப்பட்ட உயிரற்ற

வைகளின் மீது செயல்படும் மனிதனால் உருவாக்கப் பட்ட செயல்முறைகளைக் கொண்டது. தொழிற்சாலை என்பது உயிரினங்களை இல்லாதொழிப்பதை அடிப் படையாகக் கொண்டது. இயற்கைப் பொருட்களை விட, மனிதனால் உருவாக்கப்பட்டவையே சிறந்ததாக முதலில் தேர்ந்தெடுக்கப்படுபவையாக இருக்கின்றன. ஏனெனில் நம்மால் அவற்றை அளக்கவும் தரக்கட்டுப் பாட்டை மேற்கொள்ளவும் முடியும். மனிதன் போன்ற உயிரினங்கள் பணிபுரிவதைவிடவும், மனிதத் தயாரிப் பான இயந்திரங்கள் நன்றாகவும், எதிர்பார்த்த வகையி லும் செயலாற்றுகின்றன. உயிர்க் காரணிகளை ஒழித் துவிட்டு, மனிதர்களைப் பயன்படுத்தினாலும் உற்பத்தி செயலை இயந்திரங்களைச் சார்ந்ததாக மாற்றுவதே தொழிற்சாலைகளின் உயர் லட்சியம். ஆல்பிரட் நார்த் வித்தெட் சொல்கிறார், "வாழ்க்கை என்பது பிரபஞ்சத் தின் மீண்டும் செயல்புரியும் செயல்பாட்டுக்கு எதிரான ஒரு குற்றமே. எனவே நாம் நவீன தொழிற்சாலை முறை களை வாழும் மனிதன் உட்பட்ட இயற்கையின் முன் னறிவிப்பு செய்திட இயலாத தன்மை, காலம் தவறும் தன்மை, தன்னிச்சையாய் நிகழும் தன்மை, நியதி ஆகிய வற்றுக்கு எதிரானதென வரையறுக்கப்படுகிறது".

வேறு விதமாக சொல்ல வேண்டுமெனில் விவசாயம் மற்றும் தொழிற்சாலைகளின் அடிப்படைக்கொள்கை கள், ஒன்றுக்கொன்று இணைந்து செல்ல முரண்பட் டவை ஆகும். இணை சேரவியலாக எதிரெதிர் விஷ யங்களால் உருவான இறுக்கம் கொந்தளிப்பையுமே வாழ்க்கை கொண்டிருக்கிறது. மரணம் இல்லை எனில் வாழ்க்கை அர்த்தமற்றத்தை போல, இந்த இரண்டு எதி ரெதிர் விஷயங்கள் தேவையாக இருக்கின்றன. எனவே, விவசாயம் என்பது துறை இல்லை எனில் அது

அர்த்தமற்றது. ஆனாலும், விவசாயம் முதன்மையானது. தொழில்துறை இரண்டாம் பட்சமானது. இதன் பொருள் என்னவெனில் தொழில்கள் இல்லாமல் மனித வாழ்வு தொடரும்; ஆனால் விவசாயம் இல்லாமல் தொடரவி யலாது. நாகரிகத்தளத்திலிருந்த மனித வாழ்க்கைக்கு இந்த இரண்டு கொள்கைகளுக்கும் இடையிலான ஒரு சமநிலை தேவைப்படுகிறது. விவசாயம் மற்றுமொரு தொழில்துறை என்ற கண்ணோட்டம் இந்த சமநி லையை அழித்து விடுகிறது.

சர்வதேச அளவில் பிரபலமான சில நிபுணர்கள் சொல் கிறார்கள்.

"உலகில் வேறுபட்ட பகுதிகள் தங்களின் தட்பவெப்ப நிலை, மண்வளம் மற்றும் தொழிலாளர்களுக்கான செலவு இவற்றின் அடிப்படையில் சில குறிப்பிட்ட உற் பத்திகளில் சாதகங்களைப் பெற்றுள்ளன. விவசாயத் தொழிலுற்பத்தியில் கவனம் செலுத்தும் தொழிலாளர்க ளின் மூலம் எல்லா நாடுகளும் பலன் அடைகின்றன. இதன் விளைவாக விவசாயம் அதிக வருமானம் பெறு கிறது. நாட்டின் முழுப் பொருளாதார அளவில் செலவி னங்கள் குறைகின்றன. அதுவும் குறிப்பாக தொழில்து றைக்கு. விவசாயத்தைப் பாதுகாக்கும் அடிப்படை நியா யத்தைக் காண முடிய வில்லை."

அப்படி எனில் வரலாறு நெடுகிலும் 'விவசாயத்தைக் பாதுகாத்தல்' என்பது செயலுக்கு வரவில்லை ஒரு விதி என்ற அளவிலேதான் உள்ளது என்பது புரிந்து கொள்ள இயலாததாக உள்ளது. வருமானத்தைப் பெருக்கி

செலவுகளைக் குறைப்பது என்பதை விட விவசாய பணிகளில் நிறைய பேர் ஈடுபட்டுள்ளனர். மனிதனுக் கும் இயற்கைக்கும் இடையிலான முழு உறவும். சமூகத் தின் வாழ் நிலையும், ஆரோக்கியமும், மகிழ்ச்சியும் மனி

தர்களுக்கிடையிலான இணக்கமும், உயிரினங்களின் நேசமும் இதனுடன் சம்பந்தப்பட்டுள்ளன. நிபுணர்களின் கருத்துப்படி இவை அனைத்தையும் விடுவதென்பது மனிதன் தன்னைத் தானே விட்டு விடுவதாகும். மனிதனை இதனுடன் இணைக்க நிபுணர்கள் முயன்றாலும், தங்களது கொள்கைகளின் தொடர் விளைவுகளுக்கான விலையை சமூகம் கொடுத்தே ஆக வேண்டும். மன்ஷால்டின் திட்டப் படி, விவசாயத்தொழிலாளர்கள் எண்ணிக்கைக் குறைப்பை வேகமாகச் செய்தாலே விவசாய வருமானத்தைப் பலனுள்ளதாக வைத்துக் கொள்ள இயலும். இது துணிச்ச லான தொடக்கம் என நிபுணர்களால் பாராட்டப்பட்டது. விவசாயம் என்பது முக்கியமாக உணவு உற்பத்தியையே குறிக்கிறது. உணவுப் பொருட்களின் தேவையின் வேகத் துடன் ஒப்பிடுகையில் வருமான அதிகரிப்பின் வேகம் மெதுவாகவே உள்ளது என்பது நன்கு தெரிந்ததே. இதன் காரணமாக விவசாயத்தின் மொத்த வருவாய் அதிகரிப்பு, தொழில் துறையின் வருவாய் அதிகரிப்பை விட குறைவாகத் தான் உள்ளது. வளர்ச்சி வேகத்தை எல்லாவற்றிலும் சமமாக ஆக்க வேண்டுமெனில், விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கை போதுமான அளவில் குறைக்கப்பட்டாலே, சாத்தியமாகும். மற்ற முன்னேறிய நாடுகளில் நிலைமை சாதாரணமாக உள்ளது போல், இந்த சமூகத்தின் சொந்தத் தேவையை இப்போது உள்ள விவசாயிகளின் மூன்றில் ஒரு பங்கினரைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்ள முடிந்ததாக இருக்க வேண்டும்.

நிலம் என்பது விலை மதிப்பற்றது. அதனை நன்கு பராமரித்து வைத்துக் கொள்வது மனிதனின் பெரும் பணியும் மகிழ்ச்சியுமாகும். நிலத்தை நிர்வகிப்பது மனி

தனுக்கு மூன்று குறிக்கோள்களுடன் கூடியது என்று நாம் சொல்ல முடியும். ஆரோக்கியம், அழகு மற்றும் நிரந்தரம் ஆகியவையே அவை. நான்காவது குறிக்கோளாக உற்பத்தி என்பதைக் கொள்ளலாம். இது மற்ற மூன்றில் துணைப் பொருளாகவே கிடைக்கும். விவசாயம் உணவ உற்பத்திக்கே என்பது பண்படாத ஒரு கண்ணோட்டமாகும். விரிந்த கண்ணோட்டத்தில் விவசாயம் என்பது மூன்று பெரும் பணிகளைக் கொண்டது. அவை,

* இயற்கையின் மென்மையான பாகத்தில் மனிதனை அதன் தொடர்பிலேயே வைத்திருப்பது.

* மனித வாழ்வை அறம் நிறைந்ததாக ஆக்குவது.

*உணவுப் பொருட்களையும் பிறவற்றையும் வாழ்க்கை என்ற ஒன்றாக மாற்றுவதற்கு முன்னிலைப்படுத்துவது.

இந்த மூன்றாவது பெரும் பணியை மட்டும் அங்கீ கரித்து மற்ற இரண்டையும் கடுமையான முறையில் சமாளித்துச் செல்லும் ஒரு நாகரிகம் நீண்ட காலம் நிலைத்திருக்கும் என்று நான் நம்பமாட்டேன்.

இன்றைய நிலையில் விவசாயத்தில் ஈடுபட்டு வருபவர்களின் எண்ணிக்கை குறைந்திருக்கிறது. இன்னும் குறையும் என்பதில் நாம் பெருமை கொள்கிறோம். கிரேட் பிரிட்டனின் உணவுத் தேவையின் 60 சதவிகிதம், உழைக்கும் மக்களின் வெறும் மூன்று சதவீதத்தைக் கொண்டு தீர்க்கப் படுகிறது. அமெரிக்காவில் முதலாம் உலகப்போரின்போது தேசத்தின் மொத்த தொழிலாளர்களில் 27 சதவிகிதம் பேர் விவசாயத்தில் இருந்தார்கள். ஆனால் இது இரண்டாம் உலகப்போரின் இறுதியில் 17 சதவிகிதமாகக் குறைந்தது. 1971ஆம் ஆண்டு வாக்கில் இது 4.4 சதவிகிதமாகக் குறைந்தது. இது

நகரம் நோக்கி மக்கள் இடம் பெயர்ந்ததால் விளைந்த தாகும். லூயிஸ் ஹெர்பர் இப்படி எழுதுகிறார்:

மெட்ரோபாலிட்டன் என்ற மாந(ர)கர வாழ்க்கை மனரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும், உயிரியல் ரீதியாக வும் சிதைந்து

வருகிறது. மில்லியன் கணக்கான மக்கள் தங்கள் பொருட்களை எடுத்துக் கொண்டு, தங்களின் சொந்த இடத்தை விட்டுப் போனதே இதற்கு சான்றாக உள் ளது. மெட்ரோபாலிட்டனுடனான தங்களது தொடர்பை துண்டித்துக் கொள்ளாவிட்டாலும், அதற்கு முயலவா வது செய்தார்கள். இந்த முயற்சி கணிசமானது. மாபெ ரும் நவீன நகரங்களில் வாழ்பவர்கள், கிராமங்களில் வாழ்ந்த தங்களது மூதாதையர்களை விட தனிமைப் பட்டுள்ளனர். நகரங்களில் வாழும் மனிதன் மனித வர லாற்றில் எதிர்பார்த்திருக்க வியலாத ஒரு அடையாள மின்மை, ஆன்மிகத் தனிமை, பிளவுபட்ட ஒரு நிலை ஆகியவற்றை அடைந்துள்ளான்.

அவன் என்னதான் செய்கிறான்? அவன் புறநகர்ப் பகு திகளுக்குச் சென்று, ஒரு பயணியாக மாறுகிறான். ஏனென்றால் கிராமப்புற கலாச்சாரம் சிதைந்துவிட்டது. கிராமப்புற மக்கள் தங்கள் நிலத்தை கை விட்டு ஓடு கின்றனர். மெட்ரோ பாலிட்டன் நகர வாழ்க்கை சிதைவ தால் நகர மக்கள் நகரங்களை விட்டு ஓடுகின்றனர்."

டாக்டர் மன்ஷோல்டின் கருத்துப்படி, "பொருளாதார ரீதி யில் செயல்படாவிட்டால் சொகுசு வாழ்க்கையை யாரும் வாழ முடியாது. இதன் விளைவாக எல்லா தளங்களிலும் செல்வவளம் பெற்றவர்களைவிட மற்றெல்லோருக்கும் வாழ்க்கை சகிக்க முடியாததாகி விடுகிறது.

"இயற்கையுடன் இணைந்து வாழும்படி மனிதனை செய்வது விருப்பம் என்பதைத் தாண்டி தேவை என்ற

நிலைக்கு வந்துவிட்டது" என்ற ஹெர்பரின் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். இதனை சுற்றுலா, இயற்கை அழகை ரசித்தல், பொழுது போக்கு செயல்பாடுகள் போன்றவைகளால் சாதிக்க முடியாது. ஆனால் டாக்டர் மான்ஷால்ட் மற்றும் நிபுணர்கள் கூறும் திட்டத்திற்கு நேரதிராக விவசாய அமைப்பை மாற்றி செயல்படுத்துவதன் மூலம் இதனை சாதிக்க முடியும். விவசாயத்தை விட்டு வெளியேறுபவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதற்கான வழியைத் தேடுவதற்குப் பதில் கிராமப்புற அமைப்பை நன்கு மறுகட்டமைக்கும் கொள்கைகளை நாம் உருவாக்க வேண்டும். விவசாய நிலங்களை பலனளிக்கும் விதமாக எல்லோருக்கும் முழு நேரமாகவோ, பகுதி நேரமாகவோ பணிபுரியும்படி உருவாக்க வேண்டும். ஆரோக்கியம், அழகு மற்றும் நிரந்தரம் என்ற மூன்று கொள்கைகளின் அடிப்படையில் நிலத்துடனான நமது அனைத்து செயல்பாடுகளும் அமைய வேண்டும். பெரிய இயந்திரமயம் மற்றும் வீரியமான நச்சு வேதிப்பொருட்களால் உருவாக்கப்பட்டுள்ள விவசாய அமைப்பு, நிலத்துடன் உண்மையான தொடர்பை மனிதன் ஏற்படுத்திக் கொள்வதை சாத்திய மற்றதாக்கிவிடுகிறது. மாறாக நவீன கால அபாயங்களான வன்முறை, அந்நியமாதல் மற்றும் சுற்றுச்சூழல் சீரழிவு போன்றவற்றை இது ஊக்குவிக்கிறது. நலம், நன்மை மற்றும் நிரந்தரம் ஆகியவை விவாதத்திற்குக் கூட தகுதியற்றவையாகின்றன. மனித நன்மதிப்புகளுக்கு, நெறிகளுக்கு எந்தவித முக்கியத்துவமும் இருக்காது என்பதற்கு இதுவும் ஒரு சான்று. அதாவது மனிதனையே மதிப்பதில்லை . ஆராதிக்கப்படும் பொருளாதாரத்தின் தவிர்க்க முடியாத விளைவுகளாய் இவை உள்ளன.

'உண்மையின் சிறப்பு அழகு' என்றால், விவசாயம் தனது இரண்டாவது பெரும் பணியான மனிதத் தன்மையை ஊட்டி, மனிதனை சிறப்பான ஒரு உயிரினமாக மாற்றும் வேலையை இயற்கையின் வாழ்வியல் செயல்பாடுகள் உண்மையாகவும் உறுதியாகவும் விவசாயம் பற்றிப் பிடித்துக் கொண்டால் மட்டுமே சாதிக்க முடியும். அவற்றுள் ஒன்று 'திரும்பி வரும் விதி' அடுத்து 'மாற்று வழி' வேறொன்று. 'அதிகாரப் பகிர்வு' இங்கும் நிபுணர்களின் அறிவுரையும், விஷயங்களின் போக்கும் எதிர் திசைகளில் உள்ளன. விவசாயத்தைத் தொழில்மயமாக்கி தொழிலாளி களைக் குறைக்கும் போக்கை நோக்கிச் செல்லும்போது, விவசாயச் செயல்பாடுகளால் மனிதத் தன்மை பெற்று, உயர்வான நிலையை அடைவதற்குப் பதிலாக, துன்பம் அதிகரித்து இன்னும் அசிங்கமானதாக தரம் தாழ்த்திவிடும்.

இவையெல்லாம் உற்பத்தி செய்யும் மனிதனால் பொருளாதார ரீதியில் பயனற்ற சொகுசு ஆடம்பரங்களைப் பெற்றுக் கொள்ள இயலாததால் வந்தவை. ஆகவே "நுகர்வு வாளனான மனிதனால் மற்றெதையும் விட மிகவும் விரும்பும் நல்வாழ்வு, நற்செயல், நிரந்தரம் போன்ற மிக அத்தியாவசியமானவற்றை உற்பத்தி செய்ய இயலாது. அவற்றின் விலை மிகவும் அதிகமாகிவிடும்.

பொருளாதார ரீதியில் விவசாயம் பலனளிக்கவில்லை என்றால் அது வீழ்ச்சியுறும் ஒரு நிறுவனமாகிவிடுகிறது. ஏன் அதனைத் தாங்கி நிறுத்த வேண்டும்? ஆனால் விவசாயிகளின் வருமானத்தைப் பொறுத்தமட்டில் விவசாயிகள் குறைவாக இருக்கும் பட்சத்தில் அதனைச் செய்ய முடியும். இயற்கையுடன் இசைந்து வாழ்வதிலிருந்து அந்நியப்பட்டுப்போன நகர மனிதர்களின் தத்துவம்தான் இது. அந்தத் தத்துவம் நகர மனிதர்களின்

சொந்த அளவுகோலால் உருவாக்கப்பட்டவை. அவற் றைத் தவிர எதையும் பெற்றுக்கொள்ள முடியாதவை. உண்மையில், எந்த சமூகமும் தன் நிலத்தை அழ காகவும், நலமாகவும், நிரந்தரமாக வைத்துக் கொள் ளக்கூடியது. இதற்கு எந்த தொழில் நுட்பக் கஷ்டங் களும், அறிவில்லாத நிலையும் இல்லை. எதனைத் தேர்ந்தெடுப்பது என்ற நிலையில் பொருளாதார நிபு ணர்களுடன் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியமும் இல்லை. நிலத்தை நிர்வகிப்பதிலும் கால்நடைகளை வளர்ப்பதிலும் , உணவுப் பொருட்களை சேமிப்பதி லும், உணவு பதப்படுத்துதல்களிலும், நகர்மயமாக்கலில் கவனம் செலுத்துவதிலுமுள்ள தவறான செயல்பாடுக ளுக்கு மன்னிப்புக் கேட்கக் கூடிய அளவிற்கு நாம் சுற் றுச் சூழலியல் பற்றி அதிக அளவில் அறிந்து வைத்திருக் கின்றோம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இவை தடுத்து நிறுத்த இயலாத வறுமை யினால் விளைந்தவை அல்ல. ஆனால், நமக்கு எந்தவிதமான நுண் பொருளியல் சார்ந்த அறநெறிகளில் வலுவான நம்பிக்கை இல்லாததே இந்த விளைவுகளுக்குக் கார ணம் இந்த நம்பிக்கையின்மையினால், பொருளாதார நுண் கணிதம் அந்த இடத்தைப் பிடித்துக் கொள்கிற இது எப்படி இருக்க முடியும்? இயற்கை வெற்றி இடத்தை வெறுக்கிறது. ஆன்மவெளி உயர்வான கொள்கையால் நிரப்பப்படவில்லை என்றால், அந்த இடம், அற்பமான பொருளாதார நுண் கணிகத்தினாலான கணக்கிடும் மனநிலையைக் கொண்டு தரம் தாழ்ந்து நிரப்பப்படுகி றது.

கால்நடைகள் மற்றும் நிலத்தின் மீதான சுயநலத்தை, லாபத்தை மட்டுமே குறியாகக் கொண்டுள்ள மனநிலை, தொழில்நுட்ப, நிறுவன, நச்சு வேதிப்பொருள் சார்ந்த,

உயிரியல் சார்ந்தவற்றின் மீது ஏற்படும் கவர்ச்சிகரமான பைத்தியம் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. இந்த விஷயங்கள் அவற்றின் நீண்ட கால பின்விளைவுகளைக் கருத்தில் கொள்ளாமல் செயல்படுத்தத் தூண்டுபவை. மக்கள் என்ற அபூர்வ மூலாதாரத்திற்கு அடுத்தபடியாக விளங்கும் நிலத்தை நாம் எப்படிக் கையாள்கிறோம் என்பதில் நமது ஒட்டு மொத்த வாழ்க்கையும் சம்பந்தப்பட்டுள்ளது. அதற்கு முன், நிலம் சம்பந்தமான நமது கொள்கைகளும் மாறும். தத்துவார்த்த ரீதியிலும் மாற்றங்கள் ஏற்படும். எதனை நம்மால் பெறமுடியும் என்பது கேள்வியல்ல. ஆனால், நமது பணத்தை செலவிட எதனை தேர்ந்தெடுக்கிறோம் என்பதான் என் கேள்வி. நம்மால் நுண் பொருளாதார அறநெறிப் பண்புகளுக்கு மீள முடியுமேயானால் நமது நிலங்கள் மீண்டும் நலம், நன்மைகள் அனைத்தும் பெற்றுவிடும்; மற்ற விலங்குகளைவிட மனிதன்தான் உயர்ந்தவன், ஆனால் தனது உயர் குணத்தை எப்போதும் மறக்காதவன் என்ற பெருமையை மனிதர்கள் மீண்டும் பெறுவார்கள்.

.......

## தொழில்துறைக்கான மூலாதாரங்களும் ஆராய்ச்சியாளர்களின் அலறுகளும்!

இன்றைய நவீன தொழில்களின் மிக வன்மையான தாக்கம் என்ன வென்றால் அது அதிக மூலங்களை எடுத்துக்கொண்டு குறைந்த பலன்களைத் தருவது தான். ஒருவரின் சாதாரண கண்ணோட்டத்தில் நவீன தொழில் துறைகளின் ஆற்றலின்மை தெரிவதில்லை. எனவே அதன் ஆற்றலின்மை கவனத்திற்கு வருவதே யில்லை.

தொழில் துறையில் மிக முன்னேறிய நாடு அமெரிக்கா. அமெரிக்கா உலக மக்கள் தொகையில் 5.6 சதவீதமே கொண்டது. உலக மக்களனைவரையும் அமெரிக்கா வுக்குள் வாழச் செய்தால் அதன் மக்கள் தொகை அடர்த்தி இங்கிலாந்தைப் போன்றிருக்கும். இங்கிலாந் தின் மக்கள் தொகை அடர்த்தி அமெரிக்காவின் மக் கள் தொகை அடர்த்தியை விடப் பல மடங்கு அதி கம். எனவே அமெரிக்காவை குறைந்த நிலப்பரப்புடன் அதிக மக்கள் தொகையைக் கொண்டுள்ள நாடு என்று குறைத்து கூற முடியாது.

அமெரிக்கா இயற்கை வளங்களிலும் குறைபாடு உள்ள நாடு என்றும் கூற முடியாது. இதற்கு முரண்பட்ட வகை யில் மனித வரலாற்றில் எந்த ஒரு பெரிய நிலப்பரப்பும் பெருமளவில் இயற்கை வளங்களைக் கொண்டதாக யில்லை; இயற்கை வளங்கள் சுரண்டப்பட்டு அழிக்கப் பட்டும் கூட.

அமெரிக்காவின் தொழில்துறை அதன் உள்நாட்டு மூலப் பொருட்களை மட்டுமே சார்ந்து இருக்க முடியாது. அது மூலப்பொருடகளுக்காக உலகம் தன் கை கால் களை பரப்பிக் கொண்டுள்ளது. உலக மக்கள் தொகை யில் 5.6 சதவிகிதமே உள்ள அமெரிக்கா. தன் தேவைக் காக உலகின் முக்கிய மூலாதாரங்களில் 40 சதவிகதம் அதற்குத் தேவையாக உள்ளது. எத்தனை ஆண்டுக

ளுக்கு திட்டங்கள் போட்டாலும் அமெரிக்கப் பொருளா தாரம் நாட்டிற்கு வெளியிலிருந்து வரக்க மூலப்பொருட் களையும் எண்ணெய் வளத்துக்கும் ஏங்கி நிற்பது அதிக ரித்துக்கொண்டேதான் இருக்கிறது.

உலகின் 40 சதவிகித மூலப்பொருட்களைப் பயன் படுத்தி 6 சதவீதத்திற்கும் குறைவான மக்களுக்குப் பயன்படும் ஒரு அமைப்பு, தனது மக்களுக்கு நன்மை, நல்வாழ்வு, கலாச்சாரம், அமைதி மற்றும் நல்லிணக் கத்தைத் தருமேயானால் அதனை ஆற்றலுள்ள ஒன்று என்று கூறலாம். இதில் அமெரிக்கா தோல்வியடைந்து விட்டது என்று நான் சத்தியாக சொல்லவில்லை.

அமெரிக்க ஜனாதிபதியின் பொருளாதார ஆலோசகர் கள் அமைப்பின் தலைவராய் இருந்த பேரா. வால்டர் ஹெல்லர், நவீன கால பொருளாதார நிபுணர்களைப் போன்று கூறும் கருத்து இது:

"அமெரிக்க தேசத்தின் தேவைகளை நிறைவேற்ற நமக்கு விரிவாக்கம் தேவைப்படுகிறது. வளர்ச்சியுறாத பொருளாதார நிலையிலிருந்து பொதுத்துறை தனியார் துறை மூலாதாரங்களை நிலம், காற்று, நீர் மற்றும் ஒலி ஆகியவற்றின் மாசுடனான யுத்தத்தில் ஈடுபடுத்துவதை விட, முழு வேலைவாய்ப்புகளுள்ள, நன்கு வளர்ந்த பொருளாதாரத்தின மூலம் யுத்தத்தில் ஈடுபட நல்ல வாய்ப்புகளுள்ளது . வளர்ச்சியில்லாத ஒரு வெற்றிகர மான பொருளாதாரத்தை என்னால் நினைத்துப் பார்க்க முடிய வில்லை" என்று.

ஆனால் அமெரிக்கா வேகமான வளர்ச்சியின்றி வெற் றிகரமாக இருக்க முடியவில்லை என்றால், அமெரிக் காவுக்கு வெளியிலிருந்து மூலாதாரங்களைக் கொண்டு வந்து வளர்ச்சியை வெற்றிகரமாக பெற முடிய வில்லை

என்றால் அமெரிக்காவிற்குப் பின்தங்கியுள்ள 94.4 சதவீத மக்கள் சமூகத்தின் கதிதான் என்ன?
சுற்றுச் சூழல் மாசைக் கட்டுப்படுத்த உயர் வளர்ச்சி தேவை என்றால், இந்த சுற்றுச் சூழல் சீர்கேடே இப் போதுள்ள வளர்ச்சியால் வந்ததுதான் என்ற நிலையில், இன்னும் வளரும் போது இந்த அசாதாரண சூழ்நிலையி லிருந்து வெளிவர என்ன நம்பிக்கை உள்ளது? நிறைய மூலாதாரங்களை உட்கொண்டு குறைந்த அளவு பயன் தரும் தொழில் துறைக்கு உலகில் உள்ள மூலாதா ரங்கள் போதுமானவையாக இருக்குமா என்று கேட்க வேண்டியுள்ளது.
அந்த மூலாதாரங்கள் தேவைக்கேற்ப பெருமளவில் இல்லை என்ற குரல் எங்கும் கேட்டுக் கொண்டே இருக் கிறது. இவற்றுள் மஸாசூஸெட்ஸில் உள்ள தொழில் நுட்பக் கழகத்தின் ஆய்வுக் குழு 'வளர்ச்சிக்கான வரை யறை' (The Limits to Growth) என்ற ஆய்வறிக்கையை "ரோம் கிளப்" என்ற அமைப்பிற்கு அளித்தது. எல்லா வித தகவல்களுடன் உலக வளங்களைப் பற்றிய ஒரு சுவாரஸ்யமான அட்டவணையையும் அது சமர்ப்பித்தது. தற்போதைய பயன்பாட்டு வேகத்தில் இயற்கை வளம் எத்தனை ஆண்டுகள் நீடித்திருக்கும், அதுவே அதிவே கத்தில் மூலாதாரங்கள் பயன்படுத்தப்பட்டால் எத்தனை ஆண்டுகள் நீடித்திருக்கும், அதுவே தற்போதைய அளவை விட ஐந்து மடங்கு அதிகமானால் எத்தனை ஆண்டுகள் நீடித்திருக்கும், ஆகிய விபரங்களை அந்த அறிக்கை கூறுகிறது. இந்த புதுப்பிக்க இயலாத 19 இயற் கைவளங்களின் தகவல்கள் தொழில் துறைக்கு அவசி யமானவை. அந்த அட்டவணையின் கடைசிப் பகுதியில் உலகம் முழுவதும் பயன்படுத்தப்படும் மூலாதாரங்களில்

எத்தனை சதவீதம் அமெரிக்காவால் பயன்படுத்தப்படு கிறது என்ற தகவலுள்ளது. அது பின் வருமாறு:

அலுமினியம்: 42%
நிலக்கரி : 44%
செம்பு: 33%)
குரோமியம்: 19%
கோபால்ட்: 32%)
இரும்பு: 28%
ஈயம்: 25%
மாங்கனீசு : 14%
பாதரசம்: 24%
மாலிப்டினம்: 40%
இயற்கை எரிவாயு: 63%
நிக்கல்: 38%
பெட்ரோலியம்: 33%
தகரம்: 24%
டங்ஸ்டன்: 22%
துத்தநாகம்: 26%
வெள்ளி: 26%
தங்கம்: 26%
பிளாட்டினம்: 31%

இந்த பொருட்களுள் ஒன்றோ அல்லது இரண்டோ மட் டும் அமெரிக்காவின் தேவைக்குப் போதுமான அள வில் உள்நாட்டிலேயே உற்பத்தியாகிறது. இந்த வளங் கள் எப்போது தீரும் என்று மிகுந்த எச்சரிக்கையுடன் ஆராய்ச்சியாளர்கள் அலறுகள்.

"இப்போதைய நுகர்வு வேகத்திலும், அதன் வேகம் பின் னாளில் எப்படி இருக்கும் என்ற கணக்கின்படியும், முக் கியமான புதுப்பிக்க இயலாத இயற்கை வளங்கள் இன்

னும் 100 ஆண்டுகளில் மிகவும் விலை கூடியவையாக இருக்கும்.
நவீன தொழில் துறை, உற்பத்தி நாடுகளுடன் ஒப்பந் தங்களை செய்து கொண்டுள்ளதால் இந்த மூலாதார நெருக்கடிக்கு இன்னும் நிறைய காலம் உண்டு என்ப தில் நம்பிக்கையில்லை.
மூலாதாரங்கள் ஒன்றன் பின் ஒன்றாக மிகவும் அரி தாகி தடை செய்யக் கூடிய அளவுக்கு விலை அதி கமாகிப் போவதால் மிகவும் குறைந்த புவிப் பகுதியி லேயே இயற்கை வளங்கள் குறுகிப் போகும் நிலையில் தொழில் துறைகளின் எதிர்காலம் என்னவாகும் என்ற கடினமான கேள்வியும் எழுகிறது".
இந்த ஆய்வுக்குழு பல்வேறு வகையான கணக்கீடு களை செய்தது பயனுள்ளதுதான். அதே நேரத்தில் முக்கியமான தும் கூட. அளவான உலகின் அளவற்ற தொழில் துறை நுகர்வு வளர்ச்சி (அதிகரிப்பு) என்பது சாத்தியமற்ற ஒன்று என்பது இந்த ஆய்வுக்குழு அறிவ தற்கு எளிதான ஒன்று தான், இவ்வளவு அறிவுள்ள மனி தனால் ஒரு கம்ப்யூட்டரைக் கொண்டு சில கணக்குக ளின் முடிவில் அறிந்து கொள்ள முடியும்.
மூலப்பொருள்களின் மிக அதிக விலை உயர்வு, அவை அபூர்வமாகிப் போவது ஆகியவற்றை இந்த ஆய்வுக்குழு கவனத்தில் கொண்டது போல் நவீன தொழில் அமைப்பு கவனத்தில் கொண்டு அச்சப்படவில்லை. எவ்வளவு வளங்கள் இன்னும் புவியில் இருக்கக்கூடும் என்று எவ ரால் சொல்ல முடியும் சொல்லுங்கள்.மிக சாமார்த்திய மாக திறமையாக எவ்வளவு வளங்கள் உறிஞ்சப்படும். எவ்வளவு வளங்கள் கடல்களிலிருந்து பெறப்படும். எவ் வளவை மறு சுழற்சி செய்ய முடியும்? தேவையே கண் டுபிடிப்புகளின் தாய்தான். நவீன அறிவியலால் ஆதரவ

ளிக்கப்பட்டுள்ள தொழிற் சாலைகளின் கண்டுபிடிப்பு கள், மேற்கண்ட கேள்விகளில் எளிதாக தோல்வியடை யாது.

மறுசுழற்சி செய்ய இயலாத 'ஆற்றல்' என்ற ஒன்றின் கிடைக்கும் தன்மையில் அந்த ஆய்வுக்குழு கவனம் செலுத்தியிருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும்.

ஆற்றல் பற்றி நான் முன்னரே குறிப்பிட்டிருந்தாலும், அத னைப் பற்றி பேசாமல் விடுவது சாத்தியமல்ல. அதன் மையத்தன்மையை அதிக ஊக்கப்படுத்துவதும் சாத்தி யமானதல்ல. ஆற்றல் என்பது இயந்திர உலகிற்கானது என்றாலும், அது மனிதனுக்கானது. ஆற்றல் தோற்றால், அனைத்தும் தோற்கும் என்பது உறுதி.

வாங்கி கொள்ளக் கூடிய விலையில் போது மான முதன்மை ஆற்றல் இருக்கும்வரை முதன்மைப் பொருள்களின் தேக்கம் அற்றுப்போய்விடாது அல்லது மாறிச்செல்லாது என்று நம்பிக்கை கொள்ள காரணங் களில்லை. மற்றொரு வகையில், முதன்மை ஆற்றல் குறைபாடு மேலதிக அளவில் முதன்மைப் பொருட்க ளைக் கோருவது மிகவும் குறைவதால், அவைகளைப் பொறுத்த மட்டிலான இந்தக் குறைபாடு பற்றிய கேள்வி எழுவதில்லை.

இந்த உண்மைகள் முழுவதும் வெளியே தெரிந்தாலும், போதுமான அளவில் ஒப்புக்கொள்ளப்பட்டு போற்றப்ப டவில்லை. நவீன பொருளதாரத்தின் அதிகமான அளவு சார்ந்த நிலை, ஆம் விநியோகக் குறைபாட்டை எண் ணற்ற குறைபாடுகளுடன் ஒன்றாகக் கருதும் போக்கு நிலவுகிறது. அளவுகளின் முறைகளற்ற தரம் சம்பந்தப் பட்ட ஒதுக்கித் தள்ளிய அளவு, சார்ந்த நிலை ஏற்கத்தக் கது. மேலும், ஆற்றல் விநியோகம் குறித்து விவாதிக்கும் நவீன பொருளாதாரம் உண்மையற்ற நிலையில் இருப்

பதும் இதுவும் ஒரு காரணம். எடுத்துக்காட்டாக "நிலக் கரியின் இடத்தை எண்ணெய் பிடிக்கிறது என்று சொல் லப்படும்போது அது அனைத்து எண்ணெய் வளத்தை யும் வேகமாகப் பயன்படுத்தித் தீர்ப்பது என்று ஆகிவி டாதா என்று கேட்டா:;, இப்போது வேகமாக அணுசக்தி யுகத்திற்கு சென்று கொண்டிருக்கிறோம் என்று அமை தியாக சொல்லப்படுகிறது. எனவே, எல்லா எண்ணெய் வளங்கள், படிம வளங்கள் பற்றியும், கவலைப் பட வேண்டாம்..

பல்வேறு அமைப்புகள், ஆராய்ச்சிகள், எண்ணற்ற கணக்கீடுகள் எல்லாம் சேர்ந்து சொல்கிறன, "மேற்கு ஐரோப்பாவின் நிலக்கரித் தேவை குறைகிறது. நிலக்கரி சுரங்கங்களிலிருந்து எப்படி விடுபடுவதே என்பதே பிரச் சினை. ஒட்டு மொத்த பிரச்சினையையும் பார்க்காமல், இந்த ஆய்வுகளின் ஆராய்ச்சியாளர்கள் ஒட்டு மொத்த பிரச்சினையின் எண்ணற்ற பாகங்களை பார்க்கிறார்கள். இவற்றுள் எதனையும் தனியாக முன் கூட்டியே கணிக்க முடியாது. ஏனெனில் ஒன்றை முழுமையாகப் புரிந்து கொண்டாலே, அதன் பகுதிகளைப் புரிந்து கொள்ள முடியும்.

1960- 1970க்குள் ஐரோப்பிய நாடுகள் எரிபொருள் இறக்குமதியை சார்ந்திருப்பது 30- 60 சதவிகிதமாக உயர்ந்து விட்டது. இங்கிலாந்தைப் பொறுத்தவரை இது 25லிருந்து 44 சதவிகதமாக உயர்ந்து விட்டது. 1970லும், அதற்குப் பின்னரும் பொருளாதார நிபுணர்களைக் கொண்ட மேற்கு ஐரோப்பா, நிலக்கரி ஏதோ ஒரு சந் தைப் பொருள் போலவும், லாபம் தரும் வரை உற்பத்தி செய்வது, லாபம் தரவில்லை எனில் உடன் உற்பத்தியை நிறுத்தி மூடிவிடுவது என்பது போல், தங்களது நிலக் கரி தொழிலை நிதானமாக அழித்து ஒழித்து விட்டார்

கள். நிலக்கரிக்கு மாற்றாக என்ன என்ற கேள்விக்கு வருங்காலத்தில் பெருமளவிலான எரிபொருள் மிகக் குறைந்த விலைக்குக் கிடைக்குமென்று உறுதி கூறினர் கள். இது அவர்களது மிகஆசை மட்டுமே.

இது ஏதோ தகவல் குறைபாடுகளினாலோ கொள்கை வகுப்பவர்கள் முக்கியமான உண்மைகளை கவனிக் காது விட்டு விட்டதாலோ சொல்லப்பட்டதல்ல. போது மான முழுமையான தகவல்கள் இருந்தன; எதிர்காலப் போக்கின் தேவை குறித்த சரியான மதிப்பீடுகள் இருந் தன. கொள்கை வகுப்பவர்கள், தாங்கள் அறிந்திருந்த வற்றிலிருந்து சரியான முடிவுகளை எடுக்க சக்தியற்ற வர்களாக இருந்தனர். எதிர்காலத்தில் கடுமையான எரி பொருள் நெருக்கடி வரும் என்று கூறியவர்களின் கருத் துக்கள் கவனிக்கப்படவேயில்லை. எதிர் கருத்துக்க ளும் தெரிவிக்கப் படவேயில்லை. வெறுமனே அந்தக் கருத்துகள் புறந்தள்ளப்பட்டு ஒதுக்கப் பட்டன. அணு சக்தியின் எதிர்காலம் என்னவாக இருக்கும் என்பதை அறிந்து கொள்ள பெரிய அளவில் ஆராய வேண்டிய தில்லை. எண்ணெய்ப் பயன்பாடுபற்றி முன்னர் என்ன சொல்லப்பட்டது?

எண்ணெய் வளம் தீர்ந்துபோய்விடும் என்று கணித்து சொல்லப்பட்டவை எல்லாம் எள்ளி நகையாடப்பட்டன. 1961ஆம் ஆண்டு ஏப்ரலில் நிகழ்த்தப்பட்ட ஒரு உரை இது;

சிலர் 30-50 ஆண்டுகளுக்கு முன்னர் கச்சா எண்ணெய் தீர்ந்துவிடும் என்று சொன்னார்கள். ஆனால், பாருங் கள், தீர்ந்துவிடவில்லை எவ்வளவு வேகமாக எண் ணெய் வளம் பயன்படுத்தப்பட்டாலும் தீர்ந்து போகாது என்று என்றோ தவறான கணிப்பாகச் சிலர் சுட்டிக்காட் டுகின்றனர். எதிர்கால எண்ணெ அணுசக்தி ஆகியவை

பற்றி அளவு கடந்த நேர்மறையான ஒரு நிலையை எடுக்கின்றனர்".

எண்ணெய் உற்பத்தியாளர்கள் தரும் தகவல்களையே எடுத்துக்கொள்கிறேன். எண்ணெய் விரைவில் தீர்ந்துவிடும் என்று அவர்கள் கூறவில்லை. கண்டறியப்படாத எண்ணெய் வளம் பெருமளவில் உள்ளது. அதை கட்டுப்படியான செலவில் கண்டுபிடிக்க இயலும். அது 200,000 மில்லியன் டன்களாக இருக்கும் என்றும் சொல்லப்படுகிறது. அதாவது தற்போதைய ஆண்டு எண்ணெய்ப் பயன்பாட்டைவிட 200 மடங்கு அதிகமாக இருக்கும். தற்போதிருக்கும் எண்ணெய் இருப்பு 40,000 மில்லியன் டன்கள் என நமக்குத் தெரியும். அடுத்து வரும் ஆண்டுகளில் இன்னும் 160,000 மில்லியன் டன் எண்ணெய் கண்டறியப்படும் என்பது மகிழ்ச்சிக்குரியதுதான். சஹாரா பாலை பகுதியில் எண்ணெய் வள இருப்பு 1000 மில்லியன் டன்களாக இருக்கலாம் என்று நிபுணர்கள் கருதுகின்றனர். இந்த அளவு எண்ணெய் இருப்பு பிரான்ஸ் நாட்டின் எண்ணெய்த் தேவைக்கு முன்னால், மிகவும் அதிக அளவுதான்; ஆனால் புதிதாகக் கண்டறியப்படப்போகும் 160,000 மில்லியன் டன் எண்ணெய்க்கு முன்னால் இது ஒன்றுமேயில்லை. இந்த 160,000 மில்லியன் டன் எண்ணெய் வளம் கண்டறியப்படலாம், கண்டறியப்படும் என்று நம்புவோமாக.

இப்போது கண்டறியப்பட்டு நிரூபணமாகியுள்ள எண்ணெய் வளம் 40 ஆண்டுகளுக்குப் போதுமானது. ஒட்டு மொத்த எண்ணெய் வளமும் தற்போதைய பயன்பாட்டு வேகத்தில் 200 ஆண்டுகளுக்குப் போதுமானது. துரதிர்ஷ்டவசமாக எண்ணெய்ப் பயன்பாட்டு வேகம் நிலையானதாக இல்லை. ஆனால் சராசரியாக எண்ணெயம் பயன்பாட்டு வளர்ச்சி 6 அல்லது 7 சதவிகதமாக உள்

ளது. இந்த வளர்ச்சி இப்போது நிறுத்தப்படுமேயானால் நிலக்
கரியை எண்ணெய் ஒதுக்கித் தள்ளி விடுமோ என்ற கேள் வியே இருக்காது. எண்ணெய் உற்பத்தி உலக அளவில் கிட்டமிட்டபடி இருக்கும் என்று ஒவ்வொருவ ரும் உறுதி யாக நம்புவார்கள். உலகம் தொழில் மய மாகி வருகிறது. இதனை நிகழ்த்துவது எண்ணெய் வளம்தான். இந்தச் செயல்பாடு சட்டென்று நின்றுவிடும் என்று எவராலும் கருத முடியுமா? இல்லை எனில், இந்த செயல்பாடு எத்த னை காலம் தொடரும் என்பதை கணக்கிடுவது நல்லது.
பொறியாளர்கள் செய்யும் ஒரு வித கணக்கிடலை செய் யலாம். 7 சதவீத வளர்ச்சி 10 ஆண்டுகளில் எண் ணெய்ப் பயன்பாட்டை இரண்டு மடங்காக ஆக்கி விடும். இந்தக் கணக்கின்படி 1970ஆம் ஆண்டுகளில் 2000 மில்லியன் டன் எண்ணெய் ஒரு ஆண்டுக்கு பயன்ப டுத்தப்படும். (ஆனால் உண்மையில் இது 2273மில்லி யன் டன்னானது) 10 ஆண்டுகளுக்கு இந்தப் பயன்பாடு 15,000 மில்லியன் டன்களாக இருக்கும். நிரூபிக்கப்பட்ட எண்ணெய் இருப்பு 40,000 மில்லியன் டன்கள் என் பதை அப்படியே வைத்துக் கொள்ள, 15,000 மில்லியன் டன் எண்ணெய் வளத்தைப் புதிதாக இருப்பதாக நிரூ பிக்க வேண்டும். ஆண்டு எண்ணெய் செலவை விட 40 மடங்கு அதிகமாகவுள்ள நிரூபிக்கப்பட்ட தற்போதைய எண்ணெய் இருப்பு, ஆண்டு எண்ணெய் செலவு அதிக ரிப்பை வைத்து 20 மடங்காகக் குறைத்து விடும். இந்த வகை வளர்ச்சியில் ஒன்றும் தொடர்ந்த மடத்தனமோ, இயலாமையோ இல்லை. எரி பொருள் குறித்து பேசு கையில் இந்த 10 ஆண்டுகள் என்பது மிகக் குறைந்த கால அளவே. எனவே 10 ஆண்டுக்கான கணக்காக

1980 வரை நாம் பார்த்தால், வேகமான வளர்ச்சி இயலாதது என்பதைப் புரிந்து கொள்ள வேறு கணக்கீடுகள் தேவைப்படாது.

பிரபலமான புவியியலாளர்களால் வெளியிடப்பட்டுள்ள எண்ணெய் இருப்பு அளவு என்பதில் உண்மை இருக்குமே யானால், எண்ணெய்த்துறை அடுத்த 10 ஆண்டுகளுக்கு எதிர்பார்க்கப்பட்ட திட்டமிட்ட வளர்ச்சி வேகத்தைக் கொண்டிருக்கும். அது அடுத்து இருபது ஆண்டுகள் தொடருமா என்பதில் கணிசமான சந்தேகம் இருக்கும்.

1980க்குப் பின்னர் வேகமான வளர்ச்சி என் என்பது நிச்சயமானதாக இருக்கும். இந்த ஆண்டுகள் அல்லது அந்தக் கால கட்டத்தில் எண்ணெய் எப்போதும் இல்லாத அளவுக்கு அதிகமாக இருக்கும். நிரூபிக்கப்பட்ட எண்ணெய் வளத்தின் சரியான அளவு எப்போதும் இல்லாத அளவுக்கு அதிகமாக இருக்கும். உலக எண்ணெய் வளத்தின் இருப்பு முடியும் தருவாயில் உள்ளது என்பதற்கு எந்தத் தகவலும் இல்லை. ஆனால் எண்ணெய் வளர்ச்சி என்பது முடிவுக்கு வந்திருக்கும்.

தொழில்மயமான எண்ணெயை அதிகம் பயன்படுத்தும் இங்கிலாந்தை கணக்கில் கொண்டால், உலகில் எண்ணெய் வளம் தீரும் போது கூட அல்ல, எண்ணெய் வளம் விரிவாவது நின்று போனாலே பெரும் நெருக்கடியில் சிக்கிக் கொள்ளும். இந்த நிலையை அடையும் போது, உலகம் முழுவதும் வளரும் நாடுகள், ஏழ்மையில் உள்ள நாடுகள் தங்களது தேவைக்கான எரிபொருளை தேடும் போது, எண்ணெய்க்கான போராட்டம், ஏன் வன்முறையிலான போராட்டமே தோன்றும். இந்நிலையில் சொந்த உற்பத்தியற்ற அதிகத் தேவையுள்ள நாடுகள் மிகவும் பலவீனமாக உணரும்.

இந்த நிலை வர சற்றே கால தாதமமேற்பட்டால், இந்த துன்பம் சிறிது காலம் கழித்துத் தாக்கும். எண்ணெய பிரச்சினை தோன்றும் போது, நிலக்கரியை விநியோ கிக்க வேண்டிய நிலையில் தேசிய நிலக்கரிக் கழகம் அசட்டையாக இருக்கிறது.

1960களில் விடப்பட்ட இந்த எச்சரிக்கைகள் 1970 வரை கவனிக்கப்படவே இல்லை. ஏளனம் செய்து இகழப்பட் டன. 1970-ல் எரிபொருள் விநியோகத்தில் தட்டுப்பாடு ஏற்பட்டது. உலகில் கண்டு பிடிக்கப்படும் எந்த எண் ணெய் இருப்பும் எதிர்கால நலன்களை அடியோடு மாற் றுபவை எனப் புகழப்பட்டன. இந்த கண்டுபிடித்தல்கள் நடக்காமலேயே இவை புகழப்பட்டன. 1961-ல் செய்யப் பட்ட அனைத்து கணக்கீடுகளும் சரியானவை அல்ல. குறைத்து மதிப்பிடப்பட்டவை என்றொரு விமர்சனமும் இருந்தது.

இன்றும் கூட எந்தப் பிரச்சினையும் இல்லை என்று சொல்லக் கூடிய கணிப்பாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கூறும் புள்ளி விபரங்கள் அவர்கள் சொல் வதை நிரூபிக்க வில்லை என்றாலும், 1960-களில் எண்ணெய் நிறுவனங்களே அழகிய சமாதானங்களைக் கூறிக் கொண்டிருந்தன. மேற்கு ஐரோப்பாவின் பாதிக் கும் மேற்பட்ட நிலக்கரி தொழிற் சாலைகள் அழிந்த பின்னர், எண்ணெய் நிறுவனங்கள் தங்கள் சுருதியை மாற்றிக் கொண்டன. எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகளின் அமைப்பான OPEC பொருட்படுத்தப்பட்ட தில்லை. ஏனெனில் அரேபியர்கள் ஒருவரு டன் ஒருவர் ஒத்துப் போவதில்லை. இன்று OPEC தான் எண்ணெய் விலைகளை நிர்ணயிக்கும் மிகப்பெரிய அமைப்பு. எண் ணெய் இறக்குமதி செய்யும் நாடுகள் ஏற்றுமதி செய் யும் நாடுகளைச் சார்ந்திருப்பது போல, ஏற்றுமதி செய்

யும் நாடுகள் இறக்குமதி செய்யும் நாடுகளை சார்ந் திருக்கின்றன என்று சொல்லப்படுவதுண்டு. இதுவும் சுய ஆசையின் பேரில் சொல்லிக் கொள்ளப்பட்டது தான். ஏனெனில் எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகள் ஒன்றாக, எண்ணெய் உற்பத்தியைக் கட்டுப்படுத்தி தங் கள் வருவாயை பெருக்கிக்கொள்கின்றன. எண்ணெய் இறக்குமதி செய்யும் நாடுகளின் தேவை மிகப்பெரியது. எண்ணெய் விலை ஏறினால், அதன் பயன்பாடு குறை யும் என்று சொல்வோர் உண்டு. எண்ணெய்க்கு மாற்று ஏதும் இல்லை என்பதால், எண்ணெயை சந்தையிலி ருந்து வெளியில் தள்ள முடியாது.

எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள், பணத்தைக் கொண்டுமட்டும் தங்கள் மக்களின் வாழ்க்கைக்கான மூலாதாரங்களை உண்டு பண்ண முடியாது என் பதை உணரத் தொடங்கியுள்ளன. பணத்துடன் கூடவே தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள, நேரமும் கடு மையான முயற்சியும் தேவையாய் இருக்கின்றது. என் பது அழியும் சொத்து. அழியும் வேகம் அதிகம் பொரு ளாதார ரீதியான இருத்தல் சம்பந்தமான வளர்ச்சிக் கான நேரம் மிகவும் குறையும். முடிவு தெளிவானது. எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகளும் இறக்குமதி செய்யும் நாடுகளும் நீண்ட காலம் நன்றாக இருக்க எண்ணெய் வளத்தின் "வாழ்நாளை" எந்த அளவு சாத் தியமோ அந்த அளவு நீட்டித்துக் கொண்டு வேண் டும். எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகளு வாழ்க் கைக்கான வேறு வழிகளைத் தேட வேண்டியிருக்கிறது. இறக்குமதி செய்யும் நாடுகளுக்கோ எண்ணெய்ப் பஞ் சம் ஏற்படும் நிலையில் மாற்று ஏற்பாடுகளை செய்து கொள்ள வேண்டியதிருக்கிறது. எண்ணெய் உற்பத்தி யின் வேகமும், வேகமான நுகர்வும் இரண்டு வகை

நாடுகளுக்கும் பெரும் அபாயமாக உள்ளது. இரண்டு வகை நாடுகளுக்குமிடையில் நீண்ட காலப் பலன் களை மனதில் கொண்டு அடிப்படை இணக்கம் தேவை என்பதைப் புரிந்து கொண்டு நுகர்வுக்கான எண்ணெ யின் ஆண்டுத் தேவையை படிப்படியாகக் குறைத்தால் பெரும் அபாயத்தை தவிர்க்கலாம்.

எண்ணெய் இறக்குமதி செய்யும் நாடுகளை கவனத்தில் கொண்டால், மேற்கு ஐரோப்பாவுக்கும் ஜப்பானுக்குமே பெரிய பிரச்சினைகள் உண்டாகும் என்பது தெளிவு. இதனைப் புரிந்து கொள்ள கம்யூட்டரை கொண்டு பெரிய கணக்கீடுகள் ஏதும் செய்யத் தேவையில்லை .

சமீப காலம் வரை மேற்கு ஐரோப்பா, "மலிவான, அள வற்ற ஆற்றல் யுகத்தில்" நுழைகிறோம் என்ற மாயையில் இருந்தது. 1967-ஆம் ஆண்டு நவம்பரில் எரிபொருள் கொள்கை சம்பந்தமாக வெள்ளை அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது. அதில் "வடக்கு கடலில் இயற்கை எரிவாயு கண்டு பிடிக்கப்பட்டுள்ளது பிரிட்டனின் ஆற் றல் விநியோகத்தில் பெரும் சாதனையாகும். வரக்கூ டிய பெரும் ஆற்றல் கேந்திரமான அணுசக்தி யுகத்தில் நுழைகையில் இதுவும் தொடர்ந்து நிகழ்ந்திருக்கிறது. இவை இரண்டும் இணைந்து வரக்கூடிய ஆண்டுக ளில் ஆற்றல் தேவையின் அடிப்படையிலேயே மாற்றங் களைக் கொண்டுவரப் போகிறது.

இது வெளியிடப்பட்ட ஐந்து ஆண்டுகள் கழிந்தும் கூட,முன்னெப்போதையும் விட அதிகமாக எண்ணெய் இறக்கு மதியை பிரிட்டன் சார்ந்திருக்க வேண்டி இருக் கிறது. 1972-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் சுற்றுச் சூழ லுக்கான அரசு செயலருக்கு அனுப்பப்பட்ட அறிக்கை இப்படியாக தொடங்குகிறது:

"எதிர்கால ஆற்றல் மூலாதாரங்களைக் குறித்து எங்களுக்கு அனுப்பப்பட்டுள்ள விஷயங்கள், இந்த நாட்டிற்கு மட்டுமல்லாது உலகம் முழுமையும் ஆழமான அசௌகரியமான நிலையில் உள்ளதைத் தெரிவிக்கிறது.

படிம எரி பொருள்கள் தீருவது தொடர்பான கணக்கீடுகள் மாறுபடுகின்றன. ஆனாலும் அவை தீரும் காலம் ஒரு அளவுக்குள் வந்துவிட்டது. எனவே திருப்திகரமான மாற்று ஆற்றல் ஒன்றைக் கண்டுபிடித்தே யாக வேண்டும். வளரும் நாடுகளின் பெருமளவிலான தேவைகள், மக்கள் தொகைப்பெருக்கம், விளைவுகளை கருத்தில் கொள்ளாது பயன்படுத்தப்படும் ஆற்றல் மூலாதாரங்கள், எதிர்கால மூலா தாரங்கள் அதிக விலையில் இருக்கும் என்ற நம்பிக்கை, அணுசக்தியினால் உண்டாகும் அபாயம் ஆகியவை பெரும் கவலைக்குள்ளாக்குகின்றன".

இந்தக் கவலை 1960-களில் காணப்படவில்லை. அப்போது பிரிட்டனின் அரைவாசி நிலக்கரித் தொழில்கள் பொருளாதார ரீதியில் பயனற்றவை என்று கைவிடப்பட்டபோது, இந்த கவலை கண்களுக்கு தெரியவில்லை. ஒரு முறை கைவிடப்பட்டதென்றால், எப்போதைக்கும் நஷ்டமானதுதான். கவலைகள் இருந்தாலும், செல்வாக்கு மிகுந்த பகுதியிலிருந்து பொருளாதாரக் காரணங்களுக்காக பாதாளத்தில் விழும்படி நிர்பந்தம் வருகிறது என்பது வேடிக்கையான ஒன்றாகவே உள்ளது.

.......

## அணுசக்தி காக்கவா? அழிக்கவா?

நல்ல நேரத்தில் எதிர்கால ஆற்றல் தேவைகளுக்கு மாற்றாக அணுசக்தி வந்துள்ளது என்று சந்தேகமின்றி மக்கள் கருதுவதே ஒரு திருப்தியான அமைதி நிலவ காரணம். என்ன வந்திருக்கிறது என்பதை ஆராய அவர்கள் சிரமப்படவில்லை. அது புதியது, ஆச்சர்யகரமானது; மிகவும் மலிவானது என்று வாக்குறுதிகள் தரப்பட்டன. எப்படியும் ஒரு மாற்று தேவைதான் அதனைப் பெற்றுக் கொண்டால் என்ன? மனநிலைக்கு தள்ளப்பட்டோம்.

"ஐய்யத்துக்குரிய முன்னேற்றகரமான ஒரு மாற்றம் சந்தேகத்திற்குரியது" என்ற அடிப்படை உண்மையால் பாதிக்கப்படாத வேகமான மாற்றத்தைப் போற்றுவதை பொருளாதார மதம் வளர்க்கிறது. சுற்றுச் சூழல் குறித்த கண்ணோட்டம் உடையவர்கள் மீது நிரூபிக்கும் பொறுப்பு சுமத்தப்படுகிறது; மனிதனின் மீது ஏற்பட்ட காயத்தின் அடையாளத்தைக் அவர்கள் காட்டும் வரை மாற்றம் தொடர்ந்து கொண்டே இருக்கும். மாறாக, மாற்றத்தை அறிமுகப்படுத்துபவரே நிரூபிக்கவேண்டிய பொறுப்பில் உள்ளவர் என்று சாதாரண பொது அறிவு சொல்கிறது. அதனை அறிமுகப்படுத்துபவர் எந்த சேதமும் ஏற்படாது என்பதை செய்து காண்பிக்க வேண்டும். ஆனால் இதற்கு காலம் அதிகம் தேவைப்படுமாதலால் இது பொருளாதார ரீதியில் பயனற்றது. பொருளாதாரத் துறையை தனது தொழிலாகக் கொண்டிருந்தாலும் இல்லையென்றாலும்

பொருளியல் நிபுணர்களுள அனைவருக்கும் சுற்றுப்புறச் சூழலை கட்டாய பாடமாக்க வேண்டும். அப்படிச் செய்தால் சிறிதளவேனும் இயற்கை சமநிலை காப்பாற்றப்படலாம். "பல மில்லியன் ஆண்டுகளாக உருவாகி வளர்ந் சுற்றுச்சூழல் அமைப்பிற்கு சிறப்பான தன்மை இருப்பதாக எண்ண வேண்டும். ஒரு கிரகத்தைப் போல

சிக்கலான தாவரங்களும் விலங்குகளுமான ஒன்றரை மில்லியன் உயிரினங்கள் வாழ்கின்றன. மண் மற்றும் காற்று மூலக்கூறுகளை தொடர்ந்து உபயோகித்து, மீண்டும் உப யோகித்து ஒன்றாக ஒரு சம நிலையில் வாழும் அமைப்பை நோக்கமேதுமின்றி முன்னறிவிக்கப்படாத செயல்களால் முன்னேற்ற முடியாது. இந்த சிக்கலான அமைப்பு முறையில் எந்த மாற்றத்தைச் செய்ய வேண்டுமென்றாலும், கிடைக்கும் உண்மைகளைக் கொண்டு செய்த ஆழ்ந்த ஆராய்ச்சி தேவை. மாற்றங்களைப் பெரிதாக செய்வதற்கு முன்னர் சோதனையாக சிறிய அளவில் செய்து பார்க்க வேண்டும். தகவல்கள் முழுமையாக இல்லாதபொழுது, மாற்றங்கள் இயற்கைச் செயல்பாடுகளுக்கு நெருக்கமாக இருக்க வேண்டும். அந்த இயற்கைச் செயல்பாடுகள் மிக நீண்ட காலமாக வாழ்க்கையை துணைத்து நிற்கும் என்பதற்கு சந்தேகமற்ற சாட்சியங்கள் உண்டு.

இது இப்படிச் செல்கிறது: இயற்கைக்குள் மனிதன் ஏற்படுத்திய மாற்றங்களில், பெரிய அளவிலான அணுப்பிளவே சந்தேகமில்லாமல் அபாயகரமானதும் மிகுந்த கவலைக்குரியதுமாகும். விளைவாக, அயனியாகும் கதிர்வீச்சு சுற்றுச்சூழல் சீர்கேட்டிற்கான மிக முக்கியமான காரணமாகவும் பூமியில் மனிதனின் வாழ்க்கைக்கு மிகப் பெரும் அச்சுறுத்தலாகவும் உள்ளது. மீண்டும் பிரயோகப்படுத்த வாய்ப்பில்லை என்றாலும், சாதாரண மனிதர்களை அணுகுண்டு மிகவும் கவர்ந்துள்ளது. அணுசக்தியை அமைதி வழிக்குப் பயன்படுத்துவதால் மனித இனத்திற்கு ஏற்படுத்தும் அபாயம் இன்னும் அதிகமாக இருக்கலாம். பொருளாதாரத்தின் மீது சர்வாதிகாரம் ஏதும் இருப்பதற்கான தெளிவான உதாரணங்கள் இல்லாமலிருக்கலாம்.

மின் உற்பத்திக்கான நிலையங்களை நிலக்கரி அல்லது எண்ணெய், அல்லது அணுசக்தி இவற்றில் எதை பயன் படுத்துவதாக உருவாக்குவது என்பது பொருளாதார அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படுகிறது. அணுப்பிள வின் காரணமாக மனித வாழ்வுக்கு என நம்ப முடியாத, எதனுடனும் ஒப்பு நோக்க முடியாத அபாயம் குறித்து எந்தவித கணக்கீடுகளும் இல்லை. அது பற்றி ஒரு போதும் குறிப்பிடப் படவுமில்லை. காப்பீட்டு நிறுவனங் கள், அணு சக்தி நிலையங்களுக்கும் காப்பீடு செய்வ தில்லை. எனவே அதன் பொறுப்பை அரசே ஏற்கும்படி சட்டம் கொண்டு வரப்பட்டது. காப்பீடு செய்யப்பட்டா லும் இல்லை என்றாலும் அபாயம் இருந்து கொண்டே இருக்கிறது.

அபாயம் குறித்து எச்சரிக்கும்படியான அதிகாரப் பூர்வ அமைப்புகள் இல்லாமலில்லை. உயிர்வாழும் திசுக்க ளின் மீது ஆல்ஃபா, பீட்டா, காமா கதிர்வீச்சுக்களால் ஏற்படும் விளைவுகள் நன்றாகத் தெரிந்தவைதான். கதிர் வீச்சு துகள்கள் ஒரு உயிரியின் மீது குண்டு களைப் போல் கிழித்துக் கொண்டு உள்செல்கின்றன. அவை ஏற்படுத்தும் சேதம் அந்த கதிர்வீச்சின் அளவு மற்றும் அந்த உயிரியின் பலத்தைப் பொறுத்தது. 1927-ம் ஆண்டு எச்.ஜெ. முல்லர் என்னும் அமெரிக்க உயிரியல் அறிஞர், எக்ஸ் கதிர் தாக்கத்தினால் ஏற்படும் மரபணு மாற்றங்கள் குறித்து பிரபலமான அறிக்கையை வெளி யிட்டார். மரபு சாராதவைகளிலும் கதிர்வீச்சினால் ஏற்ப டும் தாக்கம் பற்ற 1930-களில் அறியப்பட்டது. இந்த கதிர் வீச்சினால் ஏற்படும் ஆபத்து நேரடியாக தாக்கப்படுப வர்களுக்கு மட்டுமின்றி, அவர்களின் சந்ததியினருக்கும் உண்டாகும்.

கதிர்வீச்சின் இன்னொரு பரிமாணம் என்னவெனில், மனிதனால் கதிர்வீச்சுப் பொருட்களை உருவாக்க முடியும். ஆனால் அவனால் ஒருமுறை உருவாக்கப்பட்ட கதிர்வீச்சை குறைப்பதற்கு அவனால் ஏதும் செய்ய முடியாது. கதிர்வீச்சு தொடங்கி விட்டதென்றால் எந்த வேதி வினையாலும், இயற்பியல் செயல்பாடுகளாலும் அதனைக் குறைக்கவோ, கட்டுப்படுத்தவோ முடியாது. காலம் செல்லச் செல்ல தானாக குறையும். கார்பன்-14 என்னும் கதிர்வீச்சுப் பொருளின் கதிர்வீச்சின் அளவு பாதியாகக் குறைய 6000 ஆண்டுகள் ஆகும். ஸ்ட்ரோனியம் -90 கதிர்வீச்சு அளவு பாதியாக

28 ஆண்டுகள் ஆகும். ஆனால் இந்த பாதி கதிர்வீச்சு அளவுக்காலம் எவ்வளவாக இருந்தாலும், சில வகை கதிர் வீச்சுக்கள் கால வரையறையின்றி தொடர்ந்து கொண்டே இருக்கும். இதனைத் தடுக்க ஒன்றுமே செய்ய முடியாது. அந்த கதிரியக்கப் பொருளை பாதுகாப்பான ஏதேனும் ஓரிடத்தில் வைப்பததுன் தீர்வு.

அணு உலைகளால் உருவாக்கப்பட்ட கதிரியக்கக் கழிவுகள் பெருமளவில் இருக்கும் போது, பாதுகாப்பான இடம் எங்கே? பூமியின் எந்த இடமும் பாதுகாப்பானதாக இருக்காது. பெருங்கடல்களின் ஆழமான பகுதிகளில் உயிரினங்கள் ஒன்றும் இருக்காது என்ற கணக்கில், இந்த கதிரியக்கக் கழிவுகளை ஆழ்கடலில் வீசலாம் என்ற எண்ணம் இருந்தது. ஆனால் இந்த எண்ணம் சோவியத் ரஷ்யாவின் ஆழ்கடல் ஆராய்ச்சிகளின் முடிவினால் தவிடு பொடியானது. உயிரிகள் எந்த இடத்தில் வாழ்ந்தாலும் கதிரியக்கப் பொருள்கள் அங்குள்ள உயிரியல் சுழற்சியில் உள்வாங்கப்படும். இந்தக் கதிரியக்கப் பொருள்களை நீர் நிலைகளில் இட்டால், சில மணி நேரங்களில் அவற்றை அந்த நீர் நிலைகளில் வாழும்

உயிரினங்களில் காணலாம். பிளாங்டான், ஆல்கே மற்றும் கடல் வாழ் விலங்குகளுக்கு இந்த கதிரியக்கப் பொருள்களை அடர்த்தியாக்கும் சக்தி 1000 அளவுக்கும், இன்னும் சில வகைகளில் மில்லியன் அளவுக்கும் கூட இருக்கிறது. ஒரு உயிர் மற்றதை உண்டு வாழ்வதால் கதிரியக்கப் பொருள்கள் மனிதனையே மீண்டும் வந்து சேருகின்றன.

கழிவுகளை என்ன செய்வது என்பதில் சர்வதேச சமூகத்தில் இன்னும் எந்த ஒப்பந்தமும் ஏற்படவில்லை. அமெரிக்கா மற்றும் பிரிட்டன் ஆகியவை தங்கள் கழிவுப்பொருட்களை கடலில் கொட்டும் செயலுக்கு பெரும்பாலான நாடுகள் எதிர்ப்பு தெரிவித்த காரணத்தால் 1959-ம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் மொனாக்கோவில் ஏற்பாடு செய்யப்பட்ட சர்வேதச அணுசக்திக் கழக மாநாடு, கருத்து ஒற்றுமை ஏற்படாமல் கலைந்தது. கடலில் உயர்தரமான கழிவுகள் கொட்டப்படுகின்றன. நடுத்தர மற்றும் கீழ்தரத்தில் உள்ள கழிவுகள் ஆறுகளிலும், பூமிக்குள்ளும் கொட்டப்படுகின்றன. பூமிக்குள் கொட்டப்படும் திரவக்கழிவுகள் பூமி நீர் மட்டத்தில் கலந்து மண்ணில் முழுவதுமாகவோ பகுதியாகவோ வேதியியல் ரீதியாக அல்லது இயற்பியல் ரீதியாகக் கதிரியக்கத்தை பரப்புகின்றன என்று அணு சக்திக் கழக அறிக்கையொன்று பளீரென்று சொல்கிறது.

அணு உலைகளே, அவற்றின் செயல்பாடு காலத்திற்குப் பின்னர் பெரிய அளவிலான கதிரியக்கக் கழிவுகளாகின்றன. குறைந்த பொருளாதார முக்கியத்துவமுடைய கேள்வியாக, இந்த அணு உலைகள் எவ்வளவு காலம் நீடிக்கும் என்பது கேட்கப்படுகிறது. காற்று, நீர், நிலம் ஆகியவற்றில் கதிரியக்கத்தைப் பரப்பிக் கொண்டு, வாழ்க்கைக்கு அபாயமாக, நூற்றுக்கணக்

கான ஆண்டுகள், ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நிலைத்து நிற்கும் இந்த அணு உலைகளை, பிரிக்கவோ இடம் மாற்றவோ இயலாத இந்த அணு உலைகளின் நிலைகுறித்து எவரும் வாய் திறந்து விவாதிப்பதில்லை. பெருகிவரும் இந்த சாத்தான் போன்ற உலைகள் எத் தனை இருக்கின்றன, எங்கெங்கும் இருக்கின்றன என் பதைக் குறித்து எவரும் கவலை கொள்ளவில்லை . பூகம்பம், போர்கள், சமூகப் பிரச்சினைகள், பெருங்க லவரங்கள் போன்றவை நடக்கும் என்பது நிச்சயமான தல்ல. ஆனால் பயன்பட்டு காலாவதியான அணு நிலை யங்கள் இப்போது கிடைத்த லேசான பொருளாதாரப் பயன்களை, ஒன்றுமில்லை என்று எதிர்காலம் நினைக் கும்படியான பயனகளை அளித்து, பெரும் அபாயகர மான கண்ணுக்குத் தெரியாத நினைவுச் சின்னங்களாக நிற்கும்.

அதே நேரத்தில், பல்வேறு கதிரியக்கப் பொருள்களின் "அனுமதிக்கப்பட்ட
அதிகபட்ச அடர்த்தி (Maximum prmissible Concentrations - MPC) மற்றும் அனுமதிக்கப்பட்ட அதிகபட்ச நிலை (Maximum Permissible levels - MPL) குறித்து நிர்ணயிப்பதில் எண்ணற்ற அமைப்புகள் முனைந்துள்ளன. மனித உடலால் எந்த அளவு கதிரி யக்கத்தைத் தாங்க முடியும் என்பதை வரையறுப்பதே MPC. ஆனால் கதிரியக்கமும் உயிரியல் சேதத்தை ஏற்ப டுத்தும் தெரிந்ததே. இதன் விளைவுகளில் இருந்து நம் மால் எவ்வளவு மீள முடியும் என்பது நமக்குக் தெரியாது. ஆகையால் நாம் எந்த அளவு கதிரியக்கப் பொருட் களை ஏற்கிறோம், அதாவது ஏற்கத்தக்கது அல்லது அனுமதிக்கப்பட்டது என்பது அறிவியல் பூர்வமான தல்ல. ஆனால் நிர்வகிப்பது சம்பந்தமானதுதான் என்று

அமெரிக்க கடல் கதிரியக்க ஆய்வகம் தெரிவிக்கிறது. இதனை தலைச்சிறந்த அறிஞரான ஆல்பர்ட் ஸ்வீட்ஸர் போன்றவர்களே எதிர்ப்பதுதான் ஆச்சர்யத்தை அளிக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன்னர் பிரிட்டிஷ் மருத்துவ ஆய்வுக் கழகம் பின்வருமாறு கூறியுள்ளது:

"கதிரியக்கப் பாதுகாப்புக்கான சர்வதேச ஆணையம், மனித எலும்புக் கூட்டால் ஏற்றுக்கொள்ள முடிந்த ஸ்ட்ரோனியம்-90ன் கதிரியத்தின் அனுமதிக்கப்பட்ட அளவாக 1000 மைக்ரோ - மைக்ரோ க்யூரிகள் என்ற அளவைக் கூறுகிறது. ஆனால், இந்த அளவு குறிப்பிட்ட பணகளில் உள்ளவர்க்ளுக்குத்தானே தவிர பிற பணி கல் செய்யும் மனிதர்களுக்கு ஆனதல்ல.

கதிரியக்கப் பொருட்களின் கதிர்வீச்சைக் குறித்தும், அதன் அளவினைக் குறித்தும் பல்வேறு முரண்பட்ட கருத்துக்கள் வந்து கொண்டேயிருக்கின்றன. எனவே இத்துறையில் காடுபோல் வளர்ந்துவரும் முரண்பாடுகளுக்குள் சிக்கிவிடாது நாம் கவனமாக இருக்க வேண்டும். அணு சக்தி மிகவும் கவனமாக குறைந்த அளவே செயல்படுத்தப்பட்டு இந்த "அணுசக்தியை அமைதியான வழியில் பயன்படுத்தியதன் மூலம், வாழும் உயிர்களை மட்டுமல்லாமல் பிறக்கக்கூடிய உயிர்களையும் பாதிக்கும் பல்வேறு பெரும் அபாயங்களை உருவாக்கியுள்ளது. இதன் உண்மையான அபாயம் வரப்போகிறது என்பது மிகச் சிலா உணரக்கூடியதாக உள்ளது. உற்பத்தியின் போதோ கொண்டு செல்லப்படும்போதோ ஏற்படும் ஒரு விபத்து பேரழிவுகளை ஏற்படுத்தக் கூடியதாக உள்ளது. கதிரியக்கப் பொருட்களை வேதியியல் மற்றும் அணு சக்தி நிலையங்களுக்கு இடையில் கொண்டு செல்ல வேண்டியுள்ளது. கழிவுகளை மேலாண்மை செய்யும் இடங்கள் கொண்டு செல்ல வேண்டியுள்

ளது. பின்னர் கழிவுகளை எங்காவது கொட்டுவதற்குக் கொண்டு செல்ல வேண்டுயுள்ளது. இந்தப் போக்குவ ரத்துக்களின்போது ஏதேனும் விபத்துக்கள் நிகழ்ந்தால், அது பேரழிவுகளை ஏற்படுத்தக் கூடியதாக உள்ளது. மேலும், கதிரியக்க அளவு உலகம் முழுவதும் அதிகமாகி தலைமுறைகளைத் தாண்டி நின்று அழிவைத் தரக்கூடி யதாக உள்ளது.

ஓக் ரிட்ஜ் ஆய்வகத்தின் கே.இஸட். மோர்கன், கதிரி யக்கத் தாக்குதலினால் மரபணு சீர்கேடுகள் மிக மோச மாக நிகழும் எனத் தெரிவிக்கிறார். எல்லாவிதமான அங்க தரக்குறைவுகளும் ஏற்படுகின்றன. செயல்படுதல், கருத்தரித்தல் மற்றும் உணர்ச்சி உறுப்புகளிலும் பாதிப் புகள் பெருமளவில் ஏற்படும் என்கிறார். "சிறிய அள விலான கதிரியக்கத்தால் உயிரியின் சுழற்சியில் எந்த பாதிப்பும் இல்லை என்றாலும், நீண்ட கால கதிரியக் கப் பாதிப்பு பெரிய அளவிலான ஒரே முறையில் ஏற்ப டும் கதிரியக்கம் தாக்குதலைவிட அதிகமாக இருக்கும். இறுதியாக கதரியக்கத்தால் நேரடியாக தாக்குதலுக்கு உள்ளாகாத தனிமனிதர்களுக்கு தீமையான மரபணு மாற்றமும் மன அழுத்தமும் உருவாகலாம்ம்

திடீர் மரபணு மாற்றங்கள் அதிகரிக்கும் வேகத்தை சாத் தியமான ஒவ்வொரு வழியிலும் தவிர்க்க வேண்டியது குறித்து மரபணு அறிஞர்கள் எச்சரிக்கை விடுத்துள்ள னர். இன்னும் முழுமையடையாத கதிரியக்க உயிரியல் ஆராய்ச்சிகளின் முடிவுகள் மீதே அணுசக்திக் துறை யின் எதிர்காலம் நிற்கிறது என்று மருத்துவ அறிஞர்கள் சொல்கிறார்கள்.

வருங்காலத்தின் சக்தித் தேவைகளுக்காக அணுசக் தித் திட்டங்களை நிறுவுவதை விட அதனை விட்டு சற்று குறைவான முறைகளை நாட வேண்டும் என்று மருத்

துவர்கள் சொல்கிறார்கள். 'புளூட்டோனியம்' வைத்துக் கொள்வது பரவலானால், அணுகுண்டு பெருக்கத்தைத் தடுக்க இயலாது என்று அரசியல் அறிஞர்கள் எச்சரிக்கி றார்கள்.

இந்த பெரிய உண்மைகள் அணுசக்தித் திட்டங்களில் ஈடுபடுவதா அல்லது பழைய சக்தித் திட்டங்களையே தொடருவதா என்ற விவாதத்தில் ஒன்றும் செய்ய வில்லை என்றாலும் வருகின்ற அபாயம் நமக்குத் தெரி யாத, கணக்கிட முடியாததல்ல. இந்த அபாயங்கள் கவ னத்தில் கொள்ளப்படவேயில்லை. மனித இனத்தையே கடுமையாக பாதிக்கும், இந்த செயல்பாடுகள் உடனடி பலனைக் கருதி, மிகவும் அலட்சியமாக செய்யப்படுகின் றன.

இதனால் ஏற்படும் காற்று, நீர், நில மாசு என்பது, நாம் எப்போதும் பயன்படுத்தும் பொருட்களால் ஏற்படுவது போன்றதல்ல. கதிரியக்கத்தினால் பல பரிமாணங்களில் பாதிப்புகள் நேரும் என்பதை அறிய வேண்டும். கதிரி யக்க மாசுபடுதலால் இதுவரை சந்தித்திராத பல பரிமா ணங்களிலான பாதிப்புகள் நேரிடும்.

காற்று தூய்மையாக இருக்க வேண்டியது ஏன்? காற் றைப் பாதுகாத்தாலும் கூட மண், நீர் ஆகியவை விஷமா கும் போது, என்ன பயன் என்று ஒருவர் கேட்கக் கூடும்.

நமது பிள்ளைகள், பேரப்பிள்ளைகளிடையில் உருவ மாற்றத்தை ஏற்படுத்தும் கெட்ட பொருள்களின் கலப் பால நாம் பெற்றுள்ள ஒரே ஒரு பூமி நாசமாகும் போது, வாழகைகைத் தரத்தினடிப்படையிலான பொருளாதார முன்னேற்றம் குறித்து என்ன இருக்கிறது என்று பொரு ளாதார நிபுணர் கூட கேட்கலாம். மனித வரலாற்றில் நடைபெற்ற கடந்த கால சோக விபத்துக்களிலிருந்து நாம் என்ன கற்றுக் கொண்டுள்ளோம்?

மனதில் கொண்டு அபாய அறிவிப்புச் செய்க பற்ற தன் மையாகாதா என்பது போன்ற கேள்வி மொழிகள், நிர் வாக ஜாலங்கள். இவைகளை நம் கையாள வேண்டும்? குறுகிய கால பலன்களில் படையில் இவைகளை நாம் கையாளலாமா?

லியோனார்ட் பீட்டன் எழுதுகிறார். "அணு ஆயுதங் களைப் பரவச் செய்யும் என்று நாம் அச்சப்படுகிற அனைத்தையும் எவ்வளவு காலம் முடியுமோ அவ்வ ளவு நிறுத்தி வைக்கவேண்டும். அமெரிக்கா, சோவியத் யூனியன (ரஷ்யா), பிரிட்டன் போன்ற நாடுகள் பழைய ஆற்றல் உற்பத்தி முறைகளை மதிப்புக்குறைவானவை என்று ஆக்குவதற்கு நிறைய செலவிட்டிருக்கலாம். படு பயங்கரமான ஆயுதங்களை தம்வசம் வைத்திருப்போர் அவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளை ஏன் பரப்பினார்கள் என்பதை சமூக மனோதத்துவ நிபுணர் கள்தான் சொல்ல முடியும். அதிர்ஷ்டவசமாக அணு உலைகள் குறைவாக உள்ளன."

அமெரிக்க அணு விஞ்ஞானி ஏ.டபிள்யூ. வின்பெர்க் கூறுகிறார்: "அணுசக்தியை நன்மைக்குப் பயன்படுத்தும் படியான ஒரு எண்ணம் நல்ல மனிதர்களிடத்தில் ஏற்படு வது ஏனெனில் அணுசக்தியின் தீய விளைவுகள் மிக வும் வேதனையூட்டுவதாக இருப்பதால்தான். ஆனால் அவர் இன்னும் எச்சரிக்கும் விதமாக எழுதுகிறார். உலக விவகாரங்களைப் பற்றி எழுதும்போது அறிவியல் அணு விஞ்ஞானிகளுக்கு தன்வய உந்துதல் ஒன்று உண்டாகி றது. அழிவிற்கான ஆயுதங்களுடன் தங்களுக்கான முன் னாள பணிகள் குறித்து நியாயப்படுத்த வேண்டி இருக் கிறது. அணு உலை விஞ்ஞானிகளான நமக்கு, அணு ஆயுத விஞ்ஞானிகளை விட குற்றவுணர்வு குறைவு."

"பழைய முடிவுகளை இப்போதாகிலும் சீர்தூக்கிப் பார்த்து புதிய முடிவுகளை மேற்கொள்ளலாம்; அதற்கான அவகாசம் நமக்கு இப்போது உள்ளது" என்கிறார் அமெரிக்க அறிஞர் ஒருவர். நிறைய அணுசக்திக் கூடங்கள் நிறுவப்பட்டுவிட்டால், அந்த அபாயங்களை எதிர்கொள்வதா வேண்டாமா என்று தோந்தெடுக்க முடியாது.

கடந்த காலங்களில் ஏற்பட்ட அறிவியல், தொழில்நுட்ப வளர்ச்சி, சகிக்க முடியாத வகையில் நமக்கு அபாயங்களை தொடர்ந்து தந்து கொண்டே இருக்கின்றது.

இவற்றைக் குறிப்பிடுவதன் மூலம் அறிவியல், தொழில் வளர்ச்சிக்கு எதிராக ஒருவர் இருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. எனவே எதிர்கால அறிவியல் ஆராய்ச்சி குறித்து நான் சிலவற்றைக் கூறுகிறேன்:

இயற்கைக்கு எதிராக மனிதன் வாழலாம்; அறிவியல் தொழில் நுட்பம் இல்லாமல் மனிதன் வாழ முடியாது. என்ன தேவை என்றால், அறிவியல் ஆராய்ச்சி எந்த திசையில் இருக்க வேண்டும் என்ற கவனம் தான். இதனை நாம் அறிவியல் அறிஞர்களிடம் மட்டுமே விட்டுவிட முடியாது. "கிட்டத்தட்ட எல்லா அறிவியலறிஞர்களும் பொருளாதாரத்தை சார்ந்தே உள்ளனர். சமூக விழிப்பு உணர்வு உள்ள அறிவியலறிஞர்களின் எண்ணிக்கை குறைவு" என்று ஐன்ஸ்டைன் குறிப்பிடுகிறார். எனவே அவர்களால் அறிவியல் ஆராய்ச்சி எந்த திசையில் இருக்க வேண்டும் என்பதை நிர்ணயிக்க முடியாது. எனவே இது பொதுநல ஆர்வலர்களின் கைகளில் விழுகிறது. அவர்கள் மக்கள் மற்றும் அரசியல்வாதிகளிடம் பொதுக் கருத்தை உருவாக்க வேண்டும். இப்படி செயல்படுவதன் மூலம் விஞ்ஞானிகள் பொருளாதார அடிமைத்தனத்திலிருந்து விடுபட்டு,

உண்மையான தேவையான விஷயங்களில் கவனம் செலுத்த முடியும். எந்த திசையில் அவர்களது ஆராய்ச்சி இருக்க வேண்டும் என்றால் வன்முறையற்ற அஹிம்சை வழியில் இருக்க வேண்டும். மேலும் ஒலிகளற்ற, ஆற்றல் குறைவான பொருளாதாரத் தீர்வுகளை நோக்கியதாக இருக்க வேண்டும். இப்போதைய நமது அறிவியல் இருப்பது போல சப்தம் நிறைந்த அதிக ஆற்றல் செலவிலான, வீணான, காட்டுமிராண்டித்தனமான, தெளிவற்ற தீரவுகளுடன் இருக்கக் கூடாது.

வன்முறைகளை வளர்த்துக் கொண்டே அணுப்பிளவு, அணு இணைவு போன்ற அறிவியல் வளர்ச்சி மனித இனத்தை அழிக்கும் ஒன்றாகும். இந்த திசைதான் என்று நட்சத்திரங்களில் ஏதும் எழுதி வைக்கவில்லை. வாழ்க்கை தரக்கூடிய, வாழ்க்கையை ஊக்கப்படும் கவனத்துடனான ஆய்வு முறையைச் செய்து, வன்முறையற்ற இணக்கமான, இறைவன் தந்த இயற்கையுடன் இசைந்த திசையில் செல்ல வேண்டும். இந்த அற்புதமான மாபெரும் இயற்கையில் மனிதனும் ஒரு பகுதி. இறைவன் தந்த இயற்கையை நிச்சயமாக நாம் உருவாக்கிவிடவில்லை என்பதை உணர்ந்த திசையில் ஆராய்ச்சிகள் செய்யப்பட வேண்டும்.

இந்த உரை 1967ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் தூய்மையான காற்றுக்கான தேசிய சபை (National Society for Clean Air) யின்போது பேசப்பட்டதாகும். அப்போது பெரும் பாராட்டைப் பெற்றது; அதிகாரமையங்களால் பொறுப்பற்றது"என்ற கண்டனத்தையும் பெற்றது.

சுற்றுச் சூழல் துறையின் செயலாளரால் 1972 பிப்ரவரி மாதத்தில் மாசுக் கட்டுப்பாடு பற்றிய அறிக்கையொன்று சமர்பிக்கப்பட்டது. அதன் தலைப்பு "தொல்லையா அல்

லது தண்டனையா?" அதிலிருந்து "சர்வதேச அளவில் மிக முக்கியமான கவலை எதிர்காலம்தான். உலகப் பொருளாதார வளமை அணுசக்தியுடன் இணைக்கப் பட்டுள்ளது போலத் தோன்றுகிறது. தற்போதைய நிலையில் உலகில் உற்பத்தி செய்யப்படும் மின்சக்தியில் அணுசக்தியால் உற்பத்தியாகும் மின்சக்தி ஒரு சதவீதம் தான். 2000ஆம் ஆண்டுவாக்கில், திட்டங்கள் இப்போது உள்ளபடியே போனால் அணுசக்தி மூலமாக உற்பத்தியாகும் மின்சக்தி 50 சதவிகிதமாகும். 500 மெகாவாட் சக்தியுள்ள அணு உலைகள் ஒவ்வொரு நாளும் திறக்கப்படும்.

"நீண்டு செயல்பட்டுக் கொண்டேயிருக்கும் கதிரியக்கக் கழிவுகளே கவலைக்கான மிகப்பெரிய காரணமாக உள்ளது.

இங்கிலாந்தில் ஸ்ட்ரோனியம்-90 கும்பர்லான்டின் ஸ்கேலில் திரவ வடிவில் இரும்புக் கலன்களில் வைகப் பட்டுள்ளது. அவற்றின் கதிர்வீச்சினால் வெப்ப நிலை கொதிநிலையைக் கடந்து விடாமலிருக்க அவற்றை கண்ணீரைக் கொண்டு தொடர்ந்து குளிர்வித்துக் கொண்டே இருக்க வேண்டியுள்ளது. இன்னும் அணு உலைகளை நாம் உருவாக்கவில்லை என்றாலும், இந்த கலன்களை பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்து குளிர்வித்துக் கொண்டே இருக்க வேண்டும். எதிர் காலத்தில் ஸ்ட்ரோனியம்-90 சேகரித்து வைக்கப்படுவது அதிகரிக்குமாதலால், இந்தப் பிரச்சினை இன்னும் மோசமாகும். அதிவேக அணு ஈனுலைகளுக்கு மாறப் போவதால் நிலைமை இன்னும் மோச மாகும். ஏனெனில் அவை அதிகமாக கதிரியக்க கழிவுகளை உற்பத்தி செய்யும்.

ஏதேனும் ஒரு காலத்தில் விடுபட அரை சதவீத வாய்ப்புள்ள கெடுதலான ஒரு பொருளை நன்கறிந்து விரும்பி சேகரிக்கிறோம். எப்படிக் கையாள்வது என்று நமக்குத் தெரியாத ஒரு பிரச்சினையை வருங்கால சந்ததியினர் எதிர் கொள்ளும்படி செய்கிறோம். இறுதியாக அந்த அறிக்கை தெளிவான எச்சரிக்கையை விடுக்கிறது.

தீரவு கண்டுபிடிக்க முடியாதது என்பதை அறிந்து கொள்ளும் முன்னரே, மனிதன் தனது முட்டைகள் அனைத்தையும் அணுசக்தி என்ற கூடைக்குள் இட்டிருக்கலாம் என்பது நன்றாகத் தெரிந்த அபாயமாக உள்ளது. அந்த நிலையில் கதிரியக்க அபாயங்களைப் புறந்தள்ளிவிட்டு உருவாக்கப்பட்டுவிட்ட அணு உலைகளை தொடர்ந்து பயன்படுத்த வலுவான அரசியல் நெருக்குதல் இருக்கும். கதிரியக்கக் கழிவுப் பிரச்சினைக்குத் தீர்வு காணும்வரை, அணுசக்தித் திட்டங்களை தாமதப் படுத்தலாம். பொறுப்புமிக்க சிலர் கதிரியக்கக் கழிவுகளை என்ன செய்வது என்பதை கண்டறிந்த பிறகே அணு உலைகளை உருவாக்க வேண்டும் என்றும் சொல்லக் கூடும்.

அதிகரித்து வரும் ஆற்றல் சக்தி தேவைகளை எவ்வாறு சமாளிப்பது?

"மின்சக்தியின் திட்டமிடப்பட்டுள்ள தேவையை சக்தித் திட்டங்கள் இல்லாமல் சமாளிக்க முடியாது ஆகையால், மனித இனம் ஆடம்பரங்களைக் குறைக்க கொண்டு மின் மற்றும் மற்ற ஆற்றல் தேவைகளை சுருக்கிக் கொள்ளும் சமூகக் குழுக்களை உருவாக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக இந்த மாற்றத்தை அவசரமாகவும் உடனடியாகவும் செய்ய வேண்டியதாய் உணர வேண்டும்.

ஒட்டு மொத்த படைப்புகளையும் வரலாற்றுகால ரீதியாக அல்லது புவியியல் கால ரீதியாகவோ கணக்கிட முடியாத அபாயமாக இருக்கப்போகும். எவராலும் எப்படிப் பாது காப்பாய் வைக்க முடியும் என்று தெரியாத அதிக அள விலான கொடிய விஷத்தன்மையுள்ள பொருட்களை சேர்ப்பதை எந்த நிலையான வளர்ச்சியும் நியாயப்ப டுத்திவிட முடியாது. அப்படிச் செய்வது வாழ்க்கைக்கே எதிரான பெரும் அத்துமீறலாகும். அந்த அத்துமீறல் மனிதனுக்கு எதிராக செய்யப்பட்ட எந்தக் குற்றத்தையும் வட மிக மோசமான அளவிடற்கரிய குற்றமாகும். ஒரு நாகரிகம் இந்த அத்துமீறலின் அடிப்படையில் இருக்கிற தென்பது அறநெறி, ஆன்ம மற்றும் நுண் இயற்பியல் அக் கிரமம் ஆகும். அதன் பொருள் என்னவெனில் மக்க ளைப் பொருட்படுத்தாமல் மனிதர்களின் பொருளாதார செயல்பாடுகளை மேற்கொள்வது என்பதுதான்.

……………..

**மனித குலத்துக்கு ஏற்ற தொழில்நுட்பம்!**

இந்த நவீன உலகம் நுண் இயற்பியல் மூலம் வடிவமைக் கப்படுள்ளது. அந்த நுண் இயற்பியல் தனே, தனக்கான கல்வியை வடிவமைத்துக் கொண்டது. அந்தக் கல்வி அறிவியலையும் தொழில்நுட்பத்தையும் கொண்டு வந் தது. எனவே நவீன உலகம் தொழில்நுட்பத்தால் கட் டமைக்கப்பட்டுள்ளது என்று கருதலாம். நவீன உலகம் நெருக்கடிகளில் சிக்கிக் கொண்டே இருக்கிறது. எல் லாவிதமான தளங்களிலும் பேரழிவுகல் குறித்த முன்ன

றிவிப்புகள், தொடர் தோல்விகள் எங்கும் மலிந்துவிட்டன.

அவை தொழில்நுட்பங்களால் உருவாக்கப்பட்டவை எனில் இன்னும் அது தொடர்ந்து கொண்டே இருக்கும்.தொழில் நுட்பத்தை ஆராய்வது புத்திசாலித்தனமாக இருக்கும். தொழில்நுட்பங்கள் மீண்டும், மீண்டும் மக்களுக்கு தீமை செய்த வண்ணம் உள்ளன. இதை உணர்ந்துவிட்டால், மனித குலத்துக்கு ஏற்ற தொழில் நுட்பம் நம் சிந்தனையில் உருவாக தொடங்கும்.

மனிதன் மூலம் உருவாக்கப்பட்டிருந்தாலும் இயற்கைக்கு எதிராகவும், பூமியில் வாழும் உயிர்களுக்கு எதிராக தொழில்நுட்பங்களை கண்டறிந்து புழக்கத்தில் விடுவது வேடிக்கையாக உள்ளது.

இயற்கைக்கு எப்போது எங்கே நிறுத்த வேண்டும் எனத் தெரியும். இயற்கையான வளர்ச்சியின் மர்மத்தை விட இயற்கை பெரிய மர்மம்தான். வேகம் மற்றும் அதன் வன்மை ஆகியவற்றில் இயற்கைக்கு ஒரு அளவுண்டு. இயற்கை அமைப்பு, சுயமாக சுத்தப் படுத்திக்கொள்ள, சுயமாகவே சரிப்படுத்திக் கொள்ள, சுயமாகவே தூய்மைப்படுத்திக் கொள்ளக் கூடிய ஆற்றலை பெற்று உள் ளது. இந்த இயற்கையில் மனிதனும் ஒரு பகுதியே. தொழில் நுட்பத்திற்கு சுயக்கட்டுப்பாடான எந்த கொள் ளயும் இல்லை . எனவே அதனால் சுயமாக சமப்ப டுத்தி கொள்ள, சரிப்படுத்திக்கொள்ள தூய்மைப் படுத் திக் கொள்ள இயலாது.

உடனடியாகத் தெரிந்து கொள்ள இயலாத இயற்கை அமைப்பில், தொழில்நுட்பம், குறிப்பாக நவீன உலகின் உயர்தொழில்நுட்பம், அந்நியமான ஒன்றைப் போன்று உள்ளது. அவற்றை ஏற்க முடியாது வெளித்தள்ளப் பட்ட அறிகுறிகள் தற்போது ஏராளமாக உள்ளன. நவீன

தொழில்நுட்பத்தினால் கட்டமைக்கப்பட்டுள்ள நவீன உலகம் ஒரே சமயத்தில் மூன்று விதமான நெருக்கடிக ளில் சிக்கியுள்ளது. முதலாவதாக, மனிதத்தன்மையற்ற தொழில்நுட்ப, அமைப்பு ரீதியான அரசியலால் மூச்சுத் திணறி, பலவீனமாகி மனித இயல்பு அதற்கு எதிராக மாறியுள்ளது. இரண்டாவதாக மனிதனைத் தாங்கி வாழ வைக்கும் இயற்கைச் சூழல் சிதைவதனால் உலகம் வேதனையடைகிறது. மூன்றாவதாக புதுப்பிக்க விய லாத இயற்கை மூலாதாரங்கள், குறிப்பாக படிம எரிபொ ருள்கள் மிக சீக்கிரமே தீர்ந்து போகும் நெருக்கடியில் உள்ளன என்பது அறிவுள்ளவர்களுக்கு இது தெரிந்தது தான்.

இந்த மூன்று நெருக்கடிகளில் அல்லது நோய்கள் ஏதே னும் ஒன்று மிக அபாயகரமானதாக எப்போது வேண் டுமானாலும் ஆகக்கூடும். நேரடி நாசத்திற்கு எந்த ஒன்று மிகப்பெரிய காரணமாகப் போகிறதென்று எனக் குத் தெரியவில்லை. பொருள்சார்ந்த வாழ்வை அடித் தளமாகக் கொண்ட வாழ்க்கை வழிமுறை, அதாவது அளவுள்ள சுற்றுச்சூழலில் அளவற்ற வரைமுறையற்ற, தொடர்ந்த விரிவாக்கத்தில் ஈடுபடுவது நீடித்து நிற்காது என்பதும், அதன் விரிவாக்க செயல்பாடுகளை வெற்றி கரமாகத் தொடர்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கை மிக வும் குறுகியது என்பதும் தெளிவு.

புயல்வேக உலகத் தொழில் வளர்ச்சி நம்மை எங்கே கொண்டு சென்றிருக்கிறது என்று கேட்டால், அதற்கான பதில் மிகவும் சொல்லும்படியாக இல்லை. தீர்வு களை விட பிரச்சினைகள் எல்லா இடங்ளிலும் வேகமாக வளர்வதாகத் தோன்றுகிறது.

ஏழைநாடுகளைப் போலவே செல்வந்தநாடுகளுக்கும் இது பொருந்தக் கூடியதாக உள்ளது. நமது கடந்த

கால அனுபவங்களில் நமக்குத் தெரிந்து ஏழ்மையை ஒழிக்க இந்த வளர்ச்சி உதவவில்லை. இதில் ஏழைநா டுகள் மட்டுமல்லாது பணக்கார நாடுகளையும் வெகு வாகப் பாதிக்கும் வேலைவாய்ப்பின்மையைப் பற்றிக் குறிப்படவில்லை. இப்போது வந்து கொண்டிருக்கிற மூன்று நெருக்கடிகளும் நவீன தொழில்நுட்பத்தின் மாயமான வளர்ச்சி தொடரக்கூடாது என்பதையே காட் டுகிறது. எனவே தொழில் நுட்பம் என்ன செய்கிறது? என்ன செய்ய வேண்டும்? என்ற கேள்வியை நாம் எதிர் கொண்டே ஆகவேண்டியுள்ளது. நமது பிரச்சி னைகளை உண்மையிலேயே தீர்க்கக்கூடிய தொழில் நுட்பத்தை - மனிதத் தன்மையுள்ள தொழில் நுட்பத்தை நம்மால் உருவாக்க முடியுமா?

மனிதன் வாழவும், தன்னை முன்னேற்றிக் கொள்ள வும் செய்ய வேண்டிய வேலைப் பளுவைக் குறைத் துக் கொள்ளுவதே தொழில்நுட்பத்தின் முதன்மை யான பணியாக இருக்கிறது. இயந்திரங்களின் மூலம் இந்தப் பணி எளிதாகிறது. இதற்குச் சிறந்த உதா ரணம் கணினி. மணிக்கணக்கில் மனிதன் செய்ய வேண்டியிருக்கும் வேலையை சில நிமிடத்துளிகளில் அது செய்து விடுகிறது. நான் முதன்முதலாக உலக நாடுகளில் ஏழை மற்றும் பணக்கார நாடுகளில் சுற் றுப் பயணம் மேற்கொண்டபோது, பொருளாதாரத்தின் முதல்விதியை உருவாக்கத் தூண்டப்பட்டேன். ஒரு சமூ கம் அனுபவிக்கும் உண்மையான கேளிக்கை அந்த சமூகம் பயன்படுத்தும் வேலை பளுவைக் குறைக்கும் இயந்திரங்களின் அளவுக்கு தலை கீழ் விகிதத்தில் இருக்கும் . இதனை பொருளாதா பேராசிரியர்கள் தங் கள் மாணவர்களிடம் விவாதிக்கச் சொல்லலாம். இங்கி லாந்தை விடவும் ஜெர்மனி மற்றும் அமெரிக்க மக்கள்

அதிக சுமையுடன் வாழ்வதைக் காணலாம். தொழில் வளர்ச்சியில் மிகவும் பின்தங்கியுள்ள பர்மாவில் மக்கள் அதிக கேளிக்கை பொழுது போக்குகளை அனுபவித்து வாழ்வதைக் காணலாம். அங்கே அவர்களின் வேலைப் பளுவைக் குறைக்கும் படியான இயந்திரங்களின் பயன் பாடு வளர்ந்த நாடுகள் பயன்படுத்துவதைவிட மிகவும் குறைவாக உள்ளது. அவர்களது வாழ்க்கை சுமையில் லாமல் இருக்கிறது.

எனவே தொழில்நுட்பம் என்பது நமக்கு என்ன செய் துள்ளது என்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும். தொழில் நுட்பம் சில பணிகளை குறைத்து இலகுவாக்கி வேறு சிலவற்றை அதிகரித்து சிக்கலாக்கியுள்ளது என்பது வெளிப்படை. நவீன தொழில்நுட்பம் மனிதனின் திற மைகளைக் குறைத்து சில வேலைகளில் மனித னது செயல்பாடே தேவையில்லை என்ற நிலையை உருவாக்கியுள்ளது. கைத்திறமையுள்ள வேலைகள் தொழில் வளர்ச்சிமிக்க சமூகங்களில் அபூர்வமானதாக மாறி, அத்தகைய பணிகளைக் செய்து வாழ்வதை இய லாததாக்கிவிட்டது.

தாமஸ் அக்கினாஸ் குறிப்பிட்டது போல கைகளையும், மூளைகளையும் வைத்துக் கொண்டு ஆக்கப்பூர்வமாக, பயன்மிக்கதான வாழ்வை வாழாத மனித இனம் நரம்பு நோயால் பாதிக்கப்பட்டுள்ளது. இன்று, செல்வந்தனாக உள்ள மனிதன், ஆடம்பர வாழ்க்கையை அனுபவிக் கக் கூடியவனாக இருக்க வேண்டும். அவன் அனைத்து சாதனங்களையும் அனுபவிக்கக் கூடியவனாக இருக்க வேண்டும். நல்லதொரு ஆசிரியரைக் கண்டு பிடித்து கற்கவும் அதனை பயன்படுத்தவும் நிறைய நேரத் தைக் கொண்டிருக்கும் நல்ல வாய்ப்பை பெற்றவனாக இருக்க வேண்டும். அவன் வேலை செய்து சம்பாதிக்கத்

தேவையில்லாத செல்வந்தனாக இருக்க வேண்டும். இந்த நிலையில் வேலைவாய்ப்புகளின் தேவை மிகவும் குறைவாக இருக்கும்.

மனிதன் வசமிருந்து நவீன தொழில்நுட்பம் எடுத்துக் கொண்ட வேலைவாய்ப்புகளை பின் வருமாறு சொல்ல முடியும். ஒரு நாளின் 24 மணிநேரத்தில் உண்மையான உற்பத்திக்கென எடுத்துக் கொள்ளப்படும் மொத்த நேரம் எவ்வளவு இருக்கும் என்ற கேள்வி எழலாம். ஒரு நாட்டின் மொத்த மக்கள் தொகையில் பாதி அள விற்கு பயன்தரும் வகையில் உழைக்கிறார்கள் என்றால் அதில் மூன்றில் ஒரு பங்கு மக்கள் விவசாயம், சுரங்கம், கட்டுமானப்பணி போன்றவற்றில் உண்மையான உற்பத் தியாளர்களாக ( வேலை ஏவுபவர்களைத் தவிர்த்து) இருக்கிறார்கள். அதாவது மொத்த மக்கள் தொகையில் ஆறில் ஒரு பங்கினரே உண்மையான உற்பத்தியில் ஈடு பட்டுள்ளனர். அதாவது ஒருவரின் உழைப்பைச் சார்ந்து ஐந்து பேர் உள்ளனர். அந்த ஐந்து பேரில் இருவர் உண் மையான உற்பத்தியில் ஈடுபடாமல், பிற பணிகளைச் செய்து கொண்டும், மற்ற மூவர் பயனற்றவகைகளிலும் பணிகளில் ஈடுபடுகின்றனர். முழுமையாக வேலையில் உள்ள ஒருவர் விடுமுறை, உடல்நலக்குறைவு மற்றும் இன்ன பிற விடுப்புகள் போக, அவரது மொத்த நேரத்தில் ஐந்தில் ஒரு பங்கு நேரமே வேலையில் ஈடுபடுகிறார். அதாவது ஒரு சமூகத்தின் மொத்த நேரத்தில் மூன்றரை சதவீதமே உண்மையான உற்பத்திக்குச் செலவிடப்படு கிறது. மற்ற 96 அரை, சதவிகித நேரமும் நேரடியான உற் பத்தியிலல்லாது வீணாகச் செலவழிக்கப்படுகிறது.

இந்தக் கணக்கை அப்படியே எடுத்துக் கொள்ள வில்லை என்றாலும் கூட, தொழில்நுட்பம் நம்மில் என்ன செய்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள இந்தக்

கணக்கு போதுமானது. ஆகவே, தனது மூளையைக் கொண்டும், கை களைக் கொண்டும் மிகுந்த விருப்பத் துடன் செய்யக்கூடிய பல வேலைகளை நவீன தொழில் நுட்பம் மனிதனிடமிருந்து பிடுங்கிக் கொண்டு, அவ னுக்கு விருப்பமேயில்லாத பணிகளைத் தருகின்றது. அது தேவையற்ற வகை மனிதனை அதிக எண்ணிக் கையில் வேலை செய்ய வைக்கிறது. இதனை கார்ல் மார்க்ஸ் முன்பே உணர்ந்து எழுதி இருக்கிறார்.

"அவர்கள் உற்பத்தி என்பதைப் பயன்தரும் சாதனங்கள் என்ற வரம்பிற்குள்ளேயே வைத்திருக்க விரும்புகின்ற னர். ஆனால் பயன்தரும் சாதனங்களின் அதிக அளவி லான உற்பத்தி, அதிக அளவிலான பயனற்ற மக்களைத் தரும் என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர்."

இதனுடன் பின்வருமொன்றையும் நாம் சேர்த்துக் கொள்ளலாம். 'அதாவது உற்பத்தி விருப்பமற்றும் மிகுந்த சலிப்பூட்டும் பணியாக இருக்கும் பொழுது' என் பதை. இந்த நவீன தொழில் நுட்பம் வளர்ந்து வந்த, வளர்த்துக் கொண்டிருக்கிற, வளரப்போகிற வழி மனி தத் தன்மையற்ற, மனித முகமற்ற ஒன்று என்ற நமது சந் தேகத்தை உறுதி செய்கிறது. எனவே இதனை நன்கு ஆய்ந்து நமது நோக்கங்களை மறு பரிசீலனை செய்ய வேண்டும்.

பெருமளவிலான புதிய அறிவு மற்றும் வளரக்கூடிய சிறந்த தொழில் நுட்பங்களை நாம் கைக்கொள்ள வேண்டும். அவை உண்மையானவைகளாக இருக்க வேண்டும். இந்த உண்மையான அறிவு, பகாசுரத்தன மற்ற, சூப்பர்சானிக் வேகமற்ற, வன்முறையற்ற மற்றும் பணியில் ஈடுபடும் மனிதனின் பணிக்களிப்பு, ஆனந் தத்தை சிதைப்பதாக இல்லாததாக இருக்க வேண்டும். நாம் பயனபடுத்தியுள்ள அறிவு, நமது பல அறிவுகளில்

ஒன்றுதான். அது விவேகமற்றதாக, அழிவைத்தரக்கூடி யதான அறிவு.
நாம் முன்பே கூறியுள்ளபடி உண்மையான உற்பத்தி என்பது மொத்த நேரத்தில் மூன்றரை சதவீதமே. அது நவீன தொழில் நுட்பத்தினால் இன்னும் பூஜ்யம் அள வுக்குக் கூட போகலாம். இதற்கு எதிர் மறையான வகையில் நாம் ஒரு குறிக்கோளை கற்பனை செய் யலாம். மனிதனின் கைகள், மூளை மற்றும் சிறப் பான கருவிகளைக் கொண்டு இந்த மொத்த உற் பத்தி நேரத்தை இருபது சதவிகிதமாக அதிகரிக்கலாம். என்ன ஒரு அற்புதமான சிந்தனை குழந்தைகள், முதி யவர்களைக்கூட பயன்மிகு உற்பத்தியில் அனுமதிக்க லாம். இப்போதுள்ள உற்பத்தியை, இன்னும் நிறைய நேரம் எடுத்துக் கொண்டு, மனக்களிப்புடன் அழகான வைகளாக, நேர்த்தியானவைகளாகப் படைக்க முடியும். உண்மையான வேலையின் நிவர்த்தி செய்யும் மதிப்பு மற்றும் அதன் கல்வி மதிப்பு ஆகியவற்றின் சிந்தனை இது. பள்ளி இறுதி வயதை அதிகரிக்கவோ அல்லது ஓய்வு பெறும் வயதைக் குறைத்தோ பணியாளர் சந்தை நெருக்கடியைக் குறைக்க எவரும் விரும்பமாட்டார்.
எல்லோரும் தங்களது பங்களிப்பைச் செய்ய வரவேற் கப்படுவார்கள். இப்போது வாய்ப்புக் குறைவாக உள்ள வேலைகளுக்கு அனைவரும் தங்களது கைத்திறமை மற்றும் மூளைவளம் கொண்டு பணி செய்ய அனும திக்கப்படுவார்கள். இப்படிச் செய்வது வேலை நேரங் களை அதிகப்படுத்துமா? இல்லை. இந்த வகைக ளில் சுயவிருப்புடன் வேலைக்களிப்புடன் பணியாற்றுப வர்களுக்கு வேலைக்கும் பொழுதுபோக்குவதற்குமான வேறுபாடு தெரியாது. உண்பது, உறங்குவது மற்றும் ஒன் றும் செய்யாமலிருப்பது ஆகிய நிலைகளைத் தவிர,

மற்றெல்லா நேரங்களிலும் ஆக்கப்பூர்வமாக செயல்பட்டுக் கொண்டே இருப்பார்கள். 'பணத்துக்காக பணி" என்ற நிலை மறைந்து போகும். வீண்பொழுது போக்குகள், போதைப் பொருட்கள் உபயோகங்கள் குறைந்து போகும்.

இது நடைமுறைக்கு சாத்தியமற்ற, இன்பவியல் கனவு என்று சொல்லப்படக்கூடும். இன்று நாம் பெற்றிருக்கின்ற நவீன தொழில்நுட்பம் இன்ப மயமான கனவல்ல. நாம் வாழவும் நம் குழந்தைகள் வாழ வாய்ப்பளிக்கவும் நாம் விரும்பினால் இந்தக் கனவைக் காணும் மனோ தைரியத்தைக் கொண்டிருக்க வேண்டும். இப்போதுள்ளது போலவே தொடர்ந்து கொண்டிருந்தால் முன்னர் குறிப்பிட்ட பிரச்சினைகள் நம்மை விட்டு அகலாது.

மேலும், பிரச்சினைகள் இன்னும் மோசமாகி அழிவுக்கு **இட்டுச் செல்லும். மனித இயல்புக்கு உண்மையா தேவைப்படுவதற்கேற்றபடியும், உலகின் நலனையும், இயற்கை வளங்களையும் காக்கும் படியான வாழ்க்முறையை நாம் உருவாக்கிக் கொள்ளவில்லை என்றால் பிரச்சினைகள் மோசமாகி அழிவுக்கே கொண்டு செல்லும்.**

இந்த புதிய வாழ்க்கை முறையைப் பேணுவதற்கும் தடையாக இருப்பது, போதைக்கு அடிமையாகிப் போனது போன்று நுகர்வுக் கலாச்சாரத்துக்கு நாம் அடிமையாகிப் போனதுதான். அதிலிருந்து மீண்டு வருவது கடினமாக உள்ளது. உலகின் குழந்தைகளான மக்களில் ஏழை சமூகத்தினரை விட பணக்கார சமூகத்தினருக்கே இது பிரச்சினையாக உள்ளது. பணக்கார நாடுகளின் நவீன தொழில்நுட்பங்களைக் கைக்கொள்ள மூன்றாம் உலக நாடுகளான ஏழை நாடுகளால் முடிவதில்லை. அந்த நாடுகளுக்கு ஏன், செல்வந்த நாடுக

ளுக்கும் தேவையானது இதுதான். ஒரு புதிய தொழில் நுட்பம், மனிதத்தன்மையுடன் மனித முகத்துடனான ஒரு தொழில் நுட்பம் தேவை. மனிதனை அவனுடைய கைகள் மற்றும் மூளை ஆகியவற்றைப் பயன்படுத்து வதைத் தடுக்காத தொழில் நுட்பம் வேண்டும். இது வரை அவர்களால் உற்பத்தி செய்யப்பட்டதைவிட அதி கப் பயன் தரத்தக்க தொழில் நுட்பம்தான் இப்போது தேவை.

மகாத்மா காந்தியடிகள் சொல்லியதைப் போல "அதிக உற்பத்திகளால் உலகின் ஏழைகளுக்கு உதவ முடி யாது. ஆனால் அதிக மக்களால் செய்யப்படும் உற் பத்தி மூலமே உதவ முடியும்" அதிக உற்பத்தி முறை மிக நவீன, மூலதனம் பெரிதும் தேவைப்படுகின்ற, ஆற்றல் அதிகம் வேண்டு கின்ற, மனித உழைப்பைக் குறைக்கும் படியான, பணககாரர்கள் என்று எண்ண வைக்கிற, ஒரே வேலைத்தளத்தில் நடைபெறுவதாக உள்ள முறையாகும். ஆனால் அதிக மக்களால் உற் பத்தி செய்யப்படும் முறையில் அனைத்து மக்களும் தங் களது கைகள், மூளை வேலைத்திறனை ஆகியவை கொண்டு செய்யப்படும் முறையாகும். அதிக உற்பத்தித் தொழில்நுட்பமுறை, வன்முறையானது; சுற்றுச்சூழலை பாதிக்கக் கூடியது; புதுப்பிக்கப்படாத ஆற்றல்களைப் பயன்படுத்தி மனித இனத்தை நெருக்கடிக்குள்ளாக்கக் கூடியது. ஆனால் அதிக மக்களால் உற்பத்தி செய்யப் படும் முறையோ, அனுபவத்தினால் உண்டான நவீன அறிவுடன், ஓரிடத்தில் குவியாமல் சுற்றுச் சூழலுக்கு இணக்கமான, மனிதனை இயந்திரங்களுக்கு அடிமை யாக்காமல் அவனையே முழுமையாகப் பயன்படுத்தும் முறையாகும். இதற்கு "இடைத்தரமான தொழில்நுட் பம்" என பெயரிடுகிறேன். இது வழக்கொழிந்து போன

தொன்மை வாய்ந்த தொழில் நுட்பத்திற்கும், செல்வந் தர் களின் அதி நவீன தொழில் நுட்பத்திற்கும் இடை யிலான எளிய, மலிவான, சுயமாக உதவிக்கொள்ளக்கூ டிய, ஜனநாயக அல்லது மக்கள் தொழில் நுட்பம் ஆகும். முன்பே பணக்காரர்களானவர்களுக்கானதல்லாத, எல் லோரும் எளிதில் நுழையக்கூடிய தொழில் நுட்பம்.)

தேவையான அறிவை நாம் பெற்றிருந்தாலும், அதனை இன்னும் மேம்படுத்த வேண்டியிருக்கிறது. அனைவருக் கும் கிடைக்கும்படி செய்ய வேண்டியிருக்கிறது. தொழில் நுட்பங்களை எளிதாக்குவதற்கு நிறைய பிரயாசைப்பட வேண்டி இருக்கிறது. ஒரு மூன்றாம்தர பொறியாளர் அல்லது ஆய்வாளர் தொழில் நுட்ப அறிவுகளை மேலும் சிக்கலாக்க முடியும். ஆனால் அதனை எளிதாக்கிட கூர்ந்த ஞானமும் பெருந்திறமையும் வேண்டும். உண் மையி லிருந்து விலகிச் சென்ற, ஆக்கப்பூர்வமானவற்றி லிருந்து விலகிச் சென்ற தன்னை சரிசெய்து கொள்ளக் கூடிய இயற்கை அமைப்பிலிருந்து விலகிச் சென்றவர்க ளுக்கு இந்த ஞானம் எளிதில் வாய்க்காது.)

ஒரு புறம், பிரச்சினைகளைக் தீர்க்கலாம் என்று செயல் படும் மக்கள். அவர்களை "வருங்கால அபாயம்" என அழைக்கிறேன். மறுபுறம் உலகின் உண்மை நிலையை அறிந்து, புதிய வாழ்க்கை முறையைத் தேடும் மக் கள். அவர்களை மீண்டு வருபவர்கள்' என அழைக் கிறேன். பிரச்சினைகளைத் தீர்க்கலாம் என நினைப் பவர்கள் “சும்மா இருந்து விடமுடியாது, சும்மா இருத் தல் தாழ்த்தி விடும்" என்று கூறுவார்கள். முன்னேறிச் செல்ல வேண்டும்; நவீன தொழில் நுட்பத்தில் தவறுக ளேதுமில்லை, அது முழுமை யானதாக இல்லை என்ப தைத் தவிர; அதனை நாம் முழுமையாக்க வேண்டும்" எனவும் கூறுவார்கள். இவர்களின் பிரதிநிதிகளில் ஒரு

வரான ஐரோப்பிய பொருளாதார சமூகத்தின் முதன்மையான பொருளாதார நிபுணரான டாக்டர் சிக்கோ மேன்ஷால்ட் கூறுவார், "அதிகமாக, மேலதிகமாக, வேகமாக, வளமாக" ஆகியவையே நடப்பு சமூகத்தின் தாரக முழக்கம்" என்று. "நிச்சயமாக நாம் சோர்ந்து மயங்கிவிடாமல், முன்செல்லத் தான் வேண்டும். மக்கள் எதிர்த்துப் போராடத் தொடங் கினால், நாம் நிறைய காவல் துறையினரை ஆயுத உப கரணங்களுடன் கொண்டிருக்க வேண்டும். சுற்றுச் சூழலில் பிரச்சினைகள் தோன்றினால் மாசுக்கட்டுப் பாட்டிற்கென கடுமையான சட்டங்களை இயற்றி, மாசுக்கட்டுப் பாட்டுடன் வேகமான பொருளாதார வளர்ச்சியை நாட வேண்டும். இயற்கை வளங்களில் குறைபாடுகள் தோன்றி னால், செயற்கை மூலாதாரங்களை நோக்கி நாம் திரும்ப வேண்டும். படிம எரிபொருள்களில் பிரச்சினைகள் என்றால் அணுப்பிளவு, அணு இணைவு முறைகளிலான ஆற்றல் நோக்கித் திரும்ப வேண்டும். தீர்க்க முடியாத பிரச்சினை களே இல்லை" என்று. வருங்கால நெருக்கடி மனிதர்கள் "பிரச்சினைகளைத் தடுத்து வைக்கும் முக்கிய நிகழ்வு என்ற தலைப்பில் ஒவ்வொரு நாளும் தகவல் தருகிறார்கள்.

மற்றொரு புறத்தில் என்ன நிகழ்கிறது? நவீன தொழில்நுட்ப வளர்ச்சி தவறான திசையில் செல்கிறது. அது சரியான திசைக்குக் கொண்டு செல்லப்படவேண்டும் என்பதில் ஆழமான முடிவுடன் இருக்கிறார்கள். " மீண்டு வருபவர் கள்' என்பது மதம் சார்ந்த ஒரு வார்த்தையாடல், நவ நாகரிகத்திலிருந்தும், அது சார்ந்த மனக் கவர்ச்சிகளி லிருந்தும், மனோ தைரியத்துடன் விலகி வந்து முழு உலகையே வெல்லும் ஒரு நோக்கம் குறித்தது அது. அதற்குத் தேவையான மனோபலம் திட நம்பிக்

கையிலிருந்து பெறப்படுவது. இது எதிர்காலம் குறித்த பயத்திலிருந்து பெறப்படுமேயானால், ஒரு கட்டத்தில் மறைந்து போகக்கூடும். மலைப்பிரசங்கத்தில் சொல்லப் பட்டதைப் போன்று மீண்டு வருபவர்களுக்கு நம்பிக்கை உறுதி கொள்ளும் வாக்கியங்கள்.

தாங்கள் ஏழைகள் என்று அறிந்தவர்கள் ஆசிர்வதிக் கப் பட்டவர்கள்: ஏனெனில் பரலோக ராஜ்யம் அவர் களுடையது. வருத்தப்பட்டவர்கள் ஆசிர்வதிக்கப்பட்ட வர்கள்; அவர்கள் ஆறுதல் பெறுவார்கள்.

எளிய மனம் பெற்றோர் பேறுபெற்றோர்; - பசி தாகம் உள் ளவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்;

அவர்கள் ஜெயம் பெறுவார்கள். சமாதானம் செய்வோர் பேறு பெற்றோர்; அவர்களை கடவுள் தம் மைந்தர் என அழைப்பார்.

இந்த மலைப்பிரசங்க வாசகங்களை தொழில் நுட்பம் மற்றும் பொருளாதாரத்துடன் இணைத்துப் பார்ப்பது படு துணிச்சலான ஒன்றாகத் தோன்றலாம். இன்று நாம் எப் படி அந்த வாசகங்களை அமைக்கலாம் என்பதை அறி வது அத்தனை கடினமானதல்ல.

- நாம் ஏழைகள்; தெய்வீகமானவர்கள் அல்ல. நாம் கவ லையடைய நிறைய உள்ளது. நாம் பொற் காலத்தை நோக்கி செல்லவில்லை. நமக்குத்தேவை மென்மை யான அணுகுமுறை, வன்முறையற்ற எண்ணம் மற்றும் சிறியதே அழகானது. நாம் நியாய உணர்வுடன் நம்மைக் கருத வேண்டும்; சரியான வெற்றியை குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்.

இவை எல்லாம்தான், இவை மட்டும்தான் நம்மை சமா தானத்தை உருவாக்குபவர்களாக்க முடியும்.

எதிர்கால நெருக்கடியைக் கொண்டு வருபவர்களி லிருந்து முற்றிலும் வேறுபட்டவர்களாக, மீண்டு வருப

வர்கள் தங்களை அமைத்துக் கொள்கிறார்கள். மீண்டு வருபவர்கள் வளர்ச்சியை' எண்ணுவதில்லை என்பதும், எதிர்கால நெருக்கடியைக் கொண்டு வருபவர்கள் 'வளர்ச்சியை' எண்ணுகிறார்கள் என்பதும் மேலெழுந்த வாரியான கருத்தாகும். ஒவ்வொருவரும் வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டுள்ளனர். ஏனெனில் வளர்ச்சி என்பது வாழ்க்கையின் மிக முக்கியமான ஒன்றாகும். வளர்ச்சி, தர நிர்ணயம் என்பதன் அடிப்படையிலிருக்க வேண்டும். எப்போதும் சில விஷயங்கள் வளர்ந்து கொண்டிருக்க வேண்டும். சில விஷயங்கள் அழிந்து கொண்டிருக்க

வேண்டும்.

இந்த முக்கியமான விஷயத்தில் ஒவ்வொருவரும் ஒதுங்கிக் கொள்ளவே செய்கின்றனர். அதனை "நிபுணர் களிடம் விட்டு விடுவோம்" என்பது வருங்கால நெருக்கடியாளரிடம் விட்டுவிடுவது போன்றதுதான். அரசியலை அரசியல் நிபுணர்களிடம் விட்டுவிடக் கூடாது என்று சொல்லப்படுவது பொதுவாக ஏற்றுக் கொள்ளப் பட்டிருக் கிறது. இன்று அரசியலின் முதன்மையான அங்கம் பொருளாதாரமாகும். பொருளாதாரத்தின் முக்கியமான அங்கம் தொழில் நுட்பமாகும். அரசியல், அதன் நிபுணர்களிடம் விட்டுவிடக் கூடாதது என்றால், பொருளாதாரமும், தொழில்நுட்பமும் கூட அப்படித்தான்.

நிபுணர்களைவிட சாதாரண மனிதர்களே மனிதத் தன்மையுடன் விஷயத்தை அணுகுவார்கள் என்பதால் சாதாரண மனிதர்களின் மீதே நம்பிக்கை இருக்கிறது. சாதாரண மக்களுக்கு "சக்தியில்லை " என்று ஆக்கப் பட்டிருக்கும் இன்றைய நிலையில், புதிய வழிகளை சாதாரண மக்கள் ஏற்படுத்தாமல், தங்களது ஆற்றலை முன்னரே செயல்பட்டுக்கொண்டிருக்கும் சிறிய குழுக்க

ளின் மீது நம்பிக்கையுடன் வைக்க வேண்டும். இரண்டு உதாரணங்களைப் பார்ப்போம்.

நவீன விவசாயம் மண், தாவரங்கள் மற்றும் விலங்குகள் மீது பயன்படுத்தும் ரசாயனப் பொருட்களின் அதிகரித்து வரும் அளவால், மண்வளமும், ஆரோக்கியமும் நீண் டகால பாதிப்புக்குள்ளாகும் என்பது அபாயகரமான ஒன்று. இப்படி நிகழும் என்ற சந்தேகத்தை எழுப்பு வர்கள் மீது "விஷமா அல்லது பசியா" என்ற வாதம் முன்வைக்கப் படுகிறது. இந்த வகை இரசாயன வேதிப் பொருள்களைப் பயன்படுத்தாமல் அதிக விளைச்ச லைப் பெறும் விவசாயி கள் அனேக நாடுகளில் உள்ள னர். இயற்கை வேளாண் மைக்கு ஆதரவாகச் செயல் படும் தன்னார்வக் குழுக்களோ அல்லது இயற்கை வேளாண்மையைச் செய்யும் விவசாயி களோ அரசாங் கங்களின் ஆதரவையோ அங்கீகாரத்தையோ பெற முடி யவில்லை . அவர்கள் நவீன தொழில்நுட்ப வளர்ச் சிக்கு இணையாக இல்லை என்று மறுதலிக்கப் படுகிறார்கள். இயற்கை வேளாண்மை முறை நவீன உலகிற்கு எதி ரான திசையில் உள்ளது. ஆனால் நவீன வாழ்க்கை முறையின் அபாயகரமான விளைவுகளை இப்போது உணர்ந்து கொண்டால், இயற்கை வேளாண் மைக்கு மிகுந்த ஆதரவளித்து, அந்த தன்னார்வக் குழுக் களு டன் இணைந்து கொள்ளக் கூடச் செய்வோம். இயற்கை வேளாண்மையை புறந்தள்ளவோ அதனை கேலிக் குள்ளாக்கவோ மாட்டோம்.

தொழிற்சாலை வகைகளில், இடைத்தர தொழில் நுட் பக்குழுக்கள் உள்ளன. மக்கள் தங்களுக்குத் தாங்களே எப்படி உதவிக் கொள்ளலாம் என்பதைப் பற்றிய முறை யான ஆய்வுகளில் அவை ஈடுபட்டுள்ளன. மூன்றாம் உலக நாடுகளுக்கு தொழில் நுட்ப ரீதியில் உதவும் அதே

வேளையில், செல்வந்த நாடுகளின் எதிர்காலம் பற்றி கவலை கொள்வோரையும் இந்த குழுக்களின் செயல் பாடு கள் ஈர்க்கின்றன. மனிதத் தன்மையுடன், மனித முகத் துடனான இடைத்தர தொழில் நுட்பம் சாத்தியமே என்று அவை காட்டுகின்றன. அந்தக் குழுக்கள் மனிதர களை மீண்டும் ஒருங்கிணைத்து மனிதர்களின் திறமை களை அவர்களின் கைகள் மூளைகளைப் பயன்படுத்தி வெளிக்

கொண்டுவந்து உற்பத்திச் செயல்பாடுகளில் ஈடுபட வைக்கின்றன. இத்தகைய குழுக்களும் பொது மக்க ளின் ஆதரவை வேண்டி நிற்கின்றன.

தொழில் நுட்ப வளர்ச்சியை புதியதொரு திசை யில், மனிதனின் உண்மையான தேவைகளுக்காகக் கொண்டு செல்ல முடியும் என்பதில் எனக்கு எந்த சந் தேகமும் இல்லை. அதாவது, மனிதனின் உண்மையான தேவை என்பதற்கு மனிதனின் உண்மையான அளவு என்று பொருள். அசுர வகை அமைப்புகள் என்பது சுய அழிவாகும். மாற்றி அமைப்பதற்கு என்ன விலை கொடுக்க வேண்டிவரும், வாழ்வதற்கு என்ன விலை கொடுக்க வேண்டி வரும் எனக் கணக்கிடுவது வக்ர மானது. மதிப்புள்ள எந்த ஒன்றுக்கும் ஒரு விலை தர வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. மனிதரை அழி விலிருந்து அழிவுப் பாதையிலிருந்து திருப்புவதற்கு நல்ல முயற்சியும், பயமின்மையும் வேண்டும்.

............

## எது வளர்ச்சி?

சில ஆண்டுகளுக்கு முன் ஏழைநாடுகளுக்கு செய்யும் உதவி பற்றி பிரிட்டிஷ் அரசு ஒரு வெள்ளை அறிக்கை வெளியிட்டது. அதில், "வளர்ந்துவரும் நாடுகளுக்கு நமது சக்திக்குட்பட்டு செய்ய வேண்டிய உதவி, அந்த நாட்டு மக்கள் தங்கள் திறமைகள் மூலம் முழுமையான மகிழ்ச்சியுடன் வாழவும், நேரான முன்னேற்றத்தைப் பெறவும் பொருளுதவி செய்வதாகும்" என்று குறிப்பிடப் பட்டிருந்தது.

இன்றும் இதேபோன்று சொல்ல முடியுமா என்பது சந் தேகம் என்றாலும், அடிப்படைத் தத்துவம் அப்படியே தான் இருக்கிறது. இந்தப் பணி சற்றே கடினமாகிவிட் டது. புதிதாகச் சுதந்திரமடைந்த நாடுகளும் அப்படியே கருதுகின்றன. இரண்டு விஷயங்கள் உலகின் கவ லைக்குரியதாய் இருக்கின்றன. ஒன்று பெருமளவிலான வேலையில்லாத் திண்டாட்டம், மற்றொன்று நகரத்தை நோக்கி பெருமளவில் மக்கள் இடம் பெயர்தல். மனித குலத்தின் மூன்றில் இரு பகுதியினருக்கு "முழுமையான மகிழ்ச்சியான வாழ்க்கை' என்பது எப்போதும் போலவே வெகு தொலைவாகவே உள்ளது. எனவே முழுமை யான இந்தப் பிரச்சினைக்கு புதிய கோணத்திலான அணுகுமுறையே நல்லது.

பலருக்கும் புதிய கோணத்திலான அணுகுமுறை பல வாரக உள்ளது. ஏழைநாடுகளுக்கான உதவிகள் மிக வும் குறைவு என சிலர் நினைக்கின்றனர். பல இடை யூறுகள் உள்லளது என்பதை ஒத்துக் கொள்பவர்கள், பெரிய உதவிகள் செய்ய வேண்டி வரும் என்று சொல்கி றார்கள். கிடைக்கும் உதவிகள் பெருமளவில் இல்லை என்றால் முன்னேறிவிடும் என்று நிச்சயமாகச் சொல்லக் கூடிய நாடுகளின் மேல் அதிக கவனக்குவிப்பு செய் யவேண்டும் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். இந்தக்

கருத்து எல்லோராலும் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்ப டவில்லை என்பதில் ஆச்சரியமேதுமில்லை.

அனைத்து வளர்முக நாடுகளிலும் உள்ள ஆரோக்கிய மற்ற, தடை ஏற்படுத்தக் கூடிய ஒன்றாக "இரட்டைப் பொருளாதார முறை" உள்ளது. இவை ஒன்றுக்கொன்று வேறுபட்டு தொலைவில் நிற்பவையாக உள்ளன. சிலர் பணக்காரர்களாகவும், சிலர் ஏழைகளாகவும் உள்ள நிலை அல்லது இது. அவர்கள் இரு சாராரும் பொது வான ஒரு வாழ்க்கைத் தடத்தில் இணைக்கப்பட்டுள் ளனர். இரண்டு விதமான வாழ்க்கை முறைகள் உள்ள தைப் பற்றியதாகும் இது. ஒரு சாராரின் எளிய மனிதன் செலவழிக்கும் வருமானம், மற்றொரு சாராரின் கடும் உழைப்பைச் சிந்தும் மனிதனின் வருவாயை விட பல மடங்கு அதிகமாக உள்ளது. இந்த இரட்டைப் பொரு ளாதார நிலையால் ஏற்படும் சமூக, அரசியல் பதற்றங்கள் வெளிப்படையானவை.

வளரும் நாடுகளின் இரட்டைப் பொருளாதார நிலை யில், மொத்த மக்கள் தொகையில் நவீனதொழிலில் ஈடு பட்டுள்ள 15 சதவீதமானோர் ஓரிரு நகரங்களுக்குள் ளேயே அடங்கி விடுகின்றனர். மற்ற 85 சதவீதமானோர் ஊர்ப் புறங்களிலும், சிறு நகரங்களிலும் வாழ்கின்றனர். சில காரணங்களால் பெரும்பாலான வளர்ச்சித் திட்டங் களும் பெருநகரங்களுக்கே சென்று விடுகின்றன. அதா வது 85 சதவீத மக்கள் புறந்தள்ளப்படுகின்றனர். அவர் களின் கதி? மக்கள் தொகை மொத்தத்தையும் பெருந கர நவீன தொழில் உலகம் ஈர்த்துக் கொண்டு அது வள ரும் என்பது உண்மையல்ல.

பணக்கார நாடுகள் கூட மக்கள் தொகையின் சரியான சரி விகிதப் பரவல் இல்லாத நிலையால் அவதிப்படுகின் றன.

ஒவ்வொரு விதமான நவீன சிந்தனைகளிலும் பரிணா மக் கொள்கை முக்கியப் பங்கை வகிக்கிறது. “வளர்ச்சி” மற்றும் "பரிணாமம்” இரண்டும் ஒரே பொருளைத் தரு வது போல தோன்றினாலும், வளரும் பொருளாதாரத் தில் அப்படி இல்லை. பரிணாமக் கொள்கை சில விஷ யங்களில் சரியாக இருப்பினும், பொருளாதாரம் மற் றும் தொழில் நுட்பம் போன்றவற்றில் சரியாக இல்லை என்றே அனுபவம் காட்டுகிறது. மாபெரும் நவீன சுத் திகரிப்பாலைக்கு செல்வதாக கற்பனை செய்து கொள் வோம். அதனைச் சுற்றி நடக்கையில் அதன் மாபெ ரும் அமைப்பைக் கண்டு மனித மூளை எப்படி இத னைச் செய்தது என்று வியக்கிறோம். எந்த வகையான ஆழமான அறிவு, திறமை மற்றும் அனுபவம் இந்த சாத னத்தை உருவாக்கியது? எப்படி இது சாத்தியமானது? அது உடனடியாகச் சட்டென்று எவரிடமிருந்தும் தோன் றிவிடவில்லை. அது படிப்படியாக பரிணமித்து வந்தது என்பதே அதற்கான பதில். எளிதாகத் தோன்றி கொஞ் சம் கொஞ்சமாக மாறி, வளர்ந்து, இப்படிப் பெரிய அள வில் இருக்கிறது. இது மிகச் சிறிய உதாரணம் தான்.

நாம் இங்கு கண்டதைவிட காணாததே மிக அதிகம். கச்சா எண்ணெய் பல கட்டங்களில் சுத்திகரிக்கப்பட்டு, பல தரங்களில் பல பெயர்களில் முறையாகத் தயாரிக் கப்பட்டு அடைக்கப்பட்டு பெரிய அளவிலான விநியோக முறையில் எண்ணற்ற நுகர்வோர்களுக்கு கிடைக்கிறது. இவை எல்லாவற்றையும் நம்மால் காண இயலாது. அதே போன்று இதன் பின்னிலுள்ள அறிவார்ந்த திட்ட மிடல், ஒருங்கமைப்பு, வர்த்தக முறை, சந்தைப் படுத்து தல் போன்றவற்றையும் காண முடியாது. இந்த அமைப் புக்குத் தேவையான கல்வி முறையைத் தரும் பள்ளி தொடங்கி, கல்லூரி, ஆய்வகங்கள், பல்கலைக்கழகங்

கள் ஆகியவற்றையும் நம்மால் காண இயலாது. பத்தில் ஒரு பங்கைக் கூட பார்க்க முடியாது. பத்தின் முன் ஒன்று என்பது பற்றது. அந்த சுத்திகரிப்பாலை அமைவிடத்தில் பத்தை ஒரு நாட்டால் அளிக்க முடியவில்லை என்றால் சுத்திகரிப்பாலை இயங்காது அல்லது மற்ற சமூகத்தை சார்ந்திருக்க வேண்டி வரும். இவை அனைக் எளிதாக மறக்கப்பட்டுவிட்டன. ஏனெனில் காட்சியாக தெரிவதன் மீதே உணரும் படியும், கண்ணுக்குத் தெரியத வற்றை மறக்கும்படியும் நவீனப் போக்கு கொண்டு போய்க் கொண்டிருக்கிறது.

பொருளாதார உதவிகள் பயனற்றுத் தோல்வியடையும் போது, அல்லது பொருளாதார உதவிகள் அளிக்கும் எதிர் பார்த்த பலன்கள் கிட்டாமல் போகும்போது கண் ணுக்குப் புலனாகாத அத்தகைய பொருளாதார ரீதி யில் உதவும் தத்துவ முறை மீறப்படுகின்றதா? அல்லது அவற்றை திட்டங்களின் அடிப்படையில் பணம் செல வழித்து செய்வதாலா? வேறுவார்த்தைகளில் சொல்வ தானால் வளர்ச்சி என்பதை பரிணாமம் என்ற ரீதி யில் பார்க்காமல் அவற்றை உருவாக்கம் என்ற ரீதியில் அணுகுவதுதான் இது.

நம்மைச்சுற்றியுள்ள அனைத்தும் இயற்கையான தேர் வின் மூலம் ஏற்படும் சிறிய சிறிய மாற்றங்களினால் உருவானவை என்று நமது அறிவியலறிஞர்கள் உறு தியாகத் திரும்பத் திரும்பக் கூறி வருகின்றனர். எல் லாம் வல்ல இயற்கை மிகவும் நுட்பமான எதனையும் படைக்கவில்லை. நுட்பமான சிக்கலான ஒவ்வொன்றும் பரிணாம அடிப்படையில் தானாக உருவானவை என்று நமக்குச் சொல்லப்படுகிறது. நமது வளர்ச்சி வல்லுனர் கள் எல்லாம் வல்ல இயற்கையை சிறப்பாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறார்கள். திட்டமிடுதல் மூலம்

ஒரேயடியாக மிகச் சிக்கலானவற்றை படைத்துவிடமுடி யும் என்றும் நினைக்கிறார்கள்.

அரிய சில விஷயங்கள் எப்போதாவது செய்யப்படுகின் றன. எங்காவது ஓரிடத்தில் ஒரு திட்டத்தை ஒருவர் வெற்றிகரமாகச் செய்ய முடியும். தொழில் சமூகம் உரு வாவதற்கு முன்னதாக அதி நவீன தீவுகள் போன்ற அமைப்பை எப்போதும் உருவாக்க முடியும். ஆனால் அவற்றைக் கோட்டைகள் போன்று பாதுகாக்க வேண் டும். வெகு தூரத்திலிருந்து ஹெலிகாப்டர் போன்றவை கொண்டு வசதியளிக்க வேண்டும். இல்லை எனில் சூழ்ந்திருக்கும் கடலால் அத்தீவுகள் மூழ்கடிக்கப்படும். என்ன நிகழ்ந் தாலும், அவை நன்றாகச் செயல்பட்டா லும் இல்லை என்றாலும் நான் முன்பு குறிப்பிட்டபடி இரட்டைப் பொருளாதார முறையை உருவாக்கி விடும். அவற்றைச் சூழ்ந்துள்ள சமூகத்துடன் அவற்றை ஒன்றி ணைக்க முடியாது. இணைப்பை உடைக்கவே அவை முயலும்.

இதனைப் போன்ற நிலை பணக்காரநாடுகளில் இருப் பதைக் காணலாம். இதன் காரணமாக நகர்மயமாகி பெருமளவில் வறுமையில் தள்ளப்பட்ட மக்களையும் வேலை வாய்ப்பற்றவர்களையும் காணலாம்.

அண்மை காலமாக “இரட்டைப் பொருளாதார முறை யையும்”, அதன் இரட்டைத் தீமைகளான பெருமள விலான வேலைவாய்ப்பற்ற நிலையையும், நகரங்களை நோக்கி மக்கள் இடம் பெயர்தலையும் நிபுணர்கள் குறிப் பிட்டுப் பேசத் தொடங்கியுள்ளனர். அப்படிச் சொல்லும் போது இந்தப் பிரச்சினைகளை வெறும் ஒரு நிலையி லிருந்து மறு நிலைக்கு மாறுவதாகவே கொள்கின்றனர். காலம் செல்லச் செல்ல எல்லாம் சரியாகிவிடும் என் பது பலராலும் அங்கீகரிக்கப்படவில்லை. மாறாக, இந்த

"இரட்டைப் பொருளாதார முறையால்" நகரங்களில் வெற்றிகரமாக உருவாகும் தொழிற்சாலைப் பெருக்கத் தினால் ஊர்ப்புறப் பகுதிகளில் பொருளாதாரம் அழிக் கப்பட்டு, பழிவாங்குதல் போல ஊர்ப்புற மக்கள் வெள் ளம் நகரத்தை நோக்கி இடம் பெயர்ந்து நகர்ப் பகுதி களை நிர்வகிக்க இயலாத ஒருவருக்கொருவர் "விஷம் கொடுத்து" கெடுத்துக் கொள்வது போன்ற நிலை உரு வாகும். உலக சுகாதார நிறுவனம் மற்றும் கிங்ஸ்லி டேவிஸ் போன்ற நிபுணர்களும் 20, 40 மற்றும் 60 மில்லி யன் மக்களைக் கொண்ட நகரங்கள் வறுமையும் மிகுந்த பிச்சைக்காரர்களைக் கொண்டதாக இருக்கும் முன்ன றிவிப்புச் செய்கிறார்கள்.

இதற்கு ஏதேனும் மாற்று உண்டா ? நவீன துறை களின்றி ஏதும் செய்ய இயலாத வளர்முக நாடுகள், குறிப்பாக பணக்கார நாடுகளுடன் நேரடித் தொடர்பில் உள்ள வளர் முகநாடுகளுக்கு இது சிரமமே. என்ன கேட்கப்பட வேண்டும் என்றால், அனைத்து மக்களை யும் உள்ளிழுத்துக் கொள்ளக் கூடியதாக நவீன துறை களை விரிவாக்கம் செய்ய முடியும் என்று கற்பனையாகச் சொல்லப்படுகிறதே. அதனை நியாயமாக வேகமாகச் செய்ய முடியுமா? என்பதுதான். வளர்ச்சி குறித்த தத்துவ மாக நீண்ட நாட்களாக சொல்லப்படுவது இப்படித்தான்: "பணக்காரர்களுக்கு சிறந்தது எதுவோ, அதுவே ஏழை களுக்கும் சிறந்தது". இந்த நம்பிக்கை ஆச்சர்யகரமாக நீண்டு வளர்ந்து கொண்டிருக்கிறது. வளர்முக நாடுகள், அமெரிக்கா மற்றும் அதன் நேச நாடுகள், சில விஷ யங்களில் ரஷ்யா கூட சிவில் அணுசக்தித் திட்டங்களை உருவாக்கி செயல்படுத்துவது புத்திசாலித்தனமானது, தேவையானது என்று நினைக்கின்றன. தைவான், தென் கொரியா, பிலிப்பைன்ஸ், வியட்நாம், தாய்லாந்து, இந்

தோனேஷியா, ஈரான், துருக்கி, போர்ச்சுகல், வெனிசூலா போன்ற நாடுகளின் ஏழ்மை நிலையால் இந்த நாடுக ளின் விவசாயத்துறையில் உள்ள பிரச்சினைகள், ஊர்ப் புற வறிய நிலை மக்கள் வாழ்வை வளப்படுத்த வேண் டிய சூழல் ஆகியவை காரணமாக "சிவில் அணுசக்திக் கூடங்கள்" அமைப்பது புத்திசாலித்தன மானது, தேவை யானது என்று நினைக்கின்றன.

மனிதனைத் தரம் தாழ்த்தி வருத்தும் வறுமை அல்லது வறிய நிலை என்பதே நமது கவனத்திற்குரிய அனைத்து விஷயங்களின் தொடக்கப் புள்ளியாகும். வறுமை என்ப தன் அளவுகோல் மற்றும் அதன் வரையறை என்பதைப் பற்றி அறிந்து கொள்வதே நமது முதல் பணியாகும். வறு மைக்கான காரணங்களில் இயற்கை வளமின்மை அல் லது மூலதனமின்மை அல்லது போதுமான உள்கட்ட மைப்பு வசதிகளின்மையே முதற்காரணங்களாக எனக் குப்படுகிறது. கொடிய வறுமையின் முதன்மையான கார ணங்கள் கல்வி இல்லாமை, அமைப்பு முறை இல் லாமை மற்றும் ஒழுக்கமின்மையே.

வளர்ச்சி என்பது பொருள்களைக் கொண்டு தொடங் குவதல்ல; அது மக்களின் கல்வி, அமைப்புமுறை மற் றும் ஒழுக்கத்திலிருந்து தொடங்குகிறது. இந்த மூன் றும் இல்லை என்றால் அனைத்து மூலாதாரங்களும் மறைந்தே, முறைப்படுத்தப்படாமல் பயன்படுத்தப் படா ததாகவே இருக்கும். எவ்வளவு அழிவுக்கு ஆளாகியி ருந்தாலும், உயர்தரமான கல்வி, அமைப்பு முறை மற்றும் ஒழுக்கம் ஆகியவற்றைக் கொண்டிருந்த ஒவ்வொரு நாடும் பொருளாதார அற்புதங்களை நிகழ்த்திக் காட்டி யிருக்கின்றன.

எனவே வளர்ச்சியின் மையப்பிரச்சினை இங்கேதான் இருக்கிறது. மேற்கண்ட மூன்று விஷயங்களின் குறை

பாடுகளின் காரணமாகத்தான் வறுமை நிலை இருக்கிறதென்றால், இக்குறைபாடுகளை போக்குவதில்தான் வறுமை ஒழிப்பு இருக்கிறது. வளர்ச்சி என்பது உருவாக்குவதோ, கட்டளையிடப்படுவதோ, விலைக்கு வாங்க முடிவதோ, தெளிவாகத் திட்டமிடப்பட்டு கொண்டு வருவதோ அல்ல. அது பரிணாம செயல்பாட்டை வேண்டி நிற்கிறது என்பதன் காரணம் இதுதான். கல்வி என்பது துள்ளிக் குதித்து ஓடி வருவதல்ல, அது கடின முயற்சியால் படிப்படியாக அடைய வேண்டிய ஒன்று. அமைப்பு முறை என்பதும் துள்ளித் தாண்டி வருவதல்ல. மாறும் சூழ்நிலைகளுக்கேற்ப பொருந்தும்படி உருவாகி வர வேண்டிய ஒன்று. இவற்றைப் போன்றே ஒழுக்கமும். இவை மூன்றும் படிப்படியாக உருவாகி வரவேண்டும். வளர்ச்சியின் முதல் பணி இந்த உருவாக்கங்களை வேகப்படுத்துவதுதான். இந்த மூன்றும் மக்களின் சிறு பிரிவினருக்கானது அல்ல, மாறாக ஒட்டு மொத்த சமூகத்திற்குமானது.

பொருளாதார உதவிகள் சில செயல்பாடுகளுக்காகச் செய்யப்படுமேயானால், பெரும்பான்மை மக்களின் கல்வித் தரத்தில் நீடித்து பயனளிக்கக் கூடியதாக வேண்டும். இந்த உதவிகளின் அடிப்படையில் அமைப்பு மற்றும் ஒழுக்க நிலைகளில் முன் இருக்க வேண்டும். இந்த மூன்றையும் புதிதாக சமுக திற்கு அளித்தால், பயனிருக்காது. மாறாக அந்த சமூகத்தை தாழ்த்தவே செய்யும். அந்த உதவிகள் அந்நியமானது இருக்கும்.

**பொருள் சார்ந்த பொருளியல் கொள்கையைய பொருளாதார வல்லுனர்களுக்கானதல்ல வளர்ச்சி என்பது பொருளாதார நிபுணர்களின் வழிகாட்டல் சில குறிப்பிட்ட நிலைகளில் பயனளிக்கக் கூடியதுதான். ஆனால் பொதுவான வளர்ச்சிக்**

**கான கொள்கை வழிமுறைகள் மொத்த மக்கள் தொகைக்குமானது.**

உதவிகள் செய்வது, வளர்ச்சி ஆகியவற்றிற்கான புதிய சிந்தனை பழைய சிந்தனையிலிருந்து வேறுபட்டது. ஏனெனில் புதிய சிந்தனை வறுமை என்பதை மிகவும் அவசர கவனம் தேவைப்படும் ஒன்றாகக் கருதுகிறது. பணக்காரர்களுக்கெல்லாம் எது நல்லதோ அதுவே ஏழைகளுக்கும் நல்லது என்ற இயந்திரத்தனமான வழி யில் அது செல்லாது. அது மிகவும் சிரத்தையுடன் கவ னத்துடன் மக்கள் மீது அக்கறை கொள்கிறது. ஏன் மக் கள் மீது அக்கறைப்படவேண்டும்? ஏனெனில் மக்களே எல்லா வளங்களிலும் முதன்மையான முழுமையான ஆதாரவளம் ஆகும். இவை கைவிடப்பட்டு, சுயதயாரிப் பான நிபுணர்களாலும் உயர்வகை திட்டக்காரர்களாலும் கொண்டு செல்லப்படுமேயானால் உண்மையான பலன் எப்போதும்
கிடைக்காது.

.....................

# இடைத்தரத் தொழில் நுட்பம்

# இதுவே நமக்கு வேண்டும்

உலக நாடுகளில் பல இடங்களிலும் ஏழைகள் மேலும் ஏழைகளாகவும், பணக்காரர்கள் மேலும் பணக்காரர்க ளாகவும் ஆகிக் கொண்டே இருக்கிறார்கள். செய்யப் பட்டுக் கொண்டிருக்கும் அயல்நாட்டு உதவிகள் இந்த நிலையை மாற்றிடவில்லை. இந்த உதவிகள் அந்த

நிலையை வளர்க்கவே செய்கின்றன. உதவிகளைப் பெறுபவர்கள் தேவையுள்ளவர்களுக்கு உதவி புரியாமல் தங்களுக்கே செய்து கொள்கின்றனர். கிட்டத்தட்ட எல்லா வளர்முக நாடுகளும், வளர்ந்த நாடுகளைப் போன்றே வாழ்க்கை முறைகளைக் கொண்ட நவீன துறைகளைப் பெற்றிருக்கின்றன. ஆனால் அந்த வளர்முக நாடுகள் நவீனமற்ற துறைகளை தனது மொத்த மக்கள் தொகையின் பெரும் பான்மையினருக்கெனக் கொண்டிருக்கின்றன. அந்தப் பெரும்பான்மையினரின் வாழ்க்கை மிகவும் திருப்தியற்ற நிலையில் உள்ளது மட்டுமல்லாமல் சிதைந்து போகக் கூடிய நிலையிலும் உள்ளது.

நவீனமற்ற துறைகளில் உள்ள மக்களுக்கு மக்களின் பிரச்சினைகளுக்கு உதவுவதை குறித்தே கவலைப் படுகிறேன். இதற்குப் பொருள் நவீன துறைகளில் தொடர்ந்து கொண்டிருக்கும் ஆக்கப்பூர்வ வேலைகளை நிறுத்த வேண்டும் என்பதல்ல. அவை தொடர வேண்டும் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆரோக்கியமான வளர்ச்சி இல்லை என்றால் நவீன துறைகளின், வெற்றிகளும் மாயத் தோற்றமே. அல்லது குறைந்தபட்சம் நிலைத்து நீடித்திருக்கும் தன்மையாவது வேண்டும் பெரு வாரியான மக்கள் கொடிய வறுமை நிலையில் மட்டும்மல், நம்பிக்கையற்ற நிலையிலும் இருக்கிறார்கள்.

வளர்முக நாடுகள் என சொல்லப்படுகின்ற நாடுகள் உள்ள ஏழை மக்களின் நிலை என்ன? தங்கள் வறுமையிலிருந்து வெளிவர முடியாத அளவுக்கு வேலை வாய்ப்புகள் அவர்களுக்கு மிகவும் குறைவு. அவர்கள் வேலை வாய்ப்பற்றவர்களாகவோ அல்லது அவ்வப்போது வேலை கிடைப்பவர்களாகவோ உள்ளனர்.

அப்படி வேலை கிடைக்கையில் அவர்களது உற்பத்தி அளவு மிகவும் குறைவாகவே உள்ளது. அவர்களுள் சிலர் நிலங்களைப் பெற்றுள்ளனர். பெரும்பாலும் மிகக் குறைவாகவே நிலத்தைப் பெற்றுள்ளனர். பெரும்பாலானோருக்கு நிலம் இல்லை. அதனைப் பெறவும் வழி இல்லை; வேலைவாய்ப்பற்றவர்களாகவும், இடைக்கிடையில் வேலை பெறுபவர்களாகவும் இருப்பதால் பெரு நகரங்களை நோக்கிச் செல்கின்றனர். கிராமங்களில் வேலையே கிடைக்காத நிலையில், பெருநகரங்களில் சிறிதளவேனும் வாய்ப்புகள் உள்ளமையால், அவர்கள் நகரங்களை நோக்கிச் செல்கின்றனர்.

ஊர்ப்புறங்களில் வேலைவாய்ப்பின்மைக்கு பெருகிவரும் மக்கள் தொகை காரணமாகச் சொல்லப்படுகிறது. மக்கள் தொகை என்பது ஒரு காரணிதான் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. இந்தப் பார்வையைக் கொண்டிருப் பவர்கள், கூடுதலான மக்களுக்கு ஏன் கூடுதலான வேலை கிடைக்கவில்லை என்பதை விளக்க வேண்டும். அவர்களால் வேலை செய்யமுடியாது. ஏனென்றால், அவர்களிடம் முதலீடு இல்லை என்று சொல்லப்படுகிறது.

ஆனால் முதலீடு (மூலதனம்) என்பது என்ன? மனித உழைப்பின் விளைவே முதலீடு. முதலீடு இல்லை என்பது மிகக் குறைந்த அளவு உற்பத்தி என்றறியலாம். ஆனால், இது வேலைவாய்ப்புக்களைப் பற்றி விவரிக்க முடியாது.

பெருமளவிலான மக்கள் வேலை செய்வதில்லை அல்லது இடைக்கிடை வேலை செய்கிறார்கள். அதனால் அவர்கள் ஏழைகளாகவும், உதவியற்றவர்களாகவும் கிராமப்புறங்களில் வேலைவாய்ப்பற்று திக்கற்ற நிலையில் ஏதாவது ஒரு வழியைத் தேடி நகரங்களை நோக்கிச்

செல் கிறார்கள் என்பது உண்மை. ஊர்ப்புற வேலை யில்லாத் திண்டாட்டம் பெருமளவிலான மக்களை நக ரங்களை நோக்கித் திருப்புகிறது. ஊர்ப்புற வேலை வாய்ப்பின்மை நகர்ப்புற வேலையின்மையாக மாறிவிட் டது.

எனவே, பிரச்சினையை எளிதாக இப்படிச் சொல்ல லாம். மொத்த மக்கள் தொகையில் இன்னமும் 80-90 சதவீத மக்களை கொண்டிருக்கும் ஊர்ப்புற கிராம மக் களின் பொருளாதார வாழ்க்கையை எப்படி ஆரோக்கி யமானதாக ஆக்குவது? தொழிற்சாலைகளை அமைப் பது, முதலீடுகளைப் பெறுவது, பணியாட்களை அமர்த் துவது, சந்தைப்படுத்துவது ஆகியவற்றைச் செய்து பெரு நகரங்களின் மீதே வளர்ச்சியைக் குவிப்பது, நாட்டின் பிற பகுதிகளில் விவசாயத் தொழில்களல்லாத மற்ற தொழில்களை பாதித்து, வேலைவாய்பின்மையை உரு வாக்கி, நகரங்களை நோக்கி மக்கள் வருவதை வேகப் படுத்தும். அந்த நகரங்களால் மக்களனைவரையும் உள்ளிழுத்துக் கொள்ள முடியாது. ஒருவருக்கொருவர் விஷத்தைக் கொடுத்துக் கொள்ளும் செயல் நிறுத்தப்ப டாது.

எனவே, பெருநகரங்களை விட்டு ஊர்ப்புறப் பகுதிக ளில் விவசாயம் சார்ந்த தொழில்களை - தொழிற்சாலை களை உருவாக்குவது மிகவும் அவசியம். லட்சக்கணக் கான வேலை வாய்ப்புகளை உருவாக்க ஊக்கமுடன் முனைய வேண்டும்.

ஒரு மனிதனின் உற்பத்தி வெளிப்பாடு முக்கிய எவரும் சொல்ல மாட்டார்கள். ஆனால் தனி மனித உற்பத்தி வெளிப்பாட்டை அதிகரித்தல் என்பது முக்கியானதல்ல. முதன்மையான நோக்கம் அதிக வேலைவாய்ப்புக் களை உருவாக்குவதுதான். ஒரு மனிதனுக்கு வேலை

வாய்ப்பு என்பது எல்லாத்தேவைகளையும் விடப் பெரியது. அவன் வெறுமனே இருப்பதைக் காட்டிலும் குறைவாகவேனும் சம்பாதிப்பது பலனளிக்காத வேலை என்றாலும், சிறந்தது. "முழுமையாக்கலின் முன்பு அனைத்தையும் ஒன்றாக்குதலைச் செய்ய வேண்டும் என்பது கேப்ரியேல் ஆர்டென்டின் வாக்கு.

அனைவருக்கும் போதுமான வேலை இருக்க வேண்டும் என்பது முக்கியமானது. ஏனெனில் ஆக்கப்பூர்வமான வேலைகளுக்கெதிரான அனிச்சையான செயல்களைக் களையவும், ஒரு புதிய மன நிலையை உருவாக்கிடவும் அது தேவை. புதிய மன நிலையை தொழிலாளிகள் உள்ளத்தில் உருவாக்கி அவர்களை சாத்தியமான நல்வழியில் பயன்படுத்தி அவர்களை அற்புதமானவர்களாக மாற்ற வேண்டும்.

வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், பொருளாதார நுண் கணிதம் வெற்றியை உற்பத்தி விளைவு அல்லது வருவாயைக் கொண்டு கணக்கிடுகிறது. அது எத்தனை வேலைவாய்ப்புக்கள் என்பதைப் புறந்தள்ளிவிடுகிறது. வேகமான செயல்பாடு மக்களின் தேவைகளையும், எதிர்விளைவுகளையும் தடுக்கிறது. அவர்களது முதல் தேவை சிறிதளவு வருவாய் உள்ள வேலையைத்தொடங்குவது; அது எவ்வளவு சிறிதாக இருந்தாலும் சரி. தங்களது நேரமும் உழைப்பும் மதிப்பானது என்பதை உணரும்போது அவர்கள் அதனை மேலும் மதிப்புடையதாக்க விரும்பு வார்கள். எனவே ஒவ்வொருவரும் எதையாவது உற்பத்தி செய்ய வேண்டும். இந்த வகையில் உற்பத்தி விளைவு மற்றதை விட சிறிதாகவே இருக்கும். ஆனால் அது சிறிதாகவே தான் இருக்கும் என்பது இல்லை. ஏனெனில் வேகமான தொடர் செயல்பாடு வளர்ச்சியை உருவாக்கும்.

வேலையில்லாத ஒரு மனிதன், நம்பிக்கையற்றவனாகி இடம் பெயரும்படி தள்ளப்படுகிறான். வேலைவாய்ப்பு என்பது முதன்மையான தேவை என்பதற்கு இதுவும் ஒரு காரணம். எனவே வேலைவாய்ப்பை உருவாக்குவதே பொருளாதாரத் திட்டமிடலின் முதன்மையான நோக்கமாக இருக்க வேண்டும். இதனைச் செய்யாமல் மக்கள் நகரங்களை நோக்கி இடம் பெயர்வதைத் தடுக்க முடியாது.

ஊர்ப்புறப் பகுதிகளிலும், கிராமங்களிலும் லட்சக் கணக்கான வேலைவாய்ப்புக்களை உருவாக்குவதே பெரும் பணி. வளர்ந்த நாடுகளில் உருவாகியுள்ள நவீன தொழில்கள் இந்தப் பணியைச் செய்ய முடியாது என்பது வெளிப்படை. மூலதனங்களை அதிகமாகவும் தொழிலாளர்களைக் குறைவாகவும் கொண்டுள்ள சமூகங்களுக்கானது போல, மூலதனங்களைக் குறைவாகவும் தொழிலாளர்களை அதிக மாகவும் கொண்டுள்ள சமூகங்களுக்கு இது பொருந்தாது. இதனைப் பற்றி ப்யூர் டோரிக்கோ இப்படி குறிப்பிடுகிறது:

"நவீன தொழிற்சாலைகள் வேலைவாய்ப்பிற்குக் குறைந்த அளவிலான வாய்ப்புக்களையே தருகின்றன. ப்யூர்டோ ரிக்கோ வளர்ச்சித் திட்டம் எப்போதும் இல்லாத வேகமான வெற்றியைப் பெற்றுள்ளது. ஆனால் 1952-1962 -ம் ஆண்டுகளில் சராசரி வேலைவாய்ப்புக்கள் ஒரு ஆண்டுக்கு 5,000. இன்றைய தொழிலாளர் பங்கின் விகிதங்கள், இடம் பெயர்தல் இல்லாத நிலையிலும் வருடாந்தர ப்யூர்டோ ரிக்கன் தொழிலாளர்களின் கூடுதல் எண்ணிக்கை 40,000 உற்பத்தித் தொழில்களுக்குள், சிறு தொழில், முனைப் புகள் நன்கு விரிந்து பரந்துபட்ட, தொழிலாளர்களைப் பயன்படுத்தும் அமைப்புகள் ஜப்பானில் உள்ளது போன்று இருக்க வேண்டும்."

இதனைப் போன்று குறிப்புகளை பல நாடுகளிலிருந்து தரமுடியும், குறிப்பாக இந்தியா, துருக்கி போன்ற நாடு களிலிருந்து. இந்த நாடுகளில் பெரும்விளைவுகளை எதிர் நோக்கிய ஐந்தாண்டுத் திட்டங்களின் முடிவில் வேலை வாய்ப்புக்கள் ஆரம்பத்தில் இருந்ததைவிட அதிகமானது.

இந்த வேலை வாய்ப்புக்களைப் பெருக்கும் உண்மை யான பணியை நான்கு வகையாக சொல்லலாம்.

**முதலாவது:** வேலைவாய்ப்புக்கான பகுதிகள் மக்கள் இடம் பெயரக்கூடிய நகரங்களில் அல்லாமல், வாழும் ஊர்ப்புறங்களில் உருவாக்கப்பட வேண்டும்.

**இரண்டாவது:** இந்த வேலை வாய்ப்புக்கான இடங்கள் அடையக்கூடிய முதலீட்டுடன், இறக்குமதிக்கு எளிதான வாய்ப்புள்ள சராசரியான மலிவாக (விலை குறைந்த வைகளாக) இருக்க வேண்டும்.

**மூன்றாவது:** உற்பத்தியில் மட்டுமல்லாமல், அமைப்புக ளிலும் மூலப்பொருள்கள் விநியோகத்திலும், நிதியாதா ரங்களை சந்தைப் படுத்துதலிலும் பெரும் திறமைகள் தேவை இல்லாத எளிமையான முறை களைக் கையா ளவேண்டும்.

**நான்காவது:** உற்பத்தி என்பது உள்ளூர் மூலப் பொருட் களிலிருந்தும், உள்ளூர்த் தேவைகளுக்காகவும் செய் யப்பட வேண்டும்.

இந்த நான்கு தேவைகளையும் நிறைவேற்றிட முதலா வதாக வளர்ச்சிக்கான பிராந்திய அணுகுமுறை இருக்க வேண்டும். இரண்டாவதாக "இடைத்தர தொழில் நுட் பத்தை" உருவாக்கி பயன்படுத்தும் முனைப்பு வேண் டும். இந்த இரண்டினைப் பற்றி காண்போம்.

பிராந்திய அல்லது மாவட்ட அணுகுமுறை

பெரிய அளவில் தேவையுள்ளவர்களுக்கு பயன்படும் பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்துவதற்கு அரசியல் ரீதியாக பிரிக்கப்பட்டுள்ள பகுதிகள்தான் தேவை என் பது இல்லை . சில பகுதிகள் சிறிதாக இருக்கும். சில பகுதிகள் பெரிதாக இருக்கும். உதாரணத்திற்கு இந்தி யாவை எடுத்துக் கொள்வோம். இந்தியா ஒரு பெரிய நாடு. பல வகை அதன் ஒற்றுமை பாதுகாக்கப் படவேண் டியது

ஆனால் இந்தியா முழுமைக்குமான வளர்ச்சிக் கொள்கை என்று வரும்போது, சில மாநகரங்களிலேயே அதன் நவீன தொழில் துறை வளரும்படி உள்ளது. நாட்டின் பெரும் பகுதி அதாவது 80 சதவீத மக்க ளைக் கொண்ட பகுதி மிகவும் குறைவான வளர்ச் சிப் பயன்களையே பெறுகிறது. எனவேதான் இரட்டைத் தீமைகளான பெருமளவிலான வேலையில்லாத் திண் டாட்டமும், பெருமளவிலான மக்களின் நகரங்களை நோக்கிய இடம் பெயர்தலும் நிகழ்கிறது. வளர்ச்சி என் பதன் விளைவாக அதிர்ஷ்டசாலிகளான சிறுபான்மை யினர் அதிர்ஷ்டம் பெற்றும், உண்மையிலே உதவிகள் தேவைப்படுவோர் உதவிகளின்றி முன்பைவிட இன் னும் அதிகமாகத் துன்பமும் அடைகின்றனர். வளர்ச் சியின் பயன் உண்மையிலேயே வளர்ச்சி தேவைப்படு பவர்களுக்கு கிட்ட வேண்டும் என்றால் நாட்டின் ஒவ் வொரு பிராந்தியமும் அல்லது மாவட்டமும் அதற்கான வளர்ச்சியைப் பெற வேண்டும். இதற்குத்தான் பிராந்திய அணுகு முறை என்ற பெயர்.

இதே போன்று இத்தாலியையும் உதாரணமாக எடுத் துக் கொள்ளலாம். அது பணக்கார நாடுதான். இத்தா லியத் தொழில்துறை நாட்டின் வட பகுதியிலேயே அதிக கவனம் செலுத்துகிறது. தென் பகுதிக்கான பிரச்சினை

கள் அதிகமாகின்றன. வெற்றி போன்று எதுவும் வெற்றியடைவதில்லை, தோல்வி போன்று எதுவும் தோல்வியடைவதில்லை. வடபகுதியின் போட்டி தென் பகுதியை பெரிதும் பாதித்தது. இங்கும் இரட்டைத் தீமைகள் நிகழ்ந்தன. இந்த நிலை உலகின் எல்லா பாகங்களிலும் உள்ளது. ஏன், வளர்ச்சியடைந்த பணக்கார நாடுகளில் கூட உள்ளது.

இந்த விஷயங்களில் வேகமான வலுவான வரையறுத்தலை தருவது சாத்தியமல்ல. ஒரு மாவட்டம் என்ற வரையறைக்குள் சில ஆயிரம் மக்களைக் கொண்டு வந்தால் அது மிகவும் குறைவாகும். ஆனால் விரவிப் பரந்து வாழும் லட்சம் மக்களை அப்படி வரையறுக்கலாம்.

ஒவ்வொரு மாவட்டமும் தனக்கான தனி அடையாளத்துடன், இணைக்கப்பட்ட ஒன்றாக அதன் தலைநகராக ஏதேனும் ஒரு நகரத்தைக் கொண்டதாக இருக்கும். பொருளாதார அமைப்பைப் போலவே கலாச்சார அமைப்பும் அங்கு தேவையாக இருக்கும். ஒவ்வொரு கிராமமும் ஆரம்பப் பள்ளிகளையும், சிறு நகரங்கள் மேல்நிலைப் பள்ளிகளையும், மாவட்டத் தலைநகரம் உயர்கல்விக்கான கல்விச் சாலையையும் கொண்டிருக்க வேண்டும். நாடு பெரிதாக இருந்தால் அதன் உள் கட்டமைப்பும் பெரியதாக இருக்க வேண்டும். அது பரவலான வளர்ச்சிக்கான அமைப்பாக இருக்க வேண்டும். இந்தத் தேவை புறந்தள்ளப்பட்டால், ஏழைகளுக்கு நம்பிக்கையளிக்க ஏதும் இருக்காது.

பொருத்தமான தொழில் நுட்பத்தின் தேவை

பொருத்தமான தொழில் நுட்பத்தின் அடிப்படையில் பிராந்திய அல்லது மாவட்ட அணுகுமுறை இல்லை என்றால், அந்த அணுகுமுறை வெற்றியடையும் வாய்ப்

புக்கள் இல்லை என்பது வெளிப்படையான உண்மை. நவீன தொழில் துறையின் அடிப்படையில் அமையும் தொழில்களுக்கான முதலீடு சராசரியாக 2000 பவுண்டு கள் (சுமார் 2 லட்சம் ரூபாய்) இருக்கும். ஒரு ஏழைநாடு குறிப்பிட்ட காலத்தில் அது போன்ற வேலை இடங் களை அமைப்பது இயலாத ஒன்று. இவற்றுக்கெல்லாம் மேலாக, ஒரு "நவீன தொழில் துறை" செயல்பட "நவீன சூழல்" வேண்டும். இதன் காரணமாகவே அதி நவீன மான தொழில் அமைப்புகள் கிராமப்புறங்களையும், சிறு நகரங்களையும் கொண்ட மாவட்டத்திற்குப் பொருந் தாது. வளர்முக நாடுகளில் ஊர்ப்புறப் பகுதிகளில் உரு வாக்கப்பட்டுள்ள தொழிற்பேட்டைகளில் நிறுவப்பட்ட "நவீன தொழில் கூடங்கள்" பல்வேறுபட்ட காரணங்க ளால் எந்தப் பயனுமின்றி வெறுமனே நின்று கொண்டி ருப்பதைக் காண முடியும். புகார்கள் செய்யப்பட்டு ஏதே னும் நிகழ்ந்தாலும், பெருமளவு மூலதனம் வீணடிக்கப் பட்டதை அது மாற்றாது.

மூலதனத்தை மட்டுமே முதன்மையாகக் கொண்ட தொழிற்சாலைகளுக்கும், தொழிலாளர்களை முதன் மையாகக் கொண்ட தெழிற்சாலைகளுக்குமான வேறு பாடு வளர்ச்சி பற்றிய கருத்தியலில் பிரபலமான ஒன்று. அது பிரச்சினையை அணுகுவதே இல்லை. வளர்முக நாடுகள் தொழிலாளர்களை முதன்மையாகக் கொண்ட தொழிற் சாலைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று சொல்லப்பட்டால் அது புத்திசா லித்தனமான செயலாகக் கொள்ளப்படாது. ஏனெனில் தொழில் அமைப்புக்கு மிக முக்கியத் தேவை மூலப் பொருட்கள், சந்தை மற்றும் நிர்வாக அமைப்பு ஆகிய வையே. தொழிற்சாலைக்கு உகந்தது என்பது ஒன்று. தொழிலைத் தேர்ந்தெடுத்தபின் அதில் பயன்படுத்தும்

தொழில் நுட்பத்தைத் தேர்ந்தெடுத் தல் என்பது வேறு. எனவே தேவையான தொழில்நுட்பம் பற்றி நேரடியாகப் பேசலாம். இதே போன்று பெரு முதலீட்டுத் தொழில்க ளும், சிறு முதலீட்டுத் தொழில்களும் ஒன்றுக் கொன்று வேறுபட்டவை. நவீன தொழில் துறை பெரு முதலீட்டுத் தொழில்களைக் கொண்டுள்ளது என்பதே உண்மை . நவீன தொழில் துறை பெருமுதலீட்டுத் தொழிலாகவே இருக்க வேண்டும் என்பது அத்தியாவசியமான ஒன் றல்ல. ஒரு தொழில், வளரும் மாவட்டத்தின் சூழலுக்கு பொருத்தமா என்பது அதன் முதலீட்டு அளவை அடிப் படை யாகக் கொண்டதல்ல. ஆனால் அந்த தொழி லில் பயன்படுத்தும் தொழில்நுட்பத்தை அடிப்படையா கக் கொண்டது.
முக்கியப் பிரச்சினையுடன் தொடர்பு கொள்ள சிறந்த வழி தொழில் நுட்பம் பற்றி பேசுவதுதான் என நான் நம்புகிறேன். ஏழ்மை நிறைந்துள்ள பகுதிகளில் சரியான பலனை அளிக்கக் கூடியது இடைத்தரத் தொழில் நுட் பம்தான். இந்த இடைத்தரத் தொழில் நுட்பம் தொழிலா ளர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் செயல்பாட்டு தொழிலாளர் தன்மையையும், சிறு முதலீட்டு தொழில் அமைப்புகளையும் கொண்டது. ஆனால் சிறு முத லீட்டுத் தொழிலோ, தொழிலாளர்களை முதன்மையா கக் கொண்டதோ இடைத் தரத் தொழில் நுட்பத்தைக் குறிப்பிடுவதோ இல்லை.

தொழில்நுட்பத்தின் நிலைஅளவை ஒருவேலையிடத் திற்கான உபகரணச் செலவு' என்பதன் அடிப்படையில் வரையறுத் தோமானால், வளர்முக நாடுகளின் உள் நாட்டுத் தொழில் நுட்பம் 'ஒரு ரூபாய் தொழில்நுட்பம்" **என்றால்** வளர்ச்சியுற்ற நாடுகளின் தொழில் நுட்பத் தினை ஆயிரம் ரூபாய் தொழில் நுட்பம் என்று கூற

லாம். இரண்டுக்கும் இடையிலான இடைவெளி மிகவும் அதிகம். **ஒன்றுக்கொன்று** மாறுவதென்பதும் இயலாத ஒன்று. வளர் முக நாடுகளில் 1000 ரூபாய் தொழில் நுட்பத்தை ஊட்டுகுத்துவதால் அவர்களின் ஒரு ரூபாய் தொழில் நுட்பம் அபாயகரமான வேகத்தில் அழிக்கப்ப டுகிறது. அது நவீன தொழில் நுட்பங்களால் உருவாக் கப்பட்ட வேலை இடங்களைவிட அதிக எண்ணிக்கை யிலான வேலை இடங்கள் மற்றும் மரபார்ந்த தொழில் அமைப்புகள் அழிக்கப்படுகின்றன. இதன் விளைவாக, ஏழை மக்கள் நம்பிக்கையற்ற நிலைக்குத் தள்ளப்பட்டு இன்னும் ஏழைகளாக்கப்படுகிறார்கள். தேவையுள்ள வர்களுக்குப் பலனளிக்கக்கூடிய ஒரு தொழில் நுட் பத்தை கொண்டு வரவேண்டுமேயானால், அத்தொழில் நுட்பம் ஒரு ரூபாய் தொழில் நுட்பத்திற்கும் 1000 ரூபாய் தொழில் நுட்பத்திற்கும் இடையிலான ஒரு தொழில் நுட் பமாக இருக்க வேண்டும். அதனை நாம் 100 ரூபாய் தொழில் நுட்பம் என்று அழைக்கலாம்.

இப்படிப்பட்ட இடைத்தரத் தொழில் நுட்பமே உள நாட் டுத் தொழில் நுட்பத்தைவிட பயனளிக்கக் கூடியதாக இருக்கும். அந்த இடைத்தரத் தொழில் நுட்பம் நவீனத் தையும், மூலதனத்தையுமே முதன்மையாகக் கொண்ட தொழில்களை விட மிகவும் மலிவானதாகவும் இருக் கும் அப்படிப்பட்ட குறைந்த மூலதனத்திலான தொழில் களை குறிப்பிட்ட கால அளவுக்குள் நிறைய இடங்களில் ஏற்படுத்த முடியும். அந்தத் தொழில்கள் மாவட்டங்க ளுக்குள்ளேயே உள்ள கல்வி அளவு, திறமை, நிதியா தாரம் போன்றவைகளில் பலவீனமாக உள்ளவர்களுக் கும் கிடைகக்கும் படியானதாக இருக்கும்.

நவீன தொழில் நுட்பங்களைப் பின்பற்றும் வளர்ந்த நாடுகளில் ஒரு தொழிலாளி ஒரு வேலை அமைப்பை

தனக்கு சொந்தமாக்கி கொள்ள தனது ஒரு மாத வருமானத்தை முழுமையாக 12 ஆண்டுகளுக்கு சேமிக்க வேண்டும். சில சமயம் 120 ஆண்டுகளுக்கு கூட அந்த வருமானம் தேவைப்படும்.

இடைத்தரத் தொழில் நுட்பம் அது செயல்படுத்தப் படும் நவீன சூழலற்ற பகுதியில் மிக இலகுவாகப் பொருந்தி விடும். உபகரணங்கள், கருவிகள், இயந்திரங்கள் மிகவும் எளிதானவையாகவும், எளிதாகப் புரிந்து கொள்ளக் கூடியனவாகவும், பராமரிக்கக் கூடியவைகளாகவும், அதே இடத்தில் பழுது நீக்கக் கூடியவைகளாகவும் இருக்கும். எளிமையான இயந்திரங்கள் மிகத் தூய்மையான மூலப் பொருட்களை சார்ந்திருப்பது குறைவு. இவை நவீன இயந்திரங்களை விட சந்தையின் மாற்றங்களுக்கு ஏற்ப பெறக் கூடியவையாக இருக்கும். தொழிலாளர்களை எளிதாகப் பயிற்றுவிக்க முடியும். மேற்பார்வையிடுதல், ஒருங்கிணைத்தல், கட்டுப்படுத்துதல் ஆகியவை மிகவும் எளிதானவை. எதிர்பாராத சிரமங்கள் தோன்றுவதற்கான வாய்ப்புகளும் மிகவும் குறைவு.

எழுப்பப்பட்ட மறுப்புகளும், விவாதங்களும்

இடைத்தரத் தொழில் நுட்பம் முன்வைக்கப்பட்டதிலிருந்து, பல்வேறு மறுப்புகள் எழுப்பப்பட்டன. மிகவும் உடனடியாக மறுக்கப்பட்டது மனோரீதியான விஷயங்கள் தான்; "நீங்கள் சிறந்தவற்றைத் தடுத்து வைத்து, தாழ்ந்ததும், வழக்கொழிந்து போனதுமானவற்றை எங்களிடம் கொடுக்கிறீகள் என சொல்லப்பட்டது. இந்த விவாதம் தேவையுள்ளவர்களிடம் இருந்து வரவில்லை . மாறாக தங்களுக்குத் தாங்களே உதவிக் கொண்டு மேலும் உயரநிலையை எட்டுவதற்கு எண்ணுபவர்களிடம் இருந்து வந்த குரல். இந்தக் குரல் இங்கே நாம் எந்த மக்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோமோ அவர்களி

டமிருந்து வந்ததில்ல. இந்த மக்கள் ஏழ்மையால் பாதிக்கப்பட்டு வாழ்க்கைக்கான அடிப்படை ஏதுமின்றி ஊர்ப்புறங்களிலோ அல்லது நகர்ப்புறங்களிலோ முதல்தரமானவற்றையோ இரண்டாம் தரமானவற்றையே பெறாதவர்கள். உயிர் வாழ்வதற்கான அத்தியாவசிய வழிகளைக் கூடப் பெறாதவர்கள்.

ஏழைமக்களின் வாழ்நிலையை புரிந்து கொள்ளாத எத்தனையோ பொருளாதார வல்லுநர்கள் இந்த பூமியில் உள்ளார்கள் என்று ஆச்சர்யப்படலாம்.

வளர்ச்சிக் கொள்கையை மூலதனம்- உற்பத்தி விகிதங்களில் கொண்டு வந்துவிட முடியும் என்று நம்பும் பொருளாதார நிபுணர்களும், வல்லுநர்களும் உள்ளனர் அவர்களது விவாதம் இப்படிச் செல்கிறது: "எவ்வளவு மூலதனம் கிடைக்கும் என்பது தெரியும். அதிக மூலதனமுள்ள குறைந்த எண்ணிக்கையிலான வேலை இடங்களில் கவனம் செலுத்தலாம் அல்லது மலிவான, அதிக எண்ணிக்கையிலான வேலை இடங்களில் குறைவான மூலதனத்தை இடலாம். இந்த மூலதனத்தை அதிக எண்ணிக் கையிலான மலிவான வேலை இடங்களில் இட்டால் மொத்த உற்பத்தி முன்னதைவிடக் குறைவாக இருக்கும். எனவே நீங்கள் வேகமான பொருளாதார வளர்ச்சி விகிதத்தை அடைவதில் தோல்வியடைகிறீர்கள். டாக்டர் கால்டர் சொல்கிறார், "பெரும்பாலான நவீன தொழில் அமைப்புகளின் உற்பத்தி, அதிக தொழிலாளர்களைப் பயன்படுத்தும் நவீன தொழில் அமைப்புகளின் உற்பத்தியை விட மிக அதிகம்". மூலதனம் மாத்திரமல்ல. கூலியும் அப்படியே என்று கூறுகிறார்.

அளவான எண்ணிக்கையிலான தொழிலாளர்களை நாம் பயன்படுத்த முடியுமானால், ஆக்கப்பூர்வமான உற்பத்தியில் அவர்களை ஈடுபடுத்தலாம். எனவே தேசிய

உற்பத்தியில் அவர்களால் பெரும் பங்காற்ற முடியும். எனவே விரைவான பொருளாதார வளர்ச்சி விகிதம் கிடைக்கும். ஒரு தொழிலாளிக்கான மூலதனத்தைக் குறைக்க உற்பத்தியைக் குறைக்க வேண்டியதில்லை என்பது எனக்கு சரியாகப் படவில்லை . ஒரு தொழிலா ளிக்கான மூலதனத்தை பத்து மடங்காக அதிகரித்தால் உற்பத்தி
இருபது மடங்காக அதிகரிக்கலாம். எல்லா வகைகளி லும் சிறந்தது", என்றும் அவர் சொல்கிறார்.
முதலாவதாக இந்த விவாதம் தொடர்ந்த வேகமான வளர்ச்சியைக் கணக்கில் கொள்ளவில்லை. நியாயமா கச் செயல்பட வேண்டுமெனில், மக்களின் எதிர்வினை களை சாத்தியங்களையும் கருத்தில் கொள்ள வேண் டியது முக்கியம். ஒருவரை இயந்திரம் போன்று குறுக் கக் கூடாது. நவீனமான கருவிகள் நவீன சூழ்நிலைகள் இல்லாத இடங்களில் செயல்படும்போது, அது அதனு டைய முழு திறனுடன் செயல்படும் என்று நினைப்பது தவறு. மூலதனப் பயன்பாடு குறையும் போது அதன் உற் பத்தியும் குறையும்.
எனவே வளர்ச்சி விகிதத்தை பாதிக்கும் பல காரணி கள் உள்ள நிலையில், மூலதனம்/ உற்பத்தி இவற் றின் விகிதத்தில் வளர்ச்சி விகிதத்தைக் கணிப்பது தவறு. குறைந்த வேலை இடங்களில் மூலதனத்தைக் குவிப்பதால் மூலதனம் - உற்பத்தி விகிதம் வளரும் என்று டாக்டர் கால்டர் சொல்வதைப் போல் ஏதேனும் விதி உள்ளதா என்பது கேட்கப்பட வேண்டிய கேள்வி. லேசான தொழிற்சாலை அனுபவமுள்ள எவரும் இந்த விதி இருக்கிறது என்று சொல்ல மாட்டார். இந்த விதிக் கான எந்தவித அடிப்படை அறிவியலும் இருப்பதாக வும் சொல்ல மாட்டார். இயந்திரமயமாக்கலும், தானி

யங்கித் தொழில் நுட்பங்களும் தொழிலாளரின் உற்பத்தியை அதிகரிக்க அறிமுகப்படுத்தப்பட்டவை. அதிநவீன தொழில் நுட்பங்களை புகுத்தப்பட்ட இடங்களில் ஏராளமான வேலை இடங்கள் ஒழிக்கப்பட்டதையும், ஏராளமான மூலதன்ம விடப்பட்டும் உற்பத்தியில் முன்னேற்றம் ஏற்படாததைப் பற்றியும் எண்ணிக்கையற்ற உதாரணங்கள் உண்டு. எனவே குறைந்த அளவிலான வேலை இடங்களைக் கருத்தில் கொண்டு மூலதனமிடப்பட்ட தொழில் அதிக உற்பத்தியைத் தரும் என்பது நிச்சயமாக உண்மை அல்ல.

இந்த விவாதங்களின் மிக பலவீனம் 'மூலதனத்தை', வேலைவாய்ப்புகளைப் பெற்றிராத ஒரு பொருளாதாரத்தில்
தெரிந்த அளவு எனக் கூறுவதுதான். இதனையும் ஒன்றாகக் கருதுவது தவறானது. 'வளர்ச்சிக் கொள்கையின்' மையமான விஷயம், முன்பே நான் சொல்லியது போன்று வேலையில்லாமல், நுகர்வோர்களாக உள்ளவர்கள் பற்றித்தான். எல்லாவற்றிற்கும் மிக முக்கிய வேலைவாய்ப்புதான். வெறுமனே இருக் மனிதனின் உற்பத்தி என்பது பூஜ்யம். மிக குறைந்த திறன்பெற்ற, சாதனங்களைப் பெற்ற ஒருவரின் பங்களிப்பு நேர்மறையானது. இந்தப் பங்களிப்பு "மூலதனத்துக்கும்" பணிப்பொருட்களுக்குமான பங்களிப்பாக இருக்க முடியும். இவற்றிற்கு இடையிலான வேறுபாடு வரையா கப்பட்ட ஒன்றல்ல. ஏனெனில் "மூலதனம்" என்பதன் வரையறை எந்த வகையிலான தொழில் நுட்பம் பயன்படுத்தப்படுகிறது என்பதுதான்.

ஒரு எளிய உதாரணத்தைப் பார்ப்போம், மிகவும் வேலைவாய்ப்பற்ற ஒரு பகுதியில் மண் அள்ளும் பணி நடக்கிறது. இதற்குப் பெரும் நவீன இயந்திரங்களைப்

பயன்படுத்துவது முதல், முழுக்க முழுக்க மனிதர்களை மட்டுமே பயன்படுத்துவது வரையிலான பல தொழில் நுட்பங்கள் உள்ளன. வேலையுற்பத்தி என்பது வேலையின் இயல்பைப் பொறுத்தது. இடப்படும் மூலதனம் குறைவாக இருக்கும்போது மூலதனம் - உற்பத்தி விகிதம் அதிகமாக இருக்கும். எந்த உபகரணங்களும் இல்லாமல் பணி செய்யப் படும்போது இந்த விகிதம் இன்னும் அதிகமாக இருக்கும். வேலை அதி நவீன இயந்திரங்களைக் கொண்டு செய்யப்படும் போது இந்த விகிதம் குறைவாக இருக்கும். தனி மனிதனின் வேலை உற்பத்தி அளவு மிகவும் அதிகமாக இருக்கும். மேற்கண்ட அதீத அளவுகள் எதுவும் விரும்பத் தக்கதல்ல. இடைத்தரமான ஒரு வழி கண்டுபிடிக்கப் பட்டாக வேண்டும். வேலைவாய்ப்பற்ற சிலரை புதிதாக இந்தப் பணியில் சில உபகரணங்களுடன் ஈடுபடுத்துவதாகவும், மற்றவர்களை பணிக்கான பொருட்களை கொண்டு ஈடுபடுத்துவதாகவும் கொள்வோம். இந்த உற்பத்தி பல்வேறு தொழில் நுட்பங்களில் செய்யப்படுவதாகக் கொள்ளலாம். விலை மதிப்புமிக்க நவீன உபகரணங்களை வாங்காமல் இடைத்தரமான தொழில் நுட்பத்தைக் கண்டறிவதுதான் முக்கியப் பணி. மண் அள்ளுவதையும்

இந்த முழுத் திட்டத்தின் விளைவு பொருளாதார வளர்ச்சியாக இருக்க வேண்டும்.

இந்தப் பணிக்காக நவீன இயந்திரங்களை வாங்க செய்யப்படும் முதலீட்டைவிட, வெளியிலிருந்து செய்யப்படும் மூலதனம் மிகவும் சிறிதாகவே இருக்கும். புதிதாக வேலைதரப்பட்டவர்களின் மூலதனம் அவர்களது வேலைக்குத் தேவையான நவீன முறை மூலதனத்தை விட அதிகமாக இருக்கும். அது இந்த வேலைக்கு மட்டுமின்றி மொத்த சமூகத்தினருக்குமான வளர்ச்சிக்கானப்

பாதையாக இருக்கும். எனவே, சரியான, முறையான இடைத்தரத் தொழில் நுட்பத்தை மையமான விஷய மாக கையாளும் இத்தகைய வளர்ச்சிக்கான அணுகு முறை ஆக்கப்பூர்வமான செயல் பாட்டுக்கான பல வழி களைத் திறந்துவிடும்.

வளர்ச்சியடையாத நாடுகளில் நிர்வாகத்திறமைக் குறைவு இல்லை எனில் இவை எல்லாம் சாத்தியம் என்று வாதிடப்படுகிறது. வெற்றி பெறுவதற்கான வாய்ப் புகள் உள்ள இடங்களில் இதனைப் பயன்படுத்தலாம். தொழிற் சாலைகளை பெரு நகரங்களுக்குள்ளேயோ, அருகிலேயோ அதிக அளவு முதலீட்டுடன் அமைக்க லாம் என்றும் கூறப்படுகிறது.

நிர்வாகத் திறமை என்பது குறிப்பிட்ட அளவுதான் என்ற நிலைத்தன்மை அடிப்படையிலேயே இந்த வாத மும் உள்ளது. இது பயன்படுத்தப்படும் தொழில் நுட்பம் சம்பந்தப்பட்டது. நவீன தொழில் நுட்பவியலில் நிர்வா கம் செய்ய சக்தியற்ற மனிதன், சிறிய முதலீட்டிலான இடைத்தரத் தொழில் நுட்பம் கொண்ட தொழில்களை வெற்றிகரமாகச் செய்ய இயலும். வளர்முக நாடுகளின் நவீனமற்ற சூழலில் உள்நுழைந்துள்ள நவீன தொழில் நுட்பங்களின் எதிர்மறை விளைவுகளின் காரணமா கவே நிர்வாகத் திறமை குறைபாடு உள்ளதென எனக் குத் தோன்றுகிறது.

முறையான சரியான இடைத்தர தொழில்நுட்பத்தை அறிமுகம் செய்வதால் நிர்வாகத் திறமை குறைபாடு உருவாகாது. இதனால் நவீன துறைகளுக்கான நிர் வாகி களைத் தருவதையும் அது குறைக்காது. மாறாக, அனைத்து மக்களிடமும் உற்பத்திக்கான முறையான தொழில்நுட்ப வகைகளை பிரபலப் படுத்தி, தேவை யான திறமையாளர்களை சந்தேகமின்றி அளிக்கும்.

குறிப்பிட்ட சில மாவட்டங்களின் குறிப்பிட் தயாரிப்பு களுக்கான கணிசமான எண்ணிக்கையிலான வடிவ மைப்பு ஆய்வுகள் இடைத்தரத் தொழில் நுட்பத் தினால் தயாரான பொருட்கள், பெரு நகரங்களின் நவீன தொழிற்சாலைப் பொருட்களை விட மலிவானவை என்று உலகளவில் நிரூபித்துக் காண்பிக்கப்பட்டுள் ளன. அந்த பொருட்கள் ஏற்றுமதி செய்யப்படுபவனா இல்லையா என்பது பதிலற்ற கேள்வி. வேலையில்லா தவர்கள் ஏற்றுமதிக்கான பங்களிப்பை இப்போது செய் யவில்லை. உள்ளூர் மூலப்பொருட்களிலிருந்து உள் ளூர்த் தேவைகளுக்காக உற்பத்தி செய்யும்படி அவர்க ளுக்கு வேலை கொடுப்பதே முதன்மையான பணி.

இடைத்தரத் தொழில் நுட்பத்தின் பயன்தகுதி

இடைத்தரத் தொழில் நுட்பம் சர்வதேசத்திற்கும் பொருத்தமானதன்று. நவீன தொழில் நுட்ப முறைகள் இல்லாமல் செய்ய முடியாத பொருட்கள் உண்டு. இந்தப் பொருட்கள் ஏழைகளின் உடனடித் தேவைப் பொருட் களாக இல்லை. ஏழை மக்களுக்கு என்ன தேவை? கட்டுமானப் பொருட்கள், துணிகள், வீட்டு உபயோ கப் பொருட்கள், விவசாயத்திற்குத் தேவையான சாத னங்கள் மற்றும் அவர்களது விவசாயப் பொருட்களுக்கு சிறந்த விலை ஆகியவையே. பல இடங்களில் அவர் களுக்கு உடனடியாகத் தேவைப்படுவது, மரங்கள், நீர் மற்றும் விளைபொருட்களை சேமித்து வைக்கக்கூடிய இடங்கள் ஆகியவையே. இவை அனைத்துமே இடைத் தரத் தொழில் நுட்பத்திற்கான சரியான துறைகள்.

இருந்த போதும், பல்வேறு துறைகள் இருக்கின்றன. நான் இரண்டு உதாரணங்களைத் தருகிறேன். ஆப்ப ரிக்கா, ஆசிய, லத்தீன் அமெரிக்க நாடுகளின் கொள் கைகளினால் , அவற்றின் பெட்ரோலிய உற்பத்தி குறை

வாக இருந்த போதும், சர்வதேச நிறுவனங்களுக்காக சிறிய அளவிலான எண்ணெய் சுத்திகரிப்பு நிலையங்களை குறைந்த முதலீட்டில் அமைக்க உள்ளன. தற்போதுள்ள சுத்திகரிப்பு நிலையங்களை விட இவற்றிற்குக் குறைந்த முதலீடே தேவை. அந்த பெரிய சுத்திகரிப்பு நிலையங்களைப் போலவே இவையும் பணியில் திறன் மிக்கவை யாகும் உள்ளன. இரண்டாவதாக, அமோனியா தயாரிப்புக் களை அடைத்து நிரப்பும் தொழிற்சாலை.

இடைத்தரத் தொழில் நுட்பம் என்பது வழக்கொழிந்து போன தொழில்நுட்பங்களைப் பின்பற்றுவதல்ல. வளர்ந்த நாடுகளின் முறைகளை ஆய்வு செய்து, நன்கு பலனளித்த கைவிடப்பட்ட தொழில் நுட்பங்களை எடுத்துக் கொள் வதும் கூட. மேற்கத்திய அறிவியலில் பயன் படுத்தப்பட்ட உபகரணங்கள், கருவிகள் மூலம் கண்டறியப்பட்டவை அதே உபகரணங்களைக் கொண்டு செய்யப்படவில்லை எனில் அது அறிவியலை ஒதுக்கியதாக ஆகிவிடும் என்று எண்ணப்படுகிறது. இது மூடத்தனமானது. உண்மையான சாதனைகள் என்பது சரியான அறிவைப் பெற்று, பல்வேறு வழிகளில் செயல் படுத்தப்பட வேண்டியதாகும். ஆனால் நவீன தொழில் துறைக்கு ஒரு வழிதான். எனவே இடைத் தரத் தொழில்நுட்பத்தின் வளர்ச்சி, புதியதொரு அத்தியாயத்தில் முன்னோக்கி செல்கிறது என்று பொருள். தொழிலாளர் தேவையைக் குறைக்க அதிக பொருட் செலவில், சிக்கலான உற்பத்தி முறையில் ஈடுபட்டு வேலையற்ற நிலைமையை உருவாக்குவதைத் தவிர்த்து, அதிக வேலைவாய்ப்பு தேவைப்படும் சமூகத்திற்கான சரியான தொழில் நுட்பம் தான், இடைத்தரத் தொழில் நுட்பம்.

சர்வதேச அளவில் இல்லாவிட்டாலும், இடைத்தரத் தொழில் நுட்பம் பரந்த விரிந்தது. இதற்கான உதா ரணங்களை வளர்முக நாடுகள் மட்டுமன்றி, வளர்க்க காணலாம். பிறகென்ன குறைபாடு? இடைத்தரத் தொழில் நுட்பத்தைப் பின்பற்றுபவர்களிடம் அறிமுகம் இல்லை. ஒருவருக்கொருவர் ஆதரவாக இல்லை. இந் தத் தொழில்நுட்பத்தைப் பின்பற்ற எண்ணுபவர்களுக்கு உதவவும் தெரியவில்லை. இதனை எப்படி தொடங் குவது எனவும் தெரியவில்லை. அதிகாரவர்க்கம் மற் றும் பொதுமக்கள் தொடர்புக்கு வெளியே இருக்கிறது. 'ஐரோப்பிய மற்றும் அமெரிக்க ஏற்றுமதியாளர்களின் கையேடு முதன்மையான நுட்ப உதவியாக இருக்கி றது'. இத்தகைய இடை தொழில்நுட்ப தொழில்களுக் கான உதவிகள் கிடைப்பதில் பெரிய அளவிலான நவீன தொழில் அமைப்புகளை ஒப்பிடும் போது பாரபட்சம் நிலவுகிறது.

அதிகார வர்க்கம் மற்றும் பொது மக்களின் ஆதரவை பகாசுர நிறுவனம் மற்றும் திட்டங்களிலிருந்து ஏழை மக் களின் தேவைகளின் பக்கம் நம்மால் திருப்ப முடிந்தால் போரில் நாம் வெற்றி பெற முடியும். இடைத்தரத் தொழில் நுட்பம் பயன்படும் தொழில்களில் தேவையான அறிவும், ஒவ்வொருவரும் உழைக்கும்படியான வேலை அனுப வமும், இடைவெளிகள் ஏற்பட்டால் அதனை இட்டு நிரப்பக் கூடிய ஆய்வுகளையும் விரைவாகச் செய்ய முடி யும் என இடைத்தரத் தொழில் நுட்பம் குறித்த ஆய்வு தெரிவிக்கிறது. பூனாவைச் சேர்ந்த கோகலே அரசியல் மற்றும் பொருளாதாரக் கல்விக் கழகத்தின் பேராசிரி யர் காட்கில் இடைத்தரத் தொழில் நுட்ப வளர்ச்சிக்கான சாத்தியமான மூன்று அணுகுமுறைகளைக் கூறுகிறார்.

மரபான தொழில்களில் இருக்கும் திறமைகளை யும் முன்னேறிய வளர்ந்த அறிவினையும் பயன்படுத்த அவற்றை பொருத்தமானவைகளாக மாற்றுவதில் ஒரு அணுகுமுறையைத் தொடங்கலாம். மாற்றம் என்பது இருக்கும் உபகரணங்கள் மற்றும் திறன்கள், முறைக ளில் சிலவற்றைத் தக்க வைத்துக் கொள்வது... மரபு தொழில் நுட்பத்தை வளர்ப்பது மிகவும் முக்கியமானது. (குறிப்பாக வேலையின்மை தோன்றுவதை தடுக்க நினைக்கும் மாறும் நிலையிலுள்ள தொழில் நுட்பங்க ளில்).

இரண்டாவது அணுமுறையானது மிகவும் முன்னே றிய தொழில் நுட்பங்களின் இறுதியிலிருந்து தொடங்கி, இடைத்தரத் தொழில் நுட்பத் தேவைகளை எடுத்துக் கொள்வதும், சரி செய்து கொள்வதுமாகும். சில விஷ யங்கள் உள்ளூர் சூழல் மற்றும் கிடைக்கும் எரிசக்தி ஆற்றலின் அடிப்படையில் சரி செய்து கொள்ளுதல் வேண்டும்.

மூன்றாவது அணுகுமுறையானது இடைத்தரத் தொழில் நுட்பத்தை நிறுவுவதற்கான நேரடி பரிசோதனை மற்றும் ஆராய்ச்சி முயற்சிகள். இது பயனளிக்கக் கூடிய வகை யில் செய்யப் படவேண்டுமேயானால் இதற்கான அறி விய லறிஞர், தொழில் நுட்பவியலாளர், பொருளாதார வரை முறைகள் ஆகியவற்றை வரையறுக்க வேண்டும். இவை மிகவும் முக்கியமான செயல்பாட்டு அளவுகளா கும். சாத்தியமான மூலதனம் மற்றும் தொழிலாளர் ஆகி யவை களின் முதலீடு ஆகியவையும் வரையறுக்கப் பட வேண்டியவை. இப்படி இடைத்தரத் தொழில்நுட்ப முறைகளை நிறுவும் முயற்சிகள் வளர்ந்த தொழில் நுட்ப அறிவின் மீது அந்தந்தத் துறைகளில் செய்து பார்க்கப் பட வேண்டும். இருந்தபோதிலும், ஏற்றுக்கொண்டு சரி

செய்து கொள்ளும் அணுகுமுறையை விட அதிக சாத்தியக் கூறுகளை அது கொண்டிருக்கும்".
பேராசிரியர் காட்கில் மேலும் சொல்கிறார்: "இந்தப் பணியில் தேசிய ஆய்வுக் கழகங்கள், தொழில் நுட்பக் கழகங்கள் மற்றும் பல்கலைக் கழகங்களின் ஆராய்ச்சி யாளர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் முக்கிய கவன மெடுத்துப் பணியாற்ற வேண்டும். ஒவ்வொரு துறையின் வளர்ந்த தொழில் நுட்பத்தின் வளர்ச்சி முன்னேறிய நாடுகளில் தேவையான அளவு தொடர்ந்து நிவர்த்தி செய்யப்பட்டுக் கொண்டே இருக்கிறது. இந்தியாவிற்குத் தேவையான சிறப்பான தகவமைத்துக் கொள்ளுதலும், சரிசெய்து கொள்ளுதலும் மற்ற நாடுகளுக்காக கவனம் கொள்ளுதல் போன்றதல்ல. எனவே நமது திட்டங்க ளில் அவற்றுக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும். இடைத்தரத் தொழில் நுட்பம் தேசிய கவனத்திற்குரிய தாக மாற வேண்டும். இல்லை என்றால் இப்போதுள்ள தைப் போலவே இந்தத் துறை சிறிய அளவிலான நிபு ணர்களைக் கொண்ட, தனித்து விடப்ப ஒன்றாகிவிடும்." இந்தக் கருத்து நிறுவனங்கள் கவனத்தில் கொண்டு ஏற்று செயல்பட வேண்டிய கருத்தாகும்.
சுருக்கமாக: 1. வளர்முக நாடுகளில் இரட்டைப் பொரு ளாதார முறை
எதிர்காலத்திலும் தொடரும். நவீன தொழில் துறையால் எல்லாவற்றையும் முழுதாக உள்ளிழுக்க முடியாது.
2. வளர்ச்சி முறைகளை நவீனத்துவமற்ற தொழில் துறை சிறப்பாக மேற்கொள்ளாவிட்டால் அது சிதைவது தொடரும். இந்தச் சிதைவு பெருமளவிலான வேலை யில்லாத் திண்டாட்டத்தையும், நகரங்களை நோக்கிய பெரும் அளவிலான இடம் பெயர்தலையும் கொடுக்கும்.

இது நவீனத்துறைகளின் பொருளாதார வாழ்வையும் சேர்த்து அழிக்கும்.

3. இடைத்தரத் தொழில் நுட்பம் மூலம் வறுமையின் அளவு மற்றும் பொருளாதார எல்லைகளை அங்கீக ரிக்கும்படி ஏழைகளை தங்களுக்குத் தாங்களே உத விக் கொள்ளும்படி செய்யலாம். வளர்முக நாடுகளில் பொருத்தமான இடைத்தரத் தொழில் நுட்பம் மூலம் வேலை வாய்ப்புகளை உருவாக்க தேசிய மற்றும் பிராந் திய அளவில் வேலைத் திட்டங்கள் உருவாக்கப்பட வேண்டும்.

(இந்த பகுதியில் குறிப்பிட்டுள்ளவை 1965-ம் ஆண்டு யுனெஸ்கோ நிறுவனத்தின் லத்தீன் அமெரிக்காவுக் கான அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சி மாநாட்டில் சமர்ப்பிக்கப் பட்ட அறிக்கையின் சுருங்கிய வடிவம்.)

...................

## தேவை தற்சார்பு கிராமங்கள்

பொருட்கள் என்பதில் இருந்து மக்கள் என்ற நிலைக்கு மாற ஊக்கப்படுத்தப்படவில்லை என்றால் இரண்டாம் யுக வளர்ச்சிக்காலம் முதல் யுக வளர்ச்சிக்காலத்தை விட சிறந்ததாக இருக்க முடியாது. சொல்லப் போனால், அத்தகைய மாற்றம் இல்லை என்றால் உதவிகளின் பலன் நாசகரமான தாகவே இருக்கும்.

வளர்ச்சி என்பதைக் குறித்து நாம் பேசுகையில் நம் மன தில் இருப்பது பொருள்களா அல்லது மக்களா? அது மக்கள் எனில், எந்த மக்கள்? யார் அவர்கள்? எங்கே அவர்கள்? அவர்களுக்கு ஏன் உதவி தேவைப்படுகின் றது? உதவிகளின்றி அவர்கள் வாழ முடியவில்லை

எனில், அவர்களுக்கான குறிப்பான உதவிகள் எவை? அவர்களுடன் நாம் எப்படித் தொடர்பு கொள்வது? மக்களைப் பற்றி கவனமும் கவலையும் இப்படிப்பட்ட எண்ணற்ற கேள்விகளை எழுப்புகின்றன. ஆனால் பொருட்கள் பற்றி இத்தகைய கேள்விகள் எழுவதில்லை. குறிப்பாக பொருளாதார நிபுணர்களும், புள்ளியியலாளர்களும் இதனைக் கையாளும்போது, அது பொருள் என்ற நிலையிலிருந்து நழுவி, மொத்த உள்நாட்டு உற்பத்தி (GNP), ஏற்றுமதி, இறக்குமதி, சேமிப்பு, முதலீடு, உள்கட்டமைப்பு என்றெல்லாம் மாறுகிறது. இக்குறியீடுகளிலிருந்து மனதில் அழுத்தமாக பதியக்கூடிய மாதிரிகளைச் செய்ய முடியும், ஆனால் மக்கள் என்பதற்கு முக்கியத்துவம் அளிப்பது அவர்களுக்கு மிக அபூர்வமான செயல்.

மக்கள் தொகை என்பது

கணக்கில் உள்ளதுதான். ஆனால் அது வெறும் மட்டுமே. அந்த அளவு பங்கீடுகள் செய்வற்கே பயன்படுகிறது. அதன்படி வளர்ச்சி என்பது பங்குகளின் வளர்ச்சிதான். பங்காளி வளர்கிறார் என்பது தடுக்கப்பட

வேண்டியது.

உயிருள்ள மக்களை கையாள்வதை விட பொருட்களைக் கையாள்வது எளிது. ஏனெனில் பொருட்களுக்கு மனது என்ற ஒன்று இல்லை. தொடர்பு கொள்வதில் பிரச்சினைகளை அவை எழுப்புவதில்லை. மக்கள் என்று வரும்போது தொடர்பு கொள்வதில் பிரச்சினை என்பது பிரதானமாக இருக்கிறது. யார் உதவி செய்ய வேண்டும்? யார் உதவியைப் பெற வேண்டும்? உதவி செய்பவர்கள் என்பவர்கள் படித்த பணக்கார, நகர் வாழ் மக்கள். உதவி தேவைப்படுபவர் என்பவர் கல்வியறிவற்ற, ஏழ்மையான கிராமப் புறத்தினர். அதாவது இரு சாராரையும் மூன்று பெரிய வளைகுடாக்கள் பிரிக்

கின்றன. பணக்காரர்களுக்கும் ஏழை களுக்குமிடையிலான ஒரு வளைகுடா, கல்வி பெற்றவர்களுக்கும் கல்வி பெறாதவர்களுக்குமான ஒரு வளைகுடா, நகர்ப்புறத்தினருக்கும் கிராமப்புறத்தினருக்குமான ஒரு வளைகுடா. இதனுள் தொழிற்சாலையும் விவசாயமும் அடங்கும். வளர்ச்சிக்கான உதவிகள் புரிவதில் முதல் பிரச்சினை இந்த மூன்று வளைகுடாக்களையும் எதன் மூலம் இணைப்பது என்பதுதான். இதனைச் செய்வதற்கு பெரிய அளவிலான ஆய்வும், பொறுமையும், கருணையும் தேவைப்படுகின்றது. படித்த நகர்ப்புற மக்களுக்கான உற்பத்தி முறைகள், நுகர்வு வகைகள், ஏராளமான கருத்துக்கள் மற்றும் மதிப்பீடுகள் ஆகியவை ஏழ்மையான கல்வியறிவற்ற மக்களுக்குப் பொருந்துவதில்லை. ஏழை எளியவர்களால் படித்த பணக்கார நகர்ப்புற மக்களின் பழக்கங்களை எளிதாகக் கைக்கொள்ள முடிவதில்லை. முறைகளை மக்களால் ஏற்றுக் கொண்டு தகவமைத்துக் கொள்ள முடியவில்லை என்றால் முறைகளை மக்களுக்கானதாக மாற்றி அமைக்க வேண்டும். இதுதான் மிக முக்கியமான ஒட்டு மொத்த விஷயமே. பணக்காரர்களின் பொருளாதாரத்தில் இவற்றிற்கெல்லாம் மேலாக அவர்களுக்கே சவாலான பல கூறுகள் உள்ளன.

எப்படி இருந்தாலும் ஏழை சமூகங்கள் வெற்றிகரமாக அவைகளைக் கைகொள்வது தகவமைத்துக் சரியானதாக இருக்காது. அவை கேடுகளையும் விளைவிக்க கூடும். "தந்தையர் தம் மகன்களுக்குக் கற்றுக் மில்லை, தந்தையிடமிருந்து ஏற்றுக் கொள்ளக் மகனுக்கு ஏதுமில்லை" என்பது மாற்றங்களின் இயல்பு நிலையாக இருக்குமானால் குடும்ப வாழ்க்கை நொறுங்கி விழும். எல்லா சமூகங்களின் வாழ்க்கை, வேலை

மற்றும் மகிழ்ச்சி ஆகியவை மிகவும் அபூர்வமான எளிதில் காயப்படுத்தப்படக்கூடிய மனோரீதியான கட்டமைப்பு களை சார்ந்துள்ளது. இந்த மனோ ரீதியான கட்டமைப்பு உடையும் போது, சமூக இணைப்பு, கூட்டுறவு, பரஸ்பர மரியாதை எல்லாவற்றுக்கும் மேலாக சுய மரியாதை, சாதக மற்ற நிலைக்கு எதிரான தைரியம், கடினமான சூழ் நிலையை எதிர் கொள்ளும் சக்தி இன்னும் இது போன்ற பிறவும் உடைந்து மறைந்துபோகும். தான் பயனற்றவன் என்று ஒரு மனிதன் உணர்ந்தால் அவன் அழிந்து போய் விடுவான். எத்தகைய பொருளாதார வளர்ச்சியும் இத்தகைய இழப்புகளை ஈடு செய்துவிடமுடியாது.

நமது வளர்ச்சிக்கான பொருளாதார நிபுணர்களின் கொள்கைகள் இத்தகைய தீவிரமான எந்த பிரச்சினையும் கண்டு கொள்ளவில்லை. முதல் வளர்ச்சி யுகத்தின் தோல்வி சரியான அளவிலான உதவிகள் இல்லாமையினால் அல்லது சமூகங்களிலும், வளரும் நாடுகளின் மக்களிடமும் இருந்த குறைகளாளேயாகும். இந்த உதவிகள் பல முனைகளிலும் செய்யப்பட்டனவா அல்லது இரு முனைகளிலா அல்லது முதன்மைத் தேவைகளின் வர்த்தக தடைகளை நீக்கியதாலா தனியார் முதலீட்டிற்கு உறுதியளித்தாலோ அல்லது குடும்பக் கட்டுப்பாட்டை உறுதியாக மேற்கொண்டதாலா என்பனவற்றை எல்லாம் ஆய்வுக்கு உட்படுத்தி தோல்விக்கான காரணங்களை அறிய வேண்டும்.

இவையெல்லாம் பொருத்தமற்றவை என்ற போதும் கூட நமது விஷயத்தில் முக்கியமான கூறுகள் என்ற நிலை நீங்கவில்லை. இவை பற்றிய எண்ணிலடங்காத விவாதங்களிருந்து ஆக்கப்பூர்வமான செயல்பாடுகள் வரலாம்.

உலக ஏழ்மை என்பது முக்கியமாக இரண்டு மில்லியன் கிராமங்களைச் சேர்ந்த இரண்டு ஆயிரம் மில்லியன்( 200 கோடி) மக்களின் ஏழ்மைதான் என்ற மோசமான உண்மையைத்தான் முக்கியமாக நினைக்கிறேன். இதற்கான தீர்வை ஏழை நாடுகளின் நகரங்களில் கண்டுபிடித்து விட முடியாது. பின் தங்கிய மக்களின் வாழ்வை மேம்படுத்தவில்லை என்றால், உலக ஏழ்மை என்னும் பிரச்சினை தீர்க்கப்படமுடியாததாகவும், மிகவும் மோசமாக மாறுவதைத் தடுக்க இயலாததாகவும் ஆகிவிடும்.

வளர்ச்சி என்பதை குறியீடுகளின் அடிப்படையில், அளவீடுகளின் அடிப்படையில் அதாவது மொத்த தேசிய உற்பத்தி (GNP), முதலீடு, சேமிப்பு போன்றவைகளின் அடிப்படையில் பார்த்துக்கொண்டிருந்தோமானால் எல்லா முக்கியமான ஆழமான நுண்ணிய விஷயங்களையும் தவற விட்டுவிடுவோம். இந்த குறியீடுகளும், புள்ளி விபரங்களும் வளர்ச்சியடைந்த நாடுகளுக்குப் பலனளிக்குமே ஒழிய, வளர்ச்சி பற்றிய பிரச்சினைகளுக்கு எந்த தொடர்பு மற்றே இருக்கும் (அவை வளர்ந்த நாடுகளின் வளர்ச்சியில் சிறிய பங்கைக்கூட செய்யவில்லை என்றாலும்). உதவிகளைப் பெறும் நாடுகளின் தொழிலாளர் சக்தியை முன்னேற்றி தொழிலாளர் குறைப்பின்றி உற்பத்தியை அதிகரிக்கும்படி உதவிகள் செய்யப்படுமேயானால் அந்த உதவிகளை வெற்றிகரமானவைகளாகக் கருதலாம். வெற்றி என்பதன் அலகாகச் சொல்லப்படும் மொத்த தேசிய உற்பத்தி (GNP) என்பது தவறான வழிக்கே இட்டுச் செல்கிறது. உண்மையில் அது புதிய காலனியாக்கம் என்ற நிலைக்கே இட்டுச் செல்கிறது என்று கூடச் சொல்லலாம்.

இந்த வார்த்தையைப் பயன்படுத்துவதற்கு கொஞ்சம் தயங்குகிறேன். ஏனெனில் உதவி செய்யும் நாடுகள்

உள் நோக்கத்துடன் செய்த பாவனை இதில் இருக்கிறது. அந்த நாடுகளுக்கு அப்படி ஏதேனும் எண்ணங்கள் உண்டா ? மொத்தமாக யோசித்தால், இல்லை என்று சொல்லலாம். விருப்பத்துடன் உருவாக்கப்பட்ட புதிய காலனியாக்கத்தை முறியடிப்பதைவிட விருப்பமின்றி உருவாகும் புதிய காலனியாக்கத்தை முறியடிப்பது மிகவும் கடினம். உற்பத்தி முறை, நுகர்வு வகைகள் (நிலைகள்) வெற்றி அல்லது தோல்வி என்பதன் அளவுகோல், அறநெறிகளின் முறைமை மற்றும் பழகும் விதம் ஆகியவற்றை அவர்களின் சூழ் நிலைகளுக்கேற்ப கொண்டிருக்கும் ஏழைநாடுகள், பணக்கார நாடுகளை அண்டி இருப்பதிலிருந்து தப்பிக்க முடியாத சூழ்நிலைக்குள்ளாகின்றன. இதற்கு வெளிப்படையான உதாரணமும் அறிகுறியும் அதிகரித்துக் கொண்டே வரும் கடன்பட்டுள்ள நிலைதான். மக்களை கடன்களை விட மானியங்கள் நல்லது, குறைந்த வட்டியிலான கடன்கள் நல்லது என்ற முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டது. ஆனால் அதிகரித்துக் கொண்டே வரும் கடன் மோசமானது அல்ல. ஒரு கடனாளி வாங்கிய கடனைக் கொடுக்கவில்லை என்றால் கடன் கொடுத்தவருக்கு கடனாளியை விட்டுவிடுவது என்பதைத் தவிர வேறு வழியில்லை .

எது மிகவும் மோசமானது என்றால், ஒரு ஏழைநாடு பணக்கார நாடுகளைப் போன்று உற்பத்தி முறைக்கும் நுகர்வு வகைகளுக்கும் சார்ந்திருத்தல் போன்று உருவாக்கப் பட்ட ஒரு நிலைக்குள் வீழ்வதுதான். ஆப்பிரிக்காவிலுள்ள ஒரு துணி ஆலைக்கு நான் சென்று வந்தேன். அது மேற் சொன்ன விஷயத்திற்கு மிகச் சிறந்த உதாரணமாகப் பொருந்தும்.

அந்த மில் உலகிலுள்ள உயர் தொழில்நுட்பம் கொண்ட மில்களைப் போன்றது என்று பெருமை பொங்க அந்த

மில்லின் மேலாளர் என்னிடம் விளக்கினார். ஏன் அந்த மில் மிகவும் தானியங்கி இயந்திரங்களுடனுள்ளது என்று கேட்டேன். அதற்கு அவர் "ஏனெனில் ஆப்பிரிக் கத் தொழிலாளர்கள் தொழிற்சாலை வேலைகளுக்குப் பழக்கமில்லாதவர்கள். அவர்கள் தவறிழைக்கக் கூடும். ஆனால், எந்திரங்கள் தவறு செய்யாது. சந்தையில் நல்ல இடத்தைப் பிடிப்பதற்கான தரம் எனது உற்பத்தி எல்லா வற்றையும் சேர்த்தது போல் சொன்னார், "மனிதன் என்ற காரணியை தொழிலில் ஒழிப்பதுதான் என் கொள்கை" என்று அதிர்ச்சியளிக்க குறிப்பிட்டார். தரத்திற்காக அனைத்து இயந்திரங்களும் மிகவும் வளர்ந்த நாடுக ளிலிருந்து இறக்குமதி செய்யப் பட்டுள்ளன. மூலப்பொ ருட்கள் கூட இறக்குமதி செய்யப் பட்டவைதான். ஏனெ னில் உள்ளூர் பருத்தியை விட எதிர் பார்க்கப்பட்ட தரம் மனிதன் உற்பத்தி செய்த செயற்கை இழைகளில் தான் கிட்டும். ஆலையின் இறக்குமதி இயந்திரங்களைப் பரா மரிக்கவும் இயக்கவும் கூட ஆட்களை இறக்குமதி செய்ய வேண்டி இருக்கிறது. இது ஒன்றும் அசாதார ணமானதல்ல. வளர்ச்சித் திட்டங்கள் அல்லது பொரு ளாதார மாதிரிகள் அல்லாது "வளர்ச்சித் திட்டங்களை முறையாக, சரியாக ஆய்வு செய்யும் எவரும் இது போன்ற எண்ணற்றவைகளை காண முடியும். சோப்பு தயாரிக் கும் நிறுவனங்கள் தமக்குத் தேவையான மிகவும் சுத் திகரிக்கப்பட்ட எண்ணெய்களை அதிக விலைக்கொ டுத்து இறக்குமதி செய்கின்றன.

ஆனால், உள்ளூர் மூலப்பொருட்கள் குறைந்த விலைக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. உணவு பதப்ப டுத்தும் நிலையங்கள், அடைத்து நிரப்பும் நிலையங்கள், இப்படி சொல்லிக் கொண்டே போகலாம். இவை எல் லாம் பணக்கார மனிதர்களின் நுகர்வு வகைகள். ஆஸ்

திரேலியா அல்லது கலிபோர்னியாவிலிருந்து தருவிக் கப்படும் பழங்கள் பார்வைக்கு எந்தக் குறையும் இல்லா மல் ஒரே அளவாக இருப்பது போல் உள்ளூர் பழங்கள் இல்லை என்று உள்ளூர் பழங்கள் குப்பையில் கொட் டப்படுகின்றன. முடிவே இல்லாமல் இப்படி உதாரணங் களை சொல்லிக் கொண்டே போகலாம். சுயசார்பையும், சுய உதவியையும் அழித்துக் கொள்ளும்படியான தயா ரிப்பு முறைகளுக்கும், நுகர்வு
விதங்களுக்கும் ஏழைநாடுகள் தள்ளப்படுகின்றன அல்லது அவற்றை எடுத்துக் கொள்ளும்படி வழுக்கி விழுகின்றன.
இந்த இரண்டு மில்லியன் (இருபது லட்சம்) கிராமங் களுக்கு எப்படி உதவுவது? உதவ இயலாத சிலவற்றைத் தவிர்த்து மேற்கத்திய உதவி என்று கணக்கிட்டால் ஒரு தலைக்கு ஒரு ஆண்டிற்கு இரண்டு பவுண்ட் மட்டுமே கிட்டும். இது ஒன்றுமே இல்லாதது. பணக்கார நாடு கள் தங்கள் உதவியை மிகவும் அதிகமாக்க வேண்டும் என்று சிலர் சொல்லக்கூடும். அப்படியானாலும் தனி நப ருக்குக் கிடைப்பது சொற்பமே.
வளர்ந்து கொண்டிருக்கும் சிறிய நாடுகளான லிபியா வையும் வெனிசூலாவையும் எடுத்துக் கொள்வோம். அவற்றின் எண்ணெய் உற்பத்தி மூலம் கிடைக்கும் உபரி வருமானம் மூலம் அவர்களது மக்கள் தொகை யில் ஒருவருக்கு 50 பவுண்ட் (1968-ல்) கிடைத்தது. இந்த வருமானம் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தவோ, ஏழ்மையை ஒழிக்கவோ, விவசாயத்தை செழிக்கவோ, தொழில் மயமாக்கவோ செய்ததா? சிலவற்றைத்தவிர மற்றெல்லாவற்றிலும் இல்லை என்பதே இதற்குப் பதில். தரம் சார்ந்த முடிவுக்கு முன்னால் அளவு சார்ந்த முடிவு எப்போதும் இரண்டாம் பட்சம்தான். கொள்கைகள் தவ

றென்றால் பணம் அதனை சரியாக்காது. கொள்கைகள் சரி என்றால், பணத்தினால் பிரச்சினைகள் தோன்றாமல் போகலாம்.

இப்போது நாம் தரம் சார்ந்த விஷயத்தின் பக்கம் நமது கவனத்தைத் திருப்புவோம். கடந்த கால வளர்ச்சி முயற் சிகளிலிருந்து, பிரச்சினைகளனைத்தும் அறிவுப்பூர்வ மான சவால்களை முன்வைப்பதையே நாம் பார்க்கி றோம். உதவி கள் புரியும் படித்த நகர் வாழ் பணக்காரர்க ளுக்கு தங்களது வழியில் எவ்வாறு செயல்படவேண்டும் என்பது தெரியும். ஆனால் இரண்டு மில்லியன் கிராமங் களில் வாழும் படிப் பறிவற்ற, ஏழை மக்களுக்கு எப்படி உதவ வேண்டும் தெரியுமா அவர்களுக்கு? சில பெரிய வேலைகளை நகரங்களில் எப்படிச் செய்ய வேண்டு மென்று களுக்குத் தெரியும். ஆனால் ஆயிரக்கணக் கான சிறிய வேலைகளை கிராமங்களில் எப்படிச் செய்ய வேண்டு மெனத் தெரியுமா அவர்களுக்கு? பெரு மூல தனங்களைச் கொண்டு எப்படிச் செயல்புரிய வேண்டு மென்று அவர் களுக்குத் தெரியும். ஆனால் அனுபவ மற்ற ஏராளமான தொழிலாளர்களைக் கொண்டு எப்ப டிச் செய்ய வேண்டும் என தெரியுமா அவர்களுக்கு?

மொத்தத்தில் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் தங் களது துறையில் அனுபவம் பெற்றவர்களுக்குத் தெரி யும். வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமெனில், தேவையான அறிவு எல்லா விதத்திலும் இருக்கிறது. ஆனால் அது முறைமைப் படுத்தப் பட்டதாகவோ, உட னடியாகக் கிடைக்கும் படியோ இல்லை . அது விரவி, பரவி ஒருங்கமைக்கப்படாமல் முழுமையற்று இருக்கி றது. அளிக்கப்பட வேண்டிய சிறந்த உதவி, அறிவுப்பூர்வ மான உதவி, பயனளிக்கக்கூடிய அறிவுதான். வெகுமதிப் பொருள்களை விட, அறிவு வெகுமதியே முதன்மையா

கத் தேர்ந்தெடுக்கத்தக்கது. கடின முயற்சியும் தியாக மும் இன்றி எந்த ஒன்றும் ஒருவருக்கும் சொந்தமாகிவிட முடியாது. பொருள்கள் வடிவிலான வெகுமதியை எந்த முயற்சியும், தியாகமும் இன்றி அடையலாம். ஆகவே அதனை அவனது சொந்தம் எனக் கருத முடியாது. அது ஏதோ காற்றில் வந்து விழுந்ததைப் போன்றதுதான். அறிவுப்பூர்வமான வெகுமதி இதிலிருந்து மிகவும் வேறு பட்டது. வெகுமதியை அடைபவரின் சரியான முயற்சி யில்லையேல் வெகுமதி இல்லை. பொருள் வெகுமதி சார்ந்து வாழும்படி செய்கிறது. ஆனால் அறிவு வெகுமதி அதாவது சரியான அறிவுவெகுமதி அவர்களை சுதந் திர மானவர்களாக்குகிறது. அறிவு வெகுமதி நீண்ட கால விளைவுகளைக் கொண்டது. "வளர்ச்சி" என்ற கருத் தாக்கத் திற்கு மிகவும் நெருக்கமானது.

ஒருவனுக்கு மீனைக் கொடுப்பதைவிட, மீன் பிடிக்கக் கற்றுக்கொடுத்தால் அது அவன் வாழ்க்கை முழுக்க பயன்படும். இன்னும் கொஞ்சம் உயர்வான வகையில் சொல்லப்போனால், அவனுக்கு மீன்பிடி கருவியை விநி யோகம் செய். அதற்கு உனக்குப் பணம் கிடைக்கும். விளைவு சந்தேகத்திற்கிடமற்றது. விளைவு பலனளிக் கக் கூடியதெனினும், மனிதனின் தொடர் வாழ்வுக்கு நீங்கள் மீன்பிடி கருவியை மாற்றித்தர வேண்டியிருப்ப தால் உங்களைச் சார்ந்ததாகவே இருக்கும். ஆனால் மீன்பிடி கருவியை செய்ய அவனுக்குக் கற்றுக் கொடுத் தால், தன்னை வாழவைத்துக் கொள்ள மட்டுமல்லா மல், சுய சார்புடையவனாகவும் சுதந்திரமானவனாகவும் அவன் மாற நீங்கள் உதவுகிறீர்கள்.

உதவி செய்யக் கூடியவர்களின் முதல் வேலையாக இதுவே ஆக வேண்டும். இந்த அணுகு முறை நீண்ட கால அளவில் பலனளிக்குமாதலால் இது மலிவானது.

சில வேளைகளில் செயல்பாட்டு வேகத்தை அதிக ரிக்க பொருள் வகை உதவி செய்யப்படவேண்டி வரும். ஆனால் இது தானே நிகழக்கூடியது, இரண்டாம் பட்ச மானது.

இரண்டு மில்லியன் கிராமங்களுக்கும் தேவையான அறிவை அவர்களுக்கு எப்படிக் கிடைக்கச் செய்ய முடி யுமென பார்க்க வேண்டும். அப்படிச் செய்வதற்கு அந்த அறிவை நமக்குள் செயல்படுத்திப் பார்த்துக் கொள்ள வேண்டும். உதவி பற்றி பேசுவதற்கு முன் உதவுவ தற்கு நம்மிடம் ஏதும் இருக்க வேண்டும். எனவே அவர் களுக்கு உதவுவதற்கு தேவையானவற்றில் நமக்குப் பயிற்சி வேண்டும்.

ஏழை மக்களின் தேவைகள் மிகவும் எளிதா னவை. ஆகையால் மேற்கொள்ள வேண்டிய ஆய்வுகள் ஓரளவே இருக்கும். தற்போது வளர்ச்சித் திட்டங்கள் உதவி செய்யும் நாடுகளாலும் பெறும் நாடுகளாலும் தங் கள் நிர்வாக அதிகாரிகள் மூலமே செய்யப்படுகின்றன. அவர்கள் பல வகைகளிலும் திறனற்று பொருத்தமற் றவர்களாகவே உள்ளனர். அவர்களது பணி தேவை தான். ஆனால் அவர்களால் மட்டுமே செய்ய முடியாது. மற்ற பல்வேறு துறைகளிலும் உள்ள சுய உதவிக் குழுக் கள் அவர்களுடன் நெருங்கி இணைந்து பணியாற்ற வேண்டும். அதிகாரிகள்,

தொழில் துறையினர் மற்றும் கல்வியாளர்கள் பத்திரி கையாளர்கள் என மூன்று குழுக்கள் செயல்பட வேண் டும். இந்த மூன்று குழுக்கள் தனித்தனியாகச் செயல்பட் டால் வளர்ச்சிப் பணிகள் மிகவும் கடினமாகும். இதனை AB-C என குறிப்பிடுகிறேன். A நிர்வாகிகள், B தொழில் வர்த்தகத் துறையினர், தொடர்பாளர்கள். தொடர்பாளர் கள் எனப்படுவோர் அறிவுப் பூர்வமான செயலாளர்கள்.

பணக்கார நாடுகளில் சேவை புரியும் எண்ணத்து டன் பலர் இருக்கிறார்கள். அவர்கள் ஓரளவு செலவும் செய்யக் கூடியவர்கள். அவர்களுக்கான வழிமுறைகள் இல்லை. ஏழை நாடுகளிலும் சக மக்களுக்கு சேவை புரியும் எண்ணத்தில் பலர் இருக்கிறார்கள். இவர்க ளுக்கு வலுவான வழிகாட்டுதல் தேவைப்படுகின்றது.

இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்து செயல்படுத்த பெருமளவில் பணம் தேவைப்படுவதில்லை. அடிமட்ட அளவில் தொண்டர்களைக் கொண்ட மதம் சார்ந்த, மதச் சார்பற்ற ஏராளமான தொண்டு நிறுவனங்கள் உள்ளன. இந்தத் தன்னார்வத் தொண்டு நிறுவனங் கள் இடைத்தரத் தொழில் நுட்பத்தை அங்கீகரித்தாலும் பின்புலமாக அமைப்பு ரீதியில் ஒருங்கிணைப்பதில் பின் தங்கியுள்ளன. அவர்களின் பொதுவான பிரச்சினைகள் குறித்து பல மாநாடுகள் பல நாடுகளில் நடந்துள் ளன. அவர்களது பணிகள் "அறிவுப்பூர்வமான உள்கட் டமைப்பு இல்லை எனில் பலனளிக்காது.

அறிவுப்பூர்வமான கட்டமைப்பை உருவாக்குவதில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அவர்களுக்கு அரசாங்கங்கள் மற்றும் சுயநிதித் தொண்டு நிறுவனங் களின் ஆதரவு தேவைப்படுகிறது. குறைந்தது நான்கு விதமான வேலை முறைகள் நிறைவேற்றப்பட வேண் டும். அவை:

தனியாக செயல்பட்டாலும் குழுக்களாக செயல்பட்டா லும் அவர்கள் பணியாற்றும் பகுதிகளுக்குள் அவர்களி டையே தகவல் பரிமாற்றம் நடைபெற வேண்டும்.

வளர்முக நாடுகளில் செலவு குறைவான வகைகளில் கட்டுமானப் பணிகள், நீர் மற்றும் ஆற்றல் விநியோ கம், தானிய சேமிப்பு மற்றும் அது சார்ந்த பணிகள், சிறு முதலீட்டிலான சுகாதாரப் பணிகள் போன்றவற்றை

செய்ய முறைப்படியான அமைப்பிற்கான தொழில்நுட்பத் தகவல்கள் கிடைக்கும்படி செய்ய வேண்டும். எனவே அனைத்துத் தகவல்களும் ஓரிடத்தில் குவியாமல் அதாவது எதை எப்படிச் செய்ய வேண்டும் என்ற தகவல்கள் எல்லோருக்கும் கிட்டும்படியாக இருக்கும்.

வளரும் நாடுகளில் களப்பணியாற்றுவர்களின் களப் பிரச்சினைகள் வளர்ந்த நாடுகளில் பணியாற்றுபவர்களிடமிருந்து பெறப்பட்ட பொருத்தமான அனுபவங்களின் மூலம் தீர்க்கப்பட வேண்டும்.

துணை அமைப்புகளையும், சோதனை மையங்களையும் வளரும் நாடுகள் தாங்களாகவே அமைத்துக் கொள்ள வேண்டும். இவை அனைத்தும் செயல் படுத்தி, வரும் தவறுகளைக் கண்டு சரிசெய்து கொண்டே இருக்க வேண்டியவை. இவற்றை முன்பே செய்து கொண்டிருந்த முறைகளில் செய்யாமல் புதிதாக உருவாக்கப்பட்ட முறைகளில் செய்யப்பட வேண்டும். வளர்ச்சி நிதி உதவிகள் அமைப்பு மற்றும் சரியான அறிவைப் பயன்படுத்துவதன் மூலமே வருங்காலத்தில் செய்யப்படவேண்டும்.

ஏழைகளுக்கு உதவுவது பணக்காரர்களுக்கு ஏன் கடினமானதாக இருக்கிறது? நவீன உலகில் நகரங்களுக்கும் ஊர்ப்புறங்களுக்குமிடையிலான சமத்துவமின்மையே பரவும் வியாதியாக உள்ளது. அந்த சமத்துவமின்மை செல்வ வளம், ஆற்றல், கலாச்சாரம், கவர்ச்சி மற்றும் நம்பிக்கை

ஆகியவற்றில் உள்ளது. நகர்ப்புறத்தினர் மிகல் வளர்ந்தும், கிராமப் புறத்தினர் மிகவும் பின்தங்கிய உள்ளனர். நகரம் உலகை ஈர்க்கும் காந்தமாக உள்ள நிலையில் கிராமப் புறங்கள் தங்களைப் போற்றிக் காப்பவர்களை இழந்து நிற்கின்றன. நகரங்களின் வளமை கிராமங்க

ளின் வளத்தையே பெரிதும் சார்ந்திருக்கிறது என்ற மாற்றமுடியாத உண்மை இன்னும் இருந்து கொண்டே இருக்கிறது. நகரங்கள் தங்கள் எல்லா வள ஆதா ரங்களின் மூலம் உற்பத்தி செய்வது இரண்டாம் பட்ச உற்பத்தியைத் தான். பொருளாதார வாழ்வின் எல்லா வகை நியதிகளும், கிராமப்புறங்களின் உற்பத்தியையே சார்ந்திருக்கிறது. நிலவும் சமத்துவமின்மை மூலப்பொ ருட்களை உற்பத்தி செய்யும் கிராமப்புறத்தினரை ஆண் டாண்டுகாலமாக தொடர்ந்து சுரண்டுவது உலக நாடு கள் முழுவதையும் அச்சுறுத்தி வருகிறது. இது ஏழை களை விட பணக்காரர் களையே அதிகம் அச்சுறுத்து கிறது. நகரம் மற்றும் கிராமத்தினிடையே உள்ள சமத்து வமின்மையை நீக்குவது நவீன மனிதனின் முன் உள்ள பெரிய சவால்.

இது வெறுமனே விவசாயப் பொருளுற்பத்தியை அதிக ரிப்பதால் நடந்துவிடாது. கிராமப்புற வாழ்க்கை மேம்ப டுத்தப் படாமல் பெருமளவிலான வேலையின்மையை யும் நகரம்நோக்கி மக்கள் பெருந்திரளாக இடம் பெயர் வதையும் தடுக்க முடியாது. அதற்கு விவசாயத் தொழில் கலாச்சாரம் எல்லா மாவட்டங்களிலும், எல்லா சமூகங் களிலும் முன்னேற்றப்பட்டு அங்குள்ள மனிதர் களுக்கு நல்ல பலன்களுடன் கூடிய பல்வேறு வேலை வாய்ப்பு கள் ஏற்படுத்தப்படவேண்டும்.

எனவே, இரண்டு மில்லியன் கிராமங்களிலும் உள்ள வறுமை நிலையை ஒழிக்கும்படியான வளர்ச்சிக்கான முயற்சிகள் பலனளிக்கும் படியாக மேற்கொள்ளப்பட வேண்டியது மிகவும் முக்கியப் பணியாகும். கிராமப்புற வாழ்க்கை சிதைந்து கொண்டே இருக்குமானால் எவ் வளவு பணம் செலவு செய்தும் பயனிருக்காது. கிராமப் புற மக்கள் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொண்

டால், அருமையான வளர்ச்சியைக் காண முடியும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அந்த வளர்ச்சி, குப்பையான நகரங்களும் அதன் மோசமான சுற்றுப்புறங்களுமின்றி, விரக்தியினாலான இரத்தப் புரட்சி இன்றி இருக்கும். இந்தப் பணி கடினமானதுதான்.

பொருளாதார வளர்ச்சி என்பது பொருளாதாரத்தைவிட விரிவானது. ஆழமானது. அதன் வேர்கள் பொருளாதாரத்தையும் தாண்டி கல்வி, அமைப்பு முறை, ஒழுக்கம், அவற்றிற்கும் மேலாக அரசியல் சுதந்திரம், சுயசார்பான தேசிய உணர்வு ஆகியவற்றில் இருக்கிறது. மக்களுடன் தொடர்பில்லாத அந்நிய தொழில் நுட்பவியலாளர்கள், அதிகாரமிக்க உள்ளூர் ஆட்களாலேயே அதனை "உற்பத்தி" செய்ய முடியாது. அது விரிந்து பரந்த மக்களாலான மறு உருவாக்க இயக்கத்தின் முழு நோக்கத்துடன் கூடிய ஊக்கமான, புத்திசாலித்தனமான ஒவ்வொருவரின் பங்களிப் பினாலேயே சாத்தியமாகும். அறிவியல் அறிஞர்கள், தொழில் நுட்ப வல்லுனர்கள் அல்லது பொருளாதார திட்ட வியலாளர்களின் மாய மந்திரத்தால் வெற்றியை அடைய முடியாது. அது ஒட்டு மொத்த மக்களின் கல்வி, ஒருங் கிணைப்பு, அமைப்பு மற்றும் ஒழுக்கத்தினாலேயே சாத்தியமாகும். இவற்றை விடக் குறைவான எந்த முயற்சியும் தோல்வியையே தழுவும்.

...............................

## ஐந்து ஆண்டு திட்டமும் மரம் வளர்ப்பும்!

(லண்டன் நகரில் உள்ள இந்திய வளர்ச்சிக் குழுவுடன் நடைபெற கலந்துரையாடல்.)

வேலையின்மை என்பது, இருக்கும் தொழிலாளர்களைப் பயன்படுத்தாமலிருப்பது அல்லது அரைகுறையாகப் பயன்படுத்துவது என்றே நான் நினைக்கிறேன். உற்பத்தி அளவுகோலை பூஜ்யத்திலிருந்து நூறு எனக் கொள்ளலாம். அதாவது வேலையை செய்யாத மனிதனின் உற்பத்தி அளவு பூஜ்யம் என்றால், முழுக்கவும் வேலை செய்யும் ஒரு மனிதனின் உற்பத்தி அளவு நூறு. இந்த அளவை எப்படி உயர்த்திக் கொண்டு போவது என்பதே ஏழைச் சமூகங்களின் முக்கிய கேள்வி. ஒரு சமூகத்தின் உற்பத்தி என்பதைக் கருத்தில் கொள்வதெனில் வேலையில் உள்ளவர்களையும், சுயமாக வேலை செய்பவர்களையும் மட்டுமே எடுத்துக் கொண்டு, உழைப்பின்றி உற்பத்தி அளவை பூஜ்யம் எனக் கொண்டுள்ளவர்களையும் சேர்க்காமலிருப்பது போதுமானதல்ல.

பொருளாதார வளர்ச்சி என்றால் அதிக அளவு வேலை செய்யப்படுவதுதான். இதற்கு நான்கு முக்கியமான நிபந்தனைகளுண்டு. முதலாவதாக நோக்கமிருக்க வேண்டும். இரண்டாவதாக தொழில் முறையைப் புரிந்து கொள்ளும் அறிவு இருக்க வேண்டும். மூன்றாவதாக மூலதனம் இருக்க வேண்டும். நான்காவதாக வெளிக் கொண்டுபோகும் வழி இருக்க வேண்டும். கூடுதல் உற்பத்திக்கு கூடுதல் சந்தைகள் இருக்க வேண்டும்.

நோக்கம் என்பதைக் குறித்து பேச வேண்டுமானால், வெளியிலிருந்து ஒருவர் பேசுவதற்கு மிகக் குறைவானதே உள்ளது. மக்கள் தங்களைத் தாங்களே சிறப்பாக நன்றாக வைத்துக் கொள்ள விரும்பவில்லை என்றால் அவர்களை அப்படியே விட்டுவிட வேண்டியதுதான். உதவி செய்வதில் இதுவே முதன்மையான கொள்கையாக இருக்க வேண்டும். சமூகத்திற்குள்ளேயே இருப்

பவர்கள் இது குறித்து வேறு பட்ட கண்ணோட்டத் தைக் கொண்டிருக்கக் கூடும். அவர்களுக்கு வேறுவித மான கடப்பாடுகள் உள்ளன. தாங்கள் சிறப்பாக இருக்க வேண்டும் என விரும்பு பவர்கள் இருப்பார்கள். ஆனால் அவர்களுக்கு எப்படி அப்படி இருக்க வேண்டுமெனத் தெரிவதில்லை. லட்சக் கணக்கான மக்கள் நன்றாக இருக்க விரும்பி அதனை எப்படிச் செய்து கொள்வது எனத் தெரியாமல் இருந்தால், அவர்களுக்கு யார் அத னைக் கற்றுத் தரப் போகிறார்கள்? இந்தியாவைப் பற்றிப் பேசுவோம். சில ஆயிரமோ அல்லது சில லட்சங்களோ அல்ல, அது கோடிக்கணக்கான மக்களைப் பற்றிய பிரச் சினை. பிரச்சினை மிகவும் பெரிது. அது அடிப்படை அர சியல் பற்றியதாகும். அனைத்தையும் ஒரே கேள்வியில் உள்ளடக்கிவிட முடியும்: அது கல்வி எதற்காக? என்பது. ஒரு ஆணையோ பெண்ணையோ பல்கலைக் கழகத் தில் சேர்க்க 30 சாதாரண மக்கள் உழைக்க வேண்டும் என்று இரண்டாம் உலகப் போருக்கு முன் கணக்கிட்ட நாடு சீனா என்று நினைக்கிறேன். அப்படி பல்கலைக் கழகத்தில் சேர்க்கப்பட்ட ஒருவன் தன் கல்வியை ஐந்து ஆண்டுகளில் முடிக்கும்போது 150 சாதாரண மனிதர்க ளின் உழைப்பைப் பயன்படுத்துகிறான். இப்படிச் செய் வதற்கு யாருக்கு உரிமை உண்டு? அந்த உழைப்புக்குப் உபகரமாக அந்த சாதாரண மனிதர்கள் பெற்றது என்ன? இந்தக் கேள்விகள் நமக்கு சில விளக்கங்களைத் தரு கின்றன. கல்வி என்பது சலுகைகளுக்கான

கடவுச் சீட்டா (பாஸ்போட்) அல்லது மக்களுக்குப் பணி யாற்றுவதர் எடுத்துக் கொள்ளும் புனிதமான உறுதி மொழியா? கற்ற ஒருவன் தனது சலுகை கல்வியற்ற வர்களால் பாதிக்கப்படாத பம்பாய்க்கு (மும்பை ) புறப் பட்டு செல்கிறான். இது ஒரு வழி. இரண்டாவது வழி

வேறுவிதமானது. அது தீவிர எண்ணத்துடன் தொடங்கி வேறுபட்ட ஓரிடத்தில் முடிவது. இது நேரிடையாகவோ மறைமுகமாகவோ அவனுக்காக உழைத்த, 150 மக்க ளின் உழைப்பு ஆண்டுகளை அவன் கல்விக்காக செல வழித்தவர் \களிடம் செல்வது. இப்படி அவர்களுக்காக ஏதேனும் செய்வதில் பெருமையாக அவன் உணர்வான். இந்த பிரச்சினை புதிதான ஒன்றல்ல. டால்ஸ்டாய் தனது எழுத்துக்களில் இதனை இப்படிக் குறிப்பிடுகிறார். " ஒரு மனிதனின் முதுகில் ஏறி அவனை முச்சுத் திணறும் படி செய்து என்னை சுமக்கச் செய்கிறேன். அவனுக்காக நானும் மற்றவர்களும் பரிதாபம் கொண்டவர்களாகக் காட்டிக் கொண்டு, சாத்தியமான எல்லா வழிகளிலும் அவனை இளைப்பாற்ற விரும்புகிறோம். முதுகிலிருந்து இறங்கிக் கொள்வதைத் தவிர்". எனவே நாம் எதிர் கொள்ளும் முதல் சவாலாக இதனையே நான் கூறுகி றேன். கல்வி பெற்ற வர்கள் தங்கள் கடமையாக இதனை எடுத்துக் கொண்டு கல்வி கற்றதை "சலுகைகளுக்கான ஒரு கடவுச் சீட்டாகப் பயன்படுத்தாமலிருப்பதை ஒரு கொள்கையாகவோ அல்லது வேறு எந்த பெயரிலோ உருவாக்கிக் கொள் வோமா? இந்தக் கொள்கை மனித இனத்தின் உயர்வான அத்தனை போதனைகளாலும் ஆதரவளிக்கப்பட்ட ஒன்று.

இந்தக் கொள்கையை வழக்கத்தில் கொண்டு வர வில்லை என்றால், சலுகைகளுக்கான கடவுச் சீட் டாக எடுத்துக் கொள்ளப்பட்டதென்றால், கல்வி என் பது மற்றவர்களுக்கு சேவை செய்வதற்கன்று. கல்வி கற்றவர்களுக்கு சேவை செய்து கொள்வதற்கென்றே பொருள்படும். சலுகை பெற்ற சிறுபான்மையினர் தங் களை தனிப்படுத்திக்கொண்டு தவறானவைகளை கற் பித்துக் கொடுக்கக் கற்றுக் கொள்வர். கல்வி கற்ற

அனைவரும் தங்கள் நாட்டுக்கு தங்கள் மக்களுக்குப் பணியாற்ற வேண்டும் என்று எண்ண வில்லை என்றால், தேவையான தலைவர்கள் இல்லாமல் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் தேவையான வழிகளைக் கொண்டு வருவது இயலாது. இது இந்தியாவின் பல மில் லியன் மக்களின் பிரச்சினை. மக்களைத் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ளும்படி செய்ய 100 நபர்களுக் குக் குறைந்தது இரண்டு நபர்களாவது வேண்டும். இது முடியாது என நீங்கள் சொல்லலாம். அப்படிச் சொல்வது சுயநலமே தான். இது தீர்க்க முடியாத பிரச்சினையல்ல என்பதற்கு ஆதாரங்கள் உண்டு. ஆனால் இது அரசியல் மட்டத்திலேயே தீர்க்கப்பட வேண்டும்.

மூன்றாவது விஷயமான மூலதனம் பற்றிப் பார்ப் போம். எனது கணக்கீட்டின்படி குறைந்தது 50 மில்லி யன் வேலை வாய்ப்புகள் தற்போது உருவாக்கப்பட்டாக வேண்டும். மூலதனமின்றி உற்பத்திப் பணிகளை செய்ய முடியாது. இந்த இடத்தில் எழும் கேள்வி, ஒரு புதிய வேலையை உருவாக்க எவ்வளவு முலதனம் தேவை என்பதுதான். ஒரு வேலையை உருவாக்க 10 பவுண்ட் (சுமார் 750 ரூபாய்) வேண்டும் எனக் கொண்டால், 50 மில்லியன் வேலைகளை உருவாக்க 500 மில்லியன் பவுண்ட் (சுமார் 37,500 மில்லியன் ரூபாய்- ஒரு மில்லியன் என்பது 10 லட்சம்) தேவைப்படும். அதுவே 100 பவுண்ட் சுமார் 7,500 ரூபாய் என்றால் 5000 மில்லியன் பவுண்ட் (சுமார் 3,75,000 மில்லியன் ரூபாய்) தேவைப்படும்.

இந்தியாவின் தேசிய வருமானத்தை அனுசரித்து எத் தனை வேலைகளை எத்தனை காலத்திற்குள் தர முடியும்? 10 ஆண்டுகளுக்குள் 50 மில்லியன் வேலை வாய்ப்புகளை ஏற்படுத்த வேண்டும் என்று கொள் வோம். தேசிய வருமானத்திலிருந்து எத்தனை சதவீதம்

இந்த வேலைவாய்ப்புகளை உருவாக்கத் தேவைப்படும்? விரிவான ஆராய்ச்சிக்குப் போகாமல் ஐந்து சதவீத வேலை வாய்ப்புக்களை உருவாக்க முடிந்தால் உங்களை அதிர்ஷ்ட
சாலி; புத்திசாலி என்பேன். பெருகி வரும் மக்கள் தொகைக்கேற்ப நாட்டின் தேசிய வருமானமும் பெருகும் என்பேன்.

இந்தியா போன்ற நாடுகள் தேர்ந்தெடுக்கும் தொழில் நுட்பம் பற்றியது அடுத்த விஷயம். நான் விதிகள் இப்படி இருக்க வேண்டும் என்று எதனையும் உருவாக்கவில்லை. ஆனால் வாழ்க்கையின் கடினமான உண்மைகள் இவை.

நீங்கள் பெருமளவிலான முதலீட்டில் சில வேலை வாய்ப்புகளைப் பெற முடியும் அல்லது குறைந்த முதலீட்டில் பல வேலைவாய்ப்புகளைப் பெற முடியும்.

இப்போது இவையெல்லாம் நான் முன்பு சொன்ன கல்வி, நோக்கம், அறிந்துகொள்ளுதல் ஆகிய காரணிகளுடன் இணைகின்றது. இந்தியாவில் ஆரம்பப் பள்ளிகளில், உயர்நிலைப்பள்ளிகளில், அதைவிட உயர்ந்த கல்விச் சாலைகளில் பல மில்லியன் மாணவர்கள் பயில்கின்றனர். கற்றபின்னர் தங்கள் அறிவைப் பயன்படுத்த அவர்களுக்கு வாய்ப்புகள் இருக்க வேண்டும். இல்லையெனில் இத்தகைய கல்வி அமைப்பு முறை பயன் அற்றதாகிவிடும். அப்படி இல்லை எனில் மொத்தமுமே பெரும் சுமையாகிவிடும். இந்தக் கணக்கு ஏன் தரப்படுகிறது என்றால், ஐந்து மில்லியன் புதிய வேலை வாய்ப்புகளை ஒவ்வொரு ஆண்டும் உருவாக்க வேண்டும். சில நூறு, ஆயிரம் வேலைவாய்ப்புகளை அல்ல என்று சிந்திப்பதற்காகத்தான்.

60, 70 ஆண்டுகளுக்கு முன்னர் நமது செயல்பாடுகள் புராதனமானவையாக இருந்தன. ஜான் கென்னத் கால் பிரெய்த்தின் "தி நியூ இன்டஸ்டிரியல் எஸ்டேட்" என்ற நூலிலிருந்து ஒன்றை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஃபோர்ட் மோட்டார் கம்பெனி 1903 ஜூன் 16 அன்று 150,000 டாலர் மதிப்பில் 28,500 டாலர் தொகையு டன் தொடங்கப்பட்டது. தொழிற்சாலை தொடங்கப்பட்ட நான்கு மாதங்கள் கழித்து அவர்களது முதல் கார் சந் தைக்கு வந்தது. 1903ல் வேலையிலிருந்தோர் 125 பேர். ஒவ்வொரு வேலை இடத்திற்குமான மூலதனம் 100 பவுண்டுக்கும் கீழ்தான். 1963ல் ஃபோர்ட் நிறுவனம் புதிய வகை காரை அறிமுகம் செய்ய முடிவு செய்தது. அதற் கான தயாரிப்புக்கான காலம் மூன்றரை ஆண்டுகள். பொறியியலும், ஸ்டைலும், வடிவமைப்பும் செய்வதற்கு ஒன்பது மில்லியன் டாலர்களானது. காரை உருவாக்க 50 மில்லியன் டாலர்கள் தேவைப்பட்டது. நிறுவனத்தால் பயன்படுத்தப்பட்ட சொத்துக்களின் மதிப்பு 6,000 மில் லியன் டாலர். அதாவது ஒரு வேலைவாய்ப்புக்கு ஆன செலவு 10,000 பவுண்டுகள். அதாவது 60 ஆண்டுகளுக் குள் அது 100 மடங்கு அதிகமாகிவிட்டது.

இவை எல்லாவற்றிலிருந்தும் கவனிக்கத் தகுந்த சில முடிவுகளை கால்பிரெய்த் கொண்டு வருகிறார். இந்த அறுபது ஆண்டுகளில் என்ன நடந்தது என்பதை அவை விவரிக்கும். முதலாவதாக நிறுவனத்தை துவங்கியதிலி ருந்து வேலையை முடிக்கும் காலம் மிகவும் அதிக ரித் துள்ளதைக் குறிப்பிடுகிறார். முதல் ஃபோர்ட் கார் சந்தைக்கு வந்தது வெறும் நான்கு மாதங்களுக்குள். ஆனால் அந்த மாடலில் சிறிய மாற்றத்தைக் கொண் டுள்ள கார் சந்தையை அடைவதற்கு நான்கு ஆண்டு கள் ஆகின்றது. இரண்டாவதாக உற்பத்திக்கென பெரு

மளவு அதிகரித்துள்ள மூலதனம். ஒரிஜினல் (ஆரம்ப கால) ஃபோர்ட் தொழிற்சாலையின் ஒரு கார் உற்பத் திக்கான முதலீடு மிகவும் சிறிய தொகையே. பொருட்க ளும் உதிரிபாகங்களும் குறைவானவையே. அதிக சம் பளம் பெறும் சிறப்பு வல்லுனர்கள் எவரும் தயாரிப்பில் ஈடுபடுத்தப்படவில்லை . காரை உருக் கொடுப்பதற்கு சாதாரண எளிய இயந்திரங்களே பயன்படுத்தப்பட்டன. அதனால் காரின் ஃபிரேமை இரண்டு நபர்களாலேயே தூக்க முடிந்தது. மூன்றாவதாக அறுபதுகளில் நிலைத் தன்மை அதிகரிப்பு மிகுதியாக இருந்தது. கால்பிரெய்த் கூறுகிறார், "1903ல் ஃபோர்டும் அவரது குழுவினரும் வண்டியை பெட்ரோலில் இருந்து நீராவியில்
செய்ய முடிவெடுத்திருந்தால் அதற்கு சில மணி நேரமே தேவைப்பட்டிருக்கும் என்று. இன்று ஒரு ஸ்க்ரூவை மாற்ற வேண்டும் என்றால் கூட அதற்குப் பல மாதங் களாகும். நான்காவதாக இயந்திரங்கள் மட்டுமல்லாது, திட்டமிடுதல் போன்ற அனைத்து துறைகளிலும் அதி கரித்து வரும் சிறப்பு தொழில் நுட்ப நிபுணர்களின் தேவை. ஐந்தாவதாக, இந்த எண்ணற்ற நிபணர்களை ஒருங்கிணைக்கும் சிறிய வேலைகளை சிக்கலாக்கும் வல்லுனர்களைக் கொண்டமேலதிகமான ஒரு வேறு பட்ட துறை. இறுதியாக, நீண்ட காலத் திட்டமிடுதலான மிகவும் நவீனமயப்படுத்தும் களைப்படையச் செய்யும் பணி என கால்பிரெய்த் சொல்கிறார். "ஃபோர்ட் நிறு வனத்தின் காலங்களில் எதிர்காலம் கைக்கெட்டும் தொலைவில் அருகில் இருந்தது. உற்பத்திக்கான இயந் திரங்கள், காரில் தோற்றம் ஆகியவற்றின் மீதான எளி தான கடப்பாட்டினலேயே எதிர்காலம் என்பது மிகவும் குறுகித்தெரிகிறது. எதிர்காலம் கைக்கெட்டும் தூரத்தில் இருந்தால் அதனை கிட்டத்தட்ட நடப்புக் காலம் என்றே

எண்ணலாம் இதற்கான திட்டமிடுதலும், முன்வரைவும் அத்தனை கடினமானது அல்ல.

இவையிருந்து தெரியும் முடிவு என்ன? எல்லாவற்றிற்கும் காரணம் அதிநவீன தொழில் நுட்பமே. நான் முன்னரே கூறியுள்ள வாழ்க்கையின் சாதாரண விஷயங்கள் முன்னர் குறிப்பிட்டுள்ள ஆறு விஷயங்களையும் கருத்தில் கொண்டு நவீன செயல்பாடுகளுக்கு உட்படுத்தப்படும்போது, அந்த விஷயம் ஏழை சமூகத்தினால் எட்டிப்பிடிக்க முடியாததாக விடுகிறது. உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கலாச்சாரம் போன்ற சாதாரண விஷயங்களை கருத்தில் கொள்ளும் போது, 1963 மாடலே 1903 மாடலை விடச் சிறந்தது என்று மக்கள் தாங்களாகவே கருதிக் கொள்ளும் பெரிய அபாயம் உள்ளது. ஏனெனில் 1963ன் செயல்பாடுகள் ஏழைகளுக்குக் கட்டும்படியாக இருக்காது. அதற்கு பெரும் செல்வ வளம் தேவைப்படும். மில்லியன் கணக்கில் வேலை இடங்கள் தேவைப்படும்போது ஒருவேலைக்கு எவ்வளவு தொகையை ஒதுக்க முடியும் என்ற கேள்வியே எழுப்பப் பட்டதில்லை. இந்த நூற்றாண்டு தொடங்கும்வரை மனித வரலாற்றின் ஒவ்வொன்றும் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் பாதியில் ஃபோர்ட் நிறுவனத்தின் மூலதனம் 30,000 டாலரிலிருந்து 6,000 மில்லியன் டாலராக தாவிக் குதித்து விட்டது போன்ற விகிதத்தில் அதன் குதிப்பு இருக்கிறது. 1903-ல் ஹென்றி போர்ட் இருந்த நிலையை அடைவது மிகவும் கடினம். 1963-ல் ஹென்றி ஃபோர்ட் நிறுவனம் இருந்த நிலைக்கு நேராகச் செல்வதும் முடியாதது.

இதற்குப் பொருள் என்னவென்றால் 1963-ல் இருந்த நிலையை எவராலும் நேரடியாக அடைய முடியாது என்பதே. நாம் நவீன உலகைப் புரிந்து கொள்ளத் தேவை

யான மிக முக்கியமான விஷயம் இதுதான். இந்த நிலையில் புதிய உருவாக்கம் என்பது முடியாதது; விரிவாக்கம் மட்டுமே செய்ய முடியும். இதன்பொருள் என்னவெனில் இந்த நிலையில் ஏழைமக்கள் பிணைக்கப்பட்டு விட்டால் அவர்களுக்கு முன்னெப்போதையும்விட அதிகமாக பணக்காரர்களை சார்ந்து வாழும்படியாகிவிடும். அவர்கள் பணக் காரர்களின் தேவைகளை குறைந்த கூலியில் நிறைவு செய்பவர்களாகவே இருப்பார்கள். இங்கும் அங்கும் சுற்றி விட்டு " அந்த ஏழை நாடுகளில் கூலி மிகவும் குறைவாக உள்ளதால் நமது நாட்டை விட அங்கே தயாரிப்புச் செலவு குறைவாக இருக்கும்" என்று சிலர் கூறலாம். ஏழைமக்களின் பணி பணக்காரர்களின் தேவைகளை நிரப்புவதாக மட்டுமே இருக்கும். இந்த தொழில் நுட்பநிலையில் முழுமையான வேலை வாய்ப்பை உருவாக்கவோ அல்லது சுதந்திரமான ஒரு நிலையை அடையவோ இயலாத நிலை தொடரும். எல்லாவற்றையும் விட தொழில் நுட்பத்தைத் தேர்ந்தெடுப்பதே மிகவும் முக்கியம்.

தொழில் நுட்பத்தைத் தேர்ந்தெடுப்பதற்கான வாய்ப்புகள் இல்லை என்று சிலர் கூறுவது வினோதமாக உள்ளது. அமெரிக்காவின் பொருளாதார நிபுணர் ஒருவர் எந்த ஒரு பொருள் உற்பத்தி செய்வதற்கும் ஒரே ஒரு வழியே உள்ளது என்று எழுதிய ஒரு கட்டுரையை படித்தேன். அதாவது 1971 ஆம் ஆண்டின் வழிகள். அதற்கு முன்பு அந்த பொருள், உற்பத்தி செய்யப்படவே இல்லையா ஆதம் சொர்க்கத்தை விட்டு வந்தவுடனே வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படைத் தேவைகள், உற்பத்தி செய்யப்பட்டன. மனித இனம் தோன்றிய காலம் முதலே அதற்குத் தேவையான பொருள் உற்பத்தி செய்யப்படுகின்றது. மிக சமீபகால தயாரிக்கப்பட்ட

இயந்திரங்களே பெறப்பட வேண்டும் என்கிறார் அவர். சமீபகாலத்தைய இயந்திரம் மட்டுமே எளிதாகப் பெறக் கூடியதாக இருக்கிறது. தேர்ந்தெடுக்க வேறு ஒன்று இல் லாமல் ஒரே வகை இயந்திரமே சந்தையை ஆதிக்கம் செய்கிறது என்பது உண்மையே. சமூகத்தில் உள்ள மூலதனமே எத்தனை வேலை வாய்ப்புகளைக் கொண் டிருக்க முடியும் என்பதை நிர்ணயிப்பது போலவும் இது உள்ளது. இது மடத்தனமானதுதான். இதனை எழு திய ஆசிரியரும் அதன் மடமையை உணர்ந்து திருத் திக் கொண்டிருக்கிறார். ஜப்பான், கொரியா, தைவான் போன்ற நாடுகள் மிகவும் நடுத்தரமான மிதமான இயந் திரங்களைக் கொண்டு அதிக அளவு உற்பத்தியையும் அதிக அளவு வேலை வாய்ப்பைப் பெற்றிருப்பதையும் அவரே சுட்டிக் காட்டுகிறார்.

தொழில்நுட்பத் தேர்வின் முக்கியத்துவம் குறித்த விழிப் புணர்வு பொருளாதார நிபுணர்களிடமும், வளர்ச்சி குறித்து திட்டமிடுபவர்களிடமும் மெதுவாக வந்து கொண்டிருக்கிறது. முதலில் சிரித்து மறுத்து, பின் னர் கேட்டு, பின்னர் அது சம்பந்தமான செயல்பாடுக ளில் இறங்கி, பின்னர் நடைமுறைக்குக் கொண்டுவருவ தென்ற நான்கு கட்டங்களை இது கொண்டிருக்கிறது. இது நீண்ட பாதையாகும். நேரடியான நான்காவது கட்டத்திற்குப் போவதற்கான அரசியல் சாத்தியங்கள் உண்டு என்ற உண்மையை நான் மறைக்க விரும்ப வில்லை.

ஆனாலும், நான் அரசியலைப் பற்றி பேசவிரும்ப வில்லை. தொழில் நுட்பத்தைத் தேர்ந்தெடுப்பது என் பது முக்கியமானது என்று தற்போது உணரப்பட்டுக் கொண்டிருக்கிறது.

இதனை எப்படி எல்லா நிலைகளையும் தாண்டி அடை

யப்போகிறோம்? எனக்குத் தெரிந்த வரையில் இடைத் தரத் தொழில் நுட்ப வளர்ச்சிக் குழு (Intermediate Technology Development Group - ITDG) என்ற அமைப்பின் மூலம் இது முறையாகச் செய்யப்படுகிறது. உலோகத்தையும் மரத்தையும் எடுத்துக் கொள்வோம். இரண்டுமே தொழிலின் அடிப்படை மூலப்பொருட்கள். மக்கள் எளிய கருவிகள் கொண்டு பழமையான முறையில் செயல்படுதலின் அடிப்படையில் என்னவிதமான மாற்றுத் தொழில் நுட்பத்தை மூலதனம் பயன்படுத்தமுடியும்?

மாற்றுத் தொழில்நுட்பம் என்று சொல்லப்படுவது மிகவும் சிறியதாகவும் குறைவாகவும் இருக்கிறது என்ற விமர்சனம் முன் வைக்கப்படுகிறது. இதற்கென தற்போது உள்ள குழுக்களைவிட, வலிமையான நிறைய குழுக்களை உருவாக்கினால் இந்த விமர்சனம் இருக்காது.

சந்தைகள் எனப்படும் நான்காவது காரணியைப் பார்ப்போம். ஏழ்மையின் காரணமாக சுலபமாகப் பொருட்களை வாங்கும்படியான ஆற்றல் மிகவும் குறைவாகவும் உள்ளது. உற்பத்தி என்பது சில சமயம் செய்வதற்கு எளிதானது, சந்தைப் படுத்துவது மிகவும் கடினமானது. இந்த நிலையில் ஏற்றுமதிக்கெனத் தயாரிக்கும்படியான அறிவுரைகள் நமக்கு உடனே வரும். பணக்கார நாடுகளின் தேவை அதிகம் என்பதால் ஏற்றுமதி செய்யலாம்தான். ஆனால், ஒன்றுமற்ற கிராமப் பகுதிகளில் உற்பத்தியை நான் தொடங்கினால் உலகச் சந்தையின் போட்டியை நான் எப்படி எதிர்கொள்ள முடியும்?

நான் கண்ட வரையில் ஏற்றுமதிக்கான இந்த நிலைக்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று உண்மையானது, மற்றொன்று நல்லதல்ல. அந்த இரண்டாவது காரணம் என்பது காலனிய காலங்களின் பொருளாதா

ரச் சிந்தனையின் தொடர்ச்சிதான். மெட்ரோபாலிட்டன் சக்திகள் நாடுகளுக் குள் சென்றது அதன் உள்ளூர் மக்கள் தொகையினைக் கருத்தில் கொண்டு மட்டும் அல்ல. தன் தொழிற்சாலைகளுக்கு தேவையான பொருட்களுக்காகவும் தான். ஒன்று கயிறு உற்பத்திக்கான மூலப்பொருளுக்காக டான்ஸானியாவுக்குச் சென்றால், மற்றொன்று செம்பை தேடி ஜாம்பியாவுக்குச் செல்லும். மொத்த சிந்தனையும் இது போன்ற விருப்பங்களின் அடிப்படையிலேயே உருவானது.

வளர்ச்சி என்பது வர்த்தகப் பலன்கள் அல்லது உணவுப் பொருள் விநியோகம் அல்லது மூலப்பொருள்களின் வளர்ச்சிதான். காலனிய சக்திகளின் முக்கிய நோக்கம் காலனியின் ஏற்றுமதியே தவிர அதன் உள்நாட்டு நலன்கள் அல்ல. ஆனால் மக்கள் தங்களுக்கும் பிறருக்காவும் எதனை உற்பத்தி செய்கின்றார்களோ அதுவே அவர்களுக்க மிகுந்த முக்கியத்துவம் உடையது. அயல்நாட்டினருக்காக தயார் செய்து ஏற்றுமதி செய்வதல்ல.

மற்றொரு விஷயம் உண்மையானது. நான் எதனையும் உற்பத்தி செய்து பணக்கார நாடொன்றுக்கு ஏற்றுமதி செய்கிறேன் என்றால் சலுகையாகக் கிடைக்கும் அந்த வாங்கும் சக்தியை நான் பெற்றுக்கொள்ள வேண்டியதுதான். ஏனெனில் அங்கு முன்பே இருப்பதைவிட எனது ஏற்றுமதி மிகவும் குறைவானதே. ஆனால் ஒரு ஏழ்மையான நாட்டில் புதிய உற்பத்தியைத் தொடங்குகிறேன் என்றால், மற்ற தயாரிப்புகளிலிருந்து வாங்கும் சக்தியை என் தயாரிப்பின பக்கம் திருப்புவதைத் தவிர வேறு வழியில்லை. ஏற்றுமதிக்கெனத் தயாரிக்கப்படும் பொருட்களுக்கான வாய்ப்புகள் மிகவும் குறைவானதே. அது தரும் வேலை வாய்ப்புகளும் மிகமிகக் குறைவே. உலகச் சந்தைகளில் போட்டியிட வேண்டுமென்றால்,

தொழிலாளர் குறைந்த மூலதனம் மிகுந்த பணக்கார நாடுகளின் தொழில் நுட்பத்தைப் பின்பற்ற வேண்டியிருக்கும்.

பலபொருள் உற்பத்தியை ஒரே நேரத்தில் தொடங்கும் தேவையினால் வளர்ச்சி என்பது கடினமாகிவிடும். ஆனால் அந்தக் கடினத்தைப் பொது வேலைகளின் மூலம் சரிசெய்து கொள்ளலாம். பெருமளவிலான மக்களைக் கொண்ட பொது வேலைத்திட்டங்கள் மூலம் வேலைகளை உருவாக்குவது எப்போதும் பாராட்டப்படுகிறது. இது பற்றி ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். வெளி நிதிகளிலிருந்து உருவாக்கப்பட்ட பொது வேலைகளின் மூலம் கிராமப்புற மக்களிடம் புதிய வாங்கும் சக்தியை உருவாக்கலாம். பொது வேலைத் திட்டங்களில் வேலை செய்யும் மக்கள் தங்கள் கூலியைக் கொண்டு கூலிப்பொருட்களை அதாவது எல்லா வகையான பொருட்களின் நுகர்வோர்களாக செலவு செய்ய விரும்புவார்கள். அவர்களுக்கானப் பொருட்கள் உள்ளூரிலேயே உற்பத்தி செய்யப்படுமானால் நிதி வெளியே செல்வது தடுக்கப்பட்டு உள்ளூரிலேயே சுழலும். பொது வேலைகள் நிறைய நன்மைகளைத் தரும். ஆனால் உள்ளூர் உற்பத்திகள் அதனுடன் கைகோர்க்க வேண்டும். கூடுதல் உற்பத்திகள் ஏற்றுமதி செய்யப்படலாம். நாம் நமது வளர்ச்சிக்கானவற்றை செவ்வாய் கிரகத்திலிருந்தோ நிலவிலிருந்தோ பெற்ற அந்நியச் செலவாணிகளால் பெற்று விடவில்லை. மனிதகுலம் என்பது ஒன்றே. எனவே இந்த அர்த்தத்தில் இந்திய சமூகமும் ஒன்றே.

ஒவ்வொன்றுமே கடினமாகத் தோன்றுகிறது. மக்களால் செய்யப்படுவதற்குப் பதிலாக மக்களுக்காகச் செய்தால் ஒவ்வொன்றும் மிகக் கடினமானதே. ஆனால் வளர்ச்சி என்பதும் வேலை வாய்ப்பு என்பதும் உலகில் மிக

இயற்கையான ஒன்று என்று நாம் எண்ண வேண்டும். ஆரோக்கியமான ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் இது நடக்கிறது. அவன் எளிதாக வேலையில் அமர்வது மனித வரலாற்றில் முன்னெப்போதையும் விட இப்போது மிக எளிது. ஏனெனில், இப்போது நிறைய அறிவு மனித குலத் திடம் உள்ளது. பெருமளவில் தகவல் தொடர்பு வசதிகள் உள்ளன. நமது கடினங்கள் நம்மை மெஸ்மரிசம் போன்று மயக்க வேண்டாம். வேலை என்பது உலகின் இயல்பான ஒன்று என்ற உணர்வை மீண்டும் பெற வேண்டும். "ஒன்றும் இல்லை என்பதைவிட ஏதாவது இருக்கிறது' என்பதனை நான் புத்திசாலித்தனம் என்பேன். நேரிடையான விஷயத்தை மட்டுமே அணுகும் புத்திசாலியைவிட முன்னே சொல்லப்
பட்டவனை நான் புத்திசாலி என்பேன்... எது நம்மைத் தடுக்கிறது? கொள்கைகளும், திட்டங்களும்டான். தேவையான தொழிலாளர் சக்தியை 15 ஆண்டு கூட கொண்டு வருவது சாத்தியமில்லை என்று சொல்லும் திட்டக்கமிஷனின் திட்டமிடுபவர்களை இந்தியாவில் பார்த்திருக்கிறேன். அது 15 மாதங்களுக்குள் சாத்தியமில்லை என்றால் நான் ஏற்றுக்கொள்வேன். ஆனால் 15 ஆண்டுகளுக்கும் முடியாது என்றால் அது அறிவுக் குறைபாடு என்று சொல்வேன். ஒரு மனிதனை வேலையில் அமர்த்த வேண்டும் என்றால் மின்சாரம், சிமெண்ட்ஸ் ஆகியவை வேண்டும் என்று சொல்கிறார்கள். இது முட்டாள்தனமானது. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் மின்சாரம் சிமெண்ட், ஸ்டீல் போன்றவை குறிப்பிடத்தக்க அளவில் இல்லை. தாஜ்மஹால் எப்படிக் கட்டப்பட்டது என்பதை யோசித்துப் பாருங்கள். இது பொருளாதாரப் பிரச்சினையல்ல, அரசியல் பிரச்சினை

என்று நீங்கள் சொல்லக் கூடும். இது உலகின் சாதாரண மக்களின் கருணை சார்ந்த பிரச்சினை.
எத்தனை நபர்களை வேலையில் ஈடுபடுத்துகிறோம் என்பது எவ்வளவு முதலீடு செய்கிறோம் என்பதைப் பொறுத்தது என்று கொள்கையாளர்களாலும், திட்டமிடுபவர்களாலும் சொல்லப்படுகிறது. நமக்குத் தொழில் நுட்பத்தைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பும் இல்லை என்று சொல்லப்பட்டது. நவீன முறைகளைப் பயன்படுத்தினால் ஒழிய மற்றவை எல்லாம் பொருளாதார ரீதியில் பயனற்றவை என்றும், மக்களுக்கு செய்ய ஒன்றுமே இல்லை என்றும் சொல்லப்பட்டது. மனிதர்களைப் பணிகளிலிருந்து ஒழிப்பது தேவையானது என்று சொல்லப்பட்டது.
தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு தன்னைக் கவனித்துக் கொள்ள முடியாமல் ஒருவன் துன்பப்படுவது பெரிய இழப்பு, வளர்ச்சிக்கும் வேலைவாய்ப்புக்கும் ஏதும் குழப்பமோ சச்சரவோ இல்லை. நடப்புக் காலத்துக்கும் கடந்த காலத்துக்கும் ஏதும் சச்சரவு இல்லை . அவற்றை இருப்பதாகக் கூறும் மடத்தனத்தினை நீங்கள் உருவாக்கிக் கொள்ளக் கூடும். மக்களை உழைக்க விடாமல் வைத்து எந்த நாடும் வளர்ச்சி பெற்றதில்லை. இந்த விஷயங்கள் எல்லாம் கடினமானவை என்பது வேறு விஷயம். ஆனால் அதே நேரத்தில் மனிதனின் அடிப்படைத் தேவைகளின் மீது நாம் தவறான பார்வை கொள்ளும்படியான விஷயங்களை ஏற்றுக் கொள்ளக் கூடாது.
எல்லாவற்றிற்கும் மேலாக நான் சுய உதவி என்ற ஒரு உதாரணத்தைக் கூறுகிறேன். பேரருள் நிறைந்த இயற்கை தனது குழந்தைகளை ஒன்றுமில்லாமல் விட்டுவிடவில்லை. இந்தியாவைப் பொறுத்தவரை நிறைய

மரங்களை அது கொடுத்துள்ளது. மனிதனின் அனைத்துத் தேவைகளுக்கான மரங்களும் இந்தியாவில் உண்டு. இந்தியாவின் மிகச் சிறந்த போதனையாளர்களுள் ஒருவரான புத்தர் புத்த மதத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் ஒரு செடியை நட்டு அதனை ஐந்து ஆண்டுகள் பராமரித்து வர வேண்டும் என்று தன் போதனைகளில் குறிப்பிட்டார். இந்த போதனை பின்பற்றப் படும்வரை இந்தியா முழுவதும் பசுமை நிறைந்த மரங்களும். நிழல்களும் நிறைய நீரும், உணவும், பொருள்களும் இருக்கும். ஆரோக்கியமான உடல் கொண்ட ஒவ்வொருவருக்கும் இதனைக் கட்டாயக் கடமையாக்கினால் எப்படியிருக்கும்? ஐந்து ஆண்டுகளில் 2000 மில்லியனுக்கும் மேற்பட்ட மரங்கள் இருக்கும். இதனை முறையாகப் பயன்படுத்தினால் இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களைவிட அதிகப் பலனளிக்கும். எந்தவித அயல்நாட்டு உதவியும் இன்றி இதனைச் செய்ய முடியும். சேமிப்பு மற்றும் முதலீட்டுப் பிரச்சினைகள் கிடையாது. அம்மரங்கள் மூலம் உணவுப் பொருட்கள், நாரிழைகள், கட்டுமானப் பொருட்கள், நிழல், நீர், தூய்மையான காற்று ஆகிய கிட்டத்தட்ட மனிதனுக்குத் தேவைப்படும் அனைத்துப் பொருட்களும் கிடைக்கும்.

இந்தியாவின் பெரும் பிரச்சினைக்கு இதனை நான் ஒரு சிந்தனை பரிசாக தருகிறேன், பதிலாக அல்ல. நான் கேட்கிறேன். உடனடியாகச் செய்ய வேண்டியவை பற்றி சிந்திப்பதை எத்தகைய கல்வி தடுக்கிறது? எதனையும் செய்வதற்கு முன் மின்சாரம், சிமென்ட், கம்பி ஆகியவை வேண்டுமென்று நம்மை சிந்திக்க வைத்தது எது? உண்மையிலேயே உதவி புரியும் விஷயங்களை மையத்திலிருந்து, அதிகார மையத்திலிருந்த முடியாது, அமைப்புகள் மூலம் செய்ய முடியாது. ஆனால், அவைகளை

மக்களைக் கொண்டு செய்ய முடியும். உலகில் பிறந்த ஒவ்வொருவரும் தன் கைகளை பயனுள்ள முறையில் ஆக்கப் பூர்வமாக செயல்படுத்துவது இய

ற்கையானது, இயல்பானது என்ற எண்ணத்தை நாம் மீண்டும் சிந்திக்க முடியுமென்றால், வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினை ஒழிந்துவிடும் என்று நான் நினைக்கிறேன். அந்த எண்ணத்தைப் பெறுவது மனிதனின் புத்திசாலித்தனத்திற்கு அப்பாற்பட்ட ஒன்றல்ல. தேவையான எல்லா வேலைகளையும் எப்படிச் செய்து முடிக்க வேண்டும் என்று அதி விரைவிலேயா நாம் நம்மைக் கேட்கத் தொடங்குவோம்.

.................

## எதிர்காலத்தை கணிக்கும் பொருளாதார அடியாட்கள்!

இங்கு ஏன் முன்கூட்டியே சொல்லப்படுவது குறித்து விவாதிக்கப்படுகிறதென்றால், அது நாம் எதிர் கொள் ளும் மிக முக்கிய மெய் விளக்க பிரச்சினைகளைக் கொண்டுள்ளது. இப்போதுள்ளதைப் போல் விஷயங் களை முன்கூட்டியே தெரிவிப்பவர்கள், திட்டமிடுபவர் கள், மற்றும் மாதிரி வடிவமைப்பாளர்கள் முன்னெப்போ தும் இல்லை. தொழில்நுட்ப வளர்ச்சியினால் உருவான ஆர்வத்தைத் தூண்டக்கூடிய கணினி சொல்லப் படாத புதிய சாத்தியங்களை அளிக்கும் போலத் தோன்றுகிறது. "எதிர்காலத்தைத் தெரிவிக்கக்கூடிய இயந்திரங்களைப் பற்றி மக்கள் சாதாரணமாகப் பேசிக் கொள் கின்றனர்.

நாம் காத்துக் கொண்டிருப்பது அவை போன்ற இயந் திரங்களுக்காக இல்லையா? எல்லா காலங்களிலும் எல்லா மனிதர்களும் எதிர்காலத்தைப்பற்றித் தெரிந்து கொள்ளவே விரும்புகிறார்கள்.

பண்டைய சீனர்கள் சிங் -I (I Ching) என்ற 'மாற்றங்க ளின் புத்தகம்' (*The Book of Changes*) என்ற மனித இனத்தின் பழமையான புத்தகமாகக் கருதப்படும் புத்த கத்தை ஆலோசனைக்காகப் பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். இன்றும் சில புத்தகங்கள் இப் படி உள்ளன. எல்லாம் மாறிக் கொண்டிருக்கும் போது மாறாதது மாற்றம் மட்டுமே என்பதன் அடிப்படையில் அமைந்துள்ள

அந்த சீனப் புத்தகம் மெய்விளக்க இயல் கருத் துக்களை வலியுறுத்துகிறது. "ஒவ்வொன்றிற்கும் ஒரு காரணம் உண்டு" என்று கூறும் எக்லீசியாஸ்டிஸ் வானின் கீழுள்ள ஒவ்வொரு பயன்பாட்டுக்கும் உண்டு... உடைந்து போக ஒரு நேரம், உருவாக நேரம்..... கற் களை சிதறடிக்க ஒரு நேரம், அதை ஒன்றாக்க ஒரு நேரம் என்றும் கூறுகிறார். அல்லது இப்படி சொல்ல முடியும், "விரிவாக விரிவாகுவதற்க காலம், ஒருங்கு கூட்ட ஒரு காலம்". பிரபஞ்சத்தின் சுருதியைப் புரிந்து கொண்டு அதனுடன் ஒத்திசைவாகச் செல்வதே விவே கமுள்ள ஒரு மனிதனின் முக்கியமான பணி. கிரேக்கர் களும் பெரும்பாலான நாடுகளும் அசரீரி வாக்குகள் அடிப்படையில் வாழ்ந்து கொண்டும், குருக்கள், தூதர் கள் இவர்களைப் பின்பற்றிக்கொண்டுமிருந்தபோது, பிரபஞ்ச ரீதியாக ஏற்படும் மாற்றங்கள் குறித்து சீனர் கள் ஒரு நூலைக் கொண்டிருந்தார்கள். அந்த நூல், அனைத்து விஷயங்களும் இறைவனின் விதிகளால் அமைந்துள்ளது என்பதையும் மனிதன் தனது ஞானம்

அல்லது துன்பத்திலிருந்து அதனுடன் இணங்கி இருத் தலையும் பற்றிக் கூறுகிறது. நவீன மனிதன் கணினியை நோக்கிச் செல்கிறான்.

தொன்மையான அசரீரி முறைகளுடன் நவீன கணி னியை ஒப்பிடுவது ஒரு தூண்டலாக இருக்கலாம். தொன்மையான முறை இயல்பான குணம் என்பத தன் அடிப்படையில் செயல்படுவது. ஆனால் கணி னிகளோ அளவுகளின், எண்ணிக்கைகளின் அடிப்ப டையில் அமைந்தது. டெல என்னுமிடத்தில் உள்ள ஆலயத்தில், "உன்னையே நீ அறிவாய் என்பது எழு தப்பட்டுள்ளது. ஆனால் மின்னலும் கருவியான கணி ணியில் எழுதப்பட்டுள்ளது. "என்னை அறிந்து கொள்'. அதாவது உள்ளே புகுமுன் என்னைப் பயன்படுத்துவ தற்கான வழிமுறைகளைக் கற்றுக்கொள என்பதாகும். அந்த சீன நூலும் அசரீரி வாக்குகளும் மெய் விளக்க இயல் என்றும், கணினி என்பது உண்மையானது என் றும் கருதப்படலாம். ஆனால் வரையறுக்கப்பட்ட மெய் விளக்க இயலின் கற்பனைகளின் அடிப்படையிலேயே எதிர்காலத்தைக் கூறும் இயந்திரம் உருவாக்கப் பட்டுள் ளது என்பதே உண்மையாக இருக்கிறது. "எதிர்காலம் பற்றியவை இங்கே இருக்கின்றன என்ற கற்பனை அடிப் படையில் அந்த இயந்திரம் உள்ளது.

இந்த கற்பனை நிர்ணயிக்கப்பட்டதாக உள்ளது. எனவே அதனைத் தெரிந்து கொள்ள நல்ல நுட்பமான கரு விகளே தேவை என்ற எண்ணம் உள்ளது. இந்த விஷயங்கள் எல்லாம் மெய் விளக்க இயலிலிருந்து வெகு தொலைவில் உள்ளனவென்பதையும், நேரடி யான அனுபவங்களிலிருந்து வெகு தொலைவிலுள்ள அதீத கற்பனைகளின் அடிப்படையில் உள்ளதையும் வாசகர் ஒப்புக் கொள்வார்கள். இது மனித சுதந்திரத்

தைத் தகர்த்து முன்னரே நிர்ணயிக்கப்பட்டுள்ளவற்றை மாற்ற முடியாது என்ற நிலைக்குக் கொண்டு செல்கிறது. நடைமுறை விளைவுகளைக் கொண்டிருக்கும் உண் மையைக் காணாமல் கண்களை மூடிக் கொள்ள இய லாது. அது உண்மையா பொய்யா என்பதே கேள்வி.

இறைவன் உலகையும் அதில் வாழ மக்களையும் படைத்தபோது, அவன் தனக்குள் இப்படிக் காரணம் கொண்டிருக்க முடியுமென நான் எண்ணி, கற்பனை செய்கிறேன். "எல்லாவற்றையும் முன்கூட்டியே அறிந்து கொள்ளும்படி நான் செய்தால், நான் வலிமையான மூளையை வழங்கியுள்ள இந்த மனிதர்கள், சந்தேக மின்றி எதிர்கால விஷயங்களை முன்கூட்டியே அறிந்து கொள்வதை கற்றுக் கொள்வார்கள். பின்னர் அவர்க ளுக்கு எதனையும் செய்ய வேண்டும் என்ற நோக்கமே இருக்காது. அனைத் துமே நிர்ணயிக்கப்பட்டு விட்ட தால் மனிதன் அதில் செய்ய ஏதும் இருக்காது என் றிருந்து விடுவான். ஆனால் நான் ஒவ்வொன்றையும் முன்கூட்டியே தெரிந்து கொள்ள முடியாதபடி படைத் தால், எடுக்கப்பட்ட எந்த முடிவுக்கும் பகுத்த அடிப்படை இல்லை என்பதை மனிதர்கள் கண்டு கொள்வார் கள். அப்போதும் எந்த நோக்கமுமற்றுப் போய் விடுவார் கள். இரண்டுமே சரியல்ல. எனவே இந்த இரண்டையும் கலந்து படைக்க வேண்டும்.

சிலவற்றை முன் கூட்டியே தெரிந்து கொள்ள முடியும். சிலவற்றை தெரிந்துகொள்ள முடியாது. அப்போது ஒவ் வொன்றையும் பற்றி அறிந்து கொள்ளுவதே அவர்களது மம் பணியாக இருக்கும்."

இன்று முன் கூட்டியே கூறும் இயந்திரங்களை மைப் பது முக்கியமான பணியாகும். முன்கூட்டியே எதனையும்

ஒருவர் தெரிவிப்பதற்கு முன், அவரிடம் கான ஏற்றுக் கொள்ளும் படியான காரணங்கள் இருக்க வேண்டும்.

எதிர்காலத்தைய திட்டங்களை இடுபவர்களுக்கு முன்பே நிர்ணயிக்கப்பட்ட விஷயங்கள் ஏதுமில்லை. அதன் அடிப்படையில்தான் அவர்கள் திட்டங்களைத் தீட்டுகிறார்கள். எனவே மற்றெல்லோரையும் விட எதிர் காலத்தைப் பற்றிக் கூறக்கூடிய இயந்திரங்களைப் பெற அவர்கள் பெரிதும் விரும்புவார்கள். அவர்களது திட்டங் களை அவர்கள் தீட்டுவதற்கு முன்பே இந்த எதிர்கா லத்தைச் சொல்லும் இயந்திரங்கள் அவர்களது திட்டங் களையும் எதிர் பாராத விதமாக சொல்லக் கூடும் என் பதை எப்போதாவது எண்ணியிருக்கிறார்களா?

அது எப்படி இருந்தாலும் எதிர்காலத்தை முன் கூட் டியே சொல்வது பற்றிய கேள்வி முக்கியமானது என்ப துடன் அது ஓரளவு பிரச்சினையையும் கொண்டுள்ளது. நாம் மதிப்பிடல், திட்டமிடல், முன்கூட்டியே கூறுதல், வரவு செலவுத்திட்டம், நில அளவைகள், திட்டங்கள், நோக்கங்கள் போன்றவற்றைப் பற்றியெல்லாம் அவை ஒன்றுக்கொன்று மாற்றிக் கொள்ளப்படக் கூடியவை போலும், எல்லோரும் அதனை தாமாகவே புரிந்து கொள்வார்கள் என்பது போலவும் பேசிக் கொண்டி ருக்கிறோம். இவற்றிற்கான அடிப்படை வேறுபாடுகளை உருவாக்கிக் கொள்ளவில்லை என்றால் குழப்பமே மிஞ்சும். இந்த வார்த்தைகள் கடந்த காலத்துக்கானதா கவோ அல்லது எதிர்காலத்துக்கானதாகவோ இருக்க லாம். அவை செயல்களுக்கானதானகவோ, சம்பவங்க ளுக்கானதாகவோ குறிப்பிட்டப்பட்டதாகவோ இருக்க லாம்.

நிச்சயமற்றதையோ அல்லது நிச்சயமற்றதையோ குறிக் கும்படி இருக்கலாம். இவற்றின் மூன்று வகையான

சேர்க்கைகள் 23 அல்லது 8 ஆக இருக்க சாத்தியங் கள் உள்ளன. எதனைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கி றோமா அதற்கான 8 வேறுபட்ட பதங்களை நிச்சயமாகக் கொண்டிருக்க வேண்டும். நமது மொழியின் மூலமாக அதனை முழுமையாக சொல்ல முடியாது.

செயல்களுக்கும் சம்பவங்களுக்கும் இடையிலான வேறுபாடே மிக முக்கியமானது. எட்டு விதமானவைக ளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. செயல் கடந்தகாலம் நிச்சயம்
2. செயல் நிகழ்காலம் நிச்சயம்
3. செயல் கடந்தகாலம் நிச்சயமின்மை
4. செயல் எதிர்காலம் நிச்சயமின்மை
5. சம்பவம் கடந்தகாலம் நிச்சயம்
6. சம்பவம் எதிர்காலம் நிச்சயம்
7. சம்பவம் கடந்தகாலம் நிச்சயமின்மை
8. சம்பவம் எதிர்காலம் நிச்சயமின்மை

செயல்களுக்கும் சம்பவங்களுக்குமான வேறுபாடு செய் வினைக்கும், செயற்பாட்டு வினைக்கும் உள்ள வேறு பாடு போல அடிப்படையானது. அல்லது "எனது கட் டுப் பாட்டுக்குளும்" "எனது கட்டுப்பாட்டுக்கு வெளியே ஆகியவைக்கும் உள்ளது போன்ற வேறுபாடு. திட்டமி டுபவர்களின் கட்டுப்பாட்டுக்கு வெளியே "திட்டமிடல் என்ற வார்த்தையைப் பயன்படுத்துவது மடமை. சம் பவங்கள் சாதாரணமாகவே நடக்கும். அதனை அவர முன்னரே சொல்லக் கூடும். அது அவரது திட்டத்தில் ஆதிக்கத்தை செலுத்தும். ஆனால் அது திட்டத்தின் ஒரு பாகமாக இருக்க சாத்தியமில்லை .

கடந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்குமிடையிலான வேறுபாடு நமக்குத் தேவை என நிரூபிக்கப்பட்டிருக்கி

றது. ஏனெனில் திட்டம் அல்லது மதிப்பிடல் என்ற வார்த் தைகள்
அவைகளைக் குறித்தே பயன்படுத்தப்படுகின்றன. திட்ட மில்லாமல் நான் பாரிஸுக்குச் செல்ல மாட்டேன் என்று நான் கூறினால், “நகரின் தெருக்கள் அமைப்பு பற்றிய திட்டத்துடன் செல்வேன்” என்று பொருள்படும். இது எண் 5 ஆம் வகைக்குப் பொருத்தமானது. அல் லது ‘எங்கே’ நான் செல்ல வேண்டும் எப்படி எப்படி என் பணத்தையும் நேரத்தையும் செலவழிக்க வேண் டும் என்ற திட்டத்துடன் செல்வேன்” என்றும் பொருள் படும். இது எண் 2-க்கு அல்லது 4-க்குப் பொருந்தும். “ஒரு திட்டத்தைக் கொண்டி ருப்பது இன்றியமையாதது” என்று ஒருவர் கூறினால், அவர் எந்த எண்ணைக் குறித் துச் சொல்கிறார் என்பது கண்டு பிடிக்கப்படவேண்டிய ஒன்று.
அதேபோன்று “மதிப்பிடல்” என்ற வார்த்தையும், நிச்ச யமின்மையைக் குறிக்கிறது. அது கடந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்குமானதாக இருக்கலாம். உலகில் முன் னரே நிகழ்ந்துவிட்ட ஒன்றுக்கு மதிப்பிடல் தேவைப்ப டுவ தில்லை. ஆனால் நடப்பு உலகில் நன்கு தெரிந்த விஷயங் களிலும் கூட நிச்சயமின்மை நிலவுகிறது. எண் கள் 3, 4, 7 மற்றும் 8 ஆகியவை வெவ்வேறு விதமான நான்கு மதிப்பிடல்களைக் காண்பிக்கின்றன.
இத்தகைய எண்ணற்ற குழப்பங்களில் நாம் சிக்கியுள் ளோம். திட்டங்களை ஆய்வுக்கு உட்படுத்தும் போது, திட்டமிடுபவர்களின் கட்டுப்பாட்டுக்கு வெளியேயான சம்பவங்களுடன் அவை தொடர்புடையவையாகத் தெரி கின்றன. முன்கூட்டி கூறுவன எல்லாம் ஆய்வுக் கணக்கு களே. மதிப்பீடுகள் என்பன திட்டங்களாகத் தெரிகின் றன. இவற்றுக்கு இடையேயான சரியான வேறுபாடு

களை தகுந்த வார்த்தைகள் மூலம் நமது ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்பித்தல் மிகவும் அவசியமானது.

முன் கூட்டியே கூறுதல்

முன்கூட்டியே கூறுதல் என்பது சாத்தியமா? எதிர்காலம் என்பது இல்லை; இல்லாத ஒன்றைப்பற்றி எப்படி அறி தல் இருக்க முடியும்? அறிவு என்பது கடந்த காலத்தைப் பற்றிய

தாகவோ இருக்க முடியும். எதிர்காலம் என்பது தயா ரிப்பது. ஆனால், அது இருக்கும் பொருள்களைக் கொண்டே தயாரிக்கப்படுகிறது. இதனைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியும். கடந்த காலத்தைப் குறித்து விரிவான அறிவு இருந்தால், எதிர் காலத்தை முன்கூட் டியே பெரிய அளவு கூற முடியும். இது பெரிய அளவுதான். ஆனால், முழுமையாக அல்ல. எதிர் காலத்தை உரு வாக்குவதில் மர்மமான மற்றும் கட்டுப்படுத்த இயலாத ஒரு கூறு உள்ளது. அதுதான் மனித சுதந்திரம். இந்த சுதந்திரம் படைத்தவனான கடவுளின் பிம்பத்திலிருந்து உருவானதாகக் கருதப்படுகிறது. இதற்கு 'படைப்புச் சுதந்தரம்' என்று பெயர்.

ஆய்வுக்கூட அறிவியலின் மூலமாக பலர் இன்று இந்த சுதந்திரத்தை, அதன் இருப்பை புறந்தள்ளவே பயன்ப டுத்துகின்றனர் என்பது வினோதமானது. மனித சுதந் திரம் நுழைய முடியாத அல்லது நுழையும் என்று தோன்றாத ஒவ்வொரு இயக்க அமைப்பையும் ஒவ் வொரு தவிர்க்க முடியாத விஷயங்களையும் பெரிதுப டுத்திக் காண்பிப்பதில் ஆண்களும் பெண்களும் ஆனந் தத்தைக் காண்கிறார்கள். உடல் இயக்கவியல் அல் லது மனோதத்துவ வியல் அல்லது சமூகவியல் அல் லது பொருளாதாரம் அல்லது அரசியல் போன்றவற்றில் சுதந்திரமின்மையின் ஆதாரத்தைக் கண்டால் வெற்

றுக்கூச்சல் எழுகிறது. எப்படிபட்ட மனிதத்தன்மையற்ற செயலாக இருந்தாலும், அவர்கள் என்னவாக இருந்தாலும் என்ன செய்து கொண்டிருந்தாலும் அதில் ஏதும் செய்ய இயலாது என்பது கூடுதல் ஆதாரம். சுதந்திரத்தை மறுப்பது என்பது பொறுப்பை மறுப்பது. செயல்கள் ஏதும் இல்லை; ஆனால் சம்பவங்கள் உண்டு. ஒவ்வொன்றும் சாதாரணமாக நடந்தேறுகின்றன; எவரும் பொறுப்பாளிகளல்ல. இதுதான் நான் முன்னர் குறிப்பிட்ட குழப்பத்திற்கான முக்கிய காரணம். எதிர்காலத்தைக் கணித்துக் கூறும் ஒரு இயந்திரத்தை நாம் விரைவில் பெறுவோம் என்ற நம்பிக்கைக்கும் இதுவே காரணம்.
ஒவ்வொன்றும் சாதாரணமாக நிகழ்கிறதென்றால் சுதந்திரம், தேர்வு, மனித படைப்பாற்றல் , பொறுப்பு ஆகியவை இருக்காது. அறிவின் தற்காலிகமான வரையறையுடன் ஒவ்வொன்றும் முன்கூட்டியே சொல்லப்படும். சுதந்திரம் இல்லாதது இயற்கை அறிவியல் அல்லது ஆகக் குறைந்தது அவற்றின் முறைகள் ஆகியவற்றைப் புரிந்து கொள்வது மனித உறவுகளுக்கு பொருத்தமானதாக இருக்கும். எனவே கவனித்துச் உண்மைகளை சாதகமான முடிவுகள் தொடரும். பேராசிரியர் ஃபெல்ப்ஸ் பிரவுன் நமக்கு மிக, மிக நீண்ட ஆண்டுக் கணக்கிலான கவனித்தல் வேண்டுமெனச் கூறுகிறார்.
மனித சுதந்திரம் மற்றும் பொறுப்புகளின் தன்னிச்சையான தலையீட்டினால் இயற்பியலிலிருந்து வேறுபட்ட மெய் விளக்க இயலாக பொருளாதாரம் மாறி, மனிதன் சார்ந்த விஷயங்களை முன் கூட்டியே சொல்ல இயலாத தாக்கி விடுகிறது.
மனித சுதந்திரம் தலையிட இயலாதவைகளான, நட்சத்திரங்களின் இயக்கம் போன்றவை முன்கூட்டியே சொல்

லப்பட முடிந்தவை. மனித சுதந்திரம் தலையீடு செய்யக் கூடிய ஒவ்வொன்றையும் முன் கூட்டியே சொல்லப் பட முடியாதவை என்று கூறலாம். இதற்குப் பொருள் எல்லா மனித செயல்பாடுகளும் முன் கூட்டியே சொல் லப்பட முடியாதவை என்பதா? இல்லை. ஏனெனில் பெரும்பாலான மக்கள், பெரும்பாலான நேரங்களில் தங்கள் சுதந்திரத்தைப் பயன்படுத்தாமல் இயந்திரத தனமாகவே நடந்து கொள்கின்றனர். நிறைய மனிதர் களை அவர்களது பல்வேறு குணாதிசயங்களின் அடிப் படையில் ஆராய்ந்ததில் அவர்களது செயல்கள் முன் கூட்டியே சொல்லப்படத்தக்கவையாக இருந்தன. இவர் களுள் மிகச் சிலரே ஏதோ ஒரு சமயத்தில் தங்கள் சுதந்திரத்தின் சக்தியைப் பயன்படுத்துகிறார்கள். அந்த செயல்பாடு மொத்த வெளிப்பாட்டில் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது.

தங்களது படைப்புச் சுதந்திரத்தைப் பயன்படுத்தும் மிகச் சிறுபான்மையினராலேயே எல்லாவிதமான முக்கிய சிந் தனைகளும் மாற்றங்களும் கொண்டு வரப்படுகின்றன.

ஒரு சூழ்நிலையில் பெரும்பான்மையானவர்கள் தீவிர மான காரணங்கள் இல்லாவிட்டால் எந்த மாற்றத்தை யும் உண்டாக்காத வகையிலேயே செயல்படுகிறார்கள்.

எனவே நாம் இப்படிப் பிரிக்கலாம்.

*மனித சுதந்திரம் இல்லாத நிலையிலேயே முழுமை யான முன்கூட்டியே சொல்லப்படுவது இருக்கிறது.

* சாதாரண விஷயங்களை பெருமளவிலான மக்கள் தொடர்ந்து செய்து வரும் போது முன்கூட்டியே சொல் லப்படுவது என்பது சார்ந்த நிலையில் நிகழ்கிறது.

* மனித செயல்பாடுகளை கட்டுப்படுத்தி மனித சுதந் திரத்தை இல்லாதாக்கும் திட்டங்கள் முன்கூட்டியே

சொல்லப்படுவது சார்ந்த நிலையில் முழுமையாக நிகழ் கிறது. உதாரணம். இரயில்வே கால அட்டவணை.
* தனிமனிதர்களின் தனிமனித முடிவுகள் முன்கூட்டியே சொல்லப்பட முடியாதவை.
தெரிந்த திட்டங்களால் மாற்றியமைக்கப்பட்ட தெரிந்த விபரங்கள் மூலமானவையே எல்லா முன்கூட்டிச் சொல்லப்படுதல்களும். ஆனால் எப்படி விபரங்களைத் தெரிந்து கொள்வது? எத்தனை ஆண்டுகள் பின்னுக் குச் வேண்டும்?
வளர்ச்சி சம்பந்தமான பதிவுகள் இருக்கிறதெனில், சரா சரி வளர்ச்சி, வளர்ச்சி விகித அதிகரிப்பு அல்லது ஆண்டு சம்பள உயர்வு ஆகிய இவற்றில் எந்த விப ரங்கள் நீங்கள் எடுத்துக் கொள்வீர்கள்? உண்மை யாக சொல்லப்பானால், இதற்கென்று விதிகள் ஏதும் இல்லை . மிகவும் வேறுபட்ட முடிவுகளினாலான ஒரே கால அட்டவணையிலான தகவல்களை பயன்படுத்து வதன் பல் சாத்தியங்களை அறிந்து கொள்வது நல்லது.. எந்த விபரங்களின் மீது தவறான நம்பிக்கை வைப்பதை அது தடுக்கும்.
குறுகிய கால முன்கூட்டிச் சொல்லலில் தரப்படுத்தப் படாத பல்வேறு தகவல்களை தரப்படுத்தி முடிவுகள் எடுக்கப்படுகின்றன. ஒரு ஆண்டு வளர்ச்ச்சிக்கு பின் எதை முன்கூட்டியே சொல்வீர்கள்?
* நாம் ஒரு அதிகபட்ச உயரத்தை அடைந்து விட்டோம்.
* அந்த வளர்ச்சி அதைப்போன்றே தொடரும் அல்லது குறையும் அல்லது இன்னும் அதிகரிக்கும்.
* ஒரு வீழ்ச்சி இருக்கும்.
இந்த மூன்றையும் முன் கூட்டியே சொல்லும் நுட்பத்தி னால் சொல்ல முடியாது. ஆனால் தகவல்களின் அடிப் படையிலான முடிவுகளின்படி சொல்ல முடியும். எதனை

நீங்கள் கையாள்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது. அதிகரிக்கும் மின்சாரப் பயன்பாடு என்றால், இந்த மூன் றிலிருந்தே தேர்வுசெய்யப்படவேண்டும். முன்கூட்டியே சொல்லப்படுதல் என்பது தரப்படுத்தப்படாத தகவல்க ளினால் சொல்லப்படுவது இல்லை. எந்த அளவு தரப் படுத்தலும் சரியான முடிவுக்கு ஒருவரைக் கொண்டுவ ராது.

எனவே நடப்பு சூழ்நிலையை முழுமையாகப் புரிந்து கொள்ள முயற்சிகள் தேவை என்று நம்புகின்றேன. அப் படிப் புரிந்து கொண்டு அசாதாரணமான, அபூர்வமான காரணிகளை அறிந்து கண்டுபிடித்து நீக்க வேண்டும். இப்படிச் செய்தால் முன் கூட்டியே சொல்லுதல் என்பது தரப்படுத்தப்பட்டதாக இருக்கும். அடிப்படை முடிவுக ளுக்கு வருவதற்கு எந்தத் தரப்படுத்துதலும் உதவ முடி யாது.

இந்த நிலையில் கம்யூட்டர்களை கொண்டு குறுகிய கால முன்கூட்டிச் சொல்லும் சாத்தியங்கள் இருக்கக்கூ டும் என்பது மறக்கப்படலாம்.

ஏனெனில் கம்யூட்டர்கள் பெருமளவிலான

தவல்களைக் கையாண்டு, பொருந்தும் கணிதக் கூற் றாக அவற்றை மாற்றிவிடும். இந்த கணித கூற்றை உட னடியாக மிகப்புதியதாக செய்து கொள்ள முடியும். நல்ல பொருத்தமான கணித வளம் இருந்து

அதனைக் கையாண்டால், அந்த இயந்திரத்தால் எதிர் காலத்தை முன்கூட்டியே சொல்ல முடியும்.

அவைபற்றிய மெய் விளக்க இயல் கேள்விகள் மீது கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. "நல்ல பொருத் தமான கணித வளம்" என்றால் என்ன? கடந்த காலத் தில் தொடர்ந்து நடந்த அளவீட்டு மாற்றங்களை சரி யான கணித மொழியில் சொல்வதாகும். ஆனால்

உண்மை என்ன வெனில் அந்த தொடர்ந்து நடந்து வரும் அளவீட்டு மாற்றங்களை என்னாலோ அல்லது அந்த இயந்திரத்தாலோ சரியாக, யூகங்களிலான முடிவுகளின்றி சொல்ல முடிந் திருக்க வேண்டும். மனித சுதந்திரம் இல்லாத நிலையிலும், நாம் கவனித்து பதிந்து வைத்திருக்கும் தகவல்களுக்கான காரணங்களில் மாற்றங்கள் ஏற்பட சாத்தியங்களின்றியும் இது இருக்க வேண்டும்.

மாற்றங்களைக் கொண்டு வரும் காரணிகள் வராத வரை நன்கு நிறுவப்பட்ட வகைமாதிரிகள் (நிலைத் தன்மை பற்றி, வளர்ச்சி அல்லது வீழ்ச்சி பற்றி) சிறிது காலம் நீடித்திருக்கும் என்று கூறப்படுவதை நான் ஏற்றுக்கொள்கிறேன். இவை போன்ற வகை மாதிரிகளை கண்டுணர மின்னணுவியல் இல்லாத மனிதனின் மலிவான மூளை சக்தி அதன் போட்டியாளரான கணினியை விட வேகமானது, நம்பகமானது என்று நான் சொல்வேன்.

நடப்பு சூழ்நிலையின் அசாதாரணமானவற்றை நீக்கிய பிறகு, தரப்படுத்தப்படாத முன்கூட்டியே சொல்லும் முறை புள்ளியியலாளர்கள் குறிப்பிடும் இரண்டு பெரும் தவறுகளில் கொண்டு போய்விடும். கணினியில் ஒரு சூத்திரத்தை தங்கள் பெற்றிருப்பீர்களேயானால், அதனைக் கசக்கிப் பிழிந்து எதிர்காலம் பற்றிய படத்தைக் கொண்டு வர முயல்வீர்கள்.

உண்மையானது என்று தான் எண்ணும் ஒரு கற்பனை வரைபடைத்தைக் கொண்டிருக்கும் மனிதன் வரைபடத்தைப் பெற்றிருக்காத மனிதனை விட மோசமனவனாக இருப்பான்.

முன்கூட்டியே தகவல்களைச் சொல்லும் ஒருவன் எத்தகைய யூகங்களின் அடிப்படையில் சொல்லப்பட்ட என்

பதை ஏற்றுக் கொள்வான். ஆனால் அந்த முன்கூட்டி சொல்லப்படும் தகவலைப் பயன்படுத்தும் மனிதன் அதனைப் பற்றி ஒன்றும் அறியாமல், ஒரே ஒரு சோதிக்கப் படாத யூகத்தையே கைக்கொள்வான். முன்கூட்டி சொல்லப்படுகிறதோ இல்லையோ தெரியாத எதிர்காலம் குறித்து நிர்வாக ரீதியிலான முடிவை ஒருவன் எடுக்க வேண்டும்.

திட்டமிடல்

திட்டமிடல் என்பது முன் கூட்டியே கூறப்படுதலிருந்து முற்றிலும் வேறுபட்டது. அது திட்டமிடுபவர்கள் அல்லது அவர்களது முதலாளிகள் செய்ய விரும்புவது. திட்டமிடுதல் என்பது அதிகாரத்திலிருந்து பிரிக்க இயலாத ஒன்று. எந்த வகையான அதிகாரம் பெற்றிருக்கும் எவருக்கும் திட்டமிடுதல் என்பது இயல்பானது மற்றும் விருப்பத்தின் பேரிலானது. தன் அதிகாரத்தை உணர்வுப்பூர்வமாகப் பயன்படுத்திய எதிர்காலப் பார்வை அவருக்கு வேண்டும். அப்படிச் செய்யும்போது மற்றவர்கள் என்ன செய்யக்கூடும் என்பதை அவர் கருத்தில் கொள்ள் வேண்டும். இதனை வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால், ஓரளவு முன்கூட்டி சொல்லப்படும் அறிவு இல்லாமல் அவரால் சரியாக திட்டமிட முடியாது. மனித சுதந்திரம் தலையிட முடியாதவைகளிலும், பெருமளவிலான மக்களின் தொடர் செயல்பாடுகளுடனும் அல்லது அதிகாரத்தைக் கொண்டவர்களால் நிறுவப்பட்ட திட்டங்களுக்குமான முன்கூட்டி சொல்லுதல் நடக்கும் துரதிர்ஷ்டவசமாக முன்கூட்டி சொல்லுதல் என்பது தனிப் பட்டவர்களின் தனிப்பட்ட முடிவுகளையோ அல்லது சிறிய குழுக்களையோ சார்ந்திருக்கிறது. இவற்றில் முன்கூட்டி சொல்லுதல் என்பது உள்ளுணர்விலான யூகங்கள்தான். முன் கூட்டி சொல்லும் தொழில்

நுட்பத்தின் எந்த முன்னேற்றமும் இதற்கு உதவாது. சில மனிதர்கள் மற்றவர்களை விடச் சிறந்த யூகங்களைக் கொண்டிருக்கிறார்கள்தான். இது சிறந்த முன் கூட்டி சொல்லும் திறனாலோ அல்லது அவர்களது கணிப்பிற் கான சிறந்த இயந்திரங்களாலோ அல்ல.

எனில், ஒரு சுதந்திர சமூகத்தின் "தேசியத் திட்டம்" என்பதன் பொருள் என்னவாக இருக்க முடியும்? எல்லா அதிகாரத்தையும் ஒரு புள்ளியில் குவிக்கும் படியான தாக அது இருக்க முடியாது. ஏனெனில் சுதந்திரத்தை வோறுத்ததாக அது ஆகிவிடும். நல்ல திட்டமிடல் என் பது அதிகாரத்துடன் விரிந்து செல்லக் கூடியது. ஒரு சுதந்திர சமூகத்தின் தேசியத் திட்டம் என்ற சொற்களின் அறிவுப்பூர்வமான பொருளாக, 'உண்மையான அதிகா ரத்தைத் தம் வசம் கொண்டிருப்பவர்களின் சுய விருப் பத்திலான எண்ணங்கள்' என்றே எனக்குத் தோன்றுகி றது. அத்தகைய எண்ணங்களிலான வாக்குமூலங்கள் ஒரு மைய முகமை(ஏஜென்ஸி)யால் சேகரிக்கப் படு கின்றன.

நீண்டகால முன்கூட்டிச் சொல்லுதலும் சாத்தியமான ஆய்வுகளும்

ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட காலங்களுக்கான மதிப்பீட்டை உருவாக்கும் நீண்டகால கணிப்பு பற்றிப் பார்ப்போம். மாற்றம் என்பது காலத்தால் நிகழ்வது. குறு கிய கால கணிப்பைவிட நீண்டகால கணிப்பு கடின மானது. உண்மையில் எல்லாவித நீண்டகால கணிப் புகளும் யூகங்களிலானவை, மடத்தனமானவை. நீண் டகால கடப்பாடுகளின் அடிப்படைகளில் முடிவுகள் மேற்கோ வேண்டி இருப்பதால் எதிர்காலம் குறித்த பார்வை கொள்ள வேண்டும் என்பது அவசியமாகிறது. இதனை எதைக் கொண்டும் சரிப்படுத்திவிட முடியாதா?

முன்கூட்டிய கணிப்புகள் மற்றும் சாத்தியமான ஆய்வு ஆகியவற்றுக்கு இடையிலான வேறுபாட்டை மீண்டும் வலியுறுத்த நினைக்கிறேன். ஒன்றில் இது அல்லது அது

இன்னும் இருபது ஆண்டுகளில் இப்படி இருக்கும் என்று கூறுவது. மற்றொன்றில் யூகங்களின் அடிப்படையில் நீண்டகால விளைவுகள் இப்படி இருக்கும் என்று கூறுவது என்று கணக்கிடுகிறேன். பெரிய பொருளாதாரக் கல்வியில் சாத்தியமானவை பற்றிய ஆய்வுகள் அபூர்வமாகவே செய்யப்பட்டுள்ளன. மக்கள் பொதுவான முன்கூட்டிய கணிப்புகளை அவ்வளவாக சார்ந்து இருப்பதில்லை.

சில உதாரணங்களைக் கூறுவது பொருத்தமாக இருக்கலாம். வளர்ச்சியற்ற நாடுகளில் வளர்ச்சி பற்றி பேசப்படுகிறது. அதற்காக எண்ணற்ற "திட்டங்கள்" போடப்படுகின்றன. உலகின் எதிர்பார்ப்பின்படி சில பத்தாண்டுகளில் உலகின் பெரும்பான்மையான மக்கள் வளர்ச்சியடைந்த மேற்கத்திய நாடுகளில் இப்போது மக்கள் வாழ்வது போல் வாழ்வார்கள். இதனை முறையாக ஆய்வு செய்ய வேண்டும். அந்த வளர்ச்சிக்குத் தேவையான உணவுப் பொருள்கள், எரிபொருள், உலோகங்கள், துணி இழைகள் போன்றவை எவ்வளவு இருக்க வேண்டும்? தொழில்துறை இருப்பு எவ்வளவு இருக்க வேண்டும்? இவற்றிற்கெல்லாம் நிறைய புதிய யூகங்கள் வேண்டி இருக்கும். ஒவ்வொரு யூகமும் ஆய்வுக்குள்ளாகும். பெருமளவிலான மக்கள் ஏழ்மையில் வாழும் நாடுகளில் சரியான பொருளாதார முன்னேற்றங்கள் இருக்க வேண்டும் எனும்போது வளர்ச்சிக்கான மாற்று வகைகளும் செய்யப் பட வேண்டும். சில வகையான வளர்ச்சிகள் மற்றவற்றை விட மிகவும் சாத்தியமானவைகளாகத் தோன்றும்.

குறைவாக உள்ள புதுப்பிக்க இயலாத மூலப்பொருட் களான படிம எரிபொருட்கள், உலோகங்கள் ஆகியவை பற்றிய பிரக்ஞாபூர்வமான சாத்தியமான ஆய்வுகளுட னான நீண்டகால சிந்தனைகள் விரும்பத்தக்கவை. இப்போதைய நிலையில் நிலக்கரிக்கு மாற்றாக எண் ணெய்ப் பொருட்கள் இருக்கின்றன.

சிலர் நிலக்கரி இனி பயன்படாது போகும் என நினைக் கின்றனர். நிலக்கரி, எண்ணெய்ப் பொருட்கள் (பெட்ரோலியப் பொருட்கள்) மற்றும் இயற்கை எரிவாயு வின் இருப்பு பற்றிய ஆய்வு அச்சத்தை உருவாக்கி எச்சரிக்கை செய்யும் விதத்தில் உள்ளது.

மக்கள் தொகைப் பெருக்கம் மற்றும் உணவுப்பொருள் வியோகம் சம்பந்தமான ஐக்கிய நாடுகள் சபையின் தக வல்களின் அடிப்படையில் உற்பத்தி செய்யப்பட உண வுப் பொருட்களின் அளவை அடைய, குறிப்பிட்ட சிறப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படவேண்டும் என்கி றது.

இவை எல்லாவற்றிலும் மிகத் தேவையானது அறிவுப் பூர்வமான ஒன்றாகும். அது முன்கூட்டிக் கணித்தலுக் கும் சாத்தியமான ஆய்வுகளுக்கும் இடையிலான வேறு பாட்டை ஏற்றுக் கொள்வதுதான். இவை இரண்டை யும் குழப்பிக் கொள்வது புள்ளி விவர அறிவின்மையின் அடையாளம் தான். நீண்ட கால கணிப்பு என்பது யூகத் தினாலானது. ஆனால் சாத்தியக்கூறுகள் பற்றிய நீண் டகால ஆய்வு ஆபத்தை எண்ணி நாம் ஒதுங்கிவிடும் இணக்கமான, நேர்மையான ஒன்றாகும்.

இந்த ஆய்வுப் பணிகள் கம்ப்யூட்டர் போன்றவைகளால் செய்யப்பட வேண்டுமா என்பது ஒரு கேள்வி. முடிவுக ளைக் காண வேண்டிய சில துறைகளின் பெருகிவரும்

முடிவற்ற உதவிகளை கணக்கிட அவை தேவைபோல் எனக்குத் தோன்றுகிறது. ஒரு மின்னணுக்கருவியான கம்யூட்டர் பலவேறு தகவல்களின் அடிப்படையில் பல் வேறு சாத்தியக்கூறுகளினாலான கணக்குகளை மனித மூளையை விட சில நொடிகளில் செய்ய முடியும்தான். ஆனால் அதனை மனித மூளை எப்போதும் செய்ய வேண்டிய தேவையே இருக்காது. மனித மூளை முடி வுகளை எடுக்கக கூடிய ஆற்றல் மூலம் சரியான முடி வுகளை எடுக்க சில குறிப்பிட்ட அளவுகோல்களில் கவனம் செலுத்தி செயல்படக கூடியது. நடப்புத் தகவல் களை தொடர்ந்து அளிப்பதன் மூலம் நீண்ட காலத்திற் கான கணிப்புகளை கணினி முலம் செய்யமுடியும் எனச் சிலர் கருதுகின்றனர்.

சாத்தியம்தான் என்றாலும் உதவிகரமாக இருக்குமா? ஒவ்வொரு தகவலும் அதன் நீண்ட காலத்துக் கான பொருத்தத்தை ஆய்வு செய்ய வேண்டியதாக எனவே உறுதியான முடிவுகள் உடனடியாகத் தெரியாது. அல்லது நீண்டகால கணிப்புகளை இயந்திரகதியில் தொடர்ந்து மீண்டும் மீண்டும் செய்து கொண்டிரு எந்தப் பலனும் இல்லை என்றே நான் நினைக்கிறேன். மாபெ ரும் வர்த்தகத்தில் மிகவும் அபூர்வமான சம்பவிக்கும் போது நீண்டகால முடிவு செய்யப் முன்கூட்டிய கணிப்பு தேவைப்படும். இதற்கான சிக்கலான நீண்ட நிச்சய மில்லாத செயல்பாட்டை இயந்திரசாதனத்தின் மூலம் செய்துவிடலாம் என சுயமாக ஏமாற்றிக்கொள்வதைப் போன்றது.

சாத்தியக் கூறுகள் பற்றிய ஆய்வு என்று வரும்போது ஒரு வரின் யூகங்களில் ஏற்படும் மாற்றங்களை சோதித்துக் கொள்ள எப்போதாவது இத்தகைய இயந்திர சாதனங் கள் பலனளிக்கலாம்.

கணிக்க இயலாத் தன்மையும் சுதந்திரமும்

முன்கூட்டிய கணிப்பில் கம்யூட்டர் மீது எனக்கு எதிர் மறையான அபிப்ராயம் இருந்தாலும் அவற்றின் மற் றப் பயன்பாடுகள் குறித்து நான் தவறாக மதிப்பிட வில்லை. அவை கணிதப் பிரச்சினைகளில் தீர்வுகாண் பதிலும், அவைகளின் உற்பத்திச் செயல்பாடுகளிலும் எனக்குத் தவறான மதிப்பீடுகளில்லை. இந்த செயல் பாடுகள் அனைத்தும் அறிவியலும் அவற்றின் பயன்பா டும் சார்ந்தவை. அவை சார்ந்துள்ள விஷயம் மனிதம் சம்பந்தமானதல்ல. "மனிதம் சார்ந்த சம்பந்தமானவை" என்று கூறுவேன். இதன் மிகச் சரியான அடையாளம் என்னவெனில், சுதந்திரமின்மை தான், தேர்ந்தெடுக்க இயலாமைதான். பொறுப்பின்மை மற்றும் கௌரவமின் மைதான், மனித சுதந்திரம் என்பது நுழையும்பொழுது, இயந்திர சாதனங்களின் வளர்ச்சிக்கு அபாயம் நேரிடு கின்ற வேறு விதமான உலகில் இருக்கிறோம் என்று பொருள். வேறுபாடுகளை அழிக்க

எத்தனிக்கும் எந்த முயற்சியும் உச்சகட்ட வேகத் தில் எதிர்க்கப்பட வேண்டும். இயற்கை அறிவியலைப் போன்ற போலியான முறைகளைப் பின்பற்றும்படியாக தவறாக வழி நடத்தப்பட்ட சமூக அறிவியலினால் மனித பெருமைக்கு பெரும் சேதம் விளைந்துள்ளது. பொரு ளாதாரமோ அல்லது பயன்முறைப் பொருளாதாரமோ, சரியான அறிவியலல்ல. உண்மையில் அதனைவிடப் பெரியதாக இருக்க வேண்டியவை. அதாவது விவே கத்தின், புத்திசாலித்தனத்தின் ஒரு பிரிவாக இருக்க வேண்டியது. "அரசியல் மற்றும் சமூக சார்பற்றதாக தனக்கான அபூர்வமான முறையில் உலகப் பொருளா தார சமநிலை தனக்குள்ளே வளர்ந்திருக்கிறது" என்று கோலின் கிளார்க் ஒருமுறை குறிப்பிட்டார். இந்தக் கூற்

றின் அடிப்படையில் 1960ஆம் ஆண்டின் பொருளாதா ரம்" என்ற நூலை 1941-ல் அவர் எழுதினார். அவர் அதில் என்ன எழுதியிருந்தாரோ அது காணப்படவில்லை என்று கூறுவது சரியல்ல. இருந்த போதும் மனிதன் தனது சுதந்திரத்தை இயற்கையின் மாறாத விதிகளுக் குள் பயன்படுத்துகிறான் என்ற கருத்திலிருந்து வெளி யானவைகளை அந்த நூல் கொண்டிருந்தது. கிளார்க் கின் நூலில் உள்ள யூகம் உண்மையல்ல. உண்மையில் உலகப் பொருளாதார சமநிலை, நீண்ட காலத்திலும் கூட அரசியல் மற்றும் சமூக மாற்றங்களை சார்ந்ததாக உள்ளது. அவரது நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள நவீன கணிப்பு முறைகள் வெறும் புள்ளி விவரங்களாகவே உள்ளன.

வாழ்க்கை வாழ்வதற்கு ஏற்றதாகவே உள்ளது. ஏனெ னில் அது முன்கூட்டியே கணிக்கப்பட முடியாததாக உள்ளது என்பதால் மகிழ்ச்சியாக வாழ்வதற்கு ஏற்றதா கவே உள்ளது என்ற முடிவுக்கு வருகிறேன். வாழ்க் கையை பொருளாதார நிபுணராலோ அல்லது புள்ளி விபரக்காரர்களாலோ அறுதியிட முடியாது. இயற்கை யின் விதிகளுக்கு உட்பட்டு நாமெல்லோரும் நன்மை அல்லது தீமை என்ற முடிவு எடுப்ப அவரவர்க்கும் எஜ மானர்களாக உள்ளோம்.

ஆனால் பொருளாதார நிபுணர்களால், புள்ளியியலா ளர்களால், இயற்கை விஞ்ஞானிகளால், பொறியியல்க ளால் அல்லது சரியான தத்துவவியலாளர்களால் கற் பிக்கப்பட்ட அறிவுகள் நமது முடிவை தீர்மானிக்க உதவ முடியும். எதிர்காலம் என்பதைக் கணிக்க இயலாது. ஆனால் அதனை ஆராய்ந்து உணர முடியும். சாத்தியக் கூறுகள் பற்றிய ஆய்வகம் நாம் எங்கே சென்று கொண் டிருக்கிறோம் என்பதைக் காண் பிக்க இயலும். உலகம்

முழுமைக்கும் "வளர்ச்சி" என்பது அடிநாதமாக இருப் பதால் முன்னெப்போதையும் விட நாம் எங்கு சென்று கொண்டிருக்கிறோம் என்பதை அறிவது மிக முக்கியமா னது.

நிர்ணயிக்கப்படாத எதிர்காலத்தின் சாதகமான அறிவை பெற்றுக் கொள்ளும் அவசரத்தில் நவீன உலகின் மனி தனது செயல்பாடுகள், முன்கூட்டிய கணிப்புகள், தக வல்கள் போன்ற விஷயங்களுக்குள் சிக்கி இருக்கின் றன. இந்த விஷயங்கள் அதிகரித்து வளர்ந்து மனித னைச் சுற்றிலும் மலைகள் போல ஆகிவிட்டன. இதன் விளைவு நம்ப வைக்கும் பெரிய ஏமாற்று வேலையா கவும் பார்கின்ஸன் விதியை சரி என்று நிரூபிப்பதாக வும் ஆகிவிடுமோ என்று தான் அஞ்சுகிறேன். எல்லா வற்றையும் நன்றாகப் பார்த்துக் கொண்டு நிதானமாக, அமைதியாக செயல்படும் முதிர்ச்சி யடைந்த மூளைக ளின் முடிவுகளின் அடிப்படையிலேயே எல்லா சிறந்த முடிவுகளும் உள்ளன. "நில், பார், கவனி என்பதே "முன் கூட்டிய கணிப்புக்களை எதிர் நோக்கு என்பதைவிட மிகச் சிறந்த குறிக்கோள் என்று உறுதியாக சொல்கி றேன்.

..................

**மக்கள் பணத்துக்காக உழைக்கவில்லை!**

"இணைந்தது ; ஏற்றுக் கொண்டது" போன்ற சொற் களை கிட்டத்தட்ட எல்லா நாளிலும் கேட்டுக் கொண்டே இருக்கின்றன. பெரிய நிறுவனங்கள் பங்கு பெறும், பெரிய சந்தை வாய்ப்புகளைத் திறந்துவிடும்படி யாக ஐரோப்பிய பொருளாதார சமூகத்தில் பிரிட்டனும் சேர்ந்துள்ளது. முதலாளித்துவ நாடுகளில் தோன்றி

யுள்ள எதனையும் கடந்து முறியடிக்கும்படியாக அல்லது போட்டியிடுவதாக சோஷலிச நாடுகளில் தோன்றியுள்ள தேசியமயமாக்கல் பெரிய கூட்டிணைப்பை உருவாக்கி உள்ளது. பொருளாதார நிபுணர்கள் மற்றும் வர்த்தக வல்லுனர்களின் பெரும்பான்மையோர் இந்தப் பரந்த பெரிய தோற்றத்தை ஆதரிக்கின்றனர்.

மாறாக இதனுடன் உள்ள அபாயங்களைக் குறித்து சமூக வியலாளர்களும், மனோதத்துவ நிபுணர்களும் எச்சரிக்கின்றனர். மாபெரும் இயந்திரப் பற்சக்கரத்தின் மிகச்சிறிய ஒரு பல்லாக ஒரு தனிமனிதன் தன்னை அற்பமாக உணரும் போது அவனது அறநெறிசார் உயர் பண்புத்தரமும் அவன் பிரிவற்றவன் என்ற எண்ணமும் அபாயத்திற்குள்ளாகின்றன. அவனது தினசரி வாழ்க்கையின் மனித உறவுகள் மனிதத்தன்மையற்று போய்க் கொண்டே இருக்கும் அபாயமும் இருக்கிறது. உற்பத்தியிலும், திறனிலும் கூட இந்த அபாயம் நேர்கிறது.

துணிச்சலான நவீன இலக்கிய உலகம் நமக்கும் அவர்களுக்குமிடையிலான பரஸ்பர சந்தேகத்தால் கிழிபட்ட நிலை, மேலுள்ளவர்களின் அதிகாரம், கீழுள்ளவா அடக்கம் ஆகியவைகளால் உருவான வெறுப்பு வற்றை பயமுறுத்தும் வகையில் சரியாகப் பிரித்துக் காட்டுகிறது. அமைப்பு, ஒருங்கிணைத்தல், நிதிகள், உற்சாகமூட்டும் பணக் கொடை, முடிவற்ற எச்சரிக்கைகள் மற்றும் பயமுறுத்தல்கள் மூலமாக அனைத்தையும் நடக்கும்படி வீணான வகையில் ஆட்சியாளர்கள் செயல்படும்போது மக்கள் சொல்ல விரும்பாத பொறுப்பின்மையால் ஆட்சியாளர்களுக்கு எதிர்வினை புரிகின்றனர்.

இவை அனைத்துமே புரிதல் இல்லாமையால் உண்டாகும் பிரச்சினைகளே என்பதில் சந்தேகமில்லை . பலனளிக்கக் கூடிய தொடர்பு, புரிதல் என்பது மனிதனுக்

கும் மனிதனுக்கும் இடையிலான தொடர்பு மட்டுமே. பிரான்ஸ் காஃப்காவின் "கோட்டை" என்ற திகில் நாவல் இடை வெளியின் அதிர்ச்சியளிக்கும் விளைவுகளைக் கூறுகிறது. கே என்ற நில அளவீட்டாளர் அதி காரிகளால் வேலைக்கு அமர்த்தப்படுகிறார். ஆனால் அதன் காரண காரியம் ஒருவருக்குமே தெரியவில்லை . "துரதிர்ஷ்ட வசமாக எங்களுக்கு நில அளவீட்டா ளர் தேவையில்லை, அவரால் இங்கு எந்தப் பயனும் இல்லை " என்று அவர் சந்திக்கும் அனைவரும் சொல் வதால் அவர் தனது உண்மை நிலையைத் தெளிவாக அறிந்து கொள்ள முற்படுகிறார்.
எனவே அதிகாரத்தில் உள்ளவர்களை நேருக்கு நேர் சந்திக்கும் முயற்சியில் கே அதிகாரத்தைக் கொண் டிருக்கும் பலரைச் சந்திக்கிறார். ஆனால் மற்றவர்கள் அவரிடம் சொல்கிறார்கள், "நீங்கள் இன்னும் எமது அதிகாரி களுடன் உண்மையான தொடர்புக்கு வர வில்லை. இந்தத் தொடர்புகள் எல்லாம் மாயத் தோற றம்தான். ஆனால் உங்களுக்குள்ள அறியாமையால் அவற்றை உண்மையானது என நீங்கள் நினைத்து கொள்கிறீர்கள்".

அவர் உருப்படியான வேலைகளை செய்யாமலிருக்கி றார். கோட்டையிலிருந்து அவர் ஒரு கடிதத்தைப் பெறு கிறார். “நீங்கள் செய்த நில அளவீட்டு வேலைகள் எனது அங்கீகாரத்தைப் பெறாதவைகளாக இருக்கின்றன. உங்கள் முயற்சிகளை தளர்த்த வேண்டாம். உங்களது வேலைகளை வெற்றிகரமான ஒரு முடிவுக்குக் கொண் டுவாருங்கள். எந்தத் தலையீடும் என்னை வெறுப்பூட் டும். உங்களை நான் மறக்க மாட்டேன்"
பெருமளவு முதலீட்டு நிறுவனங்களை அமைப்புகளை உண்மையில் எவரும் விரும்புவதில்லை. உயர் அதி

காரிகளிடமிருந்து படிப்படியாக கட்டளைகளைப் பெற எவருமே விரும்புவதில்லை. அதிகார அமைப்புகளால் உருவாக்கப்பட்ட விதிகளும் சட்டங்களும் மனிதத் தன்மையுடையதாக இருந்தாலும் கூட, விதிகளால் ஆளப்படுவதை ஒருவரும் விரும்புவதில்லை. ஒவ்வொரு புகாருக்குமான பதில் இப்படித்தான் இருக்கும். "விதிகளை உருவாக்க வில்லை, வெறுமனே பயன்படுத்தவே செய்கிறேன்".

பெரு நிறுவனங்கள் இந்த இடத்தில்தான் திகைத்து நிற்கும் என்று தோன்றுகிறது. எனவே இதனைப் பற்றி சிந்தித்து கருத்துருவாக்குவது மிகவும் அவசியமானதாகிறது. ஆற்றின் ஓட்டம் வலிமையானதாக இருக்கும் போது அதில் பயணம் செய்ய திறன் மிகவும் அவசியம். அடிப்படையான கடமை பெரு முதலீட்டு நிறுவனங்களுக்குள்ளேயே சிறியனவற்றை அடைவதுதான்.

ஒரு பெரு முதலீட்டு நிறுவனம் உருவானால், அதிகாரம் மையத்தில் குவிவதும், பரந்து விரிந்து எல்லா மட்டங்களுக்கும் கிடைப்பதும் கடிகாரத்தின் பெண்டுல ஆட்டம் போல் மாறிமாறி நடக்கும். அப்படி நடக்கையில் ஒவ வொருவரும் தத்தமக்கு சாதகமான விவாதங்களை முன் வைப்பார்கள். இவற்றுடன் ஒத்துப் போவதை விட பிரச்சினையின் ஆழத்தைக் கண்டுபிடித்து தீர்க்க வேண்டும்.

வெளிப்படையாகத் தோன்றும் பிரச்சினைகளை தீர்ப்பதில் ஆராய்ச்சிக் கூடங்களில் தங்களது பெருபாலான நேரத்தைச் செலவிடுபவர்களிடம் இப் பிரச்சினை பிரபலமில்லை என்றாலும், இது ஒட்டுமொத்த வாழ்க்கையிலும் பரவியிருக்கிறது. நமது உண்மையான வாழ்க்கையில் எதனைச் செய்கிறபோதிலும் பொருத்தமற்ற காரணிகள் என்று சொல்லப்படுகின்ற வற்றையும் கொண்ட

நிலைக்கு நாம் நியாயமான செயல் பாட்டை மேற் கொள்ள முயலவேண்டும். இதே போன்று தேவையை ஒழுங்கு, சுதந்திரம் என்ற இரண்டிலும் ஒரே நேரத்தில் எதிர் கொள்கிறோம்.

எந்த நிறுவனமும் அது சிறியதாக இருந்தாலும், பெரிய தாக இருந்தாலும் தெளிவும் ஒழுங்கும் இருக்க வேண் டும். ஒழுங்கில்லாமல் இருந்தால் எதனையும் நிறை வேற்ற முடியாது. ஒழுங்கு என்பது நிலையானதும் உயிரற்றதும் சுவாரஸ்யமற்றதாகவும் உள்ளது. எனவே புதிய கணிக்கப்பட்ட, கணிக்கப்படக் கூடிய மனிதனின் படைப்புச் சிந்தனைகளை, இதுவரை செய்யப்பட்டிராத, முன்பே உள்ளே ஒழுங்கமைப்பின் காவலர்களால் எப் போதும் எதிர் பார்த்திருக்க முடியாத, புதிய, கணிக்கப் பட்ட, கணிக்கப்படக்கூடிய மனிதனின் படைப்புச் சிந்த னைகளை செயலாக்க நிறைய சரியான வாய்ப்புக்களும், அவற்றைப் பயன்படுத்தும் வாய்ப்புகளுக்கும் வேண்டும். எனவே ஒவ்வொரு நிறுவனமும் அமைப்பும் ஒழுங் கின் ஒழுங்கமைப்பிற்காகவும், படைப்புச் சுதந்திரத்திற் கான ஒழுங்கின்மைக்காகவும் தொடர்ந்து கடினமாக முயன்று கொண்டே இருக்கும். பெரு நிறுவனங்களிடம் இணைந்து உள்ள அபாயம் என்னவெனில், படைப்புச் சுதந்திரத்தைப் பலியாக்குவதும், இயல்பாகவே அதனு டன் உள்ள பாரபட்சமும் ஆகும்.

குவிப்பு என்பது ஒழுங்கின் ஒரு கருத்தாக்கம். பரவல் என்பது ஒரு வகை சுதந்திரம். ஒழுங்கான மனிதன் ஒரு கணக்காளன். பொதுவாக நிர்வாகி. அதே வேளை யில் படைப்புச் சுதந்திரம் என்பது தொழில் துணி வள்ளவர். ஒழுங்கு என்பதற்கு ஆற்றலைக் கொண்டு சொல்லக் கூடிய புத்திசாலித்தனம் வேண்டியிருக்கிறது. ஆனால் சுதந்திரம் உள்மனத்தூண்டல் மூலமான புத்த

கங் களுக்கான கதவுகளை - வாய்ப்புகளை திறந்து விடு கிறது.

நிறுவனம் பெரிதாக இருக்கும்போது ஒழுங்கு அதற்கு வெளிப்படையாகவும், தவறாமல் வேண்டியதாகவும் பள்ளது. ஆனால் இந்தத் தேவை முழுமையாகக் கோரப் படும்போது, மனிதனின் படைப்புச் சுதந்திரத்திற்கும் பக் ககக்கிற்குமான வாய்ப்புகளற்றுப் போகிறது. நிறுவனம் மந்தமானதாகவும் சலிப்பூட்டி வெறுப்படையக் கூடிய தாக வும் ஆகிவிடுகிறது.

பெரு நிறுவனங்களுக்கான தத்துவங்களை உருவாக் கும் முயற்சிக்கு இவ்வகையான பார்வைகளே பின்புல மாக அமைந்துள்ளன. அவற்றிற்காக ஐந்து அடிப்படைக் கொள்கைகளை நான் இப்போது கூறுகிறேன்.

முதல் கொள்கை "துணைக் கொள்கை" அல்லது "துணை நிலை செயல்பாட்டுக் கொள்கை" என்றழைக் கப் படுகிறது.

"குறைந்த திறனுள்ள துணை நிறுவனங்களை பெரிய உயர் நிலை கற்றலுக்குக் கொடுப்பது ஒழுங்கை குலைப் பதும், நியாயமற்றதும், பெரும் பாவமுமாகும். ஒவ்வொரு சமூகச் செயல்பாடும் சமூக அங்கத்தினர்களுக்கு உத விகர மானதாக இருக்க வேண்டுமேயொழிய, அது ஒரு போதும் அவர்களை உறிஞ்சி அழிக்கக் கூடியதாக இருக்கக் கூடாது", என்பது பிரபலமான ஒரு கொள்கை. இது பொதுவாகச் சொல்லப்பட்டது என்றாலும் ஒரு பெரு நிறுவனத்தின் பல்வேறு நிலைகளுக்கும் பொருந் தக் கூடியது. உயர்மட்டம், கீழ்மட்டச் செயல்பாடுகளை உறிஞ்சக் கூடியதாக இருக்கக் கூடாது. விசுவாசம் என்பது சிறிய யூனிட்டுகளிலிருந்தே பெரிய யூனிட்டுக ளுக்கு வளர முடியும். ஒரு நிறுவனத்தின் ஆரோக்கி யமான நிலைக்கு விசுவாசம் மிகவும் அவசியம். "நிரு

பிக்க வேண்டிய சுமை எப்போதும் கீழ்மட்ட வேலை களை செயல்பாட்டிலிருந்து தடுக்க விழைபவர்கள் மீதே இருக்கிறது" என்று துணைச் கொள்கை சொல் கிறது. அதன்படியே அதன் பொறுப்பும் அமைகிறது. ஒரு வேலையை திருப்திகரமாக சரியாக கீழ் நிலையால் செய்ய இயலாது என்றும், எனவே மேல் நிலையே அத னைவிட நன்றாகச் செய்யும் என்றும் அவர்கள் நிரூபித் தாக வேண்டும். நாட்டின் நன்மைக்கும் மகிழ்ச்சிக்கும், வளத்திற்கும் பல்வேறு அமைப்புகளில் படித்தரத்தை அதிகாரத்திலுள்ளவர்கள் வைத்திருக்க வேண்டும்.

கீழ்மட்ட அமைப்புகளின் சுதந்திரத்தையும், பொறுப் பையும் தக்க வைக்கும்படி மைய அமைப்பு செயல்பாட் டால், மொத்த நிறுவன அமைப்பு மகிழ்ச்சியாகவும், வள மாகவும் இருக்கும் என்று துணைக் கொள்கை கூறுகி றது.

அதைப் போன்ற அமைப்பை எப்படி அடைவது? நிர் வாகிகளின் பார்வையில் அது சரியான ஒன்றல்ல. ஒரு பெரு நிறுவனம் பகுதி தானியங்கி யூனிட்டுகள் பல வற் றைக் கொண்டிருக்கும். அவை ஒவ்வொன்றும் படைப் புக்கான பெரிய வாய்ப்புகளுடன் தொழில் துணிவுத் தன்மையுடன் இருக்கும்.

நிறுவன அமைப்பை நிறைய பலூன்களை ஒரு கையில் பிடித்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதனைப் போன் றது என்று கூறலாம். ஒவ்வொரு பலூனும் தனக்கான மிதப்புத் தன்மையுடனும், உயரத் துடிக்கும் உந்துதலு டனும் இருக்கும். பலூன்களுக்கு மனிதன் கடவுளல்ல. ஆனால் இடையில் நின்று நூலால் வலுவாகப் பிடித் துக் கொண்டிருப்பவன். ஒவ்வொரு பலூனும் நிர்வாகத் தன்மை கொண்டது மட்டுமல்ல, தொழில் துணிவும் கொண்டதாகும். தனியான கல்தூண் போன்ற நிறுவனம்

கிறிஸ் துமஸ் மரம் போன்றது. அதன் உச்சியில் நட்சத்தி ரம் இருக்கும். அடுத்தது எல்லாம் அதற்குக் கீழ் இருக் கும்.

அனைத்து, உயரத்தில் பெறப்பட்டு உச்சியையே சார்ந்தி ருக்கும். உண்மை சுதந்திரமும், தொழில் துணிவும் உச் சியிலேயே இருக்கும்.

ஆகவே ஒரு நிறுவனத்தின் செயல்பாடுகளை ஒவ் வொன்றாகத் தனித்தனியாகக் காண்பதும், எத்தனை முடியுமோ அத்தனை துணை அமைப்புகளை உரு வாக்குவதும் சாத்தியமானதும் சரியானதும் என்றே தோன்றுகிறது. உதாரணமாக பிரிட்டிஷ் தேசிய நிலக் கரி நிறுவனம் பல்வேறு பெயர்களில் பல்வேறு பணிக ளுக்கான துணை அமைப்புகளைக் கொண்டிருப்பதில் வெற்றிகண்டுள்ளது.

மத்திய கட்டுப்பாட்டு அமைப்பு நன்றாகவும் அர்த்தப் பூர்வமாகவும் செயல்பட வேண்டுமென்றால், "சரி என் பதை நிரூபிக்கும் கொள்கை' எனப்படும் இரண்டாவது கொள்கையைப் பயன்படுத்த வேண்டும். "சரி என்பதை நிரூபிக்கும்" என்பதன் பொருள் என்னவென்றால், குற் றச் சாட்டை மறுத்து வாதிடல், உண்மையையும் சரியா னதையும் நிரூபித்தல், நியாயப்படுத்துதல், பிடித்து நிறுத் துதல் என்பதாகும். எனவே மைய அதிகார அமைப் பின் கீழ் அமைப்புகளின் மீதான முக்கிய கடமைகளில் ஒன்றை இந்த இரண்டாம் கொள்கை விளக்குகிறது. நல்ல அரசாங்கம் என்பது விதிவிலக்கான அரசாங்கம் ஆகும். விதிவிலக்கான சிலவற்றைத் தவிர துணை யூனிட் நிபத்தனையிலிருந்து காப்பாற்றப்பட்டு உயர்த் திப் பிடிக்கப்படுகிறது. எனவே விதிவிலக்கு என்பது சரி யாக விளக்கப்பட வேண்டும். அதன் மூலம் துணை நிறு

வனங்கள் திருப்திகரமாக செயல்படுகின்றனவா என்று சந்தேகமின்றி தெரிந்து கொள்ள முடியும்.

நிர்வாகம் என்பது ஒழுங்கான மனிதர்களைக் கொண்டு தன் கட்டுப்பாட்டுக்குள் ஒவ்வொன்றையும் கொண்டு வரும் போது, மகிழ்ச்சியடையும் மாசற்ற குற்றமற்ற தூய்மையான ஒன்றாகக் கொள்ளப்படுகிறது. கம்யூட் டர்களை வைத்துக் கொண்டு மிகச் சரியான அள வில் எண்ணற்ற பணிகளைச் செய்து கொண்டு அவை இருக்க முடியும். தர்க்க ரீதியில் இவை போதுமான துதான். ஆனால் உண்மை என்பது வாழ்க்கை தர்க் கத்தை விடப் பெரியது. கணக்கீட்டிற்கென்று பெரும் எண்ணிக்கையிலான விஷயங்கள் இருக்கும்போது, துணை அமைப்புகளின் மீது ஏதோ ஒன்றில் குற்றம் சாட்டப்படலாம். விதி விலக்கான அரசாங்கம் என்பது பரிகாசத்திற்காளாகும். குற்றம் சாட்டப்பட்ட யூனிட் எப் படி நிலைத்து நிற்கும் என்று எவரும் நிச்சயப்படுத்த முடி யாது.

சரி என்பதை நிரூபிக்கும் கொள்கையின் பயன்பாட் டில் லாபம் என்ற ஒன்றை மட்டுமே வர்த்தக நிறுவனத் தில் கையாள அனுமதிக்கும் அதிகார மைய அமைப் பிலிருந்து உருவாக்கப்பட்ட காரணியாகத்தான் அதுவும் இருக்கும்.

உலகில் உயர் லட்சியங்களை அபூர்வமாகவே அடைய முடியும். ஆனால் அவை அர்த்தப்பூர்வமானவை. உயர் லட்சியங்களிலிருந்து தொடங்கும் எந்தப் பயணமும் தனிப்பட்ட கவனத்துடன் விவாதிக்கப்பட்டு நியாயப் படுத்தப்பட வேண்டும் என்று அவை தெரிவிக்கின் றன. கணக்கீட்டல்களுக்கான எண்ணிக்கையை குறை வாக வைத்துக் கொள்ளவில்லை என்றால், சிறு துணை

யூனிட்டுகளில் படைப்பாற்றலும் தொழில் துணிவும் செழிக்க முடியாது.
லாபம் என்பதே முடிவான காரணியாக அலகாக இருக்கும்போது, அதனை இயந்திரத்தனமாகப் பயன் படுத்துவதென்பதை எப்போதும் அனுமதிக்கலாகாது. சில துணை யூனிட்டுகள் விதிவிலக்காக நன்றாக அமைக்கப்பட்டிருக்கும். மற்றவை மோசமாக அமைக்கப்பட்டிருக்கும். லாபம் என்பதை முதன்மையாகக் கொள்ளாத, சேவைகளைப் புரியும் துணை யூனிட்டுகளும் இருக்கும். அப்படிப்பட்டவற்றில் லாபம் என்பதை மாற்றி அமைக்க வேண்டும். அதனை நாம் வாடகை மற்றும் மானியம் என்றழைக்கலாம்.
மூன்றாவது கொள்கை அடையாளப்படுத்தும் கொள்கையாகும். ஒவ்வொரு துணை அமைப்பும் லாப நஷ்ட கணக்கையும், சொத்துப் பொறுப்பு அட்டவணையையும் (Balance Sheet) கொண்டிருக்க வேண்டும். ஒரு யூனிட் நிதி ரீதியாக லாபமுள்ளதா இல்லையா? என்பதை அறிய நிர்வாக அமைப்புக்கு அதன் லாப நஷ்ட கணக்கு போதுமானது. ஆனால் தொழில் துணிவோருக்கு சொத்துப் பொறுப்பு அட்டவணையும் வேண்டும்.
வர்த்தகம் என்பது பொருளைக் கொண்டு இயங்குகிறது. அந்தப் பொருள், லாபத்தினால் வளருகிறது. நஷ்டத்தினால் குறைகிறது. யூனிட்டின் லாபமும் நஷ்டமும் அந்த நிதியாண்டின் இறுதியில் என்னவாகும்? அவை அமைப்பின் ஒட்டுமொத்த கணக்குகளுக்குள் செல்லும். யூனிட்டைப் பொறுத்தவரை ஒன்றுமே இருக்காது. சொத்துப் பொறுப்பு அட்டவணையோ அல்லது அதனைப் போன்ற எந்தக் கணக்குமோ இல்லை என்றால் புதிய நிதியாண்டில் யூனிட் "பூஜ்யக் கணக்குடன் தொடங்கும். இது சரியான தாக இருக்க முடியாது.

ஒரு யூனிட்டின் வெற்றி என்பது யூனிட்டின் இன்னும் சுதந்திரத்திற்கான வாய்ப்புக்கும், நிதி வாய்ப்புக்கும் யூனிட்டை இட்டுச் செல்லும். அதேவேளையில் லாப அடிப்படையில் தோல்வி என்பது இயலாமைக்கும் கட்டுப்பாடுகளுக்கும் கொண்டு செல்லும். வெற்றியைப் பெறவும், தோல்வியைத் தவிர்க்கவுமே எவரும் விரும்புவர். சொத்துப்பொறுப்பு அட்டவணை நடப்பு முடிவுகளைக் கொண்டு பொருளாதாரப் பொருளை அதிகமான தாகவோ குறைவானதாகவோ காட்டும். இது பொருள் மீதான செயல்பாட்டை பொறுப்பானவர்களைத் தொடரச் செய்யும். ஆகவே அனைத்து துணை யூனிட்டுகளும் தனித் தனியான சொத்து பொறுப்பு அட்டவணையைக் கொண் டிருக்க வேண்டும். அதில் லாபம் என்பது மைய அமைப் புக்குக் கொடுக்கப்பட்ட கடனாகவும், நஷ்டம் என்பது மைய அமைப்பிலிருந்து பெறப்பட்ட கடனாகவும் இருக்கும். இது மனோரீதியாக மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும்.

நான்காவது கொள்கை "இயக்கு கொள்கை" ஆகும். மக்கள் தங்களின் இயங்கு நோக்கத்தின்படியே செயல்படுகிறார்கள் என்பது தெளிவான பொதுவான உண்மையாகும். இது பெரு நிறுவனங்களுக்கும் பொறுத்தமானது. அதன் அதிகார அமைப்பு, மறைமுக கட்டுப்பாட்டு அமைப்புகள், அவற்றின் பலவிதமான விதிமுறைகள், ஒழுங்குமுறைகள், எல்லாவற்றுக்கும் மேலாக அதன் பெரிய அளவினால் உண்டாகும் புரிந்து கொள்ள இயலாத நுட்பங்கள் ஆகிய எல்லாவற்றுக்கும் உந்தி இயங்கும் நோக்கமே பிரச்சினையாகும். இது உயர் மட்டத்தில் இல்லை. ஆனால் கீழே செல்லச் செல்ல மிகவும் சிக்கலானதாக மாறுகிறது.

பெரு முதலீடுகளையும் பெரிய அமைப்பையும் கொண்ட நவீன தொழில் சமூகம் இதனைப் பெரிதாக சிந்திப்பதில்லை. மக்கள் பணத்திற்காகத்தான் உழைக் கிறார்கள் என்று நிர்வாகம் எண்ணுகிறது. இது ஒரு கட் டம் வரையில் சரிதான். ஆனால் கடந்த வாரத்தில் ஏன் நான்கு ஷிப்ட்டுகள் வேலை செய்தாய் என ஒரு தொழி லாளியிடம் கேட்கப்பட்டபோது. "மூன்று ஷிப்டுகளின் கூலியைக் கொண்டு என் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இயலவில்லை" என்றார். இதனைக் கேட்ட ஒவ்வொருவரும் எதிலோ மாட்டிக் கொண்டது போல திகைத்து நின்றனர்.

அறிவுப்பூர்வ குழப்பம் அதற்கான விடையை கட்டாயம் அளிக்கிறது. வேலையில்லாமலும் கட்டுப்பாடு இல்லா மலும் வரைமுறையற்ற நுகர்வின் கற்பனைப் படத்தை வரையும்போது கடின உழைப்பு மற்றும் கட்டுப் பாட் டின் நன்மைகளைக் குறித்து போதிக்கிறோம். 'என்னால் அக்கறை கொள்ள முடியாது' என்ற பதில் அதிக முயற்சி களைச் செய்யும்படியான அறைகூவலுக்கு வரும் போது நாம் அதனைப் பற்றிக் குறை கூறுகிறோம்.

"ஒரு சிறுபான்மையினர் பெரும்பான்மையினருக்கான உணவை அளிக்கவும் பராமரிக்கவும் முடியும் என்றால் உற்பத்தியில் உண்மையான ஆவல் இல்லாதவர்களை உற்பத்தி நீரோட்டத்தில் வைத்திருப்பது அர்த்த மான தாக இருக்காது' என்று ஒரு விரிவுரையாளர் விளக் கியுள்ளார்.. அந்த வேலை திருப்தியளிக்கக் கூடியதாக இல்லாததால் பலருக்கும் அந்த வேலையில் விருப் பம் இல்லை. அவர்களது எண்ணம் ஊதியத்தில் மட் டுமே இருக்கிறது. பெரும்பான்மையினரைக் கருத்தில் கொண்டு வேலை என்ற தீமையை ஒழிக்க வேண்டியது என்று நமது அறிவுப்பூர்வத் தலைவர்கள் கருதினால்,

அது ஆச்சர்ய மூட்டக் கூடியதாக இருக்காது. இயங்கும் நோக்கம் நிறைவேற முடியாததாகிவிடும்.

எப்படி இருந்தபோதும், ஒரு பெரு நிறுவனத்தின் ஆரோக்கியம் என்பது, அதன் இயங்கு நோக்கத்திற் கான நியாயத்தை முடிந்த அளவில் சரியாகச் செய்வதில் இருக்கிறது. இந்த அடிப்படையில் அமையாத எந்த நிறு வனமும் வெற்றியடைவது கடினம்.

எனது ஐந்தாவது கொள்கை "வெளிப்படையான மத்திய உண்மை " என்பதாகும். ஒரு பெரு நிறுவனத்தின் உயர் நிலை நிர்வாகம் என்பது தவிர்க்க இயலாத கடினமான பணியாகும். உண்மை நிகழ்வுகளிலிருந்து தொலை வில் இருந்தாலும், நடந்த அத்தனைக்கும், நடக்காதவற் றிற்கும் உயர்நிலை நிர்வாகமே பொறுப்பு. நன்கு திட்டமி டப்பட்டு உருவாக்கப்பட்டு நிறுவப்பட்ட வசதிகள் மற்றும் ஒழுங்கு முறைகளின் அடிப்படையில் அது செயல்பட முடியும். ஆனால் புது வளர்ச்சி, புதிய படைப்புக் கருத் துக்கள் மீது அதன் பங்கு என்ன?

நாம் மீண்டும் தொடங்கிய இடத்திற்கே வருவோம். மனிதனின் உண்மையான எல்லாப் பிரச்சினைகளும் ஒழுங்கு மற்றும் சுதந்திரம் ஆகியவற்றின் முரண்களால் தோன்றுபவை. இரண்டுமே காரணங்களுடனானவை.

இதுதான் வாழ்க்கை. தர்க்கத்தை விடப் பெரியதும் முரண்களைக் கொண்டதும்தான் வாழ்க்கை. நேர நிர் வாகம், ஒழுங்கு, திட்டமிடல், முன்கூட்டிய கணிப்பு, மையக்கட்டுப்பாடு, கணக்கீடுகள், பணிவு, ஒழுக்கம், அறிவுரைகள் ஆகிய இவை ஏதுமின்றி பலனளிக்கக் கூடியனவை நடப்பதில்லை.

; நடக்க முடியாது. ஏனெனில் ஒவ்வொன்றும் பலவாறா கப் பிரியும் தன்மை உடையவை. ஒழுங்கின்மை பெரிய அளவில் இல்லை என்றால், மகிழ்ச்சி அற்றுப் போய்

விடும். தொழில் துணிவு முனைவு என்பது அறியாத, கணக்கிடப்படாதவற்றில் ஈடுபடும். படைப்புக் கற்பனை ஆற்றல் எந்த அச்சமும், பந்தயமும் இல்லாமல் அதிகார அமைப்பு பயணிக்க அஞ்சும் பாதையில் நுழையும். இது இல்லை என்றால் வாழ்க்கை என்பது போலியானதும் பொருள் அற்றதாகவும் இருக்கும்.

மைய அமைப்பால் ஒழுங்கமைப்பை எளிதாகப் பார்த்துக் கொள்ள முடியும். ஆனால் சுதந்திரத்தையும் படைப்பாற்றலையும் அதனால் பேண முடியாது. ஒழுங்கை நிறுவுவதற்கு மைய அமைப்புக்கு அதிகாரம் உண்டு. ஆனால் படைப்பாற்றல் என்று வரும்போது அதனைத் தூண்டக்கூடிய ஆற்றல் மைய அமைப்புக்கு இல்லை. அப்படி என்றால், புத்தாக்கத்திற்கும், வளர்ச்சிக்கும் உயர் நிர்வாகத்தினால் என்ன செய்ய இயலும்? இங்கேதான் "வெளிப்படையான உண்மை" என்ற கொள்கை வருகிறது. வெளிப்படையான உண்மை என்றால் சுயமான ஆதாரங்களைக் கொண்ட உண்மை, சொல்லப்பட்டவுடனே ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை என்று பொருள்படும். கண்டுபிடிக்கப்பட்ட உண்மையை அமைப்பு ஏற்றுக் கொள்ள லாம். சில ஆண்டுகளுக்கு முன்னால் 'உற்பத்தியில் கவனம் செலுத்துவது' என்பதில் பிரிட்டனின் தேசிய நிலக்கரி நிறுவனம் ஒரு முக்கிய உண்மையை ஏற்க வேண்டி வந்தது. அது உற்பத்தி குறைவான நிலக்கரி முனையங்களில் உற்பத்தியை அதிகரிப்பது என்பதைப் பற்றியதாகும். பிரச்சினை எல்லாருக்கும் தெரிந்திருந்தாலும், எதனையும் செய்ய முடியவில்லை என்பதுதான் உண்மை.

இப் பிரச்சினையில் மாற்றங்கள் வேண்டுமெனில் நிறைய வேலைகளைச் செய்தாக வேண்டும். ஒவ்வொரு முனையங்களைப்பற்றி நிறைய சிந்தனைகளும்,

திட்ட மிடலும் செய்யப்பட வேண்டும். மைய அமைப்பி லிருந்து அறிவுறுத்தல் போதனையாக வந்தால் சுதந்தி ரமும், படைப் பாற்றலும் குறைந்த அளவிலேயே இருக் கும்படியாகும். அந்த நிலையில் "பேசுவதுதானே ஒழிய ஒன்றுமே செய்வதில்லை" என்ற குற்றச்சாட்டு எழும். மைய அமைப்பிலிருந்து என்ன செய்ய வேண்டும் என்று அறிவுரை வழங்கினால், அவர்கள் தலைமையகத்தில் இருந்து கொண்டு தொழிற்சாலையை நடத்த முயல் கிறார்கள் என்ற குற்றச் சாட்டு எழும். அரசாங்கத்தின் மென்மையான அணுகு முறையோ அல்லது கடினமான முறையோ பலனை அடையாது. இந்த கட்டத்தில் இவை இரண்டுக்கும் இடையிலான நிலை தேவைப்படுகிறது. அதுதான் வெளிப்படையான உண்மை.

பிரிட்டனின் தேசிய நிலக்கரி நிறுவனம் உற்பத்தியில் கவனம் செலுத்த முடிவு செய்தபோது, புதிய நிலக்கரி முனையங்களை சில குறிப்பிட்ட குறைந்தபட்ச உற்பத்தி நிலைகளுடன் திறக்க முடிவு செய்தது. இந்த நிலை களை நிறைவேற்ற இயலாத நிலக்கரி முனையங்கள் பதிவு செய்யப்பட்டன. அந்தப் பதிவேட்டில் மூன்று கேள் விகள் கேட்கப்பட்டிருந்தன.

*தேவையான குறைந்தபட்ச அளவை அடைய முடியாத படி இந்தக் குறிப்பிட்ட நிலக்கரி முனையம் ஏன் நிறுவப்ப டவில்லை ?

*இது ஏன் கையாளப்படவேண்டும்?

*இந்த நிலக்கரி முனையத்தின் திட்டமிடப்பட்ட தோரா யமான லாபம் என்ன?

இதுதான் வெளிப்படையான உண்மையை சரியாகவும் நேர்மையாகவும் பயன்படுத்தும் விதமாக இருந்தது. அது நல்ல மந்திரம் போன்ற பயனையும் தந்தது. அச்ச மூட்டி எச்சரிக்கை செய்வதற்கு அப்பால் மைய அமைப்பு

சென்றது. அதுவும் கீழ்மட்ட அளவில் சுதந்திரத்தையும் படைப்பாற்றலையும் குறைக்காமல் நடைபெற்றது.

“புள்ளியியலின் தாக்கம்” என்பதிலிருந்து இன்னு மொரு வெளிப்படையான நடுநிலை உண்மையைக் கொண்டு வரலாம். பொதுவாக புள்ளியியல் விபரங்கள் அவற்றை சேகரிப்பவரின் பயன்பாட்டுக்காக சேகரிக் கப்படும் தகவல் களாகும். ஆனால் புள்ளியியல் தாக்கம் என்பது வேறுபட்ட பயன்பாட்டைக் கொண்டது. அதா வது விபரங்களைத் தருபவர்களை விவரங்களை உரு வாக்க வைப்பதன் மூலம் சேகரிப்பது. இது நிலக்கரித் தொழிலில் குறிப்பாக பாதுகாப்பு பற்றிய துறையில் பயன் படுகிறது.

ஒப்புக்கொள்ளப்பட்ட நடுநிலை உண்மையைக் கண்டு பிடிப்பது குறிப்பிடத்தக்க ஒரு சாதனைதான். போதிப் பதும், அறிவுரை கூறுவதும் எளிது. கீழ்மட்ட அமைப் புகளின் சுதந்திரத்தையும் பொறுப்பையும் பாதிக்காத வகையில் படைப்பாக்கக் கருத்துக்களை உயர்மட்ட அமைப்பால் செயலாக்குவது என்பது மிகவும் கடினமா னது.

பெரு நிறுவனங்களுக்கான ஐந்து கொள்கைகளைக் கூறியுள்ளேன். அவை பொருத்தமானவை என்று நம் புகிறேன். அவற்றுக்குப் பெயரும் இட்டுள்ளேன். இவற் றின் பயன் என்ன? இவை வெறும் அறிவுப்பூர்வ விளை யாட்டா? சிலர் அப்படி எண்ணக் கூடும். "பல ஆண்டு களாக நான் செயல்படுத்த எண்ணியவற்றுக்கு நீங்கள் வார்த்தைகளைக் கொடுத்துள்ளீர்கள்” என்று எண் ணுபவர்களுக்காக இந்த அத்தியாயம் எழுதப்பட்டது. பெரு நிறுவனங்களால் உண்டாகும் பிரச்சினைகளுடன் ஆண்டுக் கணக்கில் போராடும் பலர் நம்மில் உண்டு. பிரச்சினைகள் இன்னும் மோசமாகிக் கொண்டே இருக்

கின்றன. இவற்றுடன் போராடுவதற்கு நமக்கு தத்துவமும் கொள்கைகளும் தேவைப்படுகின்றன. ஆனால் இந்தக் கொள்கைகள் எங்கிருந்து வரும்? நன்கு கவனிப்பதன் மூலமும், செயல் வடிவான புரிதல்கள் மூலமே அவற்றை உருவாக்க முடியும்.

தத்துவத்தையும் கொள்கையையும் கொண்டு செய்படும் மிகச்சிறந்த முறை சீனத்தலைவர் மாசேதுங்கிடமிருந்து வருகிறது. "உழைத்துச் செயல்படும் மக்களிடம் செல்லுங்கள். அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள். பின்னர் அவர்களுடைய அனுபவங்களை கொள்கைகளாகவும், தத்துவங்களாகவும் உருவாக்குங்கள். மீண்டும் உழைக்கும் மக்களிடம் திரும்பி, அந்தக் கொள்கைகளையும், தத்துவங்களையும் கொண்டு அவர்கள் பிரச்சினைகளைத் தீர்த்து சுதந்திரத்தையும் மகிழ்ச்சியையும் அடையும்படி செய்யுங்கள்" என்று தெளிவாக சொல்லியிருக்கிறார்.

.........................................

## பார்வை குறைந்த சோஷலிஸம்

சோஷலிஸம் என்ற சமத்துவக் கொள்கை கோட்பாடுகளையும் அதன் நடைமுறை உண்மைகளையும் நன்கு கவனித்தபோது, சோஷலிஸம் பொருளாதார ரீதியில் பயனற்ற நெறிகளின் மீது கட்டப்பட்டு மதப் பொருளாதாரத்தை வெல்லும் சாத்தியங்களையும் உருவாக்குகி

றது என்ற முடிவுக்கே என்னை இட்டுச் செல்கிறது. கொண்டாடப்பட்டு ஆராதிக் கப்படும் பெரும் பணக்கா ரர்களால் ஆளப்படும் சமூகம், சமூகமயமாக்கலினால் எந்தப் பயனையும் அடைய முடியாது. அந்த சமூகம் இல் லாமல் சமூக மயமாக்கலும் பயன்பெற முடியாது.
எனவே முன்னேறிய சமூகங்களின் பல சோஷலிஸ்டு கள் - அவர்களுக்குத் தெரிகிறதோ இல்லையோ பொரு ளாதார மதத்தின் பக்தர்களாக இருக்கும் அவர்கள், தேசிய மயமாக்கல் என்பது தனித்ததாக இல்லையோ என்று திகைக்கிறார்கள். இதில் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமில்லை. தனி உரிமை யாளர்களை ஒழித்தது மிகப் பெரிய பலன்களைத் தரவில்லை. சரியான ஒவ் வொன்றும் இன்னும் பொறுமையுடனும் அர்ப்பணிப்புட னும் செய்யப்பட வேண்டும். சமூக உயர் நோக்கங்களு டன் மாறுபட்ட சூழலிலும் தொடர்ந்து வளரும் நிதிய மைப்பு பல தடுமாற்ற நிலைகளையும், தோன்றக்கூடிய முரண்பாடுகளையும் உருவாக்கி நிர்வாகத்துக்கு கூடு தல் சுமையை ஏற்றுவிடுகிறது.

வேகமான பொருளாதார வளர்ச்சி, உயர்ந்த திறன், நன் றாக திட்டமிடல் ஆகியவை தேசிய மயமாக்கலின் என் றால், இவை கிட்டாமல் ஏமாற்றமே கடைசியில் கிடைக் கிறது.. தனியார் நிறுவனங்களின் பேராசை மூலம் முழுப் பொருளாதாரத்தையும் கொண்டு செல்வது உலகின் உருவத்தை மாற்றிவிடும். இது அசாதாரணமான ஆற் றலையும் சக்தியினையும் காட்டுகிறது. இதை காரல் மார்க்ஸ் நன்றாகவே அறிந்திருந்தார்.
"எங்கு பூர்ஷ்வாக்கள் வலிமையைப் பெறுகிறார்களோ, அங்கெல்லாம் பிரபுத்துவம், வம்சத்தலைமை, தெய்வ மாகக் கொண்டாடப்படும் தலைமை முறை... ஆகிய அனைத்துக்கும் முடிவைக் கொண்டு வந்து, சுயநலம்

என்பதைத் தவிர அனைத்துவித மனிதர்களுக்கிடையி லான உறவுகளையும் இல்லாதாக்குகிறார்கள்".
" உற்பத்திக்கான எல்லா வழிகளையும் பூர்ஷ்வாக்கள் வேகமாக வளர்ப்பதன் மூலமும், நன்கு கட்டியமைக்கப் பட்ட தகவல் தொடர்புகள் மூலமும் அனைத்து தேசங் களையும், ஏன் மிகவும் காட்டுமிராண்டித்தனமாக இருப் பவர்களையும் கூட ஒரு பண்பாட்டிற்குக் கொண்டு வரு கிறார்கள்". (இது கம்யூனிஸ்ட் அறிக்கை)
தனியார் நிறுவனங்களின் வலிமை அதன் எளிமையான அமைப்பில் இருக்கிறது. ஒட்டு மொத்த வாழ்க்கையை யும் லாபம் என்ற ஒன்றாக குறுக்க முடியும் என்று அது சொல்கிறது. ஒரு வியாபாரி தனிப்பட்ட முறையில் உண்மை , அழகு போன்றவைகளிலும் ஈடுபாடு கொண் டிருக்கலாம். ஆனால் வியாபாரி என்ற நிலையில் அவர் "லாபம் என்ற ஒன்றிலேயே கவனம் செலுதுகிறார்.
இதன் அடிப்படையில், சந்தை என்ற கருத்தாக்கத்தில் தனியார் நிறுவனம் மிகக் கச்சிதமாகப் பொருந்துகிறது. இதைத்தான் "தனியார்மயத்தையும் பொறுப்பற்ற தன் மையையும் நிறுவனமாக்கல்" என்று குறிப்பிட்டிருந் தேன். தரம் என்ற ஒன்றை பலி கொடுத்து 'அளவு', 'எண் ணிக்கை'

என்பதை மட்டுமே கொண்டுள்ள நவீன போக்கிலும் இது மிகச் சரியாகப் பொருந்துகிறது. தனியார் நிறுவனம் எதை உற்பத்தி செய்கிறது என்பதைக் காட்டிலும் தனது உற்பத்தி யிலிருந்து எவ்வளவு லாபமீட்டுகிறது என்பதி லேயே அதிக கவனம் கொள்கிறது என்பது கவனிக்கத் தக்கது.
ஆயிரக்கணக்கான அம்சங்களில் ஒன்றை மட்டும், ஒன்றே ஒன்றை மட்டும் உண்மையென சரியானதென நீங்கள் குறைத்துக் கொள்ளும் ஒவ்வொன்றும் மிகக்

தெளிவாகத் தெரியும். லாபத்தைத் தருவதைச் செய்ய வேண்டுமென உங்களுக்குத் தெரியும். நஷ்டத்தைத் தருவதை தவிர்க்க வேண்டும் என்பதும் உங்களுக்குத் தெரியும். வெற்றியையும், தோல்வியையும் அளவிட சரி யான அளவுகோலும் அதுவே. ஒரு குறிப்பிட்ட செயல் சமூக நலனுக்கானதா என்று எவரும் கேள்வி கேட்டு விஷயத்தை மறைக்காமலிருக்கட்டும். அந்தச் செயல் பலனளிக்கிறதா என்பதை மட்டும் கண்டுபிடியுங்கள். அதனைவிடச் சிறந்த பலனைத் தரக்கூடிய வேறு ஏதும் உண்டா என்று ஆராயுங்கள். அப்படி ஏதும் எதுவும் இருக்குமாயின் அதனை எடுத்துக் கொள்ளுங்கள்.

வெற்றி பெற்ற வியாபாரிகள், பண்டைய வழக்கத்தைப் பின்பற்றுபவர்களாக இருப்பது ஒரு விபத்து போன்ற அல்ல. அவர்கள் வாழும் உலகம் எல்லா அம்சங்க ளையும் குறைத்துக் கொண்டே சென்று லாபம் என்ற ஒன்றை மட்டும் கொள்ளும் தொன்மையாலானது. அவர்கள் இந்த எளிய உலக அமைப்பில் பொருந்தி, அதனுடன் திருப்தியடைகிறார்கள். உண்மையான உலகம் அவர்கள் பொருந்திப் போன நிலையிலிருந்து வேறொரு நிலைக்கு அவர்களைத் திருப்பும்போது, அவர்களுக்கான தத்துவக் கோட்பாடுகள் அவர்களிடம் இல்லை எனில் அவர்கள் உதவிகளேதுமற்று மிகவும் குழம்பி விடுகிறார்கள். கணிக்க முடியாத அபாயங்களுக் கும், சக்திகளுக்கும் அவர்கள் ஆட்பட்டதாகவும், அழிவு வரப்போவதாகவும் முன்கூட்டியே உணர்கிறார்கள்.

இதன் மூலம், வாழ்க்கையின் அர்த்தம் பயன் குறித்த அவர்களது பார்வையின் அடிப்படையில் எடுத்த செயல் களின் முடிவுகள் மதிப்பற்ற இருக்கும். பல விஷயங்க ளும், தனி உரிமை இல்லை என்றால் வெற்றி பெறாது என்பது முன்பே தீர்மானிக்கப்பட்ட ஒன்று. எடுத்துக்

காட்டாக வியாபாரம். அனைத்தும் வெற்றி பெற்ற 'நுகர் வோரை ஏமாற்றுதல்; மறைமுகமான சலுகை, கட்டாய தொழிலாளர் முறை...' போன்ற அபாயகரமான விளக் கங்கள் இருக்கும்.:

அறிவியல் தத்துவக் கொள்கையின் வெற்றியால் உரு வாக்கப்பட்ட நவீன முறையில் அது பொருந்துகிறது என்பதே தனியார் நிறுவனக் கொள்கையின் பலம். அறிவியலின் பலமும் கூட பல அம்சங்களிலிருந்து ஒரு சில அம்சங்களுக்குக் குறுக்கப்பட்டதுதான். அதா வது தரம் என்பதிலிருந்து அளவு என்ற ஒன்றுக்குக் குறுக்கப்பட்டது போல. ஆனால் 19 -ம் நூற்றாண்டின் சக்திமிக்க உண்மை அம்சங்கள் கைவிடப்படவேண்டி யவை. ஏனெனில் பொருந்தாத பல உண்மைகளை அது கொண்டிருக்கிறது. எனவே வியாபார வாழ்க்கை யின் மீதான “லாபம்” சார்ந்த வலிமையான கவனம், மனிதனின் உண்மையான தேவைகளுக்கு நியாயமான தாக இல்லை என்பதால் அது மாற்றி அமைக்கப்பட வேண்டியதாகிறது. இதனை முன்னெடுத்துச் சென்றது சோஷலிஸ்டுகளின் வரலாற்றுச் சாதனையாகும். இதன் விளைவாக இன்றைய முதலாளித்துவ வாதிகளின் விருப்பமிகு சொல்லாடல் "இப்போது நாமெல்லோரும் சோஷலிஸ்டுகளே" என்பதாக இருக்கிறது.

அதாவது, தனது எல்லா செயல்பாடுகளில் இறுதிக் குறிக்கோள் லாபம்தான் என்பதை முதலாளித்துவவா திகள் இன்று மறுக்க விரும்புகிறார்கள். "எங்கள் தொழி லாளர்களுக்கு நாங்கள் செய்ய வேண்டியதையெல்லாம் நாங்கள் செய்கிறோம், நாங்கள் கிராமப்புறப் பகுதிகளை அழகாக வைக்க முயல்கிறோம், நல்ல பலன் அளிக்கக் கூடிய ஆராய்ச்சிகளில் நாங்கள் ஈடுபடுகிறோம்" என் றெல்லாம் சொல்கிறார்கள். இவையெல்லாம் எல்லோ

ருக்கும் தெரிந்தவைதான். சில நேரங்களில் சரியாகவும், சில நேரங்களில் அப்படி இல்லாமலும் இருக்கும் இவை யெல்லாம் மிகவும் பிரபலமானவைதான்.

இங்கே நமது கவலை என்னவென்றால், தனியார் நிறு வனம் என்பது பழமையான முறை, அதாவது லாபத்தை நோக்கமாகக் கொண்ட முறை. வெற்றி அல்லது தோல்வி என்ற அளவு கோலுடன் இதன் நோக்கங்க ளும் பலன்களும் மிகவும் எளிமையாகின்றன.

'புதிய முறை' நிறைய நோக்கங்களைக் கொண்டதா கக் கொள்வோம். அது பணத்தை ஈட்டும் ஒரு அம் சத்தை மட்டுமல்லாது, முழுவாழ்க்கையையுமே கருத் தில் கொள்ள முயல்கிறது. எனவே வெற்றி அல்லது தோல்வி என்ற அளவுகோலுடன் இதன் நோக்கங்களும் பலன்களும் மிகவும் எளிமையானவைகளாக இருப்ப தில்லை. அப்படி என்றால், "புதிய முறையிலான" பெரு முதலீடுகளைக் கொண்ட தனியார் நிறுவனம் பொதுத் துறை நிறுவனங்களில் இருந்து ஒரு விதத்தில் மட் டுமே வேறுபடுகின்றது. அதாவது தனது பங்குதாரர்க ளுக்கு உழைப்பு காரணமாக பெறாத வருமானத்தையும் அளிக்கிறது.

முதலாளித்துவவாதிகள் இரண்டு வழிகளிலும் அத னைப் பெற முடியாது. "நாம் இப்போது சோஷலிஸ் டுகள்" என்று அவர்களால் சொல்ல முடியாது. அதே நேரத்தில் "சோஷலிஸம்" சாத்தியமாகாது என்றும் கூறிக் கொண்டிருக்க முடியாது. “லாபத்தை உண்டாக்குவது அல்லாத மற்ற நோக்கங்களில் அவர்கள் செயல்படு வார்களேயானால், லாபம் அளிப்பவை அல்லாத மற்ற வற்றை அனுமதித்தால், உற்பத்தித்திறன் என்பதை நிர் வகிப்பது இயலாததென அவர்களால்வாதிட முடியாது. "பணம் ஈட்டல்" என்ற ஒழுங்கற்ற அளவுகோலின்றி

அவர்களால் செயல்பட முடியுமெனில், தேசிய மயமாக் கப்பட்ட தொழில் துறையாலும் அது முடியும்.

இன்னொருவகையில், இவை எல்லாம் சரியானவை அல்ல என்றால், தனியார் நிறுவனம் லாபத்திற்கா கவே செயல்படுமே அல்லாமல், வேறொன்றிற்காக வும் செயல்படாது. மற்ற நோக்கங்களெல்லாவற்றையுமே லாப நோக்கின் அடிப்படையிலே அமைக்கும் என்றால், அந்த நோக்கங்கள் தனது லாபத்தைக் கொண்டு எத னைச் செய்ய வேண்டு விருப்பத்தின்படியே அமையும். இவ்வகையில் தனியார் நிறுவனங்களே எளிமையின் ஆற்றலைக் கொண்டுள்ளதாக கோரும். இந்த நிலை யில் பொதுத்துறை நிறுவனங்கள் ஒரே நேரத்தில் பல் வேறு நோக்கங்களுடன் செயல்பட வேண்டியிருப்பதால், அது திறனற்றதாகிவிடும். இந்த நிலையில் சோஷலிஸ் டுகளின் நிலைப்பாடு எப்போதும் போலவே பொருளா தார ரீதியான பயன்களைக் கொண்டிருக்காது. தனிப்பட் டவர்களின் பேராசையின் அடிப்படையிலேயே எல்லா செயல்பாடுகளும் அமையும் என்றும் அது வாழ்க்கை யைத் தனது எளிமையான அமைப்பால் தரம் தாழ்த்தி விடும் என்றும் சோஷலிஸ்டுகள் கூறுவார்கள்.

பொதுவான உரிமை மறுக்கப்படுவது, தனியார் உரி மையை முழுமையாக ஊர்ஜிதப் படுத்துவதாகும். இது பற்றுறுதி கொண்ட கம்யூனிஸ்டுக்கு எதிரான மிகக் கடு மையான ஒரு நிலையாகும். ஆனால் எல்லாவித பேர பிமானமுள்ளவைகளும் அறிவுப்பூர்வமான விதத்தில் பலவீன மானவையாக இருக்கும்போது, நிச்சயமில்லாத நோக்கங்களை அடையப் பயன்படுத்தும் வழிமுறைக ளைக் கொண்ட அபிமானம் மிகவும் பலவீனமான மன நிலையைக் கொண்டதாக இருக்கும்.

முன்பே சொல்லியபடி, பொருளாதார வாழ்வின் முழு மையான பிரச்சினை எதிர்முனைகளை சரிப்படுத்த வேண்டி நிற்கும் தேவை ஆகும். சரியாகச் சொல்லப் போனால் எதிர்முனைகளை சரிப்படுத்த முடியாததா கும். முழுமையான பெரும் பொருளாதாரம் திட்டமிடுத லையும் சுதந்திரத்தையும் கொண்டிருப்பது எப்போதும் தேவையானது. அது பலவீனமான உயிரற்ற ஒத்துப்போ தல் மூலமானதாக இருக்கக்கூடாது. ஆனால் இரண்டிற் குமான வையை சரியாக அங்கீகரிப்பதன் அடிப்படை யிலானதாக இருக்க வேண்டும். அதேபோன்று நுண் பொருளியலில் (தனியார் நிறுவனங்களில்) நிர்வாகப் பொறுப்பும் அதிகாரமும் இருக்க வேண்டும். நிர்வாக முடிவுகளில் தொழிலாளர்களின் ஜனநாயக ரீதியிலான பங்களிப்பும் இருக்க வேண்டும். இது எதிர் எதி ரான இரண்டையும் அரை மனதுடன் சரிப்படுத்துவ தல்ல. மாறாக, அவை இரண்டையும் அங்கீகரிப்பதாகும். இரண்டு எதிர் விஷயங்களில் ஒன்றின் மீக, உதாரண மாக திட்டமிடுதல் மீது கவனக்குவிப்பு செய்வது ஸ்டாலி னிஸத்தை உருவாக்கும். அதே வேளையில் மற்ற ஒன் றில் சிறப்புக் கவனம் செலுத்துவது குழப்பத்தை உண் டாக்கும். இது கடிகாரத்தின் பெண்டுலத்தின் ஊசலாட் டம் போன்றதுதான். இருந்தும், இந்தப் பதில் ஒன்றே சாத்தியமான பதிலல்ல. கருணையும் அன்பும் நிறைந்த அறிவுப் பூர்வமான பெரு முயற்சி ஒரு சமூகத்தை, ஒரு கால அளவிலாவது, இரண்டு எதிரான விஷயங்களை யும் தரம் தாழ்த்தாமல் நடுநிலையில் வைத்திருக்க முடி யும்.

இந்த விஷயம் வியாபார வாழ்க்கையின் நோக்கங்க ளுக்கும் பொருந்தும். எதிரானவற்றில் ஒன்றான தனி யார் நிறுவனத்தின் "பழைய முறை" என்பது அதன் எளிய

அமைப்புக்காகவும் இலகுவான அளவிடுதலுக்காகவும் வேண்டியதாக இருக்கிறது. 'பழைய முறை' லாபம் என்ற ஒன்றிற்கான சரியான வரைமுறையைக் கொண்டது. தனியார் துறைக்கு எதிரானது இலக்கணமான பொதுத் துறை நிறுவன அமைப்பு. இதற்குப் பெரும் புரிந்துணர்வு டன், பரந்த மனிதத்தன்மையுடன் கூடிய பொருளாதார ரீதியான செயல்பாடுகள் வேண்டும். முதலாவது (தனி யார் நிறுவனம்) மனிதனின் கௌரவத்தைக் குலைக்கக் கூடியது. இரண்டாவது (பொதுத்துறை) குழப்பமான திற னற்ற ஒரு நிலைக்குக் கொண்டு செல்வது.

இந்த வகைப் பிரச்சினைகளுக்கு இறுதித் தீர்வு என்ற ஒன்று இல்லை. ஆனால் இரண்டையும் தொடர்ந்து கவ னிப்பதன் மூலம் அப்போதைக்கப்போதையான தீர்வு உண்டு.

உடமை என்பது, பொதுவாக இருந்தாலும் தனியா ராக இருந்தாலும் ஒரு அமைப்பு முறைதான். தனது திட்டத்திற்குள்ளாகவே தனது நோக்கங்களை அடை யும்படி அது அமைந்திருக்கவில்லை. இந்த வகையில் உடைமைத் துவம் தீர்மானமான பதிலைக் கொண்டி ருக்கவில்லை என்பது சரியே. ஆனால் தனியார் உட மைத்துவம் என்பதில் அதன் நோக்கங்களைத் தேர்ந் தெடுப்பதில் மிகவும் வரை யறைக்குட்பட்டது என்பதை அறிந்து அங்கீகரிப்பது மிகவும் அவசியம். ஏனெனில் அது லாபத்தைத் தேடும்படி நிர்பந்திக்கப்பட்டு சுயநல மிக்க குறுகிய பார்வையைக் கொண்டதாக இருக்கிறது. பொதுத்துறை உரிமைத்துவம் நோக்கங்களைத் தேர்ந் தெடுப்பதில் முழு சுதந்திரத்தை அளிக்கிறது. ஆகவே தேர்ந்தெடுக்கும் எந்தத் தேவைக்கும் அதனைப் பயன் படுத்த முடியும். தனியார் உடமைத்துவம் என்ற சாதனம், எதற்கு அதனைப் பயன்படுத்த முடியுமோ அதனை நிர்

ணயிக்கையில் பொதுத்துறை சாதனத்தின் பயன் பாட்டின் முடிவு நிர்ணயமில்லாததாகவும் மிகவும் கவனத்துடன் தேர்ந்து எடுக்கக் கூடியதாகவும் உள்ளது.
எனவே முதலாளித்துவ உற்பத்தி போன்று அளவான குறுகியதாக தேசியமயமாக்கப்பட்ட தொழில் துறையின் நோக்கங்கள் இருக்குமேயானால் பொதுத்துறை உடைமைத் துவம் என்பது வலிமையற்றதாகி விடுகிறது.
தேசிய மயமாக்கலுக்கு எதிரானவர்களின் திட்டத்தில் இரண்டு வித நகர்வுகள் உள்ளன. தேசியமயமாக்கலில் பங்கு கொண்டுள்ள மக்களின் நோக்கம் உற்பத்தி, விநியோகம் மற்றும் லாபத்தை மாற்றிக் கொள்வதுதான் என்பதும், மக்களை இதனை ஏற்றுக் கொள்ள வைப்பதுமே முதல் நகர்வு. இந்த நிலையிலிருந்து செய்யப்படும் எந்த செயலும் ஒவ்வொருவருக்கும் தாங்க முடியாத சுமையை அளித்து, ஏற்படக்கூடிய எந்த தவறுகளுக்கும் ஒவ்வொரு வரையும் நேரடியாகப் பொறுப்பாளியாக்குகிறது. இது வெற்றிகரமான நகர்வாகும். இரண்டாவது நகர்வு, தேசிய மயமாக்கப்பட்ட தொழில் துறையின் புழக்கங்களில் சிறப்பானதாக ஏதும் இல்லை என்பதால், சிறப்பான சமூகத் திற்கான வளர்ச்சிக்கான எந்த உறுதியும் இல்லை என்று சொல்கிறது. இன்னும் செய்யப்படும் எந்த தேசியமய மாக்கலும் கடுமையான மாறாத பிடிவாதத்தைக் கொண்ட தாகவும், சலிப்படைந்த அரசியல்வாதிகளால் பறிக்கப்பட்ட தாகவும், கற்பிக்கப்படாத, இயலாத அறிவுப்பூர்வமான சந்தேகமாகவே அது இருக்கும்.
இந்த வகையான தேசிய மயமாக்கலுக்கெதிரான திட்டமிட்ட பிரச்சாரம் சோஷலிஸ சிந்தனையில் எந்த வித தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும்.

தொடக்ககால சோஷலிஸ உள்தூண்டல் உணர்விலோ அல்லது தேசிய மயமாக்கல் செய்யப்பட்ட விதத்திலோ இதற்கான காரணங்கள் இல்லை. மாறாக, சோஷலிஸ்டுகள் தங்கள் மீது கொண்ட பார்வைக் குறைபாடே காரணம். தங்களது பார்வையை மீட்டாலொழிய அவர்கள் மீள முடியாது. தேசிய மயமாக்கல் தனது செயல்பாட்டை முழுமையாக்க முடியாது.

இங்கு கவனிக்கப்படவேண்டியது கலாச்சாரமே தவிர பொருளாதாரமல்ல, வாழும்தரம் அல்ல, வாழ்க்கைத் தரமே. பொருளாதாரமும் வாழும் தரமும், சரிசெய்யப்பட்ட திட்டமிடுதல் மற்றும் வரி அமைப்பு முறையைக் கொண்ட முதலாளித்துவ முறையால் கவனித்துக் கொள்ளப்பட முடியும். ஆனால் கலாச்சாரம் மற்றும் வாழ்க்கையின் தரத்தை அது போன்ற முறையால் கலப்படமடையவே செய்ய முடியும்.

முதலாளிகளை, முதலாளித்துவத்தை வெளியேற்றுவதற்கென்று மட்டுமல்லாமல், நல்ல ஜனநாயக முறையில் அமைந்த தொழில் நிர்வாக அமைப்புமுறை, மனிதத் தன்மை, இயந்திரங்களை அளவாகப் பயன்படுத்துதல் மற்றும் புத்திசாலித்தனமான மனித ஆற்றல் ஆகியவற்றை தேசிய மயமாக்கப்பட்ட தொழில்களில் சோஷலிஸ்டுகள் வலியுறுத்த வேண்டும். இதனை அவர்களால் செய்ய யும் என்றால் எதிர்காலம் அவர்கள் கைகளில்தான்.... செய்ய இயலவில்லை எனில் மனித உழைப்புக்கு எதையும் அவர்களால் அளிக்க முடியாது.

..............................

## ஒட்டுண்ணி முதலாளிகள்

சச்சரவு, பேராசை, அகங்காரம் ... போன்ற மனித இயல் பிலமைந்த ... சமூகத் தீமைகளைத் தவிர்ப்பதற்கு எந்த இயந்திரத்தாலும், அமைப்பு முறையின் எந்த மாற் றத்தினாலும் முடியாது என்பது தெளிவானது. என்ன செய்யலாம் எனில், அந்த குணங்களை ஊக்குவிக் காத ஒரு சூழ்நிலையை உருவாக்கலாம். மனிதர்கள் தங்களது கொள்கைகளுடன் வாழ்கிறார்கள் என்பதற்கு எந்த உத்தரவாதத்தையும் அது அளிக்காது. அவர்கள் வாழும்படியான கொள்கைகளினால் சமூக அமைப்பை உருவாக்குதலையே அது செய்ய முடியும். அது அவர்க ளது செயல்களைக் கட்டுப்படுத்தாது. அதனால் அவர் களது மனதைச் செலுத்தும்படியான ஒரு முனையைத் தரமுடியும். சிலவற்றைத் தவிர, அவர்கள் மனதின்படியே அவர்களது செயல்களும் இருக்கும்.

மேற்கண்டவை பல பத்தாண்டுகளுக்கு முன்னால் ஆர். ஹெச். டாவ்னியால் எழுதப்பட்டவை. இந்த வார்த் தைகள் அவற்றின் முக்கியத்துவத்தை இழந்து விட வில்லை. ஆனால் நாம் இப்போது கவலைப்படும் சமூ கத்தின் ஆரோக்கியமற்ற நிலையுடன், மிக அவசரமாக கவனிக்கப்பட வேண்டியதான, மனித இனம் தொடர்ந்து வாழ்வதற்கு சுற்றுச் சூழல் சீர் கேட்டினால் நேரிட்டுள்ள பேரபாயத்தை டாவ்னியின் வார்த்தைகள் குறிப்பிட வில்லை. இதுவரை கண்ட அத்தியாயங்களில் பேசப் பட்ட அத்தனை பிரச்சினைகளும் 'அமைப்பா அல்லது இயந்திரமா?' என்ற கேள் வியை வைத்திக்கிருக்கி றது. இருந்தபோதும், எந்த அமைப்பே. அல்லது இயந் திரமோ அல்லது பொருள் கொள்கையோ அல்லது கோட்பாடோ தனத காலில் நிற்க முடியாது. அது எந்த

மாறுபாடும் இல்ல மனிதனின் வாழ்க்கையின் அர்த்தம் மற்றும் பொன், பொருள் பற்றிய மெய் விளக்க இய லின் அடித்தளத்தில் கட்டப்பட்டள்ளது. நான் பொருளா தார மதம் குறித்து பேசியிருக்கிறேன். பொருள்களைப் பெற்றிருப்பதை பெரிதம் ஆராதிக்கும் வாழ்க்கைத்தரம் என்ற நுகர்வு குறித்தும், நம் முன்னோர்களுக்கு ஆடம் பர சாதனமாக இருந்தவை நமக்க அவசியமானவைக ளாக மாறிப் போன இயற்கையான போக்கு குறித்தும் பேசியிருக்கிறேன்.

அமைப்புகள் என்பது, மனிதனின் அடிப்படை எண் ணங்களின் உருவம் என்பதை விட அதிகமாகவோ குறைவாகவோ இருந்ததில்லை . நவீன தனியார் நிறு வன அமைப்பு என்பது தனிமனித வளத்தை நோக் கியதாக இருப்பதே பொருள் சார்ந்த வளர்ச்சிக்கான பொதுவான ஆதாரமாக இருக்கிறது. நவீன தனியார் நிறுவன அமைப்பு மனித உணர்வுத் தூண்டல்களாக பேராசை மற்றும் பொறாமை ஆகியவற்றையே தனது நோக்க சக்தியாகக் கொண்டிருக்கிறது. ஆனால் அது கீன்ஸின் பொருளாதார மேலாண்மை மூலம் சில வலு வான குறைபாடுகளை மிக எளிதாக சமாளிக்கிறது. மறு விநியோக வரியமைப்பின் ஒரு பகுதியையும், தொழிற் சங்கங்களின் எதிர்த்து போராடும் சக்தி( counter vailing power) யும் சமாளிக்கிறது.

நாம் எதிர் கொள்ள வேண்டியிருக்கிற பிரச்சினை களை அதனைப் போன்ற ஒரு முறையால் சரியாகக் கையாள முடியுமா? பதில் தன்னுள்ளே ஆதாரங்களைக் கொண்டிருக்கிறது. அதாவது பேராசையும் பொறா மையும் தொடர்ந்த வரையற்ற பொருளாதார வளர்ச் சியை வேண்டி நிற்கின்றன. ஆகவே தனியார் அமைப் பின் முக்கியமான இயல்பையும், புதிய சூழ்நிலைக்குப்

பொருந்தக்கூடிய மாற்று அமைப்பின்உருவாக்கத்தை யும் குறித்து நாம் ஆய்வு செய்ய வேண்டி இருக்கிறது.
தனியார் நிறுவனத்தின் சாரம் உற்பத்தி, வினியோகம் மற்றும் மாற்றிக் கொள்வது ஆகியவை மீதான தனி யார் உடமைத்துவம் ஆகும். ஆகவே, தனியார் நிறுவன அமைப்பை விமர்சிப்பவர்கள் பொதுத்துறை அல்லது கூட்டு சேர்ந்த உடமைத்துவத்திற்காக வாதிடுவார்கள். அப்படி செய்வதில் பலவற்றில் வெற்றியும் கண்டிருக் கிறார்கள். எல்லாவற்றுக்கும் முன்பு, 'உடைமை அல்லது சொத்து' என்பதன் பொருள் பற்றி காண்போம்.
தனியார் சொத்து என்பதைப் பொறுத்தவரையில்,
* படைப்பாக்கத்திற்கு உதவியாகும் சொத்து
* இதற்கு மாற்றான சொத்து
என்பனவற்றின் அடிப்படை வேறுபாடுதான் முதலாதா கும். முதலில் சொல்லப்பட்டதில் இயல்பான ஆரோக்கி யமான விஷயம் உண்டு. அதாவது உழைக்கும் உடை மையாளரின் தனிச்சொத்து. இரண்டாவதைப் பொறுத்த வரையில் இயல்புக்கு மாறான ஆரோக்கியமற்ற விஷயம் உண்டு. அதாவது மற்றவர்களின் உழைப்பில் ஒட்டுண் ணியாக உண்டு உறிஞ்சி வாழும் தனியார் சொத்தின் உடமையாளர். இந்த அடிப்படை வேற்றுமையை டாவ் னியின் இந்தக் கருத்தில் காணலாம். "குறிப்பிடப்படும் சொத்து என்ன வகையானது எப்படி இருக்கிறது என்ப தைப் பற்றிக் குறிப்பிடாமல் தனியார் சொத்து பற்றியோ, அதற்கு எதிராகவோ குற்றம் சாட்டுவது ஒன்றுமேயில் லாதது."
"வேலை செய்வதிலிருந்து ஒதுங்கி, தொழில் துறையின் கொள்கையை களங்கப்படுத்துவதே தனியார் உடை மைத்துவம். சில சோஷலிஸ்டுகள் எண்ணுவது போல் நிலத்திலும், மூலதனத்திலும் தனியார் உடைமைத்து

வம் என்பது பழைமைவாதிகள் தங்கள் எல்லா சொத்துக்களையும் மர்மமான வகையில் முதலீடு செய்வது போல முட்டாள் தனமானது."

முதல் வகையில் சொல்லப்பட்ட சொத்தைக் கொண்டு இயங்கும் தனியார் நிறுவனம் சிறு முதலீட்டிலான தனிபட்டவருடையதான மற்றும் உள்ளூர் நிறுவனம் அதற்கு அதிகமான சமூகப் பொறுப்புகள் கிடையாது. அதனுடைய நுகர்வோருக்கான பொறுப்புகள், நுகர்வோரையே சார்ந்தவை. உள்ளூர் சட்டங்களும், தொழிலாளர் யூனியன்களின் கண்காணிப்பும் அதன் தொழிலாளிகளைப் பாதுகாக்கக் கூடியவை. அந்த நிறுவனங்களின் சமூகப் பயன்பாடு மிகப் பெரியதாக இருப்பினும், இத்தைகைய சிறு முதலீட்டு நிறுவனங்களிலிருந்து தனியாருக்கான அதிர்ஷ்டகரமான லாபங்கள் இருக்காது.

தனியார் உடைமைத்துவத்தில் முதலீட்டு அளவு என்பது முடிவான ஒன்று என்பது வெளிப்படையாக உடனடியாகத் தெரிவது. சிறு முதலீட்டிலிருந்து நடுத்தர முதலீட்டுக்கு நாம் மாறும்போது உடைமைத்துவத்திற்கும் வேலைக்குமான தொடர்பு பலவீனமாகிவிடுகிறது. தனியார் நிறுவனம் உள்ளூரில் முக்கியத்துவம் வாய்ந்த சமூகக் காரணியாகவும், ஒருவருக்கென இல்லாததாகவும் மாறி விடுகிறது. அது உள்ளூர் முக்கியத்துவத்தை விட அதிகமான முக்கியத்துவம் கொண்டதாகிவிடுகிறது என்றும் எண்ணிக் கொள்ளலாம். தனியார் சொத்து என்ற கருத்து அதிகமான முறையில் தவறாக வழிநடத்துவதாகிவிடுகிறது.

* சம்பளம் வாங்கும் மேலாளர்களைக் கொண்ட ஒரு உரிமையாளர் தனது வேலையைச் செய்யக்கூடியவராக இருக்க வேண்டியதில்லை. அவர் கட்டாயம் வேலை

செய்ய வேண்டிய உரிமையாளர் என்ற நிலை ஒழிகிறது. நியாயமான சம்பளம் என்பதைவிடக் கூடுதலாக லாபத்தை அவர் பெறுவது சுரண்டலாகி விடுகிறது. வெளியிலிருந்து கடனாகப் பெறப்பட்ட மூலதனத்திற்கான பணப்பயனைவிட அதிகமாக அவரது மூலதனத்திற்குப் பணப்பயன் பெறுவதும் சுரண்டலாகிவிடுகிறது.

*அதிக லாபம் என்பது அதிர்ஷ்ட வசத்தினாலோ அல்லது உரிமையாளரினால் அல்லாத ஒட்டு மொத்த நிறுவனத்தினாலோ இருக்கும். அந்த லாபம் உரிமையாளருக்கு மட்டும் செல்வது நியாயமற்றதும், சமூக அளவில் பாரபட்சமானதாகவும் இருக்கும். அந்த லாபம் நிறுவனத்தின் அனைத்து உறுப்பினர்களாலும் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும். அந்த லாபம் தொழிலிலேயே மீண்டும் போடப்பட்டால், அது உரிமையாளரின் வளத்தில் சேராமல் எல்லோருக்கும் சொந்தமான முதலீடாக இருக்க வேண்டும்.

*. தனி ஒருவருக்குத் தொடர்பில்லாதது என்ற நிலைக்குக் கொண்டு செல்லும் நடுத்தர முதலீட்டுத் தொழில், கட்டுப்படுத்துதல் சம்பந்தமான புதிய கேள்விகளைத் தருகிறது. உழைக்கும் உரிமையாளரைக் கொண்ட குடும்பப் பண்பான சிறு முதலீட்டு நிறுவனத்தின் மீதான அவர்களது கட்டுப்பாடு கூட அவ்வளவு மோசமான பிரச்சினை அல்ல. நிறுவனத்தின் முதலீடு குறிப்பிட்ட அளவுக்கு மேல் அதிகரிக்கும் போது, மனித கௌரவத்துக்கும், நல்ல திறனுக்கும் ஒவ்வாததாகிறது. இந்த சூழலில் நிறுவனத்தின் அனைத்து உறுப்பினர் களையும் ஓரளவு நிர்வாகத்தில் பங்கு பெறும்படி செய்ய வேண்டியதிருக்கிறது.

* நிறுவனம் அமைந்துள்ள இடத்தில் அதன் சமூக முக்கி

யத்துவமும், வலிமையும் அதன் விளைவுகளும் நிறுவனத்தின் உறுப்பினர்களையும் தாண்டி உடைமைத்துவத்தின் சமூக மயமாக்கலைக் கோருகிறது. நிறுவனத்தின் லாபத்தின் ஒரு பங்கை பொது அல்லது நிறுவனத்தின் வெளியில் உள்ள அறங்காவலர்களைக் கொண்ட தொண்டு நிறுவனங்களுக்கு அளிக்கப்படுவதன் மூலம் இந்த சமூகமயமாக்கல் செயல்படுத்தலாம்.

இங்கிலாந்திலும் இன்னபிற முதலாளித்துவ நாடுகளிலும் இப்படிச் செயல்படுவதன் மூலம் தனியார் உடைத்துவத்துவத்தில் உள்ள மறுக்கப்படக் கூடிய, பிளவுகளை ஏற்படுத்தக்கூடிய பிரச்சினைகள் சரி செய்யப்படுகின்றன. இங்கிலாந்தின் நார்த்தாம்டன்ஷையரிலுள்ள ஸ்காட்பேடர் அண்ட் கம்பெனி என்ற நிறுவனம் அப்படியான ஒன்று. அவர்களின் அனுபவங்கள் சோதனை முயற்சிகள் ஆகியவற்றை பின்பு காணலாம்.

பெருமுதலீட்டு நிறுவனங்கள் என்று வரும் போக உரிமையாளர் என்பது மடத்தனமானதாகி விடும் எவ்வகையிலும் சொத்து என்பது தனியாருடையதாக இருக்க முடியாது, இருக்காது. இதனைப் பற்றியும் டாவ்னி சொல்லியிருக்கிறார்.

"அத்தகைய சொத்தை செயலற்ற மந்தமான சொத்து என்று அழைக்கலாம் அல்லது பொருளாசையால் அமைந்த சொத்து, சுரண்டலுக்கான சொத்து, அதிகாரத்திற்கான சொத்து என அழைக்கலாம். அது உரிமையாளர் தனது குடும்ப அமைப்பை நிர்வகிக்க தனது வேலையைத் தொடர உதவும் சொத்திலிருந்து மாறுபட்டது. இதனைப் பொருளாதார நிபுணர்கள் சொத்து" என்றே அழைப்பார்களா என்பது கேள்விக்குரியது. ஏனெனில் அது உரிமையாளர் தனது உழைப்பிலிருந்து சாதாரணமாகப் பெறக் கூடியதற்கு எதிராக இருக்கிறது.

பெரு முதலீட்டு நிறுவனங்களின் தனியார் உரிமை என்பது, தொழில் முனைவோர், கைவினைஞர்கள் அல்லது சிறு நில உரிமையாளர்களின் சிறு சொத்து போன்றது. அல்ல. டாவ்னி, "புரட்சி அதனை அழித்தது வரை பிரெஞ்சு ஏழை விவசாயிகளின், மக்களின் உற்பத்தியை கொள்ளையடித்தது போன்றது அது" என்று சொல்கிறார்.

"உரிமைப்பணம், பிரத்தியேக லாப உரிமை, தள வாடகை, எல்லாவற்றின் அமித உபரி வருவாய் ஆகிய உரிமைகள் சொத்துக்களாகும். சொத்து என்பதைக் காக்கும் விவாதங்களின் மீதான விமர்சனம் அவைகளுக்கு மிகவும் நாசகரமானது. நிறுவனம் என்பதன் பொருள், உழைப்பாளி தனது உழைப்பிற்கேற்ற பலனைப் பெறுவதை உறுதிப் படுத்துவதன் மூலம் தொழிலை ஊக்கப்படுத்துவது என்று சொல்லப்படுகிறது. ஒரு மனிதன் தனது உழைப்பால் ஈட்டிய சொத்தை காப்பதன் முக்கியத்துவத்துடன், மற்றவர்களின் உழைப்பால் சேர்ந்த சொத்தை அப்படி இல்லாமல் செய்வதும் முக்கியமானதே".

**எல்லாவற்றின் சாரம்**

* சிறு முதலீட்டு நிறுவனத்தில் தனி உரிமையாளர் - தனி உடமைத்துவம் என்பது இயல்பான, பலனளிக்கக் கூடியது, மற்றும் நியாயமானது.

* நடுத்தர முதலீட்டிலான தொழிலில் தனி உடமைத்துவம் அல்லது தனி உரிமையாளர் என்பது அவசியமற்றது. சொத்து என்ற கருத்து பலனற்றதாகவும், நியாய மற்றதாகவும் கறைபடிந்ததாகவும் ஆகிவிடுகிறது. ஒரு உரிமையாளரோ அல்லது சிறு குழுவோ உரிமையாளராக இருக்கும் பட்சத்தில், உண்மையில் உழைக்கும் பாட்டா

ளிகளின் பெரிய கூட்டத்திற்கு தாமாகவே முன் வந்து லாபப் பலன்களை அளிக்க வேண்டும்.

*பெருமுதலீட்டு நிறுவனங்களில், தனி உரிமையாளர் அல்லது தனி உடமைத்துவம் என்பது உழைக்காத உரி மையாளர்களை ஊக்குவித்து மற்றவர்களின் உழைப் பின்மீது ஒட்டுண்ணிகளாக வாழ்வதாகும். இது நியா யமற்றது மட்டுமல்ல, நிறுவனத்திற்குள் உறவு களை பாதிப்பதுமாகும். மீண்டும் டாவ்னி எனவும் கூறுகிறார்:

"குழுவின் ஒவ்வொருவரும் ஏதேனும் பலனை எடுக்க வேண்டி பொதுவான முதலீட்டில் பங்களிப்பை இடும் போது, தம் பங்குகள் குறித்து அவர்கள் சச்சரவிடலாம். மொத்தமும் தெரிந்து அவர்களின் கோரிக்கைகளும் அனுமதிக்கப்படும்போது, அதனைப் பற்றி அவர்கள் சச்சர விடக் கூடும். ஆனால் தொழிலில் ஒன்றையுமே இடாதவர் கள் எதையும் பெறும் கோரிக்கைகள் அனும திக்கப் படுவதில்லை ".

பெரு முதலீட்டு நிறுவனங்களில் தனியார் உரிமை உட மைத்துவம் என்பதைச் செயல்படுத்த பல முறைகள் இருக்கின்றன. அவற்றுள் மிகப் பிரதானமான பொதுவா கக் சொல்லப்படும் ஒன்று 'தேசியமயமாக்கல்.'

ஆனால் தேசியமயம் என்ற வார்த்தை மிக மகிழ்ச்சி யான ஒன்றாகவோ பல சந்தேகங்களை உருவாக்கக்க தாகவோ இல்லை. சரியாகச் சொல்வதானால் பொதுநு கர்வோரைக் கொண்ட ஒரு அமைப்பின் உரிமை என்று பொருள்படும். பொதுச் சேவையாற்றக் கூடிய ஒரு நிறு வனத்தின் சாத்தியமான வகைகளைச் சொல்வதற்குப் பொருத்தமான வார்த்தை எந்த மொழியிலும் இல்லை.

ஆகையால், 'தேசியமயமாக்கல்' என்ற சுவை ஏதுமற்ற ஒரு பெரும் வார்த்தை தவிர்க்க முடியாமல் பயன்படுகி றது. அரசின் குறிப்பிட்ட இயக்குநர்கள் மற்றும் அதிகா

ரிகளைக் கொண்டு ஒரு முறையில் நிர்வகிக்கப்படுவ தற்கு இந்த வார்த்தை பயன்பட்டுவருகிறது. பொது மக்க ளுக்கான சேவை என்றில்லாத தற்போது செயல்பட்டுக் கொண்டி ருக்கும் முறையையே விரும்புபவர்கள், பங்கு தாரர்களுக்காக தேசிய மயமாக்கம் என்பது திறனற்றது என்று கூறி தேசிய மயமாக்கலைத் தாக்குகிறார்கள்.

பெருமளவு பெரிய தொழில்கள் பிரிட்டனில் தேசியமய மாக்கப்பட்டுள்ளன. அவை தொழிலின் தரம் என்பது அதனை நடத்தும் மக்களைப் பொறுத்ததே அல்லாமல் வருகைதராத உரிமையாளர்களைப் பொறுத்தது அல்ல என்பதைக் காட்டிக் கொண்டிருக்கின்றன. தேசிய மய மாக் கப்பட்ட தொழில்கள் அவைகளின் சாதனைக ளுடன் வெற்றிகரமாக இருந்தாலும் சில குழுக்களால் வெறுக்கப் படுகின்றன. இவற்றிற்கு எதிரான வதந்திகள் அவற்றில் பங்குதாரராக இல்லாத மக்களையும் தவறாக வழி நடத்து கின்றன. அவர்கள் இன்னும் நிறைய தெரிந்து கொள்ள வேண்டும். தனியார் நிறுவன செய் தித் தொடர்பாளர்கள் தேசியமயமாக்கப்பட்ட தொழில் களின் உத்தரவாதத்தைக் கோருவதில் களைப்படை வதேயில்லை. பொதுமக்களின் நலன்களுக்காகவே உள்ள இந்த தேசிய மயமாக்கப்பட்ட தொழில்க ளின் உத்தரவாதமும் பொறுப்பும் நன்கு வளர்ந்துள்ள அதே வேளையில் லாபத்தை மட்டுமே நோக்கமாகக் கொண்ட தனியார் நிறுவனம், நடைமுறையில் இருக்க முடியாது என்பது எதிர்பார்ப்புக்கு எதிரான ஒரு சிந்த னையாக இருக்கலாம்.

உடைமைத்துவம் என்பது ஒரு உரிமையல்ல. மாறாக அது பல உரிமைகளைக் கொண்டது. 'தேசிய மயமாக் கல்' என்பது வெறுமனே இந்த உரிமைகளை A யிடமி ருந்து Bக்கு மாற்றிக்கொடுப்பதல்ல. அதாவது, தனி நபர்

களிடமிருந்து அரசுக்கு. அந்த ஒட்டுமொத்த தனியாரிட மிருந்த உரிமைகளை எங்கே வைக்கலாம் என்பதைப் பற்றிய கச்சிதமான வாய்ப்புகளை உருவாக்குவது பற்றிய தாகும் அது. ஆகவே டாவ்னி சொல்கிறா: "தேசிய மய மாக்கல் என்பது அரசியல் சாசனத்தை உருவாக்கும் பிரச்சினை என்று. தனியார் சொத்து என்பதற்கான சட்ட ரீதியான உரிமை நீக்கப்படும்போது, அனைத்தும் ஒவ் வொன்றையும் புதிதாக அமைக்கும் சுதந்திரம் அமைகி றது. ஒன்றுபடுத்த, கலைக்க, மையப்படுத்த, பரவலாக்க, அதிகாரத்தை குவிக்க அல்லது இல்லாமலாக்க, பெரிய யூனிட்டுகளையோ சிறிய யூனிட்டுகளையோ உரு வாக்க, ஒன்றுபடுத்தப்பட்ட ஒரு முறையை உருவாக்க அல்லது கூட்டமைப்பை உருவாக்க அல்லது அமைப்பு என்ற ஒன்றையே இல்லாமலாக்க என்ற வகைகளில் புதிதாக அமைக்கும் சுதந்திரம் கிடைக்கும்.

இப்படி டாவ்னி கூறுகிறார்:

பொது உடைமைத்துவத்திற்கான எதிர்ப்பு, மைய அதி கார குவிப்பிற்கு எதிரான எதிர்ப்புதான். ஆனால் மைய அதிகார குவியலுக்கான தீர்வு, தனியார்களின் கைகளி லுள்ள செயலற்ற சொத்து அல்ல. மாறாக அதிகாரம் பர வலாக்கப் பட்ட பொதுச் சொத்தின் உரிமைத்துவம்.

தேசியமயம் என்பது தனிச் சொத்துரிமையை ஒழிக்கி றது. ஆனால் உரிமைத்துவம் - உடமைத்துவம் என்று இருக்கும் வார்த்தையின் அர்த்தத்தில் எதனையும். உருவாக்குவதில்லை. அதனைப் போன்றே அசல் உரி மைகளின் உரிமைகள் என்னவாக மாறும் என்றும், அது யார் செயல்படுத்துவார்கள் என்பதையும் நிர்ணயிப்ப தில்லை. எனவே முன்னர் இருந்த ஏற்பாடுகளுக்குலை புதிய வாய்ப்புகளை உருவாக்கும் தேவையை ஏற்படுத் துகிறது. 'தேசியமயமாக்கல்' மூலம் சாத்தியமான புதிய

ஏற்பாடுகள், ஒவ்வொன்றின் தேவைக்கும் பொரு மான தாக இருக்க வேண்டும். பொதுச் சேவைகளைச் செய் யும் தேசிய மயமாக்கப்பட்ட நிறுவனங்களுக்கான ஏராள மான கொள்கைகள் கடைபிடிக்கப்படவேண்டும்.

முதலாவதாக, அரசியலையும் வியாபாரத்தையும் கலப் பது அபாயகரமானது. இத்தகைய கலப்பு, திறனற்ற வியாபாரத்தையும், ஊழல் மலிந்த அரசியலையும் உரு வாக்கும். எனவே தேசிய மயமாக்கல் சட்டம் மற்றும் உரிமைகளை வரையறுத்து மதிப்பிட்டு மிகுந்த எச்சரிக் கையுடன் குறிப்பாக அரசியல் சார்ந்தவற்றில் செய்யப் பட வேண்டும். உதாரணமாக அமைச்சர் அல்லது அர சில் அங்கம் வகிக்கும் எவரும், எதுவும் வியாபாரத்தில், வியாபாரம் சார்ந்தவற்றில், வியாபார அமைப்புகளில் பங்கு பெறுவது பற்றி மிகவும் கவனத்துடன் வரையறை யும், நிர்ணயமும் செய்யப்பட வேண்டும். நியமன விஷயத் தில் இது முக்கியமாகக் கடைபிடிக்கப்பட வேண்டியதா கும்.

இரண்டாவதாக, பொதுச் சேவை புரியும் தேசியமய மாக் கப்பட்ட நிறுவனங்கள் வாழ்வதற்காக உண்பது, உண் பதற்காக வாழ்வதல்ல - என்ற முறையில் லாபத்தைக் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். சேமிப்பையும் உருவாக்க வேண்டும். அவை தமது லாபத்தை ஒருவ ருக்கும், ஏன் அரசுக்கும் கூட அளிக்கக் கூடாது. மேலதி கமான சேமிப்பு வரும்படியான மேலதிக லாபம் வரக்கூ டிய நிலையில், அதனைக் குறைக்கும் முகமாக விலைக ளைக் குறைக்க வேண்டும்.

மூன்றாவது, தேசியமயமாக்கப்பட்ட நிறுவனங்கள் "எல்லா வகையிலும் மக்கள் நலன்களுக்காக செயல் படுவதையே" சட்டப் பூர்வமான கடமையாகக் கொள்ள வேண்டும். "மக்கள் நலன்" என்ற வார்த்தைகளுக்கான

பொருளை கட்டமைத்துக் கொள்வதை அந்தந்த நிறுவனங்களிடமே விட்டுவிட வேண்டும். தேசியமயமாக்கப்பட்ட நிறுவனங் களை அவற்றின் லாபத்தின் அடிப்படையிலேயே நோக்க வேண்டும் என்று ஏதோ தனியார் நிறுவனங்களின் பங்குதாரர்கள் சொல்வது போல பொது மக்கள் நலன் அரசிடம் மட்டுமே' என்ற வகையில் காட்டுவது பயனற்றது. பிரிட்டனில் இந்தக் கருத்து தேசியமயமாக்கப்பட்ட தொழில்களை எப்படி நடத்தவேண்டும் என்ற கொள்கையைத் தகர்த்து, லாபத்துக்காக செயல்படும்படி எதிர்பார்க்கப்பட்டு, அரசின் தலையீட்டின்படி எப்படி செய்ய வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டது. லாப நோக்கம் மட்டுமே கொண்டு செயல்படுவதென்பது, தேசியமயமாக்கப்பட்ட தொழில் களின் நிர்வாகத்திற்கு உரித்தான பண்புகளை அழிக்கும்.

"எல்லா வகையிலும் மக்கள் நலனுக்காக சேவை புரிவது" என்றால், நிர்வாகத்தின் தினசரி நடத்தைகளை நடத்துவதுதான். இதனைக் கட்டுப்படுத்தவும் கூடாது, கட்டுப்படுத்தவும் முடியாது. குறைகளை அரசின் நிதியால் சரி செய்யப்பட மட்டும் அனுமதிக்க வேண்டும். லாபம் ஈட்டுவது மற்றும் பொது நலனுக்கு சேவை செய்வது என்ற இரண்டிற்கும் பிணக்குகள் தோன்றும் என்பதை மறுக்க முடியாது. தேசியமயமாக்கப்பட்ட தொழில்கள் தனியாரால் நிர்வகிக்கப்படும் நிறுவனங்களை விட அதிகமான கவனிப்பை வேண்டி நிற்கின்றன என்பதே இதன் பொருள். அதிக தேவைகளைக் கோராமல் ஒரு சிறந்த சமுதாயத்தை அமைக்க முடியும் என்பது சுய முரண் மட்டுமல்லாது ஆதாரமற்ற வீண் கனவுமாகும்.

நான்காவது, தேசியமயமாக்கப்பட்ட தொழில்களில் "பொது நலன் என்பதைக் காக்கவும், அங்கீகரிக்கவும், தொழிலாளர்கள், உள்ளூர் சமுதாயத்தினர், நுகர்வோர்

மற்றும் போட்டியாளர்கள் ஆகியோருக்குப் பொருந்தும் படியான ஏற்பாடுகளை, முறைகளைச் செய்ய வேண்டியது அவசியம். இதனை நல்ல முறையில் செய்திட பரிசோதன முயற்சிகள் தேவைப்படும். நிர்வாகத்தின் திறனை பாதிக்காமல் இந்த நலன்களைக் காப்பது என்பது பெரும் பிரச்சினையே.

இறுதியாக தேசியமயமாக்கலின் பெரிய அபாயம், அதிகாரப்பரவலுக்கு திட்டவியலாளர்கள் அடிமையாவது தான். பொதுவாக பெரு நிறுவனங்களைவிடசிறு நிறுவனங்களே தேர்ந்தெடுக்கத்தக்கவை. தேசியமயமாக்கலின் மூலம் பெரு நிறுவனங்களை இப்போதும் செய்து கொண்டே இருப்பதைப் போல உருவாக்குவதை விட அதிகாரத்தையும் பொறுப்பையும் பரவலாக்கும் சிறிய அமைப்புகளை உருவாக்குவது சிறந்தது. பகுதி தானியங்கும் சிறிய யூனிட்டுகளை முதலில் உருவாக்கி, அவற்றின் சில குறிப்பிட்ட செயல்பாடுகளை உயர்மட்ட அளவில் மையப் படுத்துவது. அதுவும் நன்கு இணைந்து செயல்படுவதற்குத் தேவையெனில் மட்டும் உருவாக்குவது சிறந்தது.

இதை ஆர்.ஹெச். டாவ்னியைவிட சரியாகப் பார்த்து புரிந்து கொண்டவர்கள் யாருமில்லை. எனவே அவருடைய பொருத்தமான இன்னுமொரு மேற்கோளுடன் இந்த பகுதியை நிறைவு செய்யலாம்.

"ஆகவே சமூக அமைப்பு அதன் உரிமைகளுக்குப் பதிலாக அதன் செயல்பாட்டின் அடிப்படையில் மூன்று விஷயங்களை உணர்த்துகிறது. முதலாவதாக, உடமையாளருக்கான உரிமைகள் செயல்பட்டு சேவை புரிவதாக இருந்தால் இருக்கட்டும். அப்படி இல்லை எனில் உடமையாளர் களின் உரிமைகள் ரத்து செய்யப்படும். இரண்டாவதாக, உற்பத்தியாளர்கள் எந்த சமுதா

யத்தினருக்காக உற்பத்தி செய்கிறார்களோ அவர்களு டன் நேரடித் தொடர்பில் இருக்க வேண்டும். எனவே அவர்களின் பொறுப்பு இப் போதுள்ளதைப் போன்று சேவைகளில் அல்லது பலன்களின் மீது மட்டுமே கவனம் கொண்ட பங்குதாரர்களைப் போன்றதாக அல் லாமல், வெளிப்படையானதாகவும். தவறே இல்லாததா கவும் இருக்கும். மூன்றாவதாக "சேவைகளைச் செய் யும் அமைப்புகளின் மீதே பராமரிக்கும் கடமை இருக் கும். எனவே அந்த அமைப்புகள் தமது கடமையைச் செய்வதில் சரியாக உறுதியாகச் செயல்படுகின்றனவா என்று கண்காணிப்பதிலும் கண்டிப்பதிலும் நுகர்வோ ரின் பங்கு இருக்கும்படியாக அமைந்திருக்கும்".

..........................

## எல்லோருக்கும் செல்வம்

தனியாரின் வளமையையும் பொது மக்களின் குறைக ளையும் பற்றி விரிவாக பேசியிருக்கிறார் ஜே.ஜே. கால் பிரெய்த். உலகின் பணக்கார நாடான அமெரிக்காவைப் பற்றி அவர் பேசியுள்ளது குறிப்பிடத்தக்கது. அந்தப் பணக்கார நாட்டில் எப்படி குறைபாடுடைய அழுக் கான பொதுமக்கள் இருக்க முடியும்? அதுவும் உள்

நாட்டு மொத்த உற்பத்தியை அந்தந்த நாடுகளின் மக்கள் தொகையோடு ஒப்பிடுகையில் (மிகக் குறைவான உள்நாட்டு மொத்த உற்பத்தியுள்ள நாடுகளை விடவும்) அங்கு எப்படி பொதுமக்கள் குறைகளுடன் அழுக்கானவர்களாக இருக்க முடியும்? தற்போதைய அமெரிக்காவின் தற்போதைய பொருளாதார வளர்ச்சி குறைகளுள்ள பொதுமக்களிடமிருந்து குறைகளைக் களைய முடியவில்லை என்றால், இன்னும் வளர்ச்சியடைவது என்பது அதனை எப்படிக் களைய முடியும்? நீக்கமுடியும்? மிக அதிக வளர்ச்சி விகிதத்தை உடைய நாடுகள் மிகவும் சுற்றுச் சூழல் சீர்கேடடைந்துள்ள நிலையில் திகைக்க வைத்து அதிர்ச்சியூட்டக் கூடிய நிலையில் குறைகளைக் கொண்டுள்ள மக்களைக் கொண்டிருப்பதை எப்படி விளக்க முடியும்? இங்கிலாந்தின் மொத்த உள்நாட்டு உற்பத்தி 5 சதவீதம் வளருமானால் இங்கிலாந்தின் தேவைகளை நிறைவேற்ற அந்தக் கூடுதல் தொகையை முழுவதுமாகவோ அல்லது அதில் சற்றுக் குறைத்தோ செலவு செய்ய முடியுமா?

உறுதியாக முடியாது, தனியாருக்குச் சொந்தமாகவுள்ள வளம் தனியாரிடமே இருக்கும். பொது அமைப்புகள் அவற்றுக்கான வருமானம் என்ற ஒன்றைப் பெறவில்லை இல்லை. குடிமக்கள் தங்களுக்கு உரிமையானது என்று எண்ணக்கூடிய பணத்தை பிழிந்தெடுக்கும் அமைப்பாக பொது அதிகார அமைப்புகள் குறுகிப் போயுள்ளன. இது வரி வசூலிப்பவர்கள் மற்றும் குடிமகன்களிடையே முடிவற்ற ஒரு யுத்தத்தைக் கொண்டிருப்பதில் வியப்பில்லை. இந்த போரில் அதிக சம்பளம் பெறும் வரித்துறை நிபுணர்களின் உதவியுடன் பணக்காரர்கள் ஏழைகளைவிட நன்றாக செயல்படுகிறார்கள். வரிவசூல் முறையிலுள்ள ஓட்டைகளை

அடைக்கும் முயற்சியாக வரிவசூல் சட்டங்கள் முன்னெப்போதையும் விட அதிக சிக்கலானவையாக மாறியுள்ளன. எனவே வரி சம்பந்தமாக அறிவுரை வழங்கும் நிபுணர்களின் வருவாயும் பெரிதாகிறது. வரி செலுத்துபவர்கள் ஈட்டிய பணம் அவர்களிடமிருந்து எடுத்துச் செல்லப்படுவதாக எண்ணும் வரி செலுத்துபவர்கள் சாத்தியமான வகையில் வரி செலுத்தாமலிருக்க முயற்சிப்ப தோடல்லாமல் (சட்டத்திற்குப்புறம்பான வரி ஏய்ப்பைக் குறிப்பிடவில்லை) பொதுச் செலவுத்திட்டத்தில் வெட்டு கொண்டு வருவதற்கு ஆதரவாகத் தொடர்ந்து குரல் எழுப்புகிறார்கள். "அதிகமாக வரி விதிப்பது அதிக பொதுச் செலவிற்கே" என்பது தேர்தலில் ஓட்டுக்களைப் பெறும் ஒரு முழக்கமாக இருக்காது. தனியார் வளத்திற்கும் பொதுமக்கள் குறைகளுக்கும் (ஏழ்மைக்கும்) இடையில் உள்ள வித்தியாசம் எவ்வளவுதான் பளிச்சென்று தெரிந்தாலும் அந்த முழக்கம் ஓட்டுக்களைக் கவரும் ஒன்றாக இருக்க முடியாது.

உற்பத்தியிலான உடமைத்துவ அமைப்பில் பொதுச் செலவு என்பதன் தேவை அங்கீகரிக்கப்படாதவரை இந்த இரண்டுவித மன நிலையிலான ஊசலாட்டத்திலிருந்து வெளியே வர முடியாது

மனநோய் மையங்கள், சிறைச்சாலை மற்றும் இவற்றைப் போன்ற பல்வேறு அமைப்புகள் போன்ற மோசமான குறைபாடுகள் அல்ல இந்த பொது மக்கள் குறைபாடு. இது பிரச்சினையின் எதிர்ப்பக்கமே. 'உள்கட்டமைப்பு' என்பதன் மீது செலவிடப்படும் பெருந்தொகையிலிருந்து பிரச்சினையின் நேர்மறையான பக்கம் எழுகிறது. மேலும் அப்படி செலவு செய்யப்படுவதன் பலன்கள் பெரிய அளவில் தனியார் நிறுவனங்களுக்கே இலவசமாகப் போகின்றன. இந்த விஷயம் உள்கட்ட

மைப்பு சரியாக உருவாகாத அல்லது உள்கட்டமைப்பு வளர்ச்சி தேக்கமடைந்துள்ள ஏழ்மை நிரம்பிய பகுதிகளில் நிறுவனங்களை, தொழில்களை நடத்தியே இருக்காத எவருக்கும் மிக நன்றாகத் தெரியும். அவரால் மலிவான போக்குவரத்து வழிகளையோ அல்லது மலிவான மற்ற பொதுச் சேவைகளையோ சார்ந்திருக்க முடியாது. கட்டமைப்பு வசதி நன்கு அமையப்பெற்றுள்ள பகுதிகளில் அவரால் இந்த வசதிகளை இலவசமாகவோ அல்லது மிகக் குறைந்த செலவிலோ பெற முடியும்போது உள்கட்டமைப்பு வளர்ச்சியுறாத பகுதிகளில் அவர் தன் பணத்தை செலவு செய்ய வேண்டிவரும். பயிற்சி பெற்ற தொழிலாளர்களை அவரால் வேலைக்கு அமர்த்த முடியாது. ஆட்களைத் எடுத்து அவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியிருக்கும். இப்படிப்பட்ட பல பிரச்சினைகளும் இருக்கும். ஒரு சமூகத்தின் ஏழையோ அல்லது பணக்கார சமூகமோ, கல்வி, மருத்துவம் மற்றும் ஆராய்ச்சி நிலையங்கள் தனியார் நிறுவனங்களுக்கு கணக்கிட இயலாத பலன்களை, அந்த நிறுவனங்கள் நேரடியாகப் பணம் செலுத்தாத நிலையிலும் அளிக்கின்றன.

ஆனால் இந்த நிறுவனங்கள் 'வரி' என்பதன் மூலம் மறைமுகமாகப் பணம் செலுத்த வேண்டியவையாய் இருக்கின்றன. முன்பே குறிப்பிட்டபடி, இந்த வரி செலுத்துதலை இந்த நிறுவனங்கள் எதிர்ப்பைக் காட்டியோ, ஆட்சே பித்தோ, எதிர் இயக்கம் நடத்தியோதிறமையான வழிகளில் தவிர்க்கின்றன. தனியார் நிறுவனங்கள் உள்கட்டமைப்பு மூலம் பெற்ற பலன்களுக்காக செலுத்த வேண்டிய தொகை களை அந்த நிறுவனங்களின் லாபங்களிலிருந்து நேரடி யாகப் பெற முடியாது, அந்த நிறுவனங்களின் ஒப்புதலின் அடிப்படையிலே

தான் பொது அதிகார அமைப்பு பெற முடியும் என்பது தர்க்க ரீதியாக சரி இல்லாததும், பெரும் சிக்கலுக்கும், புரிந்து கொள்ள இயலாத ஒரு நிலைக்கும் இட்டுச் செல் லும். தனது லாபங்கள் அத்தனையும் தனது சொந்த முயற்சியால் பெறப்பட்டவை என்றும், அந்த லாபத்தின் கணிசமான தொகை வரியாக பொது அதிகார அமைப் பிற்கு செலுத்தப்பட்டுவிட்டது என்றும் கூறலாம். இது உண்மையல்ல. உண்மை என்னவெனில் தனியார் நிறு வனங்களுக்காகும் செலவின் பெருந்தொகை பொது அதிகார அமைப்பால் உள்கட்டமைப்புக்காக செய்யப் படும் செலவிலேயே நடக்கிறது. தனியார் நிறுவனங்க ளின் லாபம் என்பது அது இயல்பாக அடையக்கூடிய லாபத்தை விட அதிகமாக சொல்லப்படுகிறது. உற்பத்தி யிலான உட மைத்துவ அமைப்பு தனியார் நிறுவனத்தின் லாபத்திற்காக செய்யப்படும் பொதுச் செலவை அங்கீக ரிக்காதவரை உண்மையான நிலையை பிரதிபலிப்பதற் கான நடைமுறை வழியே இல்லை.

இங்கே விமர்சிக்கப்பட்டுள்ள இரண்டு விஷயங்களை யும் சமாளிக்கும்படி உடைமைத்துவ அமைப்பு எப்படி மாற முடியும் என்பதற்கு நான் இரண்டு உதாரணங்க ளைக் கூறுகிறேன்.

ஸ்காட் பேடர் காமன்வெல்த்

1920-ல் ஸ்காட் பேடர் கம்பெனி லிமிடெட் என்ற நிறு வனத்தைத் எர்னஸ்ட் பேடர் தனது 30வது வயதில் தொடங்கினார். 31 ஆண்டுகள் கழித்து பல முயற் சிகள், போர்க்காலத்தைய கஷ்டங்கள் எல்லாவற்றை யும் கடந்து, 161 தொழிலாளர்களுடன், வியாபாரத்தில் இட்ட ஆண்டு விற்று முதல் தொகை 625,000 பவுண் டுடன் நிகர லாபம் 72,000 பவுண்டு என்ற ரீதியில் ஒரு நடுத்தர முதலீட்டு நிறுவனமாக ஆனது. கிட்டத்தட்ட

ஒன்றுமே இல்லை என்ற ரீதியில் துவங்கப்பட்ட இந்தத் தொழில் மூலம் அவரும் அவரது குடும்பத்தினரும் வளம் மிக்கவர்களாக ஆனார்கள். பாலியெஸ்டர் பிசின் உற்பத்தியில் முன்னோடி நிறுவனமாகவும், மற்ற சில நவீனப் பொருட்களை தயாரிப்பவர்களாகவும் அவரது நிறுவனம் ஆனது. அவர் தொழிலாளியாக இளமையில் இருந்த போது, தொழிலால் என்ற நிலையின் கூறுகள் மற்றும் அம்சங்கள் குறித்து ஆழமான அதிருப்தியடைந்திருந்தார். 'தொழிலாளர் சந்தை' மற்றும் "கூலி அமைப்பு " ஆகியவற்றில் அவர் மிகவும் ஆத்திரம் அடைந்தார். அதிலும் குறிப்பாக, மூலதனத்தை மனிதர்கள் ஆள்வதை விட மனிதர்களை மூலதனம் ஆள்வதன் மீது மிகவும் ஆத்திரமடைந்தார். அவர் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கும் நிலையில், தனது வெற்றியும் வளமும் தன்னால் மட்டும் அடை யப்பெற்றவை அல்ல, தான் தனது தொழிலை செய்யும் சமூகமும் தனது தொழிலில் தன்னுடன் இணைந்து பணியாற்றுபவர்களாலும்தான் என்பதை அவர் மறக்கவில்லை. அவர் இப்படி சொல்கிறார்:

"மக்களை நிர்வகிக்கப்படுபவர்களாகவும், நிர்வகிப்பவர்களாகவும் பிரிக்கும் முதலாளித்துவத் தத்துவத்திற்கு எதிரானவன் நான் என்பதை உணர்ந்து கொண்டு சில ஆண்டுகளுக்கு முன்பு நிர்வகிக்கப்படும் தொழிலாளியாக இருக்கக்கூடாது என்று முடிவெடுத்தேன். உண்மையான தடைகளாக இருந்தவை கம்பெனிச் சட்டங்களும், பங்குதாரர்களின் சர்வாதிகாரமும், அவர்கள் கட்டுப்பாட்டில் இருந்த நிர்வாகத்தின் அதிகாரபடி நிலைகளும்தான்" என்கிறார்.

மனிதர்களின் தேவைகளுக்குப் பொருந்தும்படி முயற்சிகளுடனான தத்துவத்தின் அடிப்படையில் தனது நிறுவ

னத்தில் புரட்சிகரமான மாற்றங்களை அறிமுகம் செய்ய அவர் முடிவு செய்தார்.

"இரண்டுவிதமான பிரச்சினைகள் இருந்தன. ஒன்று, நமது நிறுவனத்தில் லாபத்திற்கு எந்த நஷ்டமும் ஏற்ப டாமல், மனித கௌரவம், மகிழ்ச்சி மற்றும் சுதந்திரத்தை அதிகபட்ச அளவில் இருக்கும்படி எப்படி கட்டமைப்பது என்பதும். இரண்டாவதாக இவற்றை தனியார் தொழில் துறையினர் ஏற்கும்படி எவ்வகையில் செய்வது என்பது ஆகும்."

இரண்டு விஷயங்கள் இல்லாமல் இந்த முடிவுகளை செயல்படுத்த முடியாது என்று திருமிகு. பேடர் ஒரு கட் டத்தில் உணர்ந்தார். தான் தொடக்கத்திலிருந்து செய்து வந்ததைப் போன்று லாபத்தில் மட்டும் பங்கு பெறுவது என்பது போதுமானதல்ல. உடைமைத்துவத்தில் மாற் றம் வேண் டும். இரண்டாவதாக, சில விதிகளை ஏற்றுக் கொள்வது. முதலாவதை செய்வதற்காக ஸ்காட் பேடர் "காமன் வெல்த்' என்ற அமைப்பை ஏற்படுத்தினார். அதில் நிறுவன உரிமையை எல்லோருக்குமானதாக் கினார். இரண்டாவதை செயல்படுத்துவதற்கு, இப்போ தைய தொழில் கூட்டாளிகளான தனது முன்னாள் ஊழி யர்களுடன் அதிகாரப்பரவலைக் குறித்து விளக்கும் நிர் ணய சட்ட அமைப்பை உருவாக்க ஒப்புக் கொண்டார். ஆனால் நிறுவனத்தின் சுதந்திரமான செயல்பாட்டிற்கா கப் பின்வரும் நியதிகளை செயல்படுத்த வேண்டுமாறும் செய்தார்.

முதலாவதாக நிறுவனத்தின் ஒவ்வொரு உறுப்பினரும் தனது அறிவையும், கற்பனைத் திறனையும் பயன்படுத் தும் வகையில் நிறுவனம் இப்போது உள்ளது போல் வரையறுக்கப்பட்ட அளவிலேயே இருக்க வேண்டும். நிறுவனத்தின் உறுப்பினர் எண்ணிக்கை 350க்கும் அதி

கமாகும்படி நிறுவனம் வளரக்கூடாது. அந்த வரையறை யைவிட நிறுவனம் வளர்ந்தே ஆக வேண்டும் என்ற சூழ் நிலை ஏற்பட்டால், ஸ்காட் அண்ட் பேடர் காமன்வெல்த் தைப் போன்ற அமைப்புடன் புதிய சுதந்திரமான யூனிட் டுகளாக தொடங்க வேண்டும்.

இரண்டாவதாக நிறுவனத்தில் பணிபுரிபவர்களிடையே வயது, பால், வேலை அல்லது அனுபவம் இவற்றின டிப் படையில் வரிப்பிடிப்பு இல்லாத நிலையில் 1:7 என்ற விகிதத்தில் குறைந்தபட்ச மறும் அதிகபட்ச சம்பள வேறுபாடு இருக்க வேண்டும்.

மூன்றாவதாக காமன்வெல்த்தின் உறுப்பினர்கள் எல் லோரும் தொழிலாளிகளாக இல்லாமல் பங்காளிகளாக இருப்பதால், அவர்களை மிகப்பெரிய நடத்தை மீறிய காரணமாக அன்றி வேறெதற்காகவும் வேலை நீக்கம் செய்யக் கூடாது. உறுப்பினர் முறையான அறிவிப்பைக் கொடுத்து விட்டு எப்போது வேண்டுமானாலும் பணியி லிருந்து தாமாக விடுபடலாம்.

நான்காவதாக, ஸ்காட் அண்ட் பேடர் நிறுவனத்தில் இயக்குநர்கள் அமைப்பு காமன்வெல்த்திற்குக் கட் டுபட்டது. நிர்ணய சட்ட விதிகளின்படி இயக்குநர் கள் அமைப்பின் உறுப்பினர்களை நியமிக்கவோ நீக் கவோ காமன்வெல்த் அமைப்பிற்கு உரிமை உண்டு. அதேபோல் அவர்களது சம்பளத்தை நிர்ணயிப்பதிலும் காமன் வெல்த்துக்கு உரிமை உண்டு.

ஐந்தாவதாக, நிகர லாபத்தில் நாற்பது சதவீதத்திற் கும் அதிகமாக காமன்வெல்த்திடம் இருக்கக் கூடாது. குறைந்தது அறுபது சதவீத நிகர லாபத் தொகை நிறு வனத்தின் சுயநிதியாகவும் வரி செலுத்துவதற்காகவும் வைத்துக் கொள்ளப் படவேண்டும். காமன் வெல்த்தி டம் இருக்கும் தொகை யின் ஒரு பாதி, உறுப்பினர்களின்

போனஸ் மற்றும் இதர சலுகைகளுக்காகவும் மறுபாதி நிறுவனத்திற்கு வெளியே அறப் பணிகளை செய்வதற் காகவும் இருக்க வேண்டும்.

இறுதியாக, போர் சம்பந்தமானவற்றிக்குப் பயன்படுத்தப் படும் எனத் தெரியும் நுகர்வோர்களுக்கு ஸ்காட் பேடர் நிறுவனத்தின் எந்த உற்பத்திப் பொருளும் விற்கப்படக் கூடாது.

இத்தகைய புரட்சிகர மாற்றங்களை திருமிகு எர்னஸ்ட் பேடரும் அவர் கூட்டாளிகளும் அறிமுகம் செய்தபோது, இத்தகைய அமைப்பு நீடித்திருக்காது என்று சாதாரண மாக எல்லோராலும் கருதப்பட்டது. கஷ்டங்கள் இருந்த போதும், உண்மையில் அந்த அமைப்பு பலப்பட்டு வலி மையடைந்தது. 1951 லிருந்து 1971-க்குள் அதன் விற் பனை 25,000 பவுண்டிலிருந்து ஐந்து மில்லியன் பவுண் டானது. ஆண்டு நிகர லாபம் 72,000 பவுண்டிலிருந்து மூன்று லட்சம் பவுண்டானது. மொத்த ஊழியர் எண் ணிக்கை 161 லிருந்து 371 ஆக உயர்ந்தது.

150,00பவுண்டுகள் ஊழியர்களுக்கு போனஸாக வழங் கப்பட்டது. அதே அளவு தொகை நிறுவனத்தின் வெளியே அறப்பணிகளுக்காக செலவிடப்பட்டது. இது இருபது ஆண்டுகளுக்குள் நிகழ்ந்தது என்பது குறிப்பி டத்தக்கது. பல புதிய யூனிட்டுகள் அமைக்கப்பட்டன.

இப்படிச் செய்ய விரும்பும் எவரும், ஸ்காட் பேடர் நிறு வனத்தின் வர்த்தக வியாபார ரீதியிலான வெற்றி அசா தாரணமான சூழ்நிலையால் விளைந்தவை எனக் கரு தலாம். இவ்வகையில் அதனை விடவும் வெற்றிய டைந்த நிறுவனங்கள் உண்டு. 1951க்குப் பிறகு ஸ்காட் பேடர் நிறு வனம் தோல்வி அடைந்திருந்தால் அது ஒரு எச்சரிக்கையாகவே அமைந்திருக்கும். மரபுசார் நிலைகளின்படி அதன் மறுக்க முடியாத வெற்றி, பேடர்

அமைப்பு வழக்கமான நிலைகளை விட உயர்வானது என்று நிரூபிக்கவில்லை. பேடர் ஸ்காட் அமைப்பு வழக்கமான நிலைகளிலிருந்து வேறுபட்டது என்பதையே காட்டியது. வர்த்தக நோக்கங்களைத் தாண்டி மனிதத்துவமான, மனிதனுக்கான நோக்கங்களைக் கொண்ட அதன் வெற்றியில் நல்ல உயர் தரம் இருக்கிறது. இந்த மனிதத்துவமான, மனிதனுக்கான நோக்கங்கள் மற்ற நிறுவன அமைப்புகளுக்கு இரண்டாம் பட்சம் தான் அல்லது புறந்தள்ளி ஒதுக்கப்பட்டதுதான். வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், தனியார் உடமைத்துவத்தின் குறைகளை பேடரின் முறை வென்றது என்றும் முதலாளிகளை இன்னும் வளம் மிக்கவர்களாக மாற்றும் சாதாரண பயன்படு கருவியாக தொழில் அமைப்பை இருக்க அனுமதிப்பதை விட்டு, தொழில் அமைப்பு என்பது மனிதனுக்கு சேவை புரிவது என்றும் நிரூபித்தது என்று சொல்லலாம்.

எர்னஸ்ட் பேடர் சொல்கிறார்:

"பொது உடமைத்துவம் அல்லது காமன்வெல்த் என்பது லாபத்தை பங்கிட, எல்லோரையும் பங்குதாரர்களாக்க, அல்லது எல்லோரையும் உரிமையாளர்களாக்க பொது நிறுவனத்தில் எல்லோரும் விருப்பத்துடன் ஈடுபடும்படியான இயல்பான ஒரு வளர்ச்சியாகும். எல்லாப் பொருளும் எல்லோருக்கும் பொதுவானது என்பதற்கான வழியாகும். மேலும், காமன்வெல்த் உடமைத்துவத்திற்கு தனி சிறப்புகளுண்டு."

1951-லிருந்து தோன்றியுள்ள புதிய நிர்வாக அமைப்பு முறைகள் மற்றும் கூட்டுறவு குறித்து நான் அதில் போக விரும்பாத அதேவேளையில், அனுபவங்களிலிய பெற்ற சில கொள்கைகளைக் குறிப்பிடுவது பயனுள்ளதாக இருக்கும்.

முதலாவதாக உடமைத்துவத்தை ஒரு நபரிடமிருந்தே அல்லது ஒரு குடும்பத்திடமிருந்தோ மாற்றுவது. பேடர் குடும்பம் சம்பந்தப்பட்ட வகையில் காமன்வெல்த் முறையின் மூலம் தனியார் உடமைத்துவத்திலிருந்து கூட்டு உடமைத்துவத்திற்கு உடமைத்துவம் மாறியது. ஒரு நபர் அல்லது குறிப்பிட்ட சில நபர்களுக்கான சொத்து உரிமையிலிருந்து, காமன்வெல்த் முறையின் மூலமான உரிமை, உறவு நிச்சயமாக வேறுபட்டது. உட மையாளர்களின் அளவு என்ற நிலையிலிருந்து உட மையாளர்களின் தரம் என்ற நிலைக்கு உடமைத்து வம் உயர்ந்தது ஆச்சர்யப்பட வேண்டிய ஒன்றல்ல. அது குறிப்பாக ஸ்காட் பேடர் விஷயத்தில் சிறப்பாக அமைந்தது. ஸ்காட் பேடர் நிறுவனம் என்பது சட்டப் பூர்வமாக காமன்வெல்த் அமைப்பு முறைக்கு சொந்த மானது. ஆனால், காமன்வெல்த்தின் உறுப்பினர்களோ, தனிப்பட்டவர்களோ அதற்கு உடமைதாரர்களல்ல என் பது உண்மை. உண்மையில் சொத்துக்களை நிர்வகிப்ப தற்கு பதில் சிறப்பு உரிமைகள் மற்றும் பொறுப்புக்களால் உடமைத்துவம் என்பது மாற்றப்பட்டது.

இரண்டாவதாக எந்த சொத்தையும் எவரும் வைத்துக் கொள்ளவில்லை. திருமிகு பேடரும் அவர் குடும்பத் தினரும் சொத்துக்களை வைத்துக் கொள்வதிலிருந்து தங்களைத் தாங்களே விடுவித்துக் கொண்டார்கள். செல்வவளம் மிக்க பணக்காரர்களாவதை அவர்கள் சொந்த விருப்பத்தின் பேரிலேயே விட்டார்கள். அள வுக்கு மீறிய பணக்காரர்கள் இருப்பது இன்றைய நிலை யில் பெரிய சமூகத் தீமை என்பதைப் புரிந்து கொள்ள ஒருவர் ஒட்டு மொத்த தரத்தின் மீது நம்பிக்கை கொண் டவராக இருக்க வேண்டியதில்லை. செல்வவளத்திலும் வருவாயிலும் சில சமத்துவமின்மை நிலவுவது இயல்பா

னது. ஓரளவு நியாயப்படுத்தப்படக் கூடியதே. இதனை தாமாகவே அங்கீகரிக்காத, ஏற்றுக் கொள்ளாத சிலர் இருக்கிறார்கள். எல்லாவித மனித விஷயங்களிலும் போல, இது அளவிட வேண்டியதாக இருக்கிறது. அதிக அதிகாரம் பெற்றிருப்பதைப் போல அதிக செல்வவளம் பெற்றிருப்பதும் ஊழலுக்கு வழி வகுக்கும். செல்வவளம் பெற்றிருப்பவர்கள் வெறுமனே இல்லாவிட்டாலும் கூட, அவர்களது உழைப்பு மற்றவர் களை விடக் கடினமான தாக இருந்தாலும் கூட, அவர்கள் வேறுபட்ட வகைகளி லேயே பணிபுரிவார்கள். வேறுபட்ட நிலைகளில் மனி தத்துவத்திற்கு அப்பாற்பட்ட வகைகளிலேயே பணி புரிவார்கள். இவற்றையெல்லாம் தனது ஞானத்தால் உணர்ந்த திருமிகு. பேடர், அளவுக்கு மீறிய செல்வந் தர் ஆவதை மறுத்து, உண்மையான ஒரு சமுதாயத்தை அமைப்பதில் வெற்றிகண்டார்.

மூன்றாவதாக, ஸ்காட் பேடரின் செயல்பாடு உடமைத் துவ மாற்றத்தின் அவசியத்தை மிகத்தெளிவாகக் காட் டும் அதே வேளையில், உடமைத்துவ மாற்றம் என்பது, சாத்தியமாக்கும் சாத்தியப்படுத்தும் ஒரு செயலே தவிர, உயர் நோக்கங்களை அடையப் போதுமானதல்ல என்ப தையும் காட்டுகிறது. ஒரு வர்த்தக நிறுவனத்தின் பணி வெறும் லாபத்தை அடைவது மட்டுமல்ல, லாபத்தை அதிகரித்து வலிமையானதாக மாற வேண்டும் என்பதை காமன்வெல்த் அங்கீகரிக்கிறது. ஏற்றுக் கொள்கிறது. காமன்வெல்த் சம முக்கியத்துவம் வாய்ந்த நான்கு பணி களை அங்கீகரிக்கிறது.

**பொருளாதாரப் பணி** : லாபம் பெரும் வகையில் உரு வாக்கப்படக் கூடிய, வடிவமைக்கப்படக் கூடிய மற்றும் சேவை புரியக் கூடிய ஆர்டர்களை (பணிக் கட்டளை களை) உறுதிப்படுத்துவது.

**தொழில் நுட்பப் பணி:** இன்றைய தேதிக்கு உற்பத்தி வடிவமைப்புகளை சப்ளை (விநியோகம்) செய்து லாபத்தை உறுதியாக ஈட்டும் ஆர்டர்கலை கிட்டும்படி சந்தைப் படுத்துவது.

**சமூகப் பணி:** நிறுவன உறுப்பினர்கள் அனைவரும் திருப்தியடையும் வகையில் வாய்ப்புக்களை வேண்டும். அவர்களது பங்களிப்பின் மூலம் அவ பணிபுரியும் அமைப்பு வளரவும் வாய்ப்பளிக்கப் வேண்டும்.

**அரசியல் பணி:** சமூகத்தில் பொறுப்புடன் இருப்பதிலும், பொருளாதார ரீதியில் ஆரோக்கியமாக இருப்பதிலும் சமூகத்தின் மற்ற ஆண் - பெண்களை ஊக்கப்படுத்தும் விதமாக முன்னுதாரணமாகத் வாழ்வது.

நான்காவதாக, சமூகப் பணியை நிறைவேற்றுவது மிகவும் சவாலான மிகக் கடினமானதாகும். பேடர் நிறுவனத்தின் காமன்வெல்த் அமைப்புமுறை பல நிர்ணய சட்ட மாற்றங்களை இருபது ஆண்டுகளில் கண்டுள்ளது. 1971-ன் மாற்றத்தின்படி அது, உண்மையான ஜனநாயகத்தை திறன்மிக்க நிர்வாகத்துடன் இணைந்து செல்லும்படியாக மாற்றி உள்ளது. திருமிகு. எர்னஸ்ட் பேடர் இப்படிச் சொல்கிறார்:

"மிக அதிக கேள்விகளையும் பதில்களையும் கொண்ட மிக நீண்ட கட்டுரைகளை எழுதுவதை விடவும், நாற்பத்தைந்து ஏக்கர் பரப்பைக் கொண்ட "மேனோர் ஹவுஸ் எஸ்டேட்" என்ற ரசாயன நிலையங்களையும் ஆய்வகங்களையும் கொண்ட எங்கள் தொழிற்சாலைக்குள் ஆர்வம் கொண்டவர்களை அழைத்துச் செல்வதையே நான் மிகவும் விரும்புவேன்".

ஸ்காட் அண்ட் பேடரின் நிறுவன உருவாக்கம் ஒரு கற்றுக் கொள்ளக் கூடிய செயலாக்கமாக இருந்துவருகிறது. அதன் உறுப்பினர்களை (தொழிலாளர்களை வெறும்

சம்பளத்தைப் பெற்றுக் கொண்டு, நிறுவனத்தின் லாபத் திற்உ உழைப்பவர்களாக இருப்பதற்கும் மேலாக "எல்லோ நிறுவனத்தின் அங்கம்" என்பதைக் கற்றுக் கொள்ளும் படி செய்திருக்கிறது என்பதே 1951-க்குப் பிறகு அங்கே நடந்திருக்கிறது. ஸ்காட் பேடர் நிறுவனங்களுக்குள் ளேயே ஒவ்வொருவரையும் மனிதத்துவத்தின் உயர்நி லைக்கு தனிப் பட்டவகையில் தங்களை உயர்த்திக் கொள்ளும்படியும், எவ்வளவு மோசமான நிலையிலும் தங்களுக்கான சிறப் பான நோக்கங்களை வளர்த்துக் கொண்டு, நிறுவனத்திற்கான நோக்கங்களுடன் சுதந் திரமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்க வைத்திருக்கிறது. இது கற்றுக் கொள்ள வேண்டியது. கற்றுக் கொள்வதற் குக் காலம் பிடிக்கும். ஸ்காட் பேடரில் இணைந்தவர்க ளில் பெரும்பாலானோர் வாய்ப்புக்கு ஏற்றபடி செயல்பட் டார்கள், செயல்படுகிறார்கள்.

இறுதியாக, அறப்பணிகளுக்கென கட்டாயமாக ஒதுக் கப்படும் லாபத் தொகையின் ஒரு பகுதி, முதலாளித் துவ அமைப்புகள் புறந்தள்ள முனையும் மாற்றுத் திற னாளிகள், ஆதரவற்ற இளையோர், முதியோர், கைவி டப்பட்டவர் களுக்கான பணிகளைச் செய்வதோடல் லாமல், காமன் வெல்த் உறுப்பினர்களுக்கு மற்றெந்த மரபான தொழில் அமைப்பில் உள்ளவர்களைக் காட் டிலும் பெரும் சமூக பிரக்ஞையையும், விழிப்புணர்வை யும் அளிக்கிறது. இது தொடர்பாக சொல்வதற்கு ஒன் றுண்டு. அது காமன்வெல்த் அமைப்பு என்பது தனி யார் சுயநலம் என்பதிலிருந்து குழு சுயநலம் என்பதாக மாறிவிடக் கூடாது என்பது முடிந்த வரை சாத்தியமான வரை உறுதி செய்யப்பட வேண்டும் என்பதாகும். முக் கிய முடிவெடுக்கும் அதிகாரம் கொண்ட நிறுவனத்திற்கு வெளியில் உள்ளவர்களைக் கொண்ட அறங்காவலர்

குழு அமைக்கப்பட வேண்டும். அவர்கள் நிர்வாகத்தில் தலையிடும் அதிகாரம் அற்ற நிர்ணய சட்டத்தின் அறங் காவலர்களாக இருக்க வேண்டும்.

இந்த விஷயம் பேசத் தொடங்கும்போது கூறப்பட்டதைப் போல, திருமிகு. பேடர் தனது நிறுவனத்தில் புரட்சிகர மாற்றங்களை செய்யத் தொடங்கியபோது, "தனியார்து றையினரால் ஏற்றுக் கொள்ளும்படியான வழி முறைக ளில் செய்யப்பட வேண்டும்" என செயல்பட்டார் என் பதைக் குறிப்பிட வேண்டும். அவரது புரட்சி ரத்தமில் லாதது; எவரும் துன்பப்படவில்லை. அவரும் குடும்ப மும் கூட துன்பப்படவில்லை. மற்ற இடங்களில்வேலை நிறுத்தங்கள் நாடைபெறும்போது, ஸ்காட் பேடர் நிறு வன ஊழியர்கள் (உறுப்பினர்கள்) "வேலை நிறுத்தம் இல்லை" என்று பெருமை சொல்லிக் கொள்ளலாம். எர் னெஸ்ட் பேடர் சொல்கிறார்.

"பல ஆண்டுகளாக கிறிஸ்தவ வழியிலான வாழ்க்கை முறை எமது தொழிலில் கொண்டு வரச் செய்த முயற்சி கள் மிகுந்த ஊக்கமளிப்பவை. அது எங்களுக்கிடையே நல்லுறவை உருவாக்கி நல்ல பலனைத் தந்ததுள்ளது. எங்கள் உற்பத்தியில் அளவையும் தரத்தையும் நன்கு கொண்டு வரவும் உதவியது".

"இறைவனுக்கு சேவை செய்யும் நல்லதொரு சமூ கத்திற்கும் எங்களது சகோதரர்களுக்கும் நல்வகையில் பணியாற்றியதையே நாங்கள் அழுத்திக் கூறவும் இன் னும் நிறைவாகச் செய்யவும் விரும்புகிறோம்".

பேடரின் புரட்சிகர மாற்றங்கள் தனியார் துறையினரால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியவை என்றாலும், உண் மையில் அது ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆயிரக்க ணககானவர்கள், ஏன் வர்த்தக உலகினரும் கூட நடப் புச் செயல்பாடுகளைக் கண்டு, புதிய கோட்பாட்டைக்

கோரு கிறார்கள். ஆனால் ஸ்காட் பேடரும் இன்னும் சிலரும், பேராசையாலும் பொறாமையாலும் ஆளப்படும் பெரும் சமூகத்தில் தனித்தனியாக தீவுகளாக இருக்கி றார்கள். என்னதான் புதிய வழிகளைக் காண்பித்தாலும் "பழைய நாய் புதிய உத்திகளை கற்றுக் கொள்ளாது' என்பது உண்மையாகவே இருக்கிறது. இருந்தாலும் புதிய நாய்கள் வளர்ந்து கொண்டே இருக்கும் என்ப தும் உண்மையே. இந்தப் புதிய நாய்கள் ஸ்காட் பேடர் காமன்வெல்த் நிறுவனத்தில் என்ன சாத்தியமாகிறது என்பதைக் கவனிக்கும்படியும் எப்போதும் அறிவுறுத்தப் படுகிறார்கள்.

புதிய சமூகமயமாக்கல் முறைகள்

பொருளாதார விவகாரங்கள் குறிப்பான கவனத்தைப் கொண்டுள்ள சமூகத்தில் தேர்ந்தெடுக்க பிரதான மானமன்று வாய்ப்புகள் உள்ளதெனத் தோன்றுகிறது. அவை உற்பத்தியினாலமைந்த தனியார் உடமைத்து வத்திற்கும் பல்வேறு வகையிலான பொது மற்றும் கூட்டு உடமைத் துவத்திற்கும் இடையிலானது. சந் தைப் பொருளாதாரத்திற்கும் திட்டமிடுதலின் பல்வேறு ஏற்பாடுகளுக்குமிடையிலுமானது. சுதந்திரம் மற்றும் சர் வாதிகாரத்திற்கு மிடையிலானது. இந்த மூன்று எதிர் எதிர் இணைகளிலும், உண்மையில் ஒரு அளவி லான கலப்பு இருக்கும் என்பதைச் சொல்லத் தேவை யில்லை. ஏனெனில் சில வகைகளில் அவை எதிர் எதிர் என்பதை விட ஒன்றை ஒன்று சார்ந்த வையே. ஆனால் இந்தக் கலப்பில் ஏதாவது ஒன்று அதிக மானதாகவே இருக்கும்.

தனியார் நிறுவன அமைப்புக்கு ஆதரவானவர்கள், தனி யார் அல்லாத உடமைத்துவம் திட்டமிடுதலையும், சர் வாதிகாரத்தையும் தவிர்க்க முடியாமலும் அவசியமாக

வும் கொண்டிருக்கும் அதே வேளையில், தனியார் உட மைத் துவத்திலும் சந்தைப் பொருளாதாரத்திலும் தவிர சுதந் திரம் என்பது வேறெதிலும் நினைத்தே பார்க்க முடியாதது என்று வாதிடுவார்கள். அதே போன்று, பல் வேறு விதமான கூட்டு உடமைத்துவத்திற்கு ஆதரவா னவர்கள் மத்திய திட்டமிடல் கூட்டு உடமைத்துவத்து வத்திற்கு தேவைப்படும் என்றும், சுதந்திரம் என்பதை சமூகமயமாக்கலினாலான உடமைத்துவம் மற்றும் திட் டமிடுதலின் மூலமே பெற முடியும் என்று கூறுகிறார்கள். அதே வேளையில் தனியார் உடமைத்துவம் மற்றும் சந் தைப் பொருளா தாரத்தில் சொல்லப்படும் சுதந்திரம் என்பது நட்சத்திர உணவு விடுதிகளில் உண்டு. 'ஆற் றுப் பாலத்தின் நிழலல் உறங்குவது போன்றது' என்றும் கூறுவார்கள். வேறு வார்த்தைகளில் சொல்ல வேண் டுமென்றால், ஒவ்வொருவரும் "சுதந்திரத்தை தத்தமது வழிகளில் பெறுவதையும் மற்ற வழிகளை சர்வாதிகா ரமானது. கொடுமையானாது, நாசகரமானது என்றும் குறை கூறுகின்றனர்.

உண்மையிலிருந்து கருத்தாக்கத்தை அடைவதற்கு பதிலாக, கருத்தாக்கத்திலிருந்து உண்மையை எல்லா விவாதங்களையும் போலவே இந்த விவாவதங்கலும் தெளிவை உருவாக்குவதை விட சிக்கலையே உரு வாக்கின்றன. மாற்றான மூன்று விஷயங்கள் இருக்கை யில் 23 அல்லது 8 இணைப்புக்கலவைகள் இருக் கின்றன எல்லாவற்றையும் ஒரு நேரத்திலோ அல்லது நேரத்திலோ அல்லது மற்ற நேரத்தில் பல இடங்களில் இவற்றை எதிர்பார்ப்பது சரியானதே. அந்த எட்டு வாய்ப் புகளும் பின்வருமாறு:

**முதல் வகை:** சுதந்திரம்

சந்தைப் பொருளாதாரம்

தனியார் உடமைத்துவம்

**இரண்டாம் வகை:**

சுதந்திரம்

திட்டமிடல்

தனியார் உடமைத்துவம்

**மூன்றாம் வகை:** சுதந்திரம்

சந்தைப்பொருளாதாரம்

கூட்டு உடமைத்துவம்

**நான்காவது வகை:**

சுதந்திரம்

திட்டமிடுதல்

கூட்டு உடமைத்துவம்

**ஐந்தாவது வகை:** சர்வாதிகாரம்

சந்தைப்பொருளாதாரம்

தனியார் உடமைத்துவம்

**ஆறாவது வகை:** சர்வாதிகாரம்

திட்டமிடுதல்

தனியார் உடமைத்துவம்

**ஏழாவது வகை:** சர்வாதிகாரம்

சந்தைப் பொருளாதாரம்

கூட்டு உடமைத்துவம்

**எட்டாவது வகை:** சர்வாதிகாரம்

திட்டமிடுதல்

கூட்டு உடமைத்துவம்

முதல்வகையும் எட்டாவது வகையுமே சாத்தியம் என்று கூறுவது மடத்தனம். இவை தத்துவ பிரச்சாரகர்களால் எளிமையானவை என்று சொல்லப்படுவதால் நாமும் அப்படி சொல்லக் கூடாது. உண்மை என்பது கற்பனை செய்தே அறியக் கூடியது.

ஒரு கலப்பு பொருளாதாரத்தை அடையக்கூடிய, எதிர் காலத் தேவைகளுக்குப் பொருந்தக் கூடிய கலப்புப் பொருளாதாரத்தை அடையக் கூடிய பெரு முதலீட்டு நிறுவனத்திற்கான உடமைத்துவ அமைப்பை உருவாக்கும் சாத்தியத்தை கணிப்பதே எனது நோக்கம். பூஜ்யத்திலிருந்து தொடங்காமல் எல்லா வாய்ப்புகளும் உள்ளது போல, எல்லா வாய்ப்புக்களும் திறந்திருப்பதைப் போல உலகின் தொழில்மயமான பகுதியின் உண்மையான நிலையிலிருந்து தொடங்குவோம்.

முன்பு குறிப்பிட்டதைப் போல தனியார் நிறுவன அமைப்புகள் நேரடியாகவும் மறைமுகமாகவும் பல்வேறு பலன்களை பொதுச் செலவுகளின் மூலம் கட்டப்பட்டுள்ள உள்கட்டமைப்புகளின் மூலம் பெறுகின்றன. ஆனால் தனியார் நிறுவனங்களின் செலவின் பெரும் பகுதியை ஏற்றுக் கொள்ளும் பொது அமைப்பு, தனியார் நிறுவனத்தின் லாபத்திலிருந்து எதையும் பெறுவதில்லை. தனியாரின் எல்லா லாபங்களும் தனியாரிடமே போகின்றன. தனது நிதித் தேவைகளுக்காக பொது அமைப்பு தனியாரிட மிருந்து நிதியைப் பெற வேண்டி இருக்கிறது. நவீன வர்த்தக முதலாளி ஒவ்வொருவரும் தான் நாட்டுக்காகப் பணியாற்றுவதாக" சொல்லிக்கொள்வதில் சலிப்படைவதே இல்லை. தனக்கும் தனது பங்குதாரர்கள கணிசமான தொகைகயை வரியாக அரசு பிடுங்குகிறது என்று குறை சொல்வதிலும் சலிப்படைவதேயில்லை. லாபத்தின் பொதுப்பங்கை அதாவது நிற லாபத்தின் மீதான வரியை தனியார் வர்த்தகத்தின் பொது பங்காக மாற்றிக் கொள்ளலாம் என்றும் அது சொல்கிறது.

பெரு முதலீட்டிலான தனியார் நிறுவனத்தின் லாபத்தின் பாதியை பொது அதிகார அமைப்பு பெற்றுக் கொள்ள வேண்டும் என்று நான் கருதுகிறேன். இந்த பங்கை

வரியாகப் பெறக்கூடாது. அந்த நிறுவனங்களின் நம்பக சதவீத உடைமைத்துவத்தின் அடிப்படையிலே அதனைப் பெற வேண்டும்.

* இந்தத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படும் நிறுவனத்தின் குறைந்த பட்ச அளவு வரையறுக்கப்பட வேண்டும். ஒவ்வொரு வர்த்தகமும் அதன் தனியார் மற்றும் தனிச் சொந்தம் என்ற பண்புகளை இழப்பதால் அது பொது நிறுவனமாகும்போது, அதில் பணிபுரியும் தொழிலாளர்களின் எண்ணிக்கை வரையறுக்கப்பட வேண்டும். சில குறிப்பிட்ட வகைகளில் அதன் ஆண்டு பணப் பரிமாற்றம் அல்லது மூலதனம் என்பதன் அடிப் படையில் அது வரையறுக்கப் படவேண்டும்.

* இந்த குறைந்தபட்ச அளவை அடையும் அல்லது முன்பே அந்த அளவைக் கடந்துவிட்ட நிறுவனங்கள், பலரும் முதலீடு செய்துள்ள நிறுவனங்களாக இருக்க வேண்டும்.

*இந்த நிறுவனங்களின் எல்லாப் பங்குகளும் சமமதிப்புள்ள பங்குகளைக் கொண்டதாக மாற்றுவது விரும்பத் தக்கதாகும்.

* வழங்கப்பட்டுள்ள அத்தனைப் பங்குகளையும், அதற்குச் சமமான எண்ணிக்கையுள்ள புதிய பங்குகளுடன் இரட்டிப்பாக்க வேண்டும். இந்தப் புதிய பங்குகள் பொது அதிகார அமைப்புக்கானதாக வேண்டும். ஒவ்வொரு பழைய பங்கைப் போலவே ஒவ்வொரு புதிய பங்கும் இருக்கும்.

இம் முறையில் நஷ்டஈடு என்ற கேள்வியே எழாது. ஏனெனில் அனைவரும் உடமையாளர்களே (பங்குகளைப் பெற்றிருப்பவர்களே). பொருளாதார சொத்துக்களில் லாபத்தினாலான வரிகளை செலுத்தி, வரி பெறும் சொத்துக்களாக மாற்றுவது நடக்கின்றது. இப்படி உரு

வாகும் சொத்துக்கள் தனியார் சொத்துக்களாக இருக் காது. பொதுச் சொத்துக்களாகத்தான் இருக்கும்.

இப்போது மூன்று கேள்விகள் உடனடியாக எழும். முத லாவது, 'பொது அதிகார அமைப்பு' என்பதன் பொருள் என்ன? புதிதாக வெளியிடப்பட்டுள்ள பங்குகளை எங்கு வைப்பது? பொது அதிகார அமைப்பின் பிரதிநிதி யார்? இரண்டாவதாக, இந்தப் புதிய பங்குகள் என்ன வித மான உடமைத்துவ உரிமையைக் கொண்டிருக்கின் றன? மூன்றாவதாக, முன்பே உள்ள அமைப்பில் இருந்து புதிய அமைப்புக்கு மாறுவது, சர்வதேச மற்றும் பிற இணைப்புகளை கையாள்வது, புதிய மூலதனங்களை உருவாக்குவது பற்றியதாகும்.

முதல் கேள்வியைப் பொறுத்த வரையில், ஐம்பது சதவீத சாதாரணப் பங்குகளாக உருவாக்கப்பட்டுள்ள புதிய பங் குகளை நிறுவனம் அமைந்துள்ள மாவட்டத்தின் உள் ளூர் அமைப்பு பெற்றிருக்க வேண்டும். இதன் நோக்கம் என்னவெனில், அதிகாரப் பரவல் மற்றும் பொதுமக்கள் பங்களிப்பின் அளவை அதிகமாக்கி, தொழிலின் ஒருங் கிணைப்பை உள்ளூர் மக்களிடம் உருவாக்கி நிறைய பலன்களைப் பெறுவதுதான். இப்படியாக தொழில் நடக் கும் அந்த மாவட்டத்திலேயே ஐம்பது சதவீத பங்குகள் இருக்கும். அரசியல் ரீதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர் களோ அல்லது உள்ளூர் ஊழியர்களோ இந்தப் பங்கு களை கையாள்வார்கள்.

இரண்டாவது கேள்விக்கு வருவோம்.உடமைத்துவத் திற்கான உரிமைகள், நிர்வாக உரிமைகள் மற்றும் நிதி சம்பந்தமான உரிமைகள் என்ற இரண்டு குழுக்களாக உள்ளன.

பொது அதிகார அமைப்பு, நடப்பிலுள்ள வாகத்தில் சுதந்திரமாகவோ அல்லது சுதந்திரமில்லமல் முழுமை

யான பொறுப்புடன் தலையிடும்போது, ஒரு பலனும் கிட்டாமல், பெரும் நஷ்டமே சம்பவிக்கும் என கருதுகிறேன். எனவே அசாதாரண நிலை அல்லாது மற்ற சாதாரண நிலைகளில் தனியார் நிறுவன மேலாளர்களே முழுப் பொறுப்பில் இருக்க வேண்டும். அதாவது, பொதுவானதாகக் கொள்ளப்பட்டிருக்கும் பங்குகளுக்கு ஓட்டளிக்கும் உரிமை கிடையாது. நடப்பு விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும் கவனிக்கவும் மட்டுமே உரிமை உண்டு. பொதுஅதிகார அமைப்பு ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்டவர்களையோ ஒரு நிறுவனத்தின் இயக்குநர் அமைப்பை கண்காணிக்கும்படி நியமிக்க முடியும். ஆனால் கண்காணிப்பவர்களுக்கு முடிவெடுக்கும் அதிகாரம் இருக்காது. பொது அதிகார அமைப்பின் தலையீடு தேவையென கண்காணிப்பாளர் நினைக்கும் பட்சத்தில் சிறப்பு நீதிமன்றத்தை அணுகி ஓட்டுரிமையைக் கோரலாம்.

நிர்வாகத்தில் உயர்நிலை அல்லது நடுத்தர பொது அல்லது அரசு பொது ஊழியர்களை பிரதிநிதிகளாக நியமிப்பதன் மூலம் 'பொது நலன்கள்' காக்கப்படும் என்று பொதுவாக எண்ணப்படுகிறது. தேசியமயமாக்கலின் முக்கியமான இந்தக் கொள்கையின் மீதான நம்பிக்கை குழந்தைத் தனமானதாகவும், நடைமுறைக்கு சாத்தியமில்லாததாகவும் எனக்குத் தோன்றுகிறது. நிர்வாகத்தின் பொறுப்புகளைப் பிரிப்பதனாலல்ல, பொது நலன்களில் வர்த்தக நிறுவனங்கள் தற்போது காட்டும் அக்கறையை அதிகமாகத் தூண்டும்படியான வெளிப்படைத் தன்மையையும், தெளிவாக எல்லாவற்றையும் காண்பிக்க வேண்டும், பதில் சொல்ல வேண்டும் என்றஅடிப்படையில் அப்படித் தோன்றுகிறது. பொது நிர்வாகம் என்பது ஒரு பக்கம், வர்த்தக நிறுவனம் என்பது

அடுத்த பக்கம் என இருக்கும் நிலையில் இவை இரண்டையும் கலப்பது கெடுதலையே விளைவிக்கும்.

பொது அதிகார அமைப்பு கொண்டிருக்கிற உடமைத் கால நிர்வாக உரிமைகள் பயன்படுத்த இயலாதவையாக உள்ளபோது, பொது அதிகார அமைப்பு தனது வரி ரூப முதலீட்டைச் செய்வதால் அதன் நிதி சார்ந்த உரிமைகள் தொடக்கம் முதலே வலிமையான செயல்பாடுடையதாக இருக்க வேண்டும். புதிய பங்குகளைக் கொண்டிருக்கிற பொது அதிகார அமைப்பிற்கு லாபத்தின் பாதி தானாகவே போய்விடும். பொது அதிகார அமைப்பால் கைக்கொள்ளப்பட்டு பங்குகள் மாற்ற முடியாதவைகளாக இருக்க வேண்டும். அவை பணமாக மாற்றப்பட முடியாததாக இருக்க வேண்டும். அமைப்பைச் சார்ந்து கடன் கொடுப்பது என்பதைப் பற்றி பின்பு காண்போம்.

புதிய பங்குகள் குறித்த உரிமைகளையும் கடமைகளையும் பார்த்தோம். இப்போது உறுப்பினர் அங்கத்தினர் என்பது பற்றிய கேள்வி எழுகிறது. திட்டத்தின் பொதுவான நோக்கம் என்னவெனில், பெரு முதலீட்டு வர்த்தக நிறுவ னங்களை அவற்றின் சமூக சூழலோடு ஒருங்கிணைப்பதே. மேலும் இந்த நோக்கம் உறுப்பினர் பற்றிய கேள்விக்கான தீர்வையும் தர வேண்டும். தொழில் உடமைத்துவத்திலிருந்து வரும் நிர்வாக மற்றும் நிதி சம்பந்தமான உரிமை களை செயல்படுத்துவது அரசியல் முரண்பாடுகளுக்கு அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும். அதே நேரத்தில் பல்வேறு பணிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ள பொது ஊழியர்களின் கைகளிலும் சிக்கி விடக்கூடாது. எனவே இதற்கான குடிமக்களைக் கொண்ட சிறப்பு சமூக சபையை அமைக்க வேண்டும், என்று கூறுகிறேன். இந்த சபை

அரசியல் தேர்தல்கள் மூலமாகவோ, அரசு அதிகார அமைப்பின் உதவியாலோ அமைக்கப்படக்கூடாது. இந்தச் சபையின் கால்பகுதி உறுப்பினர்கள் உள்ளூர் தொழிற்சங்கத்தினரால் நியமிக்கப்பட வேண்டும். கால் பங்கு உத்தியோகஸ்தர்களின் சங்கத்தினராலும், உள்ளூர் குடிமக்களிலிருந்தும் நியமிக்கப்பட உறுப்பினர் குறிப்பிட்ட காலத்துக்கு உதாரணமாக ஐந்து ஆண்டுகளுக்கு நியமிக்கப்படுவார்களேயானால் ஒவ்வொரு ஆண்டும் ஐந்தில் ஒரு பங்கு உறுப்பினர் பெறும்படி இருக்க வேண்டும்.

இந்த சமூக சபை சட்டப்பூர்வமாக வரையறுக்கதாகவும், கட்டுப்படுத்தப்படாத உரிமைகளையும்.செயல்படும் சக்தியையும் கொண்டிருக்க வேண்டும். அது சமூகதிற்கு பதிலளிக்கும் பொறுப்புடன், அதனுடைய செயல் பாடுகள் குறித்த அறிக்கைகளை வெளியிடும்படியான தாகவும் இருக்க வேண்டும். உள்ளூர் அதிகார அமைப்புக்கு சில அதிகாரங்களை அளிக்கும் படியானதாகவும் இருக்க வேண்டும். அந்த அதிகாரம் சமூக சபைக்கு தனது பார்வையாளரை அனுப்பும்படியாகவும், சச்சரவுகள் ஏற்படும்போது தலையிட்டு தீர்க்கும்படியானதாகவும் இருக்க வேண்டும். அந்த தலையீடுகள் அசாதாரணமான நிலையில் மட்டுமே செய்யப்படும்படியானதாக இருக்க வேண்டும். சாதாரண நிலைகளில் சமூக சபைக்கு செயல்படும் முழு சுதந்திரம் இருக்க வேண்டும்.

பொது அதிகார அமைப்பின் மீதுள்ள பங்குகளின் பணப்புழக்கத்தின் கட்டுப்பாடு முழுவதும் சமூக சபைக்கு இருக்க வேண்டும். இந்த நிதிகளின் செலவினம் குறித்த வழிகாட்டு நெறிமுறைகள் சட்ட வடிவில் வரையறுக்கப்பட வேண்டும். சமூக சபை நிதியைப்

பயன்படுத்துவதில் உடல் எழும் ஒரு ஆட்சேபம் என்ன வெனில் உள்ளூர் அமைப்பு அல்லது மத்திய அரசால் கட்டுப்படுத்தப்படும் நிதிக்கான உறுதி உண்டா என் பதுதான். மாறாக, உள்ளூர் சமூகத்தின் பிரதிநிதியாக உள்ள சமூக சபை, உள்ளூர் அல்லது மத்திய பொது ஊழியர்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுவதை விட, முக் கியமான சமூக தேவைகளுக்குக் குறைவான அர்ப்ப ணிப்பையே அளிக்கும்.

மூன்றாவது கேள்விக்கு வருவோம். நடப்பு முறை இங்கே சொல்லப்பட்ட முறைக்கு மாறுவதில் மிகக் கடி னமான விஷயங்கள் ஏதுமில்லை . நிறுவனத்தின் லாப வரிகளை ஒழித்து, பங்குகளில் பாதியை வாங்குவதால் 'நஷ்ட ஈடு' என்ற பேச்சுக்கே இடமில்லாமல் போகிறது.

குறிப்பிட்ட அளவிலான எல்லா நிறுவனங்களும் ஒன்று போலவே கையாளப்படுகின்றன. குறைந்த எண்ணிக் கையிலான பெரு நிறுவனங்களுக்கு மட்டுமே அளவு என்பது வரையறுக்கப்படுவதால் மாறுவது என்பது படிப் படியாகவும் சோதனை முயற்சி அடிப்படையிலுமே நிக ழும். இந்தத் திட்டத்தின்கீழ் தாங்கள் செலுத்தும் வரி களை விட சற்று அதிகமாக பங்குகளின் வடிவில் பொது அதிகார அமைப்புக்கு பெரு நிறுவனங்கள் அளிக்க வேண்டி வந்தால், அளவு பெரிதாவதைத் தடுக்கும்படி யாக உற்சாகமாக விரும்பி அளிப்பதாக அது அமையும்.

லாபத்தின் மீதான வரி பங்குகளாக மாறுவதால் அதற் குள்ளே வர்த்தக முடிவுகள் மேற்கொள்வது ஊக்கப்ப டுத்தும் செயலாகும். லாபத்தின் மீதான வரி ஐம்பது சத வீதமாக இருக்குமானால், தவிர்த்திருக்கக்கூடிய செல வினங்களுக்கு கருவூலத்திலிருந்து நிதி செலுத்தப்ப டுகிறது, செலவழிக்கப்படுகிறது என்று வர்த்தகர்கள் கூறக்கூடும். (அந்த தவிர்த்திருக்கக் கூடிய செலவினங்

கள் லாபமாக மாறும். அந்த லாபத்தில் ஐம்பது சதவீதம் வரியாக வசூலிக்கப்படும்)

லாபத்தின் மீதான வரி என்பது ஒழிக்கப்பட்டு அந்த இடத்தைப் பங்குகள் நிறைவு செய்யும் பொழுதுள்ள மன நிலை நிச்சயமாக வேறுபட்டதாகவே இருக்கும். நிறுவனத்தின் பாதிப்பங்குகள் பொது அதிகார அமைப்பி னுடையதாக இருக்கும்பொழுது, தவிர்த்திருக்கக் கூடிய செலவினங்கள் லாபத்தைக் குறைக்கும் என்ற உண்மை நம்பக்கூடியதாகவே இருக்கும்.

பல்வேறு மாவட்டங்களில் செயல்படும் பல்வேறு நிறுவனங்கள் (சர்வதேச நிறுவனங்கள் உட்பட) தொடர்பான பல கேள்விகள் எழக்கூடும். இரண்டு கொள்களைக் கடைபிடித்தால் மிகவும் கடினமா ஏதும் இருக்காது. அவை: லாபத்தின் மீதான பங்குகளாக மாற்றுவது மற்றும் பொது அதிகார அமைப்பு என்பது நிறுவனத்தின் ஊழியர்கள் எங்கு வேலை எல்லா விதமான பொதுச் சேவைகளையும் பயன் வாழ்கிறார்களோ அந்த உள்ளூர் மக்களை கொண்ட தாகவும் இருக்க வேண்டும். சில சிக்கலான நிறுவன அமைப்புகளில் கணக்காளர்களுக்கும் வழக்கறிஞர்களுக்கும் தேவை ஏற்படலாம். ஆனால் அதில் பெரிய சிரமங்கள் இருக்காது.

இத்தகைய முறையைப் பின்பற்றும் நிறுவனம் கூடுதலான முதலீட்டைப் எப்படிப் பெறும்? இதற்கான விடை மிகவும் எளிதானது. வெளியிடப்படும் தனியார் பங்குகள் ஒவ்வொன்றுக்கும் (பணம் செலுத்தப்பட்டோ, இலவசமாகவோ) ஒரு இலவசப்பங்கை பொது அதிகார அமைப்புக்கு வழங்க வேண்டும். தனியார் பணம் செலுத்திப் பெறுவதை, பொது அதிகார அமைப்புக்கு இலவசமாக வழங்குவது நியாயமானதல்ல என்று முதலில் தோன்றலாம். நிறுவனங்கள் லாபத்தின் மீதான

எந்த வரியையும் செலுத்துவதில்லை . புதிய மூலதன நிதிக்காக சுமத்தப்படும் லாபம், லாபத்தின் மீதான வரி செலுத்துவ திலிருந்து விடுபடுகிறது. மேலும் பொது அதிகார அமைப்பு தான் பெற வேண்டிய வரிக்கு பதிலா கவே, பங்குகளைப் பெறுகிறது.

இறுதியாக, நிறுவன மறுசீரமைப்பு, நிறுவன இணைப்பு, மூடுதல் போன்றவை தொடர்பாக பிரச்சினைகள் எழ லாம். இவை முன்பே கூறப்பட்டு கொள்கைகளின் அடிப்படையில் முழுமையாகத் தீரக்கப்படக் கூடிய வையே. திவாலாவது போன்றவை காரணமாக மூடப்ப டுதல் நிகழும்போது, தனியார் பங்குகளுக்கு என்ன நேர் கிறதோ அதுவே பொது அதிகார அமைப்பின் பங்கு களுக்கும் நேரும்.

மேலே முன்மொழியப்பட்டவை எல்லாவற்றையும் அரசி யல் நிர்ணய சட்டத்தைத் தயாரிப்பது போல எடுத்துக் கொள்ளலாம். இந்த முறை நிச்சயமாக சாத்தியமானதே. அது பெரு முதலீட்டு நிறுவன உடைமைத்துவம் புரட்சி யின்றி

பறித்துக் கொள்ளப்படாமல், மத்தியக் குவிப்பு இன்றி, அல்லது பொறுத்தமற்ற அதிகார அமைப்பிலான தனி யார் வளைந்து கொடுத்தலுக்காகச் செய்யப்படாத மறு அமைப்பாக இருக்கும். அதனை சோதனை முயற்சியா கவும் பரிணாம முயற்சியாகவும் அறிமுகப்படுத்தலாம். வர்த்தக நிறுவனங்களின் மீது பொது மக்களின் போது மான கவனமும் விருப்பமும் வந்துவிட்டது என உண ரும்வரை பெரிய நிறுவனங்களிலிருந்து தொடங்கி, படிப் படியாகக் கீழ் நோக்கி கொண்டு செல்ல வேண்டும். கடுமையான வரியமைப்பு, சட்ட வரைவுகளை செய்து கொண்டே இருந்தாலும், பெருமுதலீட்டு தொழில் நிறு வனங்களின் தற்போதைய அமைப்பு பொது நலத்தைத்

தரக் கூடியதல்ல என்பதற்கான அடையாளங்கள்தான் மேற்சொல்லப்பட்டவை அனைத்தும்.

…....

## உள்ளதே போதும்

அறிவியல் தொழில் நுட்ப ஆற்றல்களைப் பயன்படுத்தும் தூண்டுதலால் இயற்கையை சூறையாடும் உற்பத்தி முறையையும், மனிதனை ஊனமாக்கும், முடமாக்கும் சமூக அமைப்பையும் நவீன மனிதன் உருவாக்கியுள்ளான். மிக அதிக அளவில் வளம் இருந்தால் எல்லாம் சரியாக நடக்கும், இருக்கும் என்று எண்ணப்படுகிறது. பணம் என்பது எல்லாவகையிலும் ஆற்றல்மிக்கது என்று கருதப்படுகிறது. பணத்தைக் கொண்டு நியாயம், நீதி, இணக்கம், அழகு மற்றும் ஆரோக்கியத்தை வாங்க முடியவில்லை என்றால், அவற்றிற்கான தேவையை அது தவிர்க்க வேண்டும் அல்லது ஈடுசெய்ய வேண்டும். உற்பத்தி வளர்ச்சியையும், செல்வவளத்தையும் பெறுவதுமே முக்கிய உயர் நோக்கங்களாகி மற்றவை எல்லாம் இரண்டாம்பட்ச நோக்கங்களாகிவிட்டன. இந்த உயர் நோக்கங்களுக்கு நியாயங்கள் வேண்டியதில்லை. இந்த உயர் நோக்கங்கள் நியாயமானவையாக இருக்க வேண்டியதில்லை. எல்லா இரண்டாம்பட்ச நோக்கங்களும் முதல்பட்ச உயர் நோக்கங் களை அடைவதற்காக செயல்படுவதிலேயே இறுதியாக தங்களை நியாயப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இதுதான் பொருள்வாதத்தின் தத்துவம். இந்த தத்துவம் அல்லது மெய் விளக்க இயல், சம்பவ நிகழ்வுகளால் சவாலுக்குள்ளாக்கப்படுகிறது. உலகின் எந்தப் பகுதியிலும் எந்த சமூகத்திலும் பொருள்வாதத்தை எதிர்த்தும்,

மற்றவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்கக் கோரிய ஞானி களோ ஆசான்களோ இல்லாமல் இருந்த கால கட் டமே இல்லை. மொழிகள் வேறாக இருந்தன. அடை யாளங்கள் வேறுபட்டிருந்தன. ஆனால் செய்தி ஒன் றாகவே இருந்தது. இயற்கை இராஜ்யத்தைத் தேடு. உனக்கு தேவைப்படும் இந்தப் பொருட்கள் உன்னுடன் சேர்க்கப்படும். "பூமியில் நமக்கு தேவைப்படுபவை நம் முடன் சேர்க்கப்படும். கற்பனையில் இல்லாத மரணத் திற்கு அப்புறமான கையில் மட்டுமல்ல , என்று நமக்குச் சொல்லப்பட்டது. இன்று இந்தச் செய்தி நமக்கு ஞானி கள் மற்றும் துறவிகளால் மட்டுமல்ல, நடக்கும் இயற்கை இயற்பியல் நிகழ்வுகளாலும் சொல்லப்படுகிறது. அது தீவிரவாதம், இனப்படுகொலைகள், நாசம், சுற்றுப்புறச் சூழல் சீர்கேடு, சோர்வு போன்ற மொழிகள் மூலமாக நமக்கு சொல்லப்படுகிறது. தனிப்பட்ட குவியும் ஒரு கால கட்டத்தில் நாம் வாழ்வதாகத் தோன்றுகிறது. "நீங்கள் இறைவனின் ராஜ்யத்தை முதலில் தேடவில்லை என் றால், உங்களுக்குத் தேவைப்படும் மற்ற பொருட்கள் உங்களுக்குக் கிடைக் காமல் போய்விடும்" என்பது உறுதிமொழியாக மட்டும் இல்லாமல் அச்சமூட்டுவதாக வுமே தோன்றுகிறது. அது இப்போது தெளிவாகத் தெரி வது போலவே தோன்றுகிறது. பொருளாதாரம் மற்றும் அரசியலை குறிப்பிடாமல் நவீன உலகின் நிலை பற்றி ஒரு எழுத்தாளர் இப்படி எழுதுயுள்ளார்.

"உண்மையிலிருந்து மனிதன் மொத்தமாகச் சுருங்கிக் கொண்டே போகிறான் என்று சொல்லப்படுமானால், எல்லா முனைகளிலிருந்தும் மனிதன் மீது உண்மை நெருங்கி வருகிறது என்று சொல்லலாம். பண்டைய காலத்தில் ஒரு முழு வாழ்க்கை முழுதுமே தேவைப் பட்ட அந்த "உண்மையைத் தொடுதல்" என்பதற்கு இப்

போது தேவையானதெல்லாம் 'பின்னால் சுருங்காதே' என்று அவனைக் கேட்டுக் கொள்வதுதான் என்று கூடச் சொல்லலாம். இருந்தும் அது எவ்வளவு கடினமானது!

சுற்றுப்புறச் சீர்கேட்டை சரிப்படுத்த, வனத்தைப் பாது காக்க, புதிய ஆற்றல்களை, சக்திகளைக் கண்டுபிடிக்க அமைதியான இணக்கமான வாழ்க்கைக்கான ஒப்பந் தங்களை ஏற்படுத்தி செல்வ வளம், கல்வி, ஆராய்ச்சி ஆகிய வற்றின் மூலம் நவீன உலகின் அழிவு சக்திகளை கட்டுக்குள் கொண்டு வந்து விடலாம் என்று நம்பினால் நாம் உண்மையிலிருந்து நழுவிச் சுருங்கி விடுகிறோம். ஒரு சமூகத்திற்கு செல்வவளம், கல்வி, ஆராய்ச்சி மற் றும் இன்ன பிறவும் தேவைதான் என்பதை சொல் லத் தேவை யில்லை. இவற்றை அளிக்கும் வழிகளை மீள்பார்வை செய்வது இன்று மிகவும் தேவையானதாக உள்ளது. அதாவது, எல்லாவற்றுக்கும் மேலாக பொருட் களுக்கு முக்கியத்துவம் அளிக்கும் வாழ்க்கை வளர்ச்சி என்பது முதன்மையானதல்ல, இரண்டாம் பட்சமானது தான் என்பதை அது தெரிவிக்கிறது.

“உற்பத்திக்கான தர்க்கம்” என்பது வாழ்க்கைக்கா னதோ சமூகத்திற்கானதோ அல்ல. அது இரண்டைவி டவும் சிறிய மற்றும் அவற்றிற்குள் அடங்கியதாகும். “உற் பத்தித் தர்க்கத்தை" கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரா மல், அதனால் உருவான அபாயகர சக்திகளை கட்டுக் குள் கொண்டுவர முடியாது. மனிதனின் படைப்பாற்ற லில் நாசகர சாதனங்களை உருவாக்குவது மனிதனின் படைப் பாற்றல் என்று கொள்ளப்படுவதுவரை தீவிர வாதத்தை ஒழிக்க முடியாது. மற்ற படைப்புக்களைப் போலவே மனிதனும் ஒன்று என்றுள்ள உலகத்தில், பிர பஞ்சத்தின் சட்டங்களுக்குப் பொருந்தாமல், அதிகமா கிக் கொண்டே வரும் வன்முறை மற்றும் சிக்கல் ஆகி

யவற்றைக் கொண்ட உற்பத்தி மற்றும் நுகர்வு முறையும் சுற்றுச் சூழல் சீர் கேட் டிற்கு எதிராகப் போராட முடியாது. அதனைப் போன்றே, அதிக நன்மைகளையும் குறை வான தீமை களையும் கொண்டிருப்பது பற்றிய கருத்தே இல்லாத நிலையில் அதிகாரத்தையும் செல்வ வளத் தையும் பெற்றி ருப்பவர்களுக்கும் அவற்றைப் பெறா தவர்களுக்கும் இடை யில் இணக்கத்தைக் கொண்டு வருவது நடவாதது.

இத்தகைய ஆழமான பிரச்சினைகளைக் குறித்து அதி காரிகள் அளவில் விழிப்புணர்வுடன் சில முயற்சிகள் நடைபெறுவது நம்பிக்கையான ஒரு அடையாளமாக உள்ளது. பிரிட்டனின் சுற்றுச் சூழல் செயலாளரின் வேண்டுகோளுக்கு இணங்க ஒரு கமிட்டியால் அனுப் பப்பட்ட அறிக்கை, தொழில்நுட்ப வகையில் வளர்ந் துள்ள சமூகங் கள் தங்களின் மதிப்பீடுகளை மறு ஆய்வு செய்யவும், தங்களது அரசியல் நோக்கங்களை மாற்றிக் கொள்வதற்கும் கால அவகாசம் கோரியுள்ளது.

அந்த அறிக்கை கூறுகிறது: "அவை அறநெறியின் அடிப் படையில் தேர்ந்தெடுப்பதாகும்" என்றும், எந்த அள விலான கணக்கீடுகள் மட்டுமே விடைகளைத் தராது என்றும் கூறுகிறது. மேலும் அது நமது அதிகரித்து வரும் தொழில் பண்பாடு சம்பந்தமாக மரபு சார்ந்த நன்மதிப்பு கள் குறித்து உலகம் முழுவதிலுமுள்ள இளைஞர்க ளிடம் எழுந்துள்ள அடிப்படையான கேள்வி எங்கும் பரவி யிருக்கும் அமைதியின்மையின் அடையாளமா கும் என்று கூறுகிறது. சுற்றுச் சூழல் மாசடைவது கட் டுக்குள் கொண்டு வரப்பட வேண்டும். மனித குலமும் அதன் நுகர்வும் நிரந் தரமான நீடித்திருக்கக்கூடிய சம நிலையை நோக்கி செலுத்தப்பட வேண்டும். இதனைச் செய்யவில்லை என்றால் உடனேயோ அல்லது சிறிது

காலம் கடந்தோ (மிகவும் குறைந்த கால அவகாசமே உள்ளது என சிலர் நம்புகின்றனர்) மனித இனம் அழி வது என்பது அறிவியல் புனைகதையாக இருக்காது. அது நமது குழந்தைகள், பேரக் குழந்தைகளின் அனுப வமாக இருக்கும்.

ஆனால் இது எப்படிச் செய்யப்பட வேண்டும்? அற நெறி சார்ந்து தேர்ந்தெடுக்க வேண்டியவை எவை? நமது தூய்மையான சூழலுக்கு எவ்வளவு தொகையை நாம் செலுத்த விரும்புகிறோம் என்பதான ஒரு விஷ யமா இது? மனித குலத்திற்கு தேர்ந்தெடுக்கும் சுதந்தி ரம் உண்டுதான். அவை "உற்பத்தி தர்க்கத்தின்" வகை களுக்குட்பட்டதல்ல. ஆனால் அவை உண்மைக்குள் அடங்கியது. உண்மையாக சேவை புரிவதே முழுமை யான சுதந்திரம். தற்போது நடப்பிலுள்ள முறையுடனான கற்பனை இணைபபை விட்டு விடும்படிக் கேட்கும் சிலர் உண்மையை அங்கீகரிக்கும் தெரிந்துகொள்ளும் வழியை கூறுவதில் தோல்வியுறு கிறார்கள்.

எப்போதுமே கண்டறிந்திராத உண்மையைக் கண்டறிய இருபதாம் நூற்றாண்டு மனிதனை அழைக்கவில்லை. கிறிஸ்தவ மரபில், மனித குலத்தின் தூய்மையான எல்லா மரபையும் போலவே, உண்மை என்பது மத ரீதியாகச் சொல்லப்பட்டுள்ளது. அது நவீன உலகின் மனிதர்களால் அநேகமாகப் புரிந்து கொள்ள முடி யாத மொழியில் சொல்லப்பட்டுள்ளது. அதனை அத் துமீறாமல் புரிந்து கொள்ளும்படி எழுத சில சமகாலத் தைய எழுத்தாளர்கள் இருக்கின்றனர். கிறிஸ்தவ மர பிலிருந்து, நான்கு நெறிகளாக சொல்லப்பட்டவற்றை யாரும் போதிப்பதில்லை. அவை விவேகம், நீதியுணர்வு, மனோதிடம் மற்றும் சகிப்புத் தன்மை (Prudentia, Justia, Fortitudo and Temperantia) ஆகியவை .

எல்லா நற்குணங்களின் தாயாக விளங்கும் விவேகம்( Prudentia )என்பது உடனடியாகப் பலன் அளிக்காத எதனையும் பார்க்க மறுக்கும் வாழ்க்கை யின் சிறிய, அற்பமான கணக்கிடும் மன நிலைக்கு எதி ரானதைக் குறிக்கிறது.
“உண்மையான அறிவின் நன்மையாக இருப்பதாக எண் ணப்படுவதை உணர்வதே Prudence என்ற சொல்லின் பொருளாக உள்ளது. ஒவ்வொன்றும் எப்படிப்பட்டது என்றும் அவற்றின் நிலை என்னவென்றும் அறிந்த ஒரு வனாலேயே நன்மையை, நல்லதைச் செய்ய முடியும். உண்மையை உணர்வதற்கு உண்மையான நிலைக் கான சரியான செயல் பாடுகள் வேண்டி இருக்கிறது. வலுவான மாறாத உண்மைகள் வலிமையான மனிதச் செயல்பாட்டிற்கான "சூழலை" உருவாக்குகிறது. இந்த வலிமையான உண்மையை நாம் தெளிவான நோக்கத் துடன் எடுத்துக்கொள்ள வேண்டும்.
மனிதனின் அகங்கார எண்ணங்கள் தற்காலிக மாக வேனும் மௌனமாகும், ஓசையற்ற நிசப்தமான உண்மை யின் சாத்தியமாகக் கூடிய நிலையில் அல்லாது தெளிவான நோக்கத்தை அடைய முடியாது. உடனடி யாகப் பலனளிக் காத அற்பமான கணக்கிடும் மனநி லைக்கு எதிரான ஒரு நிலையையும் அடைய முடியாது.
இந்த உடனடியாகப் பலனளிக்காத அற்பமான கணக் கீடு செய்யும் மனநிலைக்கு எதிரான ஒரு நிலையின் அடிப்படையில்தான் நீதி, சகித்துக் கொள்ளும் மனோ பலம் : 'உள்ளதே போதும்'என்பன போன்றவற்றை அடைய முடியும். விவேகம் ( Prudentia ) எனப்படுவது உண்மையின் அறிவை உண்மையுடனான முடிவுகளாக மாற்றுவதுதான்.

ஆகையால், மனித குலம் தொடர்ந்து வாழ்வதற்கு அவசியமானா மூன்று முக்கியமான நெறிகளை நிச்சயமாகப் புரிந்து கொள்ளச்ச் செய்யும், விவேகத்தை செப்பனிட்டு சரிப்படுத்துவதைவிட இன்றைக்கு வேறெது முக்கியமானதாக இருக்க முடியும்.
நீதி என்பது உண்மையுடன் தொடர்புடையது, மனோ பலம் நன்மையுடன் தொடர்புடையது, உள்ளதே போதும் என்பது அழகுடன் தொடர்புடையது. எனவே விவேகம் இந்த மூன்றையும் உள்ளடக்கியது. நன்மை, உண்மை , அழகு போன்றிருக்கும் உண்மையான நிலை, குறித்ததாக இல்லாததும் சமூகத்தின் மற்றும் தனி மனிதனின் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய உயர் நோக்கங்களாகும். செல்வவளத்தினையும், அதிகாரத்தையும் தேடிச் சென்று வெற்றிபெறுவது "உடைந்த உண்மை நிலையாகும்". “நான் இப்போது என்ன செய்ய வேண்டும்?” என்று எல்லா இடங்களிலும் மக்கள் கேட்பார்கள். நம்மில் ஒவ்வொருவரும் நம் அகவீட்டை (மனதை) ஒழுங்காக வைத்துக் கொள்ள வேண்டும், வைத்துக் கொள்ள முடியும் என்பதே அதற்கான பதில். இந்த வேலைக்கான வழிகாட்டியை நாம் அறிவியல் அல்லது தொழில் நுட்பத்தில் கண்டு பிடிக்க இயலாது. அவை எங்கு செயல்படுகின்றனவோ அங்கேயே அவற்றின் நன்மதிப்புகள் அமைந்திருக்கும். ஆனால், அதனை மனித குலத்தின் மரபார்ந்த புத்தி விவேகத்தில் நிச்சயமாக நாம் கண்டறிய முடியும்.
-முற்றும்